ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள்
இயற்றிய
இதர நூல்கள்



| | ரூ. | ந.பை. |
|---|---|---|
| மொழி அமுதம் | 6 | 50 |
| சம்பாஷணைகள் | 3 | 50 |
| இராஜயோகம் | 2 | 00 |
| கர்மயோகம் | 1 | 00 |
| பக்தியோகம் | 0 | 75 |
| நமது தாய் நாடு | 1 | 00 |
| அமெரிக்கா பிரசங்கம் | 0 | 37 |
| எனது குருநாதர் | 0 | 37 |
| கல்வி | 0 | 75 |
| எல்லாவற்றிலும் இறைவனைக் காணல் | 0 | 19 |

விலை ரூ. 3—25

ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள்
அருளிய

# இந்தியப் பிரசங்கங்கள்

திரு. தி. சு. அவினாசிலிங்கம் அவர்களால்
மொழிபெயர்க்கப்பட்டது.



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மைலாப்பூர் :: சென்னை

ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரின்
நேர் சிஷ்யரும்
அடியேனைத் தடுத்தாட்கொண்ட அருள் வள்ளலுமான
**ஸ்ரீமத் சிவானந்த சுவாமிகள்**
திருவடிகளுக்குச் சமர்ப்பிக்கப்பட்டது.

# உள்ளுரை

# முன்னுரை

ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளுடைய பிரசங்கங்களில் உயிர்ச் சக்தி நிறைந்து ததும்பிக் கொண்டிருக்கிறது. ஆங்கில பாஷையே அழிய நேர்ந்தாலும் சுவாமிகளின் பிரசங்கங்களுக்காகவே அது காப்பாற்றப்படுமென்று ஆங்கில அறிஞர் ஒருவர் உரைத்தார். அவருடைய இந்தியப் பிரசங்கங்கள் நமக்கு நிறைய அறிவு புகட்டத் தக்கனவாக விருப்பதுடன், நமது மனதிற்கும் ஊக்கமும் ஆண்மையும் ஊட்டத்தக்கனவாகவும் இருக்கின்றன. ஆனால் இவைகூட இதுவரை தமிழில் மொழி பெயர்த்து வெளியிடப்படாமலிருந்தது ஒரு பெருங் குறையாகும்.

ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளுடைய ஆண்மை நிறைந்த கருத்துக்களையும், அவர் பொன் மொழிகளையும் தமிழில் தமிழரிடையே பரப்ப வேண்டுமென்ற ஆவல் கொஞ்ச காலமாக என் மனதில் இருந்து வந்திருக்கிறது. அவருடைய கருமயோகம், பக்தியோகம், ராஜயோகம் முதலிய சில நூல்கள் முன்னமேயே வெளியிடப்பட்டிருக்கின்றன. சென்ற வருஷம் கல்வியென்ற தலைப்பில் அவர் அருள் மொழிகள் வெளியிடப்பட்டன. இப்பொழுது அவருடைய இந்தியப் பிரசங்கங்கள் வெளியிடப்படுகின்றன.

சுவாமிகளின் மொழிகள் மிகுந்த சக்தியுடையனவாக இருக்கின்றன. அத்தகைய சக்தி மொழிபெயர்ப்பில் வருவது மிகவும் கடினம். இயன்றவரை அவருடைய பொருளுக்கும் வேகத்திற்கும் தக்கவாறு மொழி பெயர்க்க

முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. சுவாமிகளின் மட்டற்ற சக்தியின் ஒரு பகுதியையாவது தமிழர்கள் இதன்மூலம் பெற்று மேம்பட வேண்டுமென்பதே எங்கள் பிரார்த்தனையாகும்.

இந்த மொழி பெயர்ப்பைப் படித்துப் பார்த்து அதிலிருக்கும் பிழைகளைத் திருத்த உதவிய எனதன்புடை நண்பர்கள் நா. ம. ரா. சுப்பராமன், ஆர். விநயகம் பிள்ளை, டி. வி. சடகோபாச்சாரி ஆகியோர்களுக்கு எனது மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஸ்ரீ விவேகானந்த சுவாமிகளின் இந்தியப் பிரசங்கங்களில் 'எனது போர் முறை' என்ற சென்னையில் அருளிய சொற்பொழிவு மிக அழகானது. அது சுவாமி ருத்ரானந்தரால் வெகு அழகாக மொழி பெயர்க்கப்பட்டு, முன்னமேயே பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது. அதுவும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

16-4-43<br>வேலூர் சிறை

**தி. சு. அவிநாசிலிங்கம்.**

# முதல் பிரசங்கம்

[கொழும்புவில் பேசியது]

[விவேகானந்த சுவாமிகள் அமெரிக்காவில் சர்வமத மகா சபையில் வெற்றிபெற்று, அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் சுற்றுப் பிரயாணம் செய்து, இந்தியாவுக்குத் திரும்பும்போது கொழும்புவில் இறங்கினர். அதுசமயம் இலங்கை வாசிகள் அவருக்கு ஒரு மகத்தான வரவேற்புக்கொடுத்தார்கள். அதற்குப் பதிலாக, மேல்நாட்டிலிருந்து திரும்பிய பிறகு அவர் செய்த முதல் பிரசங்கம் இது.]

ஏன்னல் மேல் நாட்டில் செய்யப்பட்டிருக்கும் வேலே என்னிடத்திலுள்ள யாதொரு சக்தியாலும் செய்யப்பட்ட தல்ல. நம்முடைய அன்பு நிறைந்த புனிதமான தாய் நாட்டிலிருந்து எனக்குக் கிடைத்த உங்கள் ஆசியாலும் அன்பாலும்தான் அது செய்யப்பட்டதென்று சொல்ல வேண்டும். மேல் நாடுகளில் கொஞ்சம் நல்ல வேலே செய் யப்பட்டிருக்கிற தென்பது உண்மை. அவ்வேலேயின் பயனேவிட அது எனக்கு அதிகப் பயனே அளித்திருக் கிறது. முன்னல் ஏதோ ஓர் உணர்ச்சியின் காரணமாக நான் நம்பியிருந்தது, நிச்சயமான, பிறருக்கு ரூபித்துக் காட்டக்கூடிய உண்மை யென்பதை நான் இப்பொழுது உணருகிறேன். எல்லா இந்துக்களும் நினேக்கிற மாதிரி, நம்முடைய இந்த நாடு புனிதமான கர்மபூமியென நானும் நினேத்திருந்தேன். இன்று அது முற்றிலும் உண்மை யென்ற உறுதியுடன் உங்கள் முன் நிற்கிறேன். உலகில் எந்த நாடாவது புண்ணிய பூமியென்று கொள்ளத் தக்கதாயிருந்தால், மனித ஆத்மா, கடவுள் தன்மையை

அடைவதற்கு எந்த நாட்டிலாவது தோன்றித் தன் கர்ம பலன்களைத் தீர்த்துக்கொள்ள வேண்டுமெனில், அது நம் நாடாகிய இந்தியாதான். இந்நாட்டில்தான் மக்கள், தூய்மை, தானம், சாந்தம் முதலிய சீரிய குணங்களில் மிக உயர்ந்த நிலையை அடைந்திருக்கிறார்கள். இந்த நாட்டை ஆத்ம சிந்தனையிலும் தெய்விகத் தன்மையிலும் மற்றெல்லா நாடுகளைக் காட்டிலும் சிறந்து விளங்கியிருக்கிறது. இங்குதான் பழங்காலத்திலிருந்து பல மதங்களுக்கு அடிகோலிய பெரியோர்கள் தோன்றி, உலகத்திலே அடிக்கடி ஆத்மீக உண்மைகளாகிய உயர்வாழ்வளிக்கும் அமிர்த வெள்ளப் பெருக்கைக் கொடுத்திருக்கிறார்கள். கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு முதலிய எல்லாத் திசைகளிலும், உலகமெல்லாம் பரவிவரும் தத்துவ உண்மைகளாகிய அலைகள் இங்கிருந்தே தோன்றியிருக்கின்றன. முன்போல் மறுபடியும், மேல்நாட்டின் உலோகாயத நாகரிகத்திற்கு ஆத்மீக உணர்ச்சி கொடுக்கக்கூடிய சக்தி இங்கிருந்து தான் பிறக்கவேண்டும். வெளிநாடுகளில் லக்ஷக்கணக் கான பேர்களுக்கு மனதில் கொந்தளித்துக் கொண்டிருக் கும் உலோகாயத நெருப்பால் உண்டாகும் தாகத்தைத் தீர்க்கக்கூடிய புனிதநீர் இங்குதானிருக்கிறது. நண் பர்களே! இவ்விதமே நேரப்போகிறதென்பதை நம் புங்கள்.

நம் நாட்டிற்கு உலகம் எவ்வளவு கடமைப்பட்டிருக் கிறதென்பதை நான் நேரில் பார்த்திருக்கிறேன்; உலக சரித்திரத்தைப் படித்திருப்பவர்கள் தெரிந்திருப்பீர்கள். தேசத்திற்கு தேசம் ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த 'சாது இந்து' வுக்கு உலகம் எவ்வளவு கடமைப்பட்டிருக்கிற தென்பது தெரியவரும். 'சாது இந்து' என்ற இப்பதம் சில சமயங்களில் வசைமொழியாக உபயோகப்படுத்தப் படுகிறது. ஆனால் ஏதாவது ஒரு வசைமொழியில் உயர்ந்த

உண்மை மறைபட்டிருக்கிறதெனின், அது இந்த மொழியில்தான். இந்துக்கள் கடவுளின் அன்பைப் பெற்று அவர் குழந்தைகளாகவிருந்து வந்திருக்கிறார்கள். உலகின் மற்ற பாகங்களிலும் பல நாகரிகங்கள் தோன்றியிருக்கின்றன. முற்காலத்திலும், தற்காலத்திலும் சக்தி வாய்ந்த மக்களிடமிருந்து பல மகத்தான கருத்துக்கள் வெளிவந்திருக்கின்றன. அதி ஆச்சரியமான எண்ணங்கள் ஒரு சமூகத்தால் மற்ற சமூகங்களுக்குக் கொடுக்கப்பட்டிக்கின்றன. பலநாடுகள் அவை சிறந்து ஓங்கி வாழ்ந்த சமயங்களில் பல உயர்ந்த உண்மைகளைப் பரப்பி வந்திருக்கின்றன. ஆனல் எனது நண்பர்களே ! இதில் ஒரு விஷயம் கவனிக்கவேண்டும். அவை யனைத்தும் யுத்த பேரிகைகளைக் கொண்டும், ஆயுதங்கொண்ட சேனைகள் துணைகொண்டும்தான் செய்யப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு எண்ணமும் ரத்த வெள்ளத்தின் மூலமாகவும், லக்ஷக்கணக்கான பேர்களை வதைப்பதன் மூலமாகவும்தான் பரப்பப்பட்டது. லக்ஷக்கணக்கான பெண்களையும் குழந்தைகளையும் துயரக்கடலில் ஆழ்த்தி இக்கருத்துக்கள் பரவ வேண்டி யிருந்தன. இதுதான் மற்ற நாடுகளின் சரித்திரம் நமக்குக் கற்பித்திருப்பது.

ஆனல் இந்தியா ஆயிரக்கணக்கான வருஷங்களாக சமாதானமாக இருந்து வந்திருக்கிறது. கிரீஸ் என்ற நாடு உண்டாவதற்கு முன்னமேயே, ரோம் நகரம் பிறப்பதற்கு வெகு நாட்களுக்குமுன், இப்பொழுதிருக்கும் ஐரோப்பிய மக்களின் மூதாதைகள், காட்டுமிராண்டிகளாய்த் தங்கள் உடம்பில் பச்சை குத்திக்கொண்டு காடுகளில் வாழ்ந்துகொண்டிருந்த அக்காலத்திலும் நம் நாட்டில் ஓர் உயர்ந்த நாகரிகம் இருந்தது. ஏன் ! அதற்கு முன் கூட, சரித்திரமே எட்டிப் புகமுடியாத அவ்வளவு பழங் காலத்திலிருந்து பல உயர்ந்த கருத்துக்களும் எண்ணங்

களும் இந் நாட்டிலிருந்து வெளியில் சென்றித் த[illegible] கர்ம ஆனால் இவையனைத்தும் அன்புடனும் [illegible]மனில் அது நம் தானத்துடனுமே சென்றிருக்கின்றன. [illegible] மக்கள், மற்ற நாடுகளைப் பலாத்காரமாகப் [illegible] பிடித்த[illegible]களில் மிக அதன் காரணமாக நாம் ஒரு புனிதத்தன்மையைட[illegible] ந[illegible], இன்னும் வாழ்ந்து வருகிறோம். கிரீஸ் நாட்டுச் சேனைகளின் வருகைச் சப்தத்தைக் கேட்டு உலகம் நடுங்கிய காலமொன்றுண்டு. ஆனால் அப்பழைய நாடு இப்பொழுது முற்றிலும் அழிந்து போய்விட்டது. ஒரு காலத்தில் உலகில் பெருமைவாய்ந்த தேசங்கள் அனைத்தின்பேரிலும் ரோம் நாட்டின் கழுகுக்கொடி பறந்து கொண்டிருந்தது. புவன முழுதிலும் ரோமாபுரியின் புகழ் பரவியிருந்தது. உலக முழுவதிலும் மனிதவர்க்கம் ரோம் என்ற பெயரைக் கேட்டு நடுங்கியது. ஆனால் அது இருந்த 'கேபிடலேன்' மலை இப்பொழுது குட்டிச் சுவர்கள் நிறைந்த இடமாக இருக்கிறது. இப்புவி முழுவதையும் ஓர் கொடியின்கீழ் ஆண்ட அந்த சீசர் சக்கரவர்த்திகள் வாழ்ந்த இடம் இப்பொழுது நிலமாகி, அதில் சிலந்திப் பூச்சிகள் கூடுகட்டிக் கொண்டிருக்கின்றன. இங்ஙனம் வேறு சில நாடுகளும் மற்ற நாடுகளை வருத்திக் கொஞ்சகாலம் சிறப்புடன் ஆண்டு மறைந்திருக்கின்றன.

ஆனால் நாம் இன்னும் இருந்துகொண்டிருக்கிறோம். மனு இன்று வந்தால்கூட இந்த நாடு அவருக்குப் புதிதாகத் தோன்றாது. அதே சட்டம், இந்த ஆயிரக்கணக்கான வருஷங்களில் சிற்சில இடங்களில் மாத்திரம் மாற்றப்பட்டு இன்னும் அமுலில் இருந்து வருகின்றது. பழக்க வழக்கங்களும் பல ஆயிர வருஷங்களுக்குப் பின்னும் சாசுவதமானவைபோல் அப்படியே யிருக்கின்றன. நமக்கு ஒன்றன்பின் ஒன்றாக வந்த கேடுகள் அவைகளை ஸ்திரப்படுத்தி யிருக்கின்றன போலத் தோன்றுகிறது. இதன்

உண்மை மறைட
யில்தான். இந்து தேசீய வாழ்க்கைக்கு அடிப்படையாக அவர் குழ ந்தயம்போல் நமது மதம் இருந்து வந்திருக் மற்ற பா ற்ற நாட்டினர்களுக்கு, மனித வாழ்க்கையின் ன்றன. பல சங்களில் மதம் ஒன்று; ராஜீயம், சமூக வாழ்க்கையில் இன்பம், செல்வம் அல்லது ஸ்தூலபலத்தினல் வரக்கூடிய மகிழ்ச்சி, இந்திரிய போகம் இவைதான் அவர்கள் பற்றுக்கோடுகளாக இருந்திருக்கின்றன. அவற்றுடன் சேர்த்துக் கொஞ்சம் மத உணர்ச்சியும் இருக்கலாம். ஆனல் இந்தியாவில் மதம் ஒன்றே வாழ்க்கையில் பிரதானமானது. சீன தேசத்திற்கும் ஜப்பான் தேசத்திற்கும் ஒரு யுத்தம் நடந்துகொண்டிருந்ததென்பது உங்களில் எத்தனை பேர்களுக்குத் தெரியும்? மேல் நாடுகளில் சமூகத் துறையிலும் ராஜீயத் துறையிலும் மகத்தான இயக்கங்கள் நடைபெற்று வருகின்றனவென்பதை எவ்வளவு பேர்கள் அறிவீர்கள்? வெகு சிலருக்குத்தான் இவை தெரிந்திருக்குமென்று நிச்சயமாய்ச் சொல்ல முடியும். ஆனல் அமெரிக்காவில் ஒரு சர்வ மதசபை கூடியதென்பதும், அதற்கு ஒர் இந்து சன்யாசி அனுப்பப்பட்டாரென்பதும் எல்லோருக்கும் தெரிந்திருப்பது அதி ஆச்சரியமாயிருக்கிறது. இதிலிருந்து நமது தேசீய வாழ்க்கை எவ்விதம் சென்றுகொண்டிருக்கிறதென்பது புலப்படுகின்றது. வெறும் மேல்போக்காக இந்தியாவைப் பார்த்துவிட்டுப் போகும் யாத்ரீகர்கள் சிலர், இந்தியாவில் அறியாமை நிறைந்திருக்கிறதென்று எழுதியிருக்கும் புத்தகங்களை நான் படித்திருக்கிறேன். இதில் உண்மையிருந்தாலும், அது முற்றிலும் உண்மையல்லவென்பதை இப்பொழுது காண்கிறேன். இங்கிலாந்து, பிரான்ஸ், அல்லது ஜர்மனியிலிருக்கும் குடியானவன் ஒருவனை, அவன் எந்த ராஜீயக் கட்சியைச் சேர்ந்தவன் அல்லது எந்தக் கட்சிக்குத் தன் வாக்கைக் கொடுக்கப்போகிருன் என்று கேட்டால், அதற்கு அவன் தெளிவான பதில் கொடுப்பான். அமெரிக்கா

விலிருக்கும் சாதாரண மனிதனுக்கும் ராஜீய விஷயங்களைப் பற்றியும் பொருளாதார விஷயங்களைப் பற்றியும் ஞானமிருக்கிறது. ஆனுல் அவன் மதத்தைப் பற்றிக் கேட்டால், தான் ஏதோ ஒரு மதப் பிரிவுக்குச் சேர்ந்தவன் என்றும், அனுதினமும் தன் கோவிலுக்குப் போய் வருவதாகவும் சொல்லுவான். அதற்குமேல் அவனுக்குத் தெரியாது. மதத்தைப் பற்றி அவ்வளவு ஞானம் போதுமென்று அவன் நினைக்கிருன்.

இந்தியாவிலே, நம் குடியானவன் ஒருவனை ராஜீய விஷயங்களைப் பற்றிக் கேட்டால் 'அது என்ன?' என்று கேட்பான். பொருளாதார அல்லது சமூக இயக்கங்களைப் பற்றிக் கேட்டால், அவைகளைப் பற்றித் தான் கேட்டதேயில்லை என்பான். ஆனுல் அவனுடைய மதத்தைப் பற்றிக் கேட்டாலோ, அதை உடனே அர்த்தம் செய்து கொண்டு 'இதோ என் மதத்தை என் நெற்றியில் காண்பாய்' என்று சொல்லி, அதைப்பற்றிய சில விபரங்களும் சொல்லுவான். நம்முடைய தேசீய வாழ்க்கை இவ்விதமிருக்கிறது. ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் முந்திய வாழ்க்கைக்கும் கர்மங்களுக்கும் ஏற்றவாறு, அவன் மனப்போக்குகளும் தன்மையும் அமைந்திருக்கின்றன. அவன் முன் வாழ்க்கையில் செய்த செய்கைகளின் தன்மைப்படி அவன் இவ்வாழ்க்கையைப் பெறுகிருன். அவ்விதமே இவ்வாழ்க்கையை அவன் எவ்விதம் பயன்படுத்துகிருனே அதைப் பொறுத்திருக்கும் அவனுடைய எதிர்கால வாழ்க்கை. இங்ஙனம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான மனப்போக்குடன் பிறக்கிருர்கள். தனி மனிதர்களைப் போலவே தேசங்களும் இருக்கின்றன. ஒவ்வொரு மனித சமூகத்திற்கும் ஒரு தனி இயல்பும், அது உலகில் ஆற்ற வேண்டிய கடமையொன்றும் இருக்கிறது. ராஜீயத் துறையில் மேம்படுவது அல்லது பிற தேசங்களை

ஜெயித்து ஆளுவது நம்முடைய இயல்பாக என்றும் இருக்கவில்லை. நான் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள்: எப்பொழுதும் அங்ஙனம் ஆகப்போவதும் இல்லை. நாம் உலகிற்குக் கொடுக்கவேண்டிய செய்தி வேறு. நம்முடைய சக்தி யனைத்தையும் ஒன்றுபடுத்தி, அதை ஆத்மீகத் துறையில் செலுத்தி, உலகம் அதை ஏற்றுக் கொள்வதற்குத் தகுதியான காலம் பார்த்து, அப்பேரின்ப வெள்ளத்தை உலக முழுதும் பரப்புவதுதான் நமக்குரிய உயர்ந்த பணியாகும். பாரசீகர்கள் அல்லது கிரேக்கர்கள், ரோமர்கள், அராபியர்கள் அல்லது ஆங்கிலேயர்கள் தங்கள் சேனைகளைக்கொண்டு ஜெயித்து உலகை யொன்றுபடுத்தட்டும்; அப்பொழுது இந்தியாவிலிருக்கும் ஆத்மிகப் பெருவெள்ளம் அவர்கள் ரத்தக் குழாய்களில் புகுந்து உலக முழுவதும் பரவும். உலகத்தின் முன்னேற்றத்திற்காக ஆத்மசாதனையில் ஈடுபட்ட இந்தியனும் தன் பாகத்தைச் செலுத்தியாக வேண்டும். இந்தியா உலகிற்கு அளிக்கக்கூடியது ஆத்மீக வெளிச்சமாகும்.

எப்பொழுது எப்பொழுது ஒரு தேசம் உலகின் பல நாடுகளை ஜெயித்து அத்துடன் இந்தியாவையும் தன் தனிமையினின்று மீட்டு அந்த நாடுகளுடன் சேர்த்திருக்கிறதோ அப்பொழுதெல்லாம் ஆத்மீகக் கருத்துக்கள் இந்தியாவிலிருந்து வெள்ளமாகச் சென்று உலக முழுதும் பரவியிருக்கின்றன. 19-ம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஷோப்பன்ஹோர்† என்ற பிரசித்திபெற்ற தத்துவ ஞானி ஒருவர் ஜர்மனியிலிருந்தார். அவருக்கு உபநிடதங்களின் மொழிபெயர்ப்பொன்று கிடைத்தது. அது முதலில் சமஸ்கிருதத்திலிருந்து பாரசீகத்தில் மொழிபெயர்க்கப்பட்டு,

---

†Schopenhauer.

அதிலிருந்து ஒரு பிரான்ஸ் நாட்டு இளைஞரால் லத்தீனில் மொழிபெயர்க்கப்பட்டது. மொழிபெயர்ப்பும் அவ்வளவு நன்ருக விருக்கவில்லை. அத்தகைய மொழிபெயர்ப்பைப் பார்த்தும் அவர் சொல்லியதாவது: 'உலக முழுவதிலும் உபநிடதங்களைப்போல் பண்பும் பயனுமுள்ள நூல் வேறு கிடையாது. அவை எனக்கு இவ்வாழ்க்கையில் பெரும் பயனை யளித்திருக்கின்றன. என் அந்திய காலத்திலும் அவை எனக்குப் பெருஞ் சக்தியையும் சாந்தியையும் அளிக்கும்.' இன்னும் 'ஐரோப்பாவில் கிரேக்க இலக்கியங்களிலிருந்து மக்கள் எண்ணங்களில் உண்டான புரட்சியைவிட† அதிகமான மனக் கிளர்ச்சி இந்நூல்களின் மூலம் உலகில் உண்டாகப்போகிற' தென்பதையும் அவர் உரைத்தார். அவர் அன்று உரைத்தது இன்று உண்மையாகிக்கொண்டு வருகிறது. மேல் நாடுகளிலும், உலகிலுள்ள இதர நாடுகளிலும் இப்பொழுது வெளிவந்துகொண்டிருக்கும் இலக்கியங்களில் தன்மையிலும் முறைகளிலும் இந்தியக் கருத்துக்கள் மெதுவாக ஆனல் இடைவிடாது வியாபித்து வருவதை உலகின் பல பாகங்களிலுள்ள பல மக்களையும் அவர்கள் மனப்போக்குகளையும் ஊன்றிக் கவனித்து ஆராய்ச்சி செய்கிறவர்கள் உணர்வார்கள். நான் முன்னமேயே குறிப்பிட்டிருக்கிறபடி இதில் விசேஷ அம்சமொன்றிருக்கிறது. கத்தியும் நெருப்புங்கொண்டு நாம் எண்ணங்களைப் பரப்பியதே இல்லை. மக்களுடைய மனதைக் கவர்ந்தே இவ்வெண்ணங்கள் பரவியிருக்கின்றன. அவைகளின் தன்மை பலாத்

---

† 16-ம் நூற்றுண்டில் புதைந்திருந்த கிரேக்க இலக்கியங்களை மறுபடியும் பயின்ற காரணத்தால் ஐரோப்பா முழுதும் ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டது.

காரத்திற்கு முற்றிலும் விரோதமானது. நம்மையும் அறியாமல் இவ்வெண்ணங்கள் நம் மனதைக் கொள்ளை கொள்ளுகின்றன. பலருக்கு இந்தியர்களின் மனப் போக்குகள், பழக்க வழக்கங்கள், இலக்கியம், நாகரிகம் முதலியன முதலில் வெறுப்பைக் கொடுக்கக்கூடியனவாகத் தோன்றலாம். ஆனால் கொஞ்சம் தொடர்ந்து அவைகளின் அடிப்படையான தத்துவங்களை அவர்கள் கவனித்துப் பார்க்கட்டும்; நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர்கள் மனம் கவரப்படுவார்கள். அதிகாலையில் பனி எவரும் பாராமல் கேளாமல் பெய்து, பெரும் பயனை அளிப்பதுபோல் மிகுந்த பொறையும் சகிப்புத் தன்மையும் ஆத்மீக உணர்ச்சியும் நிறைந்த இந்திய மக்களும் உலக முன்னேற்றத்திற்கு மகத்தான சேவை செய்கிறார்கள்.

உலக சரித்திரம் மீண்டும் அவ்விதமே நடக்கப் போகிறது. விஞ்ஞான சாஸ்திர முன்னேற்றத்தின் காரணமாக பழைய நம்பிக்கைகள் இன்று அழிந்துகொண்டிருக்கின்றன. என்றும் அசைக்க முடியாதனவென்று கருதப்பட்ட எண்ணங்கள் இப்பொழுது முற்றிலும் ஆடிக்கொண்டிருக்கின்றன. பல மக்களால் மிக அருமையாகப் போற்றப்பட்ட கருத்துக்கள் இப்பொழுது காற்றாகப் பறந்துகொண்டிருக்கின்றன; பழைய மத ஆசாரங்கள் ஆராய்ச்சிக்காரர்களின் அடியால் தவிடு பொடியாகிக் கொண்டிருக்கின்றன. இப்பொழுது மேல்நாட்டில் கல்வியற்றவர்களே மதத்தைப் பின்பற்றுகிறவர்களாக இருக்கிறார்கள். கல்வி யறிவுள்ளவர்கள் மதத்தை நிந்திக்கின்றனர். இத்தருணத்தில், உயர்ந்த ஆத்மிக உணர்ச்சியை அளிக்கவல்ல இந்திய ஆத்மீக தத்துவங்கள், அவைகளை நடை முறையில் அனுஷ்டிக்கும் இந்நாட்டிலிருந்து, மறுபடியும் வெளியில் சென்று அவர்களைக் காப்பாற்றத்

தயாராக விருக்கின்றன. நாம் அனைவரும் அடிப்படை யாக, ஓர் எல்லையற்ற சக்திவாய்ந்த பரம்பொருளின் கூறுகள் என்ற முறையில் ஒற்றுமைத் தன்மையை உடையவர்கள்; மனித ஆத்மா என்றுமழியாமல் வாழ்ந் திருப்பது என்பதுபோன்ற அதி ஆச்சரியமான கருத் துக்கள் அவர்களுக்கு இப்பொழுது வேண்டி யிருக் கின்றன. பழைய மதங்கள் உலகத்தை நேற்றுத் தோன்றிய ஒரு சிறு இடமாக நினைத்தன. இப்பிரபஞ்சம் எல்லை யற்ற காலம் இடம் நிமித்தத்தில் தோன்றியிருக்கிறதென்ப தும், மனிதனுடைய மட்டற்ற ஆத்மீக சக்தியே மதவுணர்ச்சி யாகப் போந்திருக்கிறதென்பதும் நம் பழம் சாஸ்திரங் களில்தான் சொல்லப்பட்டிருக்கின்றன. தற்கால ஆராய்ச்சி யின் காரணமாக வெளிவந்திருக்கும் பரிணமம், முதலிய கொள்கைகள் குரூரமான மதக் கொள்கைகளைத் தகர்த்துக் கொண்டு வருகின்றன. வேதாந்தத்தில் சொல்லப்பட்டிருக் கும் அதி ஆச்சரியமானதும், சந்தேகத்தை யகற்றி, உறுதி யையும், நம்பிக்கையையும் அளிக்கக்கூடியதுமான இவ் வுயர்ந்த தத்துவங்களைத் தவிர வேறு எது அறிவுள்ள மக்களுக்கு ஆறுதலளிக்க முடியும்? இக் கருத்துக்கள மனிதனுடைய அற்புத சக்தியால் இறைவனுடைய அருள் வாக்கினின்று தோன்றியவையன்றோ?

இச்சமயத்தில் நான் தெளிவுபடுத்த வேண்டியது ஒன்றுண்டு. நம் மதத்திற்கு அடிப்படையாக விருக்கும் கோட்பாடுகளும் தத்துவங்களும்தான் அந்நிய நாட்டு மக் களிடத்தே பரவியிருக்கின்றன என்பதை நீங்கள் அறிய வேண்டும். நூற்றுக்கணக்கான வருஷங்களாக சமூக அவசியங்களின் காரணமாக உண்டாக்கப்பெற்ற பழக்க வழக்கங்களை மதமாகக் கொள்ளலாகாது. நம்முடைய சாஸ்திரங்களில் உண்மை இரண்டு விதமாகப் பாகுபாடு படுத்தப்பட்டிருக்கிறது. ஒன்று, என்றும் அழியாத் தன்மை

வாய்ந்தது. மனிதனுடைய ஆத்மீக இயல்புகள், ஜீவாத்மா வுக்கும் பரமாத்மாவுக்குமுள்ள தொந்தம், கடவுளின் தன்மை, பூரணத்துவம், முதலியவை இதிலே அடங்கும். தவிர உலகத்தின் தோற்றுவாய், திருஷ்டியின் எல்லையற்ற தன்மை, கர்மவிதி முதலிய சாசுவத விதிகளும் இப்பகுதி யில் சேர்ந்தனவேயாம். இரண்டாவது பகுதியில் நம் சாதாரண தினசரி வாழ்க்கைக்கு வழிகாட்டியாக யிருப்ப வைகளெல்லாம் அடங்கும். இவை நம் புராணங்களிலும் ஸ்மிருதிகளிலும் கூறப்பட்டிருக்கின்றன. இவற்றிற்கும் அந்த அழியாத முன்சொன்ன உண்மைகளுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. நம் தேசத்தில்கூட இந்த முக்கியமில்லாத விதிகள் மாறிக்கொண்டே வருகின்றன. ஒரு காலத்திய பழக்க வழக்கங்கள் மற்றொரு காலத்தில் இரா. காலம் மாற மாற அவைகளும் மாறும். பெரியோர்கள் அவ்வப்போது தோன்றி அந்தந்தக் காலத்திற் கேற்பப் புதிய பழக்க வழக்கங்களை ஏற்படுத்துவார்கள்.

ஜீவனைப்பற்றியும் ஜகத்தைப்பற்றியும் இவ்வளவு அழ கான அதி ஆச்சரியமான அனைவரையும் உயர்த்தக்கூடிய உயர்ந்த தத்துவங்கள் இந்தியாவில்தான் கண்டு பிடிக்கப் பட்டன. இந்தியாவில்தான் மக்கள் சிறு பிரிவுகளாகப் பிரிந்துகொண்டு 'என்னுடைய மதம்தான் உண்மை, உன் னுடைய மதம் உண்மையல்ல' வென்று, அதற்காக யுத்தம் செய்யவில்லை, இம்மகத்தான தத்துவங்கள் மனிதனுடைய அழியா இயற்கையை அடிப்படையாகக் கொண்டிருப்ப தால், அவை ஆயிரக்கணக்கான வருஷங்களுக்குமுன் இருந்ததுபோல் இன்னும் பெருஞ் சக்தி வாய்ந்தனவாக விருக்கின்றன. இனிமேலும் உலகம் இருக்கும் வரையும், மனிதன் பிறந்து தன் கர்மங்களைத் தீர்த்து மோட்சம் அடையவேண்டிய அவசியம் இருக்கும் வரையும் அவை அவ்விதமேயிருக்கும்.

எல்லாவற்றிற்கும் மேலாக இந்தியா உலகிற்கு அளித்திருப்பது இதுதான். பல மக்களிடையே தோன்றி யிருக்கும் மதத்தின் வளர்ச்சியை நாம் கவனிப்போமானால், ஒவ்வொரு தனிப் பிரிவுக்கும் ஒரு கடவுள் இருந்திருப்பதைக் காணுவோம். இப்பிரிவுகள் ஒன்றுக்கொன்று சொந்தமானவையாக யிருந்ததால் பாபிலோனியாவிலிருந்ததுபோல், இத்தெய்வங்களுக்குப் பொதுப் பெயர் ஒன்றிருக்கும். பாபிலோனியர்கள் பல பிரிவுகளாகப் பிரிந்த பிறகும் அவர்கள் தெய்வங்களுக்கு 'பால்'† என்ற பொதுப் பெயர் இருந்தது. அதேபோல் யூதர்களில் எல்லாப் பிரிவினர்களும் தங்கள் தெய்வங்களுக்கு 'மோலக்'‡ என்ற பொதுப்பெயர் கொடுத்திருந்தார்கள். ஒரு பிரிவினர் அதிக பலம்பெற்று மற்றவர்களை யுத்தத்தில் ஜெயித்தால், அவர்கள் தெய்வம் மற்றெல்லோராலும் கொண்டாடப்படுவதைக் காணுகிறோம். இம்முறையில் 'பால் மொரோடாக்' மற்ற தெய்வங்களைக் காட்டிலும் பெரிதாக பாபிலோனியர்களால் கருதப்பட்டது. 'மோலக்யாவா' மற்றெல்லா மோலக்களைக் காட்டிலும் மேம்பட்ட தெய்வமாக யூதர்களால் கருதப்பட்டது. இவைகளில் எது மேம்பட்டதென்பது யுத்தத்தால் தீர்மானிக்கப்பட்டது. இந்தியாவில் தந் தெய்வம் எந் தெய்வமென்ற வழக்கிருந்தது. ஆனால் நம் தேசத்தின் அதிர்ஷ்டவசமாகவும் உலகின் அதிர்ஷ்டவசமாகவும் இக்குழப்பத்தின் மத்தியில் ஓர் ஒலி கிளம்பிற்று.

'ஏகம் சத்; விப்ராபஹுதா வதந்தி' 'உண்மையொன்றுதான். ஞானிகள் அதைப் பலவாறு கூறுகிறார்கள்' என்று அது ஒலித்தது. சிவன், விஷ்ணு முதலியவர்கள் ஒருவருக்கொருவர் மேம்பட்டவர்கள் என்பதல்ல. சிவன், விஷ்ணு, அல்லது நூற்றுக்கணக்கான வேறு என்ன

---

† Baal ‡ Moloch

பெயர்கள் கொடுத்தாலும் அவை அனைத்தும் அந்த ஒரு தனி முதல்வனையே குறிக்கும் என்பதாம். பெயர் வேறு வேறு. ஆனால் குறிப்பிடும் பொருள் ஒன்றேயாம். இந்தியாவின் சரித்திர முழுதும் இச்சில வார்த்தைகளில் அடங்கி இருக்கின்றது. இது மீண்டும் மீண்டும் நாடு முழுதும் சொல்லப்பட்டது. இது நம் ரத்தக் குழாய்களில் புகுந்து, நம் உடலிலிருக்கும் ஒவ்வொரு சொட்டு ரத்தத்திலும் கலந்து, நம்முடைய வாழ்க்கைக்கே அடிப்படையாக இருந்து வருகிறது. இதன் காரணமாக நம் தேச முழுதும் எல்லா மதங்களின்பாலும் ஓர் அற்புதமான சமரச நோக்கத்தைக் காண்கிறோம். எல்லா மதங்களும் மதப் பிரிவுகளும் இந்தப் பழமையான தேசத்திலே வரவேற்கப்பட்டிருக்கின்றன.

பலவிதமான அபிப்பிராய பேதங்களையுடைய மதப் பிரிவுகள் ஒற்றுமையாக வாழக்கூடிய அற்புதமான காட்சியை இந்தியாவில்தான் காண முடியும். அதற்குக் காரணம் இவ்வரிய தத்துவம்தான். நீங்கள் துவைதிகளாக இருக்கலாம், நான் அத்வைதியாக இருக்கலாம்; நீங்கள் தாசபாவத்தில் கடவுளை வணங்கலாம், நான் கடவுளுடன் ஒன்றெனச் சொல்லலாம்; எனினும் நாம் அனைவரும் நல்ல இந்துக்கள்தாம். இது எப்படி சாத்தியமாகிறது? அதற்குக் காரணம் 'பரம்பொருள் ஒன்று; ஞானிகள் அதைப் பலவாறாக அழைக்கிறார்கள்' என்பதுதான். என் சகோதரர்களே! எல்லாவற்றிற்கும் மேலாக நாம் உலகிற்கு அளிக்கவேண்டிய அதி அற்புதமான உண்மை இதுதான். மற்ற நாடுகளில் மிகப் படித்தவர்கள்கூட நம் மதத்தை விக்ரக ஆராதனை யென்று சொல்லி முகத்தைக் கோணிக் கொள்ளுகிறார்கள். நான் அதைப் பார்த்திருக்கிறேன். தங்கள் மண்டையில் எவ்வளவு மூட நம்பிக்கைகள் இருக்கின்றன வென்பதை அவர்கள் நினைப்பதே

யில்லை. இன்றுகூட இந்த இழிந்த மதப்பித்து உலக முழுதும் இருந்து வருகிறது. ஒவ்வொருவனும் தான் வைத்திருப்பதைத்தான் உயர்ந்ததென நினைக்கிறான். பணம் சம்பாதிப்பதில் ஈடுபட்டிருப்பவன் அது ஒன்றே அனைத்திலும் உயர்ந்ததென நினைக்கிறான். சொத்துடைமைதான் அவனுக்கு உயர்ந்த உடைமை, ஏனைய அனைத்தும் அவனுக்குக் கருதற்குரிய விஷயங்களல்ல. ஒருவன் மண்ணால் ஒரு சாமானைச் செய்தாலோ அல்லது ஓர் அற்ப இயந்திரத்தைக் கண்டுபிடித்தாலோ, அதைத்தான் அனைத்திலும் மேம்பட்டதாக அவன் போற்றுவான். உலக முழுதும் இப்படித்தானிருக்கிறது. மிகுந்த கல்விகற்ற பின்னும் மக்கள் இப்படித்தானிருக்கிறார்கள். ஆதலால் கல்வியென்பதும் நாகரிகம் என்பதும் இன்னும் உலகில் இருப்பதாகச் சொல்லமுடியாது. நாகரிக வாழ்க்கை எங்கேனும் ஆரம்பித்திருப்பதாகக்கூடச் சொல்லமுடியாது. மனித வர்க்கத்தில் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர்கள் இன்னும் காட்டுமிராண்டிகள்போல் பண்பற்றவர்களாகத்தானிருக்கிறார்கள். சகிப்புத்தன்மை, விட்டுக் கொடுத்தல் என்பவைகளைப்பற்றி நாம் புத்தகங்களில் படிக்கலாம். ஆனால் உலகில் அதைக் காண்பது மிக அரிது. நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பது பேர்கள் அதைப்பற்றி நினைப்பதுகூட இல்லையென்பது என் அனுபவம். நான் சென்ற ஒவ்வொரு நாட்டிலும் மதத்தின் பெயரால் மிகுந்த கொடுமைகள் செய்யப்பட்டு வருவதைக் கண்டேன். விஷயங்களைப் புதிதாகக் கற்றுக்கொள்வதற்கும் மதத்தின் பெயரால் ஆட்சேபனை செய்யப்படுகிறது. மத விஷயங்களில் ஒருவருக்கொருவர் சகித்துக்கொள்ளுதல் இந்தியாவில் தானிருக்கிறது; வேறெங்குமில்லை. இங்குதான் இந்துக்கள் முகம்மதியர்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் மசூதி

களும் கோவில்களும் கட்டுகிறார்கள். வெளி நாடுகளுக்குச் சென்று முகம்மதியர்களை அல்லது மற்ற மதத்தினர்களை உங்களுக்காகக் கோவில் கட்டித்தரச் சொல்லிப் பாருங்கள்! கட்டித் தருவதற்குப் பதிலாகக் கட்டிய கோவிலை உடைப்பதற்கும், முடியுமானால் உங்களையும் அழிப்பதற்கும் அவர்கள் முயற்சி செய்வார்கள். மற்ற மதங்களைச் சகித்தல் என்ற அரிய தத்துவத்தை உலக மக்கள் அவசியம் உணரவேண்டும். சகிப்புத்தன்மை மாத்திரமல்ல, அனைவரிடமும் அன்புடன் ஒழுகுதல் என்ற இந்த மகத்தான கருத்தை இந்தியாதான் அவர்களுக்கு அளிக்க முடியும். 'பல ஆறுகள், பல்வேறு மலையுச்சிகளில் உற்பத்தியாகி, பலவிதமாக - நேராகவோ வளைந்தோ ஓடி, ஒரே சமுத்திரத்தில் விழுகின்றதுபோல், மக்கள் தங்கள் பல்வேறு சுபாவங்களின் காரணமாக பல்வேறு துறைகளில் முயற்சிசெய்து, கடைசியில், சிவபெருமானே! உன்னையே வந்தடைகிறார்கள்' என்று மகிம்ன ஸ்தோத்திரத்தில் வெகு அழகாகச் சொல்லப்பட்டிருக்கிறது. வேறு வேறு துறைகளில் சென்றாலும், எல்லோரும் ஒரே இடத்திற்குத்தான் செல்லுகிறார்கள். சிலர் வளைந்து செல்லலாம்; சிலர் நேராகச் செல்லலாம்; ஆனால் அனைவரும் ஒரே ஆண்டவனைத்தான் அடைகிறார்கள். எப்பொழுது, சிவபெருமானை வணங்கும் நீங்கள், லிங்கசொரூபத்தில் மாத்திரமல்லாமல் எல்லா உயிர்களிலும் அவனைக் காண்பீர்களோ அப்பொழுதுதான் உங்கள் பக்தி பூரணமாகும். ஹரியை எல்லோரிடமும் எங்கும் காண்பவன்தான் ஹரியின் உண்மையான பக்தனாவான். நீங்கள் சிவபெருமானுடைய பக்தர்களாக விருந்தால் அவரை எல்லா உயிர்களிலும் எங்கும் காணவேண்டும். வழிபாடுகள் எத்தகைய நாமரூபத்திலிருந்தாலும், அவையனைத்தும் அவனுக்குத்தான் செய்யப்படுகின்றனவென்

பதை நீங்கள் உணரவேண்டும். காபாவை நோக்கி மண்டி யிடும் எல்லா முழங்கால்களும் அல்லது கிறிஸ்துவர்கள் கோவில்களில் முழங்கால் படியிட்டுச் செய்யப்படும் எல்லா வணக்கமும் அல்லது பௌத்த கோவில்களில் செய்யப்படும் எல்லா வழிபாடுகளும்—அவர்கள் அதை உணர்ந்தாலும் உணராவிட்டாலும், வழிபாடு எந்த ரூபத் தில் எந்த முறையிலிருந்தபோதிலும், அவை அனைத்தும், எல்லா உயிர்களுக்கும் உயிராய் விளங்கும் அத்தனிப் பெரு முதல்வனுடைய திருவடிகளுக்கே செலுத்தப்படு கின்றனவென்பதை உணர்வீர்களாக. உலகம் எதை வேண்டி நிற்கிறதென்பதை உங்களையும் என்னையும் விட அவன் நன்ருக அறிவான். எல்லா வேறுபாடுகளும் ஒழி வது அசாத்தியம். அவை இருப்பது அவசியம். வேறு பாடின்றி உயிர் வாழ்தலும் வளர்ச்சியும் இயலாது. இவ் வேறுபட்ட எண்ணங்களிலிருந்து அறிவும் ஆற்றலும் பிறக்கின்றன. மனிதன் முன்னேற்றத்திற்கு வேறுபாடு கள் அவசியம். ஆனல் அதற்காக ஒருவருக்கொருவர் வெறுப்புக்கொண்டு சண்டை செய்துகொள்ள வேண்டி யது அவசியமில்லை. ஆதலால் நம் தாய்நாட்டில் மாத் திரமே போற்றப்பட்ட இம்மகத்தான உண்மையை நாமும் இப்பொழுது கற்று, அதை மறுபடியும் உலகிற்கு அளிக்கவேண்டும். ஏன் நாம் அதை அவர்களுக்குக் கற்பிக்கவேண்டுமெனில், இங்குதான் அது வெறும் புத்த கங்களில் மட்டுமல்லாமல், நம் தேசீய வாழ்க்கையின் அனுபவத்திலும் காணப்படுகிறது. இங்குதான் அது தின சரி வாழ்க்கையில் அனுஷ்டிக்கப்படுகிறது. கண் திறந்து பார்க்கும் அனைவருக்கும் அது புலப்படும். எனவே ஆத்மிக ஞானத்தை நாம்தான் புகட்டவேண்டும். இன் னும் மேம்பட்ட மற்ற பல விஷயங்களையும் இந்தியா போதிக்கமுடியும். ஆனல் அவைகளைக் கற்றவர்கள் மாத்

திரம்தான் பெற்றுக்கொள்ள முடியும். அன்பு, அடக்கம், பொறுமை, சகிப்புத்தன்மை—என்ற இவைகளை ஆண் பெண் குழந்தை என்ற வித்தியாசமின்றி எல்லா ஜாதியினரும் மதத்தினரும் , கற்றுணரலாம். 'அறிஞர்கள் உன்னைப் பலவாறாக அழைக்கிறார்கள் ; ஆனால் நீ ஒருவனே ' என்ற வாக்கை நாம் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்வோமாக.

---

# வேதாந்தம்

(யாழ்ப்பாணத்தில் பேசியது)

விஷயமோ மிகப் பெரிது, காலமோ குறுகியது. ஒரு உபன்னியாசத்தில் இந்து மதக்கொள்கைகள் அனைத்தையும் எடுத்துரைக்க முடியாது. ஆதலால் என்னாலியன்ற வரையில் எளியநடையில், அதன் முக்கிய அம்சங்களை மாத்திரம் எடுத்துச் சொல்ல முயற்சி செய்கிறேன். இந்துக்கள் என்று நம்மை நாம் அழைத்துக்கொள்வது இப்பொழுது வழக்கமாயிருக்கிறது. ஆனால் அதன் பொருள் வேறு. சிந்து நதியை ஹிந்து என்று பழங்காலப் பாரசீகர்கள் உச்சரித்தார்கள். சிந்து நதிக்கு அக்கரையிலிருப்பவர்களை ஹிந்துக்கள் என்று அவர்கள் அழைத்தார்கள். அந்தப் பெயர் இன்னும் வழங்கி வருகிறது. முகம்மதியர் ஆட்சியின்போது அப்பெயரையே நாம் ஏற்றுக்கொண்டோம். இப்பெயரை ஏற்றுக்கொள்வதில் தவறு ஒன்றுமில்லை. ஆனால் அதற்கு முன் கொடுக்கப்பட்ட பொருள் இப்பொழுது மாறிவிட்டதென்பதை நாம்

தெரிந்து கொள்ளவேண்டும். அவ்வார்த்தையின் பழைய பொருளின்படி அது, சிந்து நதிக்கு இக்கரையிலிருக்கும் நம் மதத்தைப் பின்பற்றாத முகம்மதியர்களேயும் கிருஸ்த வர்களேயும் கூடக் குறிக்கலாம். எனவே நான் அப் பெயரை உபயோகிக்க விரும்பவில்லை. இதை உபயோ கிக்க விரும்பவில்லையெனில், வேறு எப்பெயரை உபயோகப் படுத்துவது ? வைதிகர்கள், அதாவது வேதத்தைப் பின்பற்றுகிறவர்கள் என்று சொல்லலாம். வேதாந்தி கள் அதாவது வேதாந்தத்தைப் பின்பற்றுகிறவர்கள் என்று சொல்வது இன்னும் பொருத்தமாக இருக்கும். எல்லா மதங்களும் கடவுளால் அருளப் பெற்றதென்று கருதப்படும் சில நூல்களேப் பெற்றிருக்கின்றன. அந் நூல்கள் அம்மதங்களுக்கு அடிப்படையாகவிருந்து வருகின் றன. இவைகள் அனேத்திலும் பழமையானவை நம் வேதங்களென்பது மேல் நாட்டு ஆராய்ச்சிக்காரர்களின் முடிபு. ஆதலால் வேதங்களேப் பற்றி நாம் கொஞ்சம் தெரிந்துகொள்ளவேண்டும்.

வேதங்கள் என்று சொல்லப்படுகிற இந்நூல்கள் மனிதர்களால் உண்டாக்கப்பட்டவையல்ல. அவை எப் பொழுது எழுதப்பட்டவை யென்பது ஒருவருக்கும் தெரி யாது. ஒருவரும் நிர்ணயம் செய்யவும் முடியாது. நம் ஐதீகத்தின்படி அவை சாசுவதமானவை. ஒரு முக்கியமான விஷயத்தை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண் டும். உலகிலுள்ள மற்றெல்லா மதங்களும் ஒரு தெய்வம், அல்லது தெய்வத்தின் அருள்பெற்ற ஒருவர் செய்த உபதேசங் களே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. ஆனல் வேதங்கள் எந்தத் தனி மனிதருடைய உபதேசங்களே யும் அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை. அவை கள் கடவுளேப் பற்றிய ஞானத்தை யுடைத்தா யிருப்ப தால், அவை சாசுவதமாக இருந்து, அவைகளே

நம் மதத்திற்கு அதிகாரமாகவும் விளங்குகின்றன. அவை ஒரு காலத்தில் உண்டாக்கப்பட்டன வென்று சொல்லமுடியாது. அவை என்றும் அழியாமலிருப்பவை. உலகம் ஆரம்பமும் முடிவுமின்றி சாசுவதமாக விருப்பதுபோல், கடவுளைப் பற்றிய இந்த ஞானமும் அழிவற்றது. இந்த ஞானத்திற்குத் தான் வேதம்† என்று பெயர். வேதாந்தம் என்று சொல்லப் படுகிற இவ்வுண்மைகள் ரிஷிகளால் கண்டுபிடிக்கப் பட்டவை. ஆத்மிக உண்மைகளைக் காணும் பெரியோர்கள் ரிஷிகளாகக் கருதப்பட்டார்கள். அந்த உண்மை அவர்களுடையதென்று நினைக்கக்கூடாது. வேதத்தில் ஒரு மொழி ஒரு ரிஷியிடமிருந்து வந்ததெனில், அதை அவர் எழுதினர் அல்லது தன் மனதிலிருந்து உண்டாக்கினர் என்று நினைக்கலாகாது. முன்னமேயே கற்பகோடி காலமாக அவ் வுண்மை யிருந்துவந்திருக்கிறது. அவர் அதைக் கண்டார்; அவ்வளவுதான். ரிஷிகள் ஆத்மீக உண்மைகளைக் கண்டு பிடிப்பவர்கள்.

வேதங்கள் இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருக் கின்றன. அவை கர்மகாண்டம் ஞானகாண்டம் என்பன. கர்மகாண்டம் பலவிதமான யாகங்களைப்பற்றிச் சொல்லு கிறது. இந்த பாகங்கள் தற்காலத்தில் சாத்தியமானவை யல்ல வென்று விடப்பட்டவை. இன்னும், மனிதனுடைய கடமைகள் இல்லற தருமம் துறவற தருமம் முதலியவை களைப்பற்றியும் வேதங்கள் சொல்லுகின்றன. இவை இன் னும் பெரும்பாலும் பின் பற்றப்படுகின்றன. ஞானகாண் டத்தில்தான் நம் மதத்திற்கு அடிப்படையான வேதத்தின் சாரம் இருக்கிறது. வேதத்தின் சாரம்தான் வேதாந்தம் எனப்படுவது. வேதாந்தத்தில் உபநிடதங்கள் அடங்கி

---

† வேதம் வித் என்ற பதத்திலிருந்து வந்திருக்கிறது; "வித்" என்ற பதத்திற்கு அறிதல் என்று பொருள்.

யிருக்கின்றன. இந்து மதத்திலுள்ள எல்லாப் பிரிவினர்களும்—துவைதிகள் விசிஷ்டாத் துவைதிகள் அல்லது அத்வைதிகள், சைவர்கள், வைஷ்ணவர்கள், சாக்தர்கள், சௌரர்கள் அல்லது கணபதியர்கள் முதலிய அனைவரும் உபநிடதங்களின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். தங்கள் விருப்பம் போல் அவைகளுக்குப் பொருள் செய்து கொள்ளலாம்; ஆனால் அவைகளின் அதிகாரத்தை ஏற்றுத் தானாகவேண்டும். இதன் காரணமாகத்தான் இந்து வென்பதற்குப் பதிலாக வேதாந்திகள் என்று நம்மை அழைத்துக் கொள்ளலாமென்று நாம் சொல்லுகிறோம். நம்முடைய ஆசார்யர்கள் அனைவரும் வேதாந்தத்தின் அதிகாரத்தை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். நம் தற்கால மத ஆசாரங்களின் ஆரம்பம் அனைத்தும் உபநிடதங்களில் இருப்பதை நன்கு கற்றவர்கள் உணர்வார்கள். உபநிடதங்கள் நம் மக்கள் மனதில் மிக ஆழ்ந்து பதிந்திருக்கின்றன. நம்மிடமுள்ள சில குரூரமான அனுஷ்டானங்கள் கூட உபநிடதங்களின் உண்மைகளை உருவங்களின் மூலம் ஸ்தூலமாக வெளிப்படுத்தச் செய்த முயற்சிகளாக விருக்கின்றன. இதைக் காண ஆச்சரியமாயிருக்கும். நம் வீடுகளில் செய்யப்படும் பூசனை முறைகளில் கூட உபநிடதக் கருத்துக்கள் கலந்திருக்கின்றன. இங்ஙனம் பூஜா முத்திரைகளாகவும் வேறு ரூபங்களிலும் இவை நாடு முழுதும் வியாபித்திருக்கின்றன.

வேதாந்தத்திற்கு அடுத்தபடியில் ஸ்மிருதிகளிருக்கின்றன. இவைகளும் பெரியோர்களால் எழுதப்பட்டவையெனினும் இவை வேதாந்தத்திற்கு உட்பட்டவை. வேதாந்தத்திற்கு முரணாக ஏதாவது ஸ்மிருதியிலிருந்தால், அந்த ஸ்மிருதியை நிராகரிக்கவேண்டும். அத்தகைய ஸ்மிருதிக்கு யாதொரு அதிகாரமும் இல்லை. ஸ்மிருதிகள் காலத்திற்குக் காலம் மாறுபடுவதைக் காண்கிறோம். சில ஸ்மிருதிகள்

சத்திய யுகத்திலும், சில திரேதா யுகத்திலும், சில துவாபர யுகத்திலும், சில கலியுகத்திலும் பின்பற்றப்பட வேண்டு மெனப் படிக்கிறோம். நம் தேசத்தின் நிலைமையும் சந் தர்ப்பங்களும் மாற, அத்துடன் மக்களுடைய பழக்க வழக் கங்களும் மாறின. எனவே மக்களுடைய பழக்க வழக்கங் களைப் பாகுபாடு படுத்தும் பொருட்டுத் தோன்றிய இந்த ஸ்மிருதிகளும் மாறவேண்டி யிருந்தன. வேதாந்தத்தில் சொல்லப்படும் நம் மதத்திற்கு அடிப்படையாக விருக்கும் ஆத்மீகத் தத்துவங்கள் என்றும் மாறாதவை. ஏனெனில், அவை என்றும் மாறமுடியாத—மனிதனிடத்திலும் இயற் கையிலுமிருக்கும்—சாசுவதமான தத்துவங்களின்மேல் நிற் கக் கூடியவை. அவை ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்னும் அப்படியேதானிருந்தன. இன்னும் பல்லாயிரக் கணக்கான வருஷங்களுக்குப் பின்னும் அப்படியேதா னிருக்கப் போகின்றன. ஆனால் சமூகத்தைப் பற்றியிருக்கும் சில மதக்கோட்பாடுகள் சமூக மாறுதல்களுடன் மாறியாக வேண்டும். அவை ஒரு காலத்தில் நன்மை செய்து, வேறு ஒரு காலத்தில் பயனற்றுப் போய்விடலாம். உதாரணமாக ஒரு காலத்தில் ஓர் உணவு நல்லதெனச் சொல்லப்படுகிறது. சீதோஷ்ண ஸ்திதியும் சுற்றுப்புறங்களும் மாறுபடலாம்; அத்துடன் உணவும் மாறவேண்டி யிருக்கலாம்; எனவே ஸ்மிருதியும் அதற்குத் தக்கவாறு மாறிற்று. இங்ஙனமே தற் காலத்திலும் மாறுதல்கள் செய்யவேண்டி யிருந்தால் அவை களை அவசியம் செய்யத்தான் வேண்டும். பெரியோர்கள் தோன்றி அதற்கு வழி காட்டுவார்கள். ஆனால் நம் மதத் தின் அடிப்படையான கொள்கைகள் எள்ளளவும் மாறா.

இவைகளுக்குப் பிறகு புராணங்களிருக்கின்றன. இவை உலக சிருஷ்டி சரித்திரம் முதலிய விஷயங்களைப் பற்றியும் பல தத்துவங்களைப் பற்றியும் உருவகப் படுத்திச் சொல்லு கின்றன. வேத உண்மைகளை சாதாரண மக்களுக்குச்

சுலபமாக விளக்குவதற்காக இவை எழுதப்பட்டன. வேதங்களின் பாஷை மிகப் பழைமையானது. பெரிய பண்டிதர்களால் கூட அவை எப்பொழுது எழுதப்பட்டன வென்று கண்டுபிடிக்க முடியாது. புராணங்கள் அக்காலத்து மக்களின் பாஷையில் எழுதப்பட்டன—அதாவது தற்கால சம்ஸ்கிருதத்தில். சாதாரண மக்களுக்குத் தத்துவ சாஸ்திரம் எளிதில் புரியாது. எனவே இவ்வுயர்ந்த உண்மைகள், மக்கள் எளிதில் அறிந்து கொள்ளத்தக்க முறையில் பெரியோர்களுடைய வாழ்க்கைக் கதைகள் வாயிலாகவும் சரித்திரத்தின் வாயிலாகவும் எழுதப்பட்டன. இப்புராணங்களை எழுதிய பெரியோர்கள் ஆத்மீகத் தத்துவ உண்மைகளை இம் முறையில் புகட்ட முயற்சி செய்தார்கள்.

இவைகளைத் தவிர தந்திர† நூல்களிருக்கின்றன. சில அம்சங்களில் இவை புராணங்களை ஒத்திருக்கின்றன. சில தந்திரங்களில் கர்மகாண்டத்தில் காணப்படும் பழைய யக்ஞங்களைப் பழக்கத்திற்குக் கொண்டுவர முயற்சி செய்யப்பட்டிருக்கிறது.

இவையனைத்தும் இந்துக்களின் மத சம்பந்தமான சாஸ்திரங்களாக விருக்கின்றன. ஒரு சமூகம் இவ்வளவு சாஸ்திரங்களை உடைத்தாயிருந்து, அது தன் சக்தியில் பெரும் பகுதியை ஆத்மீக விஷயங்களிலும் தத்துவ ஆராய்ச்சியிலும் செலவு செய்துக்கொண்டிருக்கும்போது, அதில் இவ்வளவு அதிகமான உட்பிரிவுகளிருப்பது ஆச்சரியமான விஷயமன்று. இன்னும் ஆயிரக்கணக்கான அதிக உட்பிரிவுகள் இல்லாமையே ஆச்சரியமான விஷயமாகும். இவ்வுட்பிரிவுகள் ஒன்றுக்கொன்று சிற்சில விஷயங்களில் வேறுபட்டிருக்கினறன. அவைகளின் வேறுபாடுகளைப் பற்றி ஆராய்வதற்குப் போதுமான காலம் நமக்கில்லை. இவை

† Tantras.

யனைத்திற்கும் அடிப்படையாக விருக்கக் கூடியதும், ஒவ்வொரு இந்துவும் ஏற்கவேண்டியதுமான முக்கியமான தத்துவங்கள் சில உள. அவற்றை இங்கு எடுத்துக் கூறுகிறேன்.

முதலாவதாக உலக சிருஷ்டியை எடுத்துக்கொள்ளுவோம். இந்த இயற்கை—பிரகிருதி, மாயை என்று பலவாறாக அழைக்கப்படுவது—ஆரம்பமும் முடிவுமற்றது. ஏதோ ஒரு நாள் கடவுள் வந்து இவ்வுலகை உண்டாக்கினர், அதற்குப் பிறகு உறங்கப் போய்விட்டார் என்பதல்ல. அது உண்மையாக இருக்கமுடியாது. இயற்கையின் ஆக்கும் சக்தி இடைவிடாமல் வேலை செய்துகொண்டிருக்கிறது. கடவுள் ஓய்வின்றி சிருஷ்டி செய்துகொண்டே யிருக்கிறார். கீதையில் ஸ்ரீகிருஷ்ண பகவான் சொல்லுவதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். 'நான் ஒரு கணமேனும் வேலை செய்யாமலிருந்தால், உலகம் அழிந்துவிடும்.' நம்மைச் சுற்றிலும் அல்லும் பகலும் வேலை செய்துவரும் ஆக்கும் சக்தி ஒரு விநாடி நின்றாலும் உலகம் அழிந்துவிடும். உலக முழுதும் அச்சக்தி வேலை செய்யாத காலமே கிடையாது. ஆனல் அது மாறி மாறி அழிந்தும் தோன்றிக்கொண்டு மிருக்கும். சிருஷ்டியென்ற பதத்திற்கு ஆங்கிலத்தில் சரியான வார்த்தை இல்லை. அதற்காக வழங்கப்படும் ஆங்கில வார்த்தை † ஒன்றுமின்மையிலிருந்து உலகம் உண்டாக்கப் பட்டதென்ற பொருள் கொடுக்கிறது. இதை நம்பும்படி சொல்லி உங்கள் அறிவை நான் அவமதிக்கமாட்டேன். நம் சாஸ்திரங்களின்படி, இயற்கை சில சமயங்களில் சூட்சமமாகி அடங்கிவிடுகிறது, கொஞ்ச காலத்திற்குப் பிறகு ஸ்தூலமாகி மறுபடியும் வெளிப்படுகிறது. இது சமுத்திரத்தில் அலைகள் அடங்குவதும் தோன்றுவதும் போன்றதாகும்.

---

† Creation.

இந்த அனந்த கற்பகோடி காலத்தில் இயற்கையும் பல தடவைகளில் அடங்கித் தோன்றியிருக்கின்றது. காலம், தேசம், நிமித்தம்—அனைத்தும் இவ்வியற்கைக்கு உட்பட்டன. எனவே சிருஷ்டிக்கு ஆரம்பமும் முடிவும் உண்டெனச் சொல்வது மதியீனம். ஆதலால் சிருஷ்டியின் ஆரம்பம் அல்லது முடிவு என்ற வார்த்தைகள் நம் சாஸ்திரங்களில் உபயோகப்படுத்தப்பட்டால் அதை இந்தக் கற்பத்தின் ஆரம்பம் அல்லது முடிவு என்று கொள்ளவேண்டும்.

இங்ஙனம் சிருஷ்டி செய்வது யார்? கடவுள். †கடவுள் என்ற பதத்திற்குப் பொருள் என்ன? அதற்கு ஆங்கில பாஷையில் சாதாரணமாகக் கொடுக்கப்படும் அர்த்தத்தில் நான் அப்பதத்தை உபயோகப்படுத்தவில்லை. அதைவிடப் பொருத்தமான வேறு பதம் ஆங்கிலத்தில் கிடையாது. பிரம்மம் என்ற சமஸ்கிருதப் பதத்தை உபயோகப் படுத்துவது இன்னும் பொருத்தமாக இருக்கலாம். அவர்தான் இச் சிருஷ்டிக்குக் காரணமென்று சொல்லவேண்டும். அவர் நித்தியமானவர், குற்றங் குறைவற்றவர், என்றும் விழிப்புடனிருப்பவர், அளவற்ற கருணை படைத்தவர், சர்வ சக்தியும் ஞானமும் வாய்ந்தவர், எங்கும் நிறைந்தவர், உருவமற்றவர். அவர் இவ்வுலகை உண்டாக்குகிறார். அவரே இவ்வுலகை உண்டாக்கிக் கொண்டிருக்கிறார் என்றால் இரண்டு சங்கடங்கள் தோன்றுகின்றன. இவ்வுலகில் ஏற்றத் தாழ்விருப்பதைக் காண்கிறோம். ஒருவன் செல்வத்திலும் சந்தோஷத்திலும் பிறக்கிறான்; மற்றொருவன் வறுமையிலும் துக்கத்திலும் பிறக்கிறான். இது பட்சபாதமல்லவா? தவிர உலகில் கொடுமை நிறைந்திருக்கிறது. பிறந்த அனைத்தும் சாகவேண்டும். ஒரு பிராணி மற்றொன்றைக் கொன்று வாழ்கிறது. ஒவ்வொரு மனிதனும் தன்

---

† God.

சகோதர மனிதனிடம் போட்டியிட்டு வெல்லப் பிரயத்தனம் செய்கிருன். இவ்விதமான போட்டி, கொடுமை, கோரம் இரவும் பகலும் இருதயத்தைப் பிளக்கும் துக்கம் —இதுதான் உலக வாழ்க்கையின் தன்மையாக விருக்கிறது. இது கடவுள் சிருஷ்டியாகவிருந்தால், அந்தக் கடவுள் மிகக் குரூரமானவராக இருக்கவேண்டும்; மனித சிந்தனைக்குத் தோன்றக்கூடிய மிகக் கொடிய பிசாசைவிடக் கொடுமையாக விருக்கவேண்டும். ஆனல் இப் போட்டியும் வித்தியாசமும் கடவுளால் உண்டானவையல்லவென்று வேதாந்தம் உரைக்கிறது. அப்படியாயின், அதற்குக் காரணம் யார்? நாமேதான். ஊர் முழுவதும் மழை பெய்கிறது. நன்ருகப் பண்படுத்தப்பட்ட பூமி அதன் முழுப் பயனையும் பெறுகிறது. நன்ருகப் பண்படுத்தப்படாத பூமி அவ்வளவு பயன் பெறுவதில்லே. அது மழையின் குற்றமா? கடவுளின் கருணை வெள்ளம் எல்லையற்றது; நிலேபெற்றது; எல்லோர் பாலும் அது பொழிந்துகொண்டிருக்கிறது. வித்தியாசம் நம்மிடம்தானிருக்கிறது. ஆனல் ஒருவர் சந்தோஷத்துடனும் ஒருவர் துக்கத்துடனும் பிறப்பானேன்? அவர்களின் சென்ற பிறப்பின் வாழ்க்கையின் வித்தியாசமே இப்பிறப்பின் வித்தியாசத்திற்குக் காரணமாயிருக்கிறது.

இப்பொழுது நாம் இரண்டாவது தத்துவத்திற்கு வருகிருேம். அது எல்லா இந்துக்களால் மட்டுமல்லாமல் எல்லா பௌத்தர்களாலும் ஜெயினர்களாலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. நமது ஆத்மா நித்தியமானதென்பதை இவர்கள் எல்லோரும் ஒப்புக்கொள்கிருர்கள். உயிர் ஒன்றுமில்லாச் சூனியத்திலிருந்து பிறந்திருக்க முடியாது. காலவரைக்குட்பட்டுப் பிறந்த அனைத்தும் இறந்தாக வேண்டும். உயிர் நேற்றுத் தோன்றியதெனில், அது நாளை அழிவது நிச்சயம். ஆனல் உயிர் என்றும் அழியாம

லிருப்பது தற்கால விஞ்ஞான சாஸ்திரங்கள் ஸ்தூல உலகிலுள்ள உதாரணங்களைக் கொண்டு நம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் இவ்வுண்மையை விளக்குகின்றன. நாம் ஒவ்வொருவரும் நமது எல்லையற்ற பழைய பிறப்புக்களின் பயனாக இருக்கிறோம். ஒரு குழந்தை பிறக்கும்போது, சில கவிஞர்கள் அழகாக உரைப்பது போல் இயற்கையின் மடியிலிருந்து அது புதிதாகத் தோன்றுவதில்லை. தன் பழங்காலக் கர்மங்கள் அனைத்துடனும் அது பிறக்கின்றது. நல்லதோ கெட்டதோ அப்பழைய கர்மங்களைத் தீர்ப்பதற்காக அவன் ஜன்மம் எடுக்கிறான். இப்பழைய கர்மங்களில் மனிதனுக்கு மனிதன் வித்தியாச மிருக்கிறது. இதுதான் கர்மவிதி எனப்படுவது. நாம் ஒவ்வொருவரும் நம் விதியை நாமே யுண்டாக்கிக் கொள்ளுகிறோம். எனவே மனித வாழ்க்கை முன்னமேயே நிர்ணயம் செய்யப்படுகிறது அல்லது வாழ்க்கை நாம் அறியாத ஒரு விதிப்படி நடக்கிறது என்ற கொள்கைகள் மறுக்கப்படுகின்றன. தவிரவும் கடவுள் பட்சபாதமுள்ளவரல்ல வென்பதையும் இது தெரிவிக்கிறது. நாம்தான் நம் கஷ்டங்களுக்குக் காரணம். நாம் முந்திய வினைகளின் பயனாக விருக்கிறோம். அது போல எதிர்கால வாழ்க்கையை யுண்டாக்குவதற்குக் காரணமாகவும் இருக்கிறோம். ஆதலால் நாம் சுயேச்சை யுடன் இருக்கிறோம். நான் துக்கத்துடன் இருந்தால், அந்நிலையை நானேதான் செய்துகொண்டேன். எனவே நான் விரும்பினால் சந்தோஷமாகவும் இருக்கமுடியும். நான் தூய்மையற்றவனாக விருந்தால் அதற்கு நான்தான் காரணம்; நான் விரும்பினால் பரிசுத்தமாகவும் இருக்க முடியும். மனிதனின் உள்ளம் அளவற்ற சக்தி வாய்ந்தது. மனிதனுள்ளத்திலிருக்கும் எல்லையற்ற மகத்தான சக்திக்கெதிராக எதுவும்—இயற்கைகூட—நிற்க முடியாது. யாவும்

பணிந்துதான் ஆகவேண்டும். கர்மவிதியின் பயன் இதுதான்.

அடுத்த கேள்வி ஆத்மா என்றால் என்ன என்பது. நம்முடைய ஆத்மாவை அறிந்துகொள்ளாமல் நாம் கடவுளை அறிய முடியாது. வெளி இயற்கையின் ஆராய்ச்சி மூலம் மறுமையைப் பற்றி அறிய இந்நாட்டிலும் வெளி நாடுகளிலும் முயற்சிகள் செய்யப்பட்டன. ஆனால் அவையனைத்தும் பயனற்றுப்போயின வென்பதை நீங்கள் அறிவீர்கள். ஸ்தூலப் பொருட்களில் அதிகம் பழகப்பழக நம் மனதும் அதிக ஸ்தூலமாகிறது ; அதன் காரணமாக நம்மிடமிருக்கும் ஆத்மீக சக்தி குன்றத் தலைப்படுகிறது. எனவே ஆத்மீக உணர்ச்சியும் உயர் வாழ்வும் பெறுவதற்கு அது மார்க்கமல்ல. இதை மனித இதயத்தின் மூலமும் ஆத்மாவின் மூலமும்தான் அடைய முடியும். பிற விஷயங்கள் அவ்வெல்லையற்ற பரம் பொருளைப் பற்றி நமக்கு போதிக்க முடியாது. நம்முன்னிருக்கும் ஆத்மா மூலம்தான் அதைக் காண இயலும். நம் ஆத்மாவை ஆராய்ச்சி செய்வதன் மூலம்தான் நாம் கடவுளை உணர முடியும். ஆத்மாவின் இயல்பைப் பற்றி இந்திய மதப் பிரிவுகளுக்குள் அபிப்பிராய பேதமிருக்கிறது. அவை அனைத்திற்கும் பொதுவான சில அம்சங்களும் உண்டு. ஆத்மா ஆரம்பமும் முடிவும் அற்றது ; சர்வசக்தியும் தூய்மையும் ஞானமும் ஒவ்வொரு ஆத்மாவிலும் புதைந்திருக்கிறதென்பதை அனைவரும் ஒப்புக் கொள்ளுகிறோம். இம்மகத்தான தத்துவத்தை நாம் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். ஒவ்வொரு மனித அல்லது மிருகத்தின் உள்ளத்திலும், அவர்கள் எவ்வளவு தாழ்ந்து அல்லது பலவீனமாகவிருந்த போதிலும், அதே மகத்தான, சர்வ வல்லமை பொருந்திய ஆத்மா குடிகொண்டிருக்கின்றது. நமக்குள்ளிருக்கும்

வித்தியாசத்திற்குக் காரணம் நம் உள்ளத்திலிருக்கும் ஆத்மாவின் வித்தியாசம் அல்ல; ஆனால் அந்த ஆத்மாவின் சக்தியை வெளிப்படுத்துவதிலுள்ள வித்தியாசம்தான். எனக்கும் மிகச் சிறிய ஒரு பிராணிக்குமுள்ள வித்தியாசம், இவ்வாத்மாவின் சக்தியை வெளிப்படுத்துவதிலுள்ள வித்தியாசம்தான். அடிப்படையாக நானும் அதுவும் சமமே; நானும் அதுவும் சகோதரர்கள் போன்றவர்கள்; அதுவும் நானும் ஒரே விதமான ஆத்மாவைப் பெற்றிருக்கிறோம். இந்தியா உபதேசித்திருக்கும் தத்துவங்கள் அனைவற்றிலும் இதுதான் மிகச் சிறந்தது. மனிதர்கள் அனைவரும் சகோதரர்கள் என்று வெளிநாடுகளில் சொல்லுகிறார்கள். மனிதனிலிருந்து எறும்புவரை எல்லா உயிர்களும் சகோதரத் தன்மையை உடையன என்று இந்தியா கூறுகின்றது. 'ஞானிகளாயிருப்பவர்கள் ஒரே கடவுள் எல்லா உயிர்களிலும் குடி கொண்டிருக்கிறார் என்பதை யுணர்ந்து, அனைவரையும் கடவுளாக வணங்குவார்கள்' என்று நமது சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. இதன் காரணமாகவே இந்தியாவில் ஏழை மக்கள்பாலும், மிருகங்கள்பாலும், மற்ற அனைத்தின் பேரிலும் கருணைநிறைந்த கருத்துக்கள் இவ்வளவு பரவியிருக்கின்றன.

ஆத்மாவைப்பற்றி இன்னுமொரு விஷயம். ஆங்கிலத்தில் இவ்விஷயங்களைப் படிப்பவர்களுக்கு ஆத்மா, மனது என்ற வார்த்தைகளில் குழப்ப முண்டாகிறது. நாம் மனது என்று குறிப்பிடுவதை அவர்கள் ஆத்மா வென்று சொல்லுகிறார்கள். சுமார் இருபது வருஷங்களுக்குமுன், சமஸ்கிருத தத்துவ சாஸ்திரங்களிலிருந்து அறிந்து கொண்டதற்குமுன், அவர்களுக்கு ஆத்மாவைப்பற்றித் தெரியாது. உடலுக்கு மேம்பட்டது மனம். ஆனால் மனம் ஆத்மாவல்ல. மனது சூட்சம சரீரமாயிருந்து,

பிறந்து, இறக்கிறது. மனதிற்கு மேல் ஆத்மா† இருக்கிறது. ஆத்மா என்ற பதத்திற்கு ஆங்கிலத்தில் சரியான வார்த்தை இல்லை. எனவே ஆத்மாவென்ற வார்த்தையையே உபயோகப்படுத்துவோம். ஆத்மாவென்பது மனதிலிருந்தும் உடம்பிலிருந்தும் வேறுபட்டதென்பதை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆத்மா மனதாகிய சூட்சும சரீரத்துடன் பிறந்து இறக்கிறது. உரிய காலத்தில் ஞானத்தைப் பெற்று, பூரணத்வத்தையடைந்தால் பிறப்பு இறப்பிலிருந்து விடுதலை பெறுகிறது. அதற்குமேல் அது மனமாகிய சூட்சும சரீரத்தை வைத்துக்கொள்ளலாம் அல்லது அதை விடுத்து நித்திய சுதந்தரத்துடன் வாழலாம். ஆத்மாவின் லட்சியம் முக்தி அல்லது விடுதலை. இது நம் மதத்தின் தனிக் கொள்கையல்ல. நம் மதத்திலும் சுவர்க்கங்களும் நரகங்களும் இருக்கின்றன. ஆனல் அவை என்றும் அழியாதவையல்ல. அவற்றின் இயல்பின்படி அவை வேறு விதமாக இருக்க முடியாது. சுவர்க்கம் என்று ஒன்றிருப்பதாக விருந்தால் அது உலகத்தைவிடக் கொஞ்சம் அதிக சுகமுள்ளதாக விருக்கலாம். ஆனல் அது மனித ஆத்மாவுக்குக் கெடுதலைத்தான் உண்டாக்கும். இம்மாதிரி சுவர்க்கங்கள் பல இருக்கின்றன. பயனை எதிர்பார்த்து நற்காரியங்கள் செய்கிறவர்கள் இச்சுவர்க்கங்களில் இந்திரர்களாகவோ அல்லது வேறு தேவர்களாகவோ பிறக்கிறார்கள். இப்பெயர்கள் தனி நபர்களின் பெயர்கள் அல்ல, பலவிதமான நிலைகளின் பெயர்கள். ஆயிரக்கணக்கான இந்திரர்களிருக்கலாம். நகுஷன் என்பவன் ஓர் அரசன்; அவன் இறந்து இந்திரனானன். அது ஒரு பதவி. ஒருவன் இந்திரப்பதவியை அடைந்தால்,

---

†Soul

அங்கு சில காலம் இருந்த பிறகு, இறந்து மறுபடியும் மனிதனுகப் பிறப்பான். எல்லாவற்றிற்கும் உயர்ந்தது மானிடப் பிறவிதான். சில தேவர்கள் சுவர்க்க இன்பத்தை விடுத்து உயர்ந்த நிலைமையை . அடையப் பிரயத்தனம் செய்யலாம். ஆனால் உலகத்திலுள்ள செல்வம் முதலிய வற்றைப் போல் சுவர்க்கத்தின் இன்பமும் பெரும்பான்மை யான தேவர்களைத் தாழ்த்துகிறது. எனவே, தங்கள் நற்கருமங்கள் தீர்ந்ததும் அவர்கள் மறுபடியும் இப்புவி யில் மானிடராகப் பிறக்கிறார்கள். இவ்வுலகம் கர்ம பூமி யாக விருக்கிறது. இங்குதான் மனித ஆத்மா முக்தி யடைய முடியும். எனவே சுவர்க்கங்கள் கூட நாம் வேண்டத் தகுந்தனவல்ல. அதைவிட உயர்ந்தது முக்தி-விடுதலை. மிக மேலான சுவர்க்கங்களில் இருப்பவர் களும் அடிமைகளாகத்தான் இருப்பதாக நம் சாஸ்திரங் கள் கூறுகின்றன. கேவலம் சுகத்திற்கு அடிமையாகி, மரணத்திற்கு உட்பட்டு, இருபதினாயிரம் வருஷம் அரசனாக விருந்தாலும்தான் என்ன பயன்? வெளி இயற்கை, உள் இயற்கை - இவைகளின் பந்தங்களி லிருந்து விடுபட்டிருப்பதே மிக உயர்ந்த வாழ்க்கை. இயற்கை நம் காலில் விழுந்து நமது அடிமையாக விருக்க வேண்டும். அதற்கு மேல் உடல் இல்லை; ஆதலால் சாவு மில்லை; உடலைப்பற்றிய தாழ்ந்த சந்தோஷமும் இல்லை, ஆதலால் துக்கமும் இல்லை. ஏசற்ற அந்நிலையே மாசற்ற, பரிபூரணமான ஆனந்தம் வழங்கும் நிலை. இங்கு நாம் சந்தோஷம் என்று சொல்வது அந்த நித்தியப் பேரின்பத் தில் ஓர் அணுவென்று சொல்லலாம். அவ்வெல்லையற்ற பேரின்பமே நமது லட்சியமாகும்.

ஆத்மா ஆணுமல்ல பெண்ணுமல்ல. ஆண் பெண் வேறுபாடு உடலைச் சார்ந்தது. இக்கருத்துக்கள் ஆத்மா விற்குப் பொருந்தா. அவ்விதமே வயதும். அதற்கு

வயது கிடையாது. அது நித்தியமாயிருப்பது. அது எப்படி உலகில் தோன்றிற்று? இதற்கு நம் சாஸ்திரங்களில் ஒரு பதில்தான் உண்டு;—அறியாமைதான் அதன் விழ்ச்சிக்குக் காரணம். அறியாமையின் மூலம்தான் நாம் கட்டுண்டிருக்கிறோம். அறிவு நம் பந்தங்களைப் போக்கும். இந்த ஞானத்தை எவ்விதம் பெற முடியும்? அன்பின் மூலமும் பக்தியின் மூலமும் பெறலாம். கடவுள் மனித உள்ளங்களில் குடி கொண்டிருக்கிறார். கடவுள் குடி கொண்டிருக்கும் கோவில்களாக நினைத்து எல்லா உயிர்களையும் வழிபடுவதன் மூலம் இந்த ஞானத்தைப் பெறலாம். ஆழ்ந்த அன்பிலிருந்து ஞானம் பிறக்கும். ஞானத்தால் அறியாமை மறையும்; அத்துடன் நம் பந்தங்கள் அகன்று ஆத்மா விடுதலையடையும்.

கடவுளைப்பற்றி நம் சாஸ்திரங்களில் இரண்டு கருத்துக்களிருக்கின்றன:—ஒன்று ரூபக் கடவுள்; இரண்டாவது, அரூபக் கடவுள். கடவுளை ரூபமாக வழிபடும் போது அவனை சர்வ சக்தி வாய்ந்தவனாகவும், இவ்வுலகை ஆக்கிக் காத்து அழிப்பவனாகவும், சகல ஜீவராசிகளுக்கும் அளவற்ற கருணையுடன் தந்தையும் தாயுமாயிருந்து காப்பாற்றுபவனாகவும் நினைக்கிறோம். அவனை அணுகி அவனுடன் வாழ்வதே முக்தி. கடவுளை அரூபமாக வணங்கும்போது அவனை மேற்குறித்த குணங்களுடையவனாக நினைப்பதில்லை. அங்கிங்கெனாதபடி எங்கும் இயங்கும் சக்தியாக அவனை நினைக்கிறோம். அவனை அறிவுள்ளவன் என்று சொல்வதற்கில்லை; ஏனெனில் அறிவென்பது மனிதனுக்கே பொருந்தும். அவனிடம் வாதமும் தர்க்கமும் இல்லை. ஏனெனில் இவை பலவீனத்தின் அறிகுறிகள். அவன் உண்டாக்குகிறான் என்று சொல்ல முடியாது; ஏனெனில் வினைப் பந்தங்களும், விருப்பமும், குறையும் இருப்பவர்கள் தான் உண்டாக்குவார்கள். அவனுக்கு

விணைப்பந்தங்கள் ஏது? விருப்பம் ஏது? குறை ஏது? வேதங்களில் 'அவன்' என்ற வார்த்தைகூட உபயோகப் படுத்தப் படவில்லை; ஏனெனில் அவ்வார்த்தை கடவுள் ஆண்பால் என்ற தவருன பொருளைக் கொடுக்கலாம். ஆதலால் 'அது' என்ற பதமே உபயோகப்படுத்தப் பட்டிருக்கிறது. இவ்வழிபாட்டு முறைக்கு அத்வைதம் என்று பெயர்.

நமக்கும் இவ்வரூபக் கடவுளுக்குமுள்ள சொந்தம் என்ன? நாம்தான் அவர். நாமும் அவரும் ஒன்று. எல்லா உயிர்களுக்கும் அடிப்படையாக நின்றிலங்கும் பரம் பொருளின் தோற்றங்களே நாம் யாவரும். இந்த எல்லை யற்ற பரம் பொருளிலிருந்து நம்மை வேருக நினைப்பதே துக்கத்திற்குக் காரணம். முக்தி அல்லது விடுதலை யென் பது அதனுடன் ஐக்கியமாவதுதான். சுருக்கமாகச் சொன் ஞல், இவைதான் கடவுளைப்பற்றி நம் சாஸ்திரங்களி லுள்ள இரு கருத்துக்கள். இங்கு சில விஷயங்கள் சொல்லவேண்டும். கடவுள் அரூபியாக எல்லா உயிர் களிலும் இருக்கிருர் என்ற கருத்துத்தான் நீதி சாஸ்திரங் களுக்கு அடிப்படையாக விருக்கிறது. எல்லா தேசங் களிலும் 'எல்லா மனிதர்களையும் தன்னுயிர்போல் நினை' என்ற உண்மை சொல்லப்பட்டிருக்கிறது. இந்தியாவில் 'எல்லா உயிர்களையும் தன்னுயிர்போல் நினை' என்று சொல்லப்பட்டிருக்கிறது. நாம் மனித உயிருக்கும் மற்ற உயிர்களுக்குப் வித்தியாசம் பாராட்டுவதில்லை. ஆனல் ஏன் மற்ற உயிரகளைத் தம் உயிர்போல் நினைத்து அன்பு செய்யவேண்டும்? இதற்குக் காரணம் மற்ற சாஸ்திரங் களில் கொடுக்கப்படவில்லை. அதற்குக் காரணம் இங்கு தான் இருக்கிறது. கடவுள் அரூபமாய் எல்லா உயிர்க ளிலும் இருக்கிருர். எல்லா உயிர்களும் ஒன்று. நான் மற்றவர்களைத் துன்புறுத்துவதன் மூலம் என்னையே

துன்புறுத்திக் கொள்ளுகிறேன். மற்றவர்களை நேசிப்பதன் மூலம் என்னையே நேசித்துக் கொள்ளுகிறேன். இதிலிருந்து ஏன் நாம் மற்றவர்களைத் துன்புறுத்தக் கூடாதென்பதற்குக் காரணம் விளங்குகிறது. கடவுள் அரூபமாய் அனைத்திலும் இருக்கிறார் என்ற கருத்துத்தான் நீதி நியதிகளுக்கு அடிப்படையாக விருக்கிறது.

கடவுளை ரூபத்தில் வழிபடுவதில் உண்டாகும் அற்புதமான பக்தியையும், அந்த பக்தியானது காலத்தின் தன்மைக்கேற்றவாறு மக்களுக்கு அளிக்கும் அதி ஆச்சரியமான சக்தியையும் நான் நன்ருக உணர்வேன். ஆனல் நமது தேசத்திற்கு இப்பொழுது வேண்டியது அழுகைக் கண்ணீர் அல்ல. பலமே இப்பொழுது நமக்குத் தேவை. எல்லாக் குருட்டு நம்பிக்கைகளையும் மனதினின்று அகற்றி, நாம் அந்த ரூபாதீதமான பரம்பொருளின் அம்சம் என்று நினைக்கும்போது, அது எத்தகைய சக்தியை நமக்கு அளிக்கிறது! என்னை எதுவும் பாதிக்காது. இயற்கை விதிகளைப்பற்றி எனக்குக் கவலையில்லை. சாவு எனக்கொரு விளையாட்டு. மனிதன் தன் எல்லையற்ற, அந்தமற்ற நித்திய பிரகாசத்தில் திகழ்கிருன். ஆத்மாவை ஆயுதங்கள் வெட்டமாட்டா; தீ எரிக்காது; நீர் நனைக்காது; அது எல்லையற்றது; எங்கும் நிறைந்தது; பிறப்பும் இறப்பும், ஆதியந்தமும் அற்றது. அதன் முன்னிலையில் சூரிய சந்திர மண்டலங்களும் சமுத்திரத்தில் திவலை போல் தென்படுகின்றன. அதன் தேஜோமய ரூபத்தின் முன்னிலையில் காலமும் இடமும் மறைகின்றன. இத்தகைய மகத்தான ஆத்மாவில் நாம் நம்பிக்கைகொள்ள வேண்டும். அதிலிருந்து பெருஞ் சக்தி தோன்றும். நாம் நினைத்தபடி ஆகிருேம். உங்களைப் பலவீனர்களென்று நீங்கள் நினைத்தால் பலவீனர்களாவீர்கள். பலமுள்ளவர்களென்று நினைத்தால் பலமுள்ளவர்களாவீர்கள்.

தாழ்ந்தவர்களென்று நினைத்தால் தாழ்ந்தவர்களாவீர்கள். பரிசுத்தவான்களென்று நினைத்தால் பரிசுத்தவான்களாவீர்கள். அரூபக் கடவுளின் வழிபாடு நம்மை அளவற்ற சக்தியுள்ளவர்கள் என்று நினைக்கச் செய்கிறது. அச்சக்தியை நான் வெளிப்படுத்தாம லிருக்கலாமெனினும், அது என்னுள்ளே யிருக்கிறது. சர்வஞானமும், சக்தியும், தூய்மையும், சுயேச்சையும் என்னுள்ளே யிருக்கின்றன. நான் ஏன் அதை வெளிப்படுத்த முடிகிறதில்லை? அதை சரியாக நம்பாததால். அதை நிச்சயமாய் நம்பினுல், அது வெளிப்பட்டே தீரும். அரூபக் கடவுள் வழிபாடு நமக்கு இந்த ஞானத்தை அளிக்கிறது. உங்கள் பிள்ளைகளைக் குழந்தைப் பருவத்திலிருந்து தைரியம் கொடுக்கக்கூடிய எண்ணங்கள் ஊட்டி வளர்த்துங்கள். பலவீனமாக்குகிற கருத்துக்களையும் வழிபாடுகளையும் அவர்களுக்குக் கற்பிக்காதீர்கள். அவர்களைப் பலமுள்ளவர்களாக்குங்கள். அவர்கள் தன்னம்பிக்கையுடன் ஆண்மையுள்ளவர்களாய், எதையும் ஜயிக்கவும் எதையும் சகிக்கவும் கூடியவர்களாய் இருக்கட்டும். இங்ஙனமாவதற்கு அவர்கள் முதலில் ஆத்மாவின் மகிமையை உணரட்டும். இக்கருத்துக்கள் வேதாந்தத்தில் மாத்திரம் தானிருக்கின்றன. மற்ற மதங்களைப்போல், வேதாந்தம், பக்தி, பூசனை முதலிய பல விஷயங்களையும் போதிக்கின்றது. ஆனுல் அதன் போதனைகள் அனைத்திலும் மேலானது ஆத்மாவைப்பற்றிய இந்த அதி ஆச்சரியமான உயிர்கொடுக்கும் எண்ணம்தான். இம்மகத்தான தத்துவம் உலகில் ஒரு பெரும் புரட்சியை உண்டாக்கும். அத்துடன் விஞ்ஞான சாஸ்திரத்தின் தற்கால ஆராய்ச்சிகளை மத தத்துவங்களுடன் சமரசப்படுத்தும்.

நம் மதத்தின் முக்கிய அம்சங்கள் சிலவற்றை உங்களுக்கு இதுவரை எடுத்துரைத்தேன். அவைகளின் அனுஷ்

டானத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்லவேண்டும். பல சந்தர்ப்பங்களின் காரணமாய் இந்தியாவில் பல பிரிவு கள் உண்டாயினவென்பதைக் கண்டோம். இவ்வளவு பிரிவுகளிருந்தாலும் அவை ஒன்றுக்கொன்று சண்டை யிட்டுக் கொள்வதில்லை. வைஷ்ணவர்கள் அனைவரும் நரகத்திற்குச் செல்வார்களென்று சைவர்கள் சொல்வ தில்லை. சைவர்கள் அனைவரும் நரகத்திற்குச் செல்வார்க ளென்று வைஷ்ணவர்களும் சொல்வதில்லை. ‘இது எங் கள் வழி; உங்கள் வழி வேறு; கடைசியில் இருவரும் ஒரே யிடத்தில் சந்திப்போம்’ என்று இருவரும் சொல்லு வார்கள். அவரவர்கள் தங்கள் இஷ்ட தேவதைகளை வழி படுகிறார்கள். கடவுளை வழிபடுவதற்குப் பல முறைகளிருக் கின்றனவென்று பழங்காலத்திலிருந்து ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. பல்வேறு விதமான இயல்புடையவர்க ளுக்குப் பல்வேறு விதமான வழிபாட்டு முறைகள் அவசிய மென்பதும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. உங்களுக்கேற்றதாக விருக்கும் முறை எனக்கு ஏற்றதாக இல்லாமலிருக்கலாம், எனக்குக் கெடுதல்கூடச் செய்ய லாம். எல்லாரும் ஒரே முறையைப் பின்பற்றவேண்டு மென்று சொல்லுவது சரியல்ல. அங்ஙனம் செய்வது சிலருக்குத் தீங்கிழைக்கலாம்; எனவே அதைத் தவிர்க்க வேண்டும். உலகத்தில் எல்லோரும் ஒரே மதத்தையும் ஒரே முறையையும் பின்பற்ற வேண்டிய நிலைமை ஏற்பட்டால், அது மிகுந்த கெடுதல்களை யுண்டாக்கும். அதன் மூலமாக எல்லா மதங்களும் எல்லா ஆத்மீக உணர்ச்சியும் அழிந்து விடும். பலதிறப்பட்டிருப்பதே உயிர் இருப்பதின் அறி குறி. வேறுபாடு முற்றிலும் ஒழிந்தால், சிருஷ்டி முற்றுப் பெற்றுவிடும். நம் இயல்புக்குத் தகுந்தவாறு நம் கருத் துக்களிருக்கவேண்டும். அதன்மூலம்தான் நாம் வளரு வோம். ஆனால் இந்த வேறுபாட்டின் காரணமாக ஒரு

வருக்கொருவர் சண்டையிட்டுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. உங்களுடைய மார்க்கம் உங்களுக்கு நல்லது, என்னுடைய மார்க்கம் எனக்கு நல்லது. அதை சமஸ்கிருதத்தில் 'என்னுடைய இஷ்ட தேவதை' யென்று சொல்லுவார்கள். நமக்கு எந்த மதத்தினிடமும் சண்டை கிடையாதென்பதை மனத்தில் வையுங்கள். நம் ஒவ்வொரு வருக்கும் அவரவர்கள் இஷ்ட தேவதை இருக்கிறது. ஆனல் மற்றவர்கள் வந்து தங்கள் மதத்தை நம் மேல் பலாத்காரமாகச் சுமத்தப் பிரயத்தனம் செய்வார்க ளானல், நாம் அவர்களுக்குச் சொல்லவேண்டிய வார்த்தை கள் சிலவுண்டு. அவர்களைப் பார்த்தால் சிரிப்புண்டா கிறது. கடவுளை அடைவதற்காக வேறு ஒரு முறையைப் பின்பற்றுகிருர்கள் என தோன்றுகிற காரணத்துக் காகத் தங்கள் சகோதரர்களை அழிக்க விரும்பும் மக்கள், அன்பைப்பற்றிப் பேசினல் அது எவ்வளவு அசம்பாவித மாக இருக்கும்! ஒருவன் வேறு ஒரு முறையைப் பின்பற்று வதைப் பார்த்துச் சகிக்கமுடியாதவர்களுடைய அன்பு எத்தகையதாக விருக்கும்! அவர்களிடம் அதிகமான அன்பு இருக்கமுடியாது. இது அன்பானல், வெறுப் பென்பது என்ன? கிருஸ்து, முகம்மது, புத்தர் முதலிய எவரை வழிபடும் மதத்தினரிடமும் நமக்கு வெறுப்புக் கிடையாது. அவர்களிடம் இந்து சொல்லுகிருன்: 'என் சகோதரனே, உன்னை வரவேற்கிறேன். உனக்கு வேண்டிய உதவிகள் செய்கிறேன். ஆனல் என்னுடைய மார்க்கத்தை, என்னுடைய இஷ்டதேவதையை நான் பின் பற்றுவதில் நீ தலையிடாதே. உன்னுடைய மார்க்கம் உனக்கு மிக நல்லதாகவிருக்கலாம்; ஆனல் எனக்கு அது தீமை விளைவிக்கலாம். என்னுடைய அனுபவத்தில் ஓர் உணவு எனக்கேற்றதென்று தெரிகிறது. வைத்தியர்கள் பலர் சேர்ந்தும் அதை மாற்றி அமைக்க முடியாது. அது

போல் எனக்கேற்ற முறை எதுவென்பது எனக்கு அனுப வத்தில் தெரியும்.' ஆதலால் நாம் சொல்லுகிறோம்: எந்தக் கோவில், சின்னம் அல்லது விக்கிரகம், உங்களுக் குள்ளிருக்கும் தெய்வீகத் தன்மையை வெளிப்படுத்து வதற்கு உதவியாக விருக்குமென்று உங்களுக்குத் தோன்றுகிறதோ அதை நீங்கள் வைத்துக்கொள்ளுங்கள். உங்களுக்கு விருப்பமானல் இருநூறு விக்ரகங்களை வைத்துக்கொள்ளுங்கள். சில சடங்குகள் உங்களுக்கு ஆண்டவனை அடைவதில் உதவியாக யிருக்கின்றன வென்றால், அவைகளைத் தாராளமாக வைத்துக்கொள் ளுங்கள். ஆனால் அவைகளைப்பற்றி சண்டை சச்சரவுகள் வேண்டாம். சண்டையிட்டுக்கொள்ள ஆரம்பித்தால் நீங் கள் அந்தக் கணத்திலிருந்து தெய்வத் தன்மையை இழந்து, மிருகத் தன்மையை அடையும் மார்க்கத்திலிருக் கிறீர்கள் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்.

நமது மதம் அனைவருக்கும் இடம் கொடுக்கிறது; எவரையும் நிராகரிப்பதில்லை. நமது ஜாதி முறை மதத் துடன் சேர்ந்ததாகத் தோன்றினலும், உண்மையில் அது மதத்துடன் சம்பந்தப்பட்டதல்ல. ஜாதிகள் நம் சமூகத் தைக் காப்பாற்றுவதற்காக ஏற்பட்டவை. அவை அவசிய மில்லாமல் போகும்போது ஜாதிகளும் தாமாகவே மறைந்துவிடும். நம் மதத்தைப்பற்றி இன்று நான் உங்க ளுக்குச் சொல்ல விரும்பியதைச் சொல்லி விட்டேன். தற்காலத்திற்கு மிக அவசியமான ஒரு விஷயத்தை உங்க ளுக்கு ஞாபகப்படுத்தி இப்பேச்சை முடிக்க விரும்பு கிறேன். மகா பாரதத்தை எழுதியவரான வேத வியாசர் சொல்லுகிறார்: இந்தக் கலியுகத்தில் மிக அரிய சாதனை யொன்றிருக்கிறது. மற்ற யுகங்களில் அனுஷ்டிக்கப்பட்டு வந்த தபோ முறைகளும் யோக அனுஷ்டானங்களும் இக் காலத்தில் அனுஷ்டிக்கக்கூடியனவாக வில்லை. இக்காலத்

தில் நாம் செய்யக்கூடிய உயர்ந்த சாதனை தானதர்மம் தான். தானம் அனைத்தினும் உயர்ந்தது ஆத்மீக அறிவு புகட்டுதல்; அதற்கடுத்தது லௌகீக அறிவு. இதற் கடுத்தது ஒருவனுடைய உயிரைக் காப்பாற்றுதல்; கடைசியாக உணவும் நீரும் அளித்தல். ஆத்மீக ஞானம் அளிப்பவன் ஆத்மாவைப் பல பிறவிகளிலும் பிறந்துழ லாமல் காப்பாற்றுகிறான். லௌகீக அறிவு கொடுப்பவன் ஆத்மீக அறிவைப் பெறுவதற்கு வழிகாட்டுகிறான். மற்ற தானங்களனைத்தும் - உயிரைக் காப்பாற்றுதல் கூட - இவைகளுக்குத் தாழ்ந்தவையாகவே யிருக்கின்றன. ஆத லால் ஆத்மீக அறிவு புகட்டுதலே நாம் ஆற்றக் கூடிய பணிகள் அனைத்தினும் சிறந்ததென்பதை நீங்கள் உணர வேண்டும். அதுதான் எல்லா உதவிகளிலும் பெரிய உதவி. நம்முடைய சாஸ்திரங்கள், ஆத்மீகப் பேரின்ப வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் வற்றா ஊற்றுக்களாக விருக்கின்றன. துறவுநிறைந்த இந்நாட்டில்தான் ஆத் மாவை அனுபவத்தில் கண்டறிந்த அறிஞர்கள் பலர் இருக்கிறார்கள். நான் உலக முழுதும் சுற்றிப் பார்த்திருக் கிறேன்; நான் சொல்லுவதை நம்புங்கள். மற்ற நாடு களில் மதத்தைப்பற்றிப் பலர் பேசலாம்; ஆனால் மதக் கொள்கைகளை வாழ்க்கையில் பின்பற்றி அனுஷ்டிப்ப வர்கள் இங்குதா னிருக்கிறார்கள். பேச்சு மதமாகாது. கிளி பேசும்; இப்பொழுது இயந்திரங்களும் பேசுகின்றன. பூரணமான துறவும், ஆத்மீக உணர்ச்சியும், அந்நெறி யிலே தோன்றும் கஷ்டங்களைச் சகிக்கும் தன்மையும், எல்லையற்ற அன்பும்—இவைதான் ஆத்மீக வாழ்க்கையின் அறிகுறிகளாம். இவ்வளவு உயர்ந்த கருத்துக்களும் அவைகளைத் தங்கள் வாழ்க்கையில் பின்பற்றும் பெரி யோர்களும் நம் நாட்டில் நிறைந்திருக்கும்போது, இந்த உயர்ந்த லட்சியங்களை நம் நாட்டில் பணக்காரன் ஏழை,

உயர்ந்தவன் தாழ்ந்தவனென்ற வித்தியாசமின்றி அனைவரிடமும் பரப்புவதுடன், வெளிநாடுகளிலும் பரப்பாமலிருப்பது பாவமாகும். இதுவே நமது கடமைகளில் தலைசிறந்ததாகும். பிறருக்குக் கொடுப்பது நம்மை மேன்மைப் படுத்துகிறது. உங்களுக்கு உங்கள் மதத்தின் பேரில் உண்மையான அன்பு இருந்தால், உங்கள் தேசத்தின்பால் உங்களுக்கு அன்பிருக்குமானால், நீங்கள் இந்த அதி முக்கியமான தொண்டை மேற்கொண்டு, இடைவிடாமல் முயற்சிசெய்து, நம் சாஸ்திரங்களிலிருக்கும் மகத்தான செல்வமாகிய இவ்வாத்மீக உண்மைகளை, அவைகளின் உண்மையான சொந்தக்காரர்களான நம் மக்களுக்கு அளியுங்கள்.

எல்லாவற்றிற்கும் மேலாக நாம் ஒரு விஷயத்தை உணரவேண்டியது அவசியம். நெடுங் காலமாக நாம் பொறாமையால் மூழ்கிக் கிடக்கிறோம். இவனுக்கு ஏன் அதிக மரியாதை கிடைக்கிறது? நான் ஏன் அதைப் பெறக் கூடாது?—என்ற இவ்விதமான பொறாமை நம் மனதில் நிறைந்திருக்கிறது. கடவுள் ஆராதனை நடக்கும் இடங்களில்கூட நாம் மற்றவர்களுக்கு முன் நிற்க விரும்புகிறோம். இதைவிடக் கேவலமான அடிமை உணர்ச்சி வேறு என்ன இருக்கமுடியும். இப்பொறாமையை அகற்ற வேண்டும். இவ்வடிமைத்தனம்தான் இந்தியாவின் பெரும் பாவம். எல்லோரும் அதிகாரம் செய்ய விரும்புகிறார்கள்: ஒருவரும் சேவைசெய்ய விரும்புவதில்லை. பழங்காலத்து பிரம்மச்சரிய முறை போய்விட்டதனால் இவ்விதம் நேர்ந்திருக்கிறது. முதலில் கீழ்ப்படியத் தெரிந்துகொள்ளுங்கள். அதற்குமேல் அதிகாரம் தானே வரும். முதலில் தொண்டர்களாயிருக்கக் கற்றுக் கொள்ளுங்கள். அதன் மூலம் தலைவராகும் தகுதி பெறுவீர்கள். பொறாமையை மனத்தினின்று அகற்றினால், மகத்தான காரியங்களைச்

செய்யக்கூடிய சக்தி உங்களுக்கு உண்டாகும். நமது முன்னோர்கள் மிக அற்புதமான காரியங்களைச் சாதித்திருக்கின்றனர். அவைகளை நாம் இப்பொழுது மிகப் பெருமையுடனும் மகிழ்ச்சியுடனும் நோக்குகின்றோம். நாமும் மகத்தான காரியங்களைச் செய்யப்போகின்றோம். நமக்குப் பின்வருபவர்கள் பெருமையுடனும் அன்புடனும் அவைகளைப் பார்ப்பார்கள். நம் முன்னோர்கள் மிகப் பெருமைவாய்ந்த காரியங்களைச் செய்திருக்கிறார்கள். ஆண்டவனுடைய திருவருளால் இங்கிருப்பவர்கள் ஒவ்வொருவரும் அவைகளைவிட அதிகப் பெருமையான காரியங்களைச் செய்வீர்களாக.

---

# வேதாந்தம் உலகிற்களிக்கும் செய்தி

**[கும்பகோணத்தில் பேசியது]**

ஆத்மிகத் துறையில் சிறிதளவு முயற்சியும் அதிகமான பயனைத் தருகிறது என்ற கீதா வாக்கியத்திற்கு ஓர் உதாரணம் அவசியமானால் அதை என்னுடைய வாழ்க்கையிலேயே அனுதினமும் காண்கிறேன். நான் செய்த வேலை மிகச் சிறிது. ஆனால் கொழும்புவிலிருந்து இது வரை ஒவ்வொரு ஊரிலும் நான் பெற்றிருக்கும் அன்பும் ஆதரவும் எதிர்பார்க்க முடியாததாயிருக்கின்றன. எனினும், மதத்தையே தங்கள் ஜீவநாடியாகக்கொண்ட நம்முடைய மக்களுடைய பண்புக்கும் பழக்கத்திற்கும்

அவை ஏற்றதாகவே யிருக்கின்றன. நான் உலக முழு திலும் பல நாடுகளுக்குச் சென்று பார்த்திருக்கிறேன். ஒவ்வொரு நாட்டிலும் ஓர் இலட்சியம் மக்களது வாழ்க்கை யின் அடிப்படையாக விருந்து வந்திருக்கிறது. ஒரு தேசம் ராஜீயம், ஒரு தேசம் சமூக முன்னேற்றம், மற்றென்று அறிவு வளர்ச்சி முதலியவைகளைத் தமது வாழ்க்கைக்கு அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. இந்த நமது தாய் நாடு ஆத்மீக உணர்ச்சியைத் தனக்கு இலட்சியமாகக் கொண்டிருக்கிறது. இதை அஸ்திவாரமாகக் கொண்டே நம் தேசீய வாழ்க்கையாகிய கட்டடம் கட்டப்பட்டிருக் கிறது. சென்னை வாசிகள் நான் அமெரிக்காவிலிருந்த போது எனக்கு ஓர் உபசாரப் பத்திரம் அனுப்பி யிருந் தார்கள். அதற்கு அனுப்பிய பதிலில் நம் சாதாரணக் கிராம வாசிகள்கூட மேல்நாட்டிலிருக்கும் படித்த கன வான்களைவிட அதிகமான மத ஞானத்தை உடையவர் களாக விருக்கிறார்கள் என்று நான் எழுதியிருந்தது உங்களில் சிலருக்கு ஞாபகமிருக்கலாம். அவ்வார்த்தைகள் மிகவும் உண்மை என்பதை நிதரிசனமாக இப்பொழுது காண்கிறேன். நம் சாதாரண மக்களிடையே விஷயங் களைத் தெரிந்துகொள்வதில் ஆர்வமில்லையென்று நான் வருந்திய காலமொன்றிருந்தது. ஆனால் இப்பொழுது எனக்கு உண்மை புலப்படுகிறது. அவர்களுக்கு அக்கரை யிருக்கும் விஷயங்களில், மற்ற நாட்டு மக்களைவிட அதிக ஆர்வம் அவர்களுக்கிருக்கிறது. ஐரோப்பாவில் நடக்கும் ராஜீய மாறுதல்களைப்பற்றியும், பெரிய சமூக இயக்கங் களைப்பற்றியும் அவர்களைக் கேளுங்கள். அவைகளைப் பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரியாது; தெரிந்துகொள்ள விருப்பமும் இல்லை. ஆனால் இந்தியாவைவிட்டுப் பிரிந் திருக்கும் இலங்கைக் குடியானவர்களுக்கும், அமெரிக் காவில் ஒரு சர்வமத மகாசபை நடந்ததும், அதற்கு ஓர்

இந்து சன்யாசி சென்றிருந்ததும், அவர் வெற்றி பெற்ற தும் தெரிந்திருக்கிறது. அவர்களுக்கு அக்கரை யிருக்கும் விஷயங்களைத் தெரிந்துகொள்ள ஆவல் இதர நாட்டு மக்களைப்போல் நம் நாட்டு மக்களிடத்திலும் நிறைந்திருக் கிறதென்பது இதிலிருந்து புலப்படுகிறது. இந்தியாவில் மதத்தில்தான் மக்களுடைய அக்கரை யிருக்கிறது. மதத் தைப் பிரதானமாகக் கொண்டிருப்பது நம் மக்களுக்கு நல்லதா அல்லது ராஜீயத்தைப் பிரதானமாகக் கொள்வது நல்லதா வென்பதைப்பற்றி விவாதிக்க நான் இப்பொழுது முன் வரவில்லை. ஆனால் நமக்குத் தெரிந்தவரையில் நல்ல தற்காகவோ கெட்டதற்காகவோ, மதத்தில்தான் நமது உயிர்நாடி யிருக்கிறது. அதை நாம் மாற்றமுடியாது. ஒரு செடி பெரிய மரமாக வளர்ந்தபிறகு, அதை அந்த இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு மாற்றி, வளரச் செய்யமுடியாது. நல்லதற்கோ கெட்டதற்கோ ஆயிரக் கணக்கான வருஷங்களாக ஆத்மீக உணர்ச்சி இந்தியாவில் பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருக்கிறது. இந்திய வாயு மண்டலம் பல நூற்றாண்டுகளாக ஆத்மீக லட்சியம் நிறைந்ததாக விருக்கின்றது. நாம் ஆத்மீக எண்ணங் களுக்கு மத்தியில் பிறந்து வளர்ந்திருக்கிறோம். அவை நம் ஒவ்வொரு சொட்டு ரத்தத்திலும் கலந்து நமது உடலுக் கும் வாழ்க்கைக்கும் மூலாதாரமாக விருந்து வருகின்றன. இப்படியிருந்துவரும் மத உணர்ச்சியை நாம் எளிதில் விட்டுவிட முடியுமா? கங்கை நதி தன் உற்பத்திஸ்தானத் திற்குத் திரும்பிச் சென்று, வேறு வழியில் பாயவேண்டு மென்று நீங்கள் விரும்பினால், அதுகூடச் சாத்தியமாக லாம். ஆனால் இந்த நாடு ஆத்மீக வாழ்க்கையைத் தன் இலட்சியமாயிருப்பதை விடுத்து, வேறு ஒன்றைத் தன் இலட்சியமாக ஏற்பது சாத்தியமற்றதாகும். நாம் இயற் கையை அனுசரித்துத்தான் வேலைசெய்ய முடியும். மத

உணர்ச்சி இந்தியாவின் இயல்பை அனுசரித்திருக்கிறது. அதுதான் இந்தியாவின் நன்மைக்கும் வளர்ச்சிக்குமேற்ற நெறியுமாகும். மற்ற தேசங்களில் மதம் வாழ்க்கையின் பல அம்சங்களில் ஒன்ருக விருக்கிறது. உதாரணமாக ஒரு சீமாட்டி தற்கால நாகரிகத்தை அனுசரித்து பல சாமான்களைத் தன் வீட்டில் சேகரித்து வைத்திருப்பாள். ஒரு ஜப்பான் ஜாடி வைத்திருப்பது அன்றைய நாகரிகமா யிருக்கலாம். எனவே அதை அவசியம் வாங்கி வைத் திருப்பாள். இல்லாவிடில் நன்ருயிராதல்லவா? அது போல் மற்ற பல விஷயங்களிடையே கொஞ்சம் மதமும் வைத்துக்கொண்டிருப்பாள்.

ராஜீயம், சமூக முன்னேற்றம், சுருங்கச் சொல்லின் இவ்வுலக இன்பம், மேல் நாட்டின் இலட்சியமாயிருக் கிறது. கடவுளும் மதமும் அதற்கு அனுசரணையாகக் கொஞ்சம் வைத்திருக்கிருர்கள். அவர்கள் கடவுள் அவர் களுக்கு இவ்வுலக வாழ்க்கையில் உதவிசெய்ய வேண்டும். அவர்கள் கடவுளுக்குக் கொடுக்கும் மதிப்பு அவ்வளவு தான். இந்த அறிவாளிகள் சென்ற இருநூறு வருஷங் களாக இந்து மதத்திற்கு விரோதமாக என்னென்ன சொல்லிக்கொண் டிருக்கிருர்களென்று உங்களுக்குத் தெரியுமா? நம் மதம் உலக வாழ்க்கையில் இன்பத்தைத் தருவதில்லை, நமக்குச் செல்வம் கொடுப்பதில்லை, மற்ற நாடுகளைக் கொள்ளை யடிக்கும்படி செய்வதில்லை. மற்ற நாடுகளிலிருக்கும் பலவீனமான மக்களை ஆக்கிரமித்து அவர்களுடைய ரத்தத்தைக் குடிக்கும்படி செய்வதில்லை என்று பலவாருகச் சொல்லி வந்திருக்கிருர்கள். நிச்சயமாய் நம்மதம் இவ்விதம் செய்வதில்லைதான். பிற தேசங்களைக் கொள்ளையடிப்பதற்காகவும் அழிப்பதற்காகவும் நம் மதம் கோரமான சைன்யங்களை அனுப்பமுடியாது. எனவே இம்மதத்தில் என்ன இருக்கிறதென அவர்கள் கேட்

கிறார்கள். வாய்க்குத் தீண்டியும் உடலுக்குப் பலமும் கொண்டுவராத மதத்தில் என்ன விருக்குமென்று அவர்கள் கேட்கிறார்கள். இவ்வுலகம் சுகத்தை யளிப்ப தில்லையென்ற ஒரு காரணத்தைக்கொண்டே நம்முடைய மதம் உயர்ந்ததென நாம் சாதிக்கிறோமென்பதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள். நம் மதம்தான் உண்மையானது. ஏனெனில், இரண்டு தினங்களில் அழியக்கூடிய புலன் நுகர்ச்சியால் ஏற்பட்ட இவ்வாழ்க்கையை நாம் லட்சிய மாகக் கொள்வதில்லை. நம் மதத்தின் நோக்கம் இவ்வற்ப பூமியை ஆளுவதல்ல. இவைகளுக்கப்பால், அப்பாலுக்கு அப்பாலாய், புலன்களைத் தாண்டி, காலம் இடம் இவை களையும் கடந்து, இப்பிரபஞ்சமனைத்தும் சமுத்திரத்தில் ஒரு திவலையெனத் தோன்றச் செய்யும் அந்த எல்லையற்ற பரஞ்சோதியே நமது நோக்கமாயிருக்கிறது. நம் மதம் தான் உண்மையானது. ஏனெனில், கடவுள் மாத்திரம் தான் உண்மை. இவ்வுலக வாழ்க்கை கணநேரத்தில் மறையக்கூடியது. பொன்னும் குப்பையைப்போல் பய னற்றதென்று அது போதிக்கிறது. நம் மதம்தான் உண்மையானது. ஏனெனில் அது துறவையும் தியாகத தையும் அறிவுறுத்துவதுடன், பல யுகங்களாகப் போற் றப்பட்ட உயர்ந்த ஞானத்தையும் உடையதாக விருக் கிறது. நம்முடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நேற்றுத்தான் பிறந்தவர்கள்போல் தோன்றும் மேல்நாட்டு மக்களைப் பார்த்து அது சொல்லுகிறது: "ஏ குழந்தைகளே! நீங்கள் உங்கள் புலன்களுக்கு அடிமையாக விருந்து கொண்டிருக்கிறீர்கள். புலன்கள் வரம்புக்குட்பட்டன. அவை மனிதனைத் தாழ்த்தி, சிற்றின்பத்தில் அழுந்த வைத்து அழிக்கக்கூடியன. அவ்வித வாழ்க்கையை விட்டு விடுங்கள். இப்பற்றுக்களை விடுவதன் மூலம்தான் ஆத்மீக உணர்ச்சியைப் பெறமுடியும். தியாகத்தினால் ஆத்மீக

உணர்ச்சியைப் பெறமுடியுமே யொழிய, போகத்தினல் பெறமுடியாது." எனவே இதுவன்றே உண்மையான மத மாகும்.

உலகில் பல மக்கள் ஒருவருக்குப் பின் ஒருவர் தோன்றி, வெகு வேகத்துடன் கொஞ்சகாலம் ஜீவித்திருந்து, அதன் பிறகு தாங்கள் தோன்றியதன் அறிகுறிகூட விட்டு வைக்காமல் அழிந்துபோய் விட்டார்கள்; ஆனல் நாம் மாத்திரம் சாசுவதம்போல் இன்னும் ஜீவித்துக்கொண்டிருக் கிறோ மென்பது ஓர் ஆச்சரியமான விஷயம். பலமுள்ளவர் கள்தான் வாழ்க்கைப் போரில் மிஞ்சி நிற்பார்கள்† என்ற புதுக் கொள்கையைப்பற்றி மேல் நாட்டார் வெகுவாகப் பேசு கிறார்கள். அந்த பலம் சரீரத்தைப் பொறுத்ததென்று அவர் கள் நினைக்கிறார்கள். அது உண்மையாக விருந்தால் சரீர பலம் பெற்றிருந்த மக்களில் ஒருவராவது இன்னும் பிழைத் திருக்க மாட்டார்களா? எவரையும் ஜெயித்திராத இந்த பல வீனமான இந்து சமுதாயம் அழிந்துபோயிருக்க வேண்டு மல்லவா? ஆனல் நாம் முப்பது கோடி மக்களாக இன்னும் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். இப்பொழுது நம் சமுதா யத்தின் சக்தியனைத்தும் தீர்ந்து அதன் உடல் சிலிர்த்துப் போயிருக்கிறதென்று சிலர் நினைப்பதும் உண்மையல்ல. அதில் சக்தி போதுமான அளவிருக்கிறது. ஏற்ற காலம் வரும்போது அச்சக்தி வெள்ளப் பெருக்கெடுத்து உலகை நிரப்பும். மிகப் பழங் காலத்திலிருந்து நாம் உலகிற்கு ஒரு சிறந்த செய்தி கொடுத்து வந்திருக்கிறோம். எவ்வளவு அதிகமான உடைமைகள் மனிதனுக்கு வேண்டுமென்பது பற்றி மேல் நாட்டில் யோசனை செய்துகொண்டிருக்கிறார் கள். எவ்வளவு குறைவான வசதிகளுடன் மனிதன் வாழ

†Survival of the fittest

முடியு மென்பதுபற்றி நாம் முயற்சி செய்து பார்த்துக் கொண்டிருக்கிறோம். மேல் நாட்டினருக்கும் நமக்குமுள்ள இவ்வித்தியாசம் இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு இப்ப டியே யிருந்துகொண்டிருக்கும். சரித்திரம் நமக்குக் கற் பிப்பது உண்மையாக விருந்தால், எந்த ஜோசியமாவது நிச் சயமாகச் சொல்லக் கூடியதெனில், குறைந்த அவசியங்களை மேற்கொண்டு தன்னடக்கத்துடன் வாழ்பவர்கள்தான் நாளடைவில் இவ்வாழ்க்கைப் போரில் வெற்றி பெறுவார்கள் என்று நிச்சயமாய்ச் சொல்லலாம். உலக சுகத்திலும் சௌகர்யங்களிலும் ஈடுபடுகிறவர்கள் இப்பொழுது அவர்கள் எவ்வளவு பலமுள்ளவர்களாகத் தோன்றியபோதிலும் நாளடைவில் அழிந்துபோவார்கள். மனித வாழ்க்கையில், ஏன் சமூக வாழ்க்கைகளிலும்கூடச் சிற்சில சமயங்களில் இவ் வுலக இன்பத்தில் அலுப்பும் வெறுப்பும் தோன்றுவதுண்டு. அம்மாதிரி ஓர் அலுப்பு உணர்ச்சி மேல் நாட்டு மக்களுக்கு இப்பொழுது வந்திருப்பதாகத் தோன்றுகிறது. அவர்களுக் குள்ளும் அறிவாளிகளாயிருப்பவர்கள் இங்ஙனம் பொன்னை யும் மண்ணையும் நாடி அலைந்துகொண்டிருப்பது பயனற்ற தென்பதை உணர்ந்துகொண்டிருக்கிறார்கள். மனப்பண்பு மிகுந்த பல ஆண்களும் பெண்களும், மிருகத்தனமான போட்டி நிறைந்த பணத்தையே பிரதானமாகக்கொண்ட தங்கள் நாகரிகத்தில் சலித்துப்போய், வேறு உயர்ந்த இலட்சி யத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஐரோப்பா விலிருக்கும் கெடுதல்களை ராஜீய, சமூக சீர்த்திருத்தங்கள் மூலம்தான் நீக்க முடியுமென்று இன்னும் நினைப்பவர்கள் சிலருண்டு. ஆனால் சிறந்த அறிவாளிகளிடையே வேறு எண்ணங்கள் தோன்றிக் கொண்டிருக்கின்றன. ராஜீய அல்லது சமூகச் சீர்த்திருத்தங்கள் எவ்வளவு செய்தாலும் அவைகளின் மூலம் வாழ்க்கையின் துன்பங்களை அகற்ற முடியாதென்று அவர்கள் உணர்ந்திருக்கின்றனர். உயர்ந்த

இலட்சியத்தை ஆதாரமாகக்கொண்ட மன மாற்றம்தான் வாழ்க்கையின் துன்பங்களைப் போக்க முடியும். பலாத்காரத்தினாலோ, அரசாங்கத்தின் மூலமாகவோ அல்லது சட்டங்கள் செய்வதினாலோ மக்களை மேம்படுத்த முடியாது. ஆத்மீக வாழ்வும் ஒழுக்கமும்தான் மக்களுடைய தாழ்ந்த மனப்போக்குகளை மாற்றி உயர்த்தும். மேல் நாட்டு மக்கள் இப்பொழுது புதிய கருத்துக்களையும் புதிய வாழ்க்கை முறையையும் தேடிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய கிருஸ்துவ மதம் மகத்தானதெனினும், அதை அவர்கள் சரியாக அறிந்துகொள்ளாத காரணத்தால், அதன்மூலம் அவர்கள் சாந்திபெற முடியாதவர்களா யிருக்கிறார்கள். மேல் நாட்டிலிருக்கும் அறிவாளிகள் தங்கள் ஆத்மீக தாகத்தைத் தீர்க்கக்கூடிய மருந்தை, நம்முடைய பழைமையான சாஸ்திரங்களில், குறிப்பாக வேதாந்தத்திலுள்ள புதிய கருத்துக்களில் காண்கின்றனர். இங்ஙனமிருப்பது ஓர் ஆச்சரியமான விஷயமல்ல.

உலகத்திலிருக்கும் ஒவ்வொரு மதத்தைப்பற்றியும், அதுதான் உயர்ந்ததென்று, பலவாறான ஆச்சரியமான வாதங்களை நான் கேட்டிருக்கிறேன். எனது நண்பர் டாக்டர் பாரோஸ், கிருஸ்துவ மதம்தான் எல்லோராலும் ஒப்புக்கொள்ளக் கூடியதென்று சொல்லுவதை நீங்கள் கேட்டிருப்பீர்கள். வேதாந்தம் மாத்திரமே உலகில் அனைவராலும் ஏற்றுக்கொள்ளத் தக்கதெனவும் வேறு எந்த மதமும் அந்நிலையைப் பெற முடியாதென்றும் நான் நினைக்கிறேன். அதற்குக் காரணமும் உங்கள் முன்னிலையில் சொல்ல விரும்புகிறேன். நம்முடைய மதம் தவிர மற்றெல்லா மதங்களும் அவைகளை ஸ்தாபித்தவர்களுடைய வாழ்க்கையில் சம்பந்தப்பட்டனவாக இருக்கின்றன. அவைகளுடைய எல்லாக் கொள்கைகளும், உபதேசங்களும், நீதி முறைகளும் அம்மதங்களை ஸ்தாபித்த பெரியோர்களுடைய

ஜீவிய சரித்திரங்களை யொட்டியே உண்டாக்கப்பட்டிருக்கின்றன. அவர்களுடைய வாழ்க்கைச் சரித்திரங்களே அவைகளுக்கு ஆதாரமாக விருக்கின்றன. எனவே அவர்கள் வாழ்க்கைச் சரித்திரங்களைப்பற்றி சிறிது சந்தேகம் ஏற்பட்டாலும், அதன்மேல் கட்டப்பட்டிருக்கும் கட்டிடம் முழுதும் இடிந்து விழ நேரிடும். தற்காலத்தில் அவர்கள் வாழ்க்கைச் சரித்திரங்களைப் பற்றிப் பலத்த சந்தேகங்கள் பரவிவருவது உங்களுக்குத் தெரியும். நம் மதம் தவிர உலகிலுள்ள மற்றெல்லா மதங்களும் சில தனிப்பட்ட நபர்களுடைய வாழ்க்கையின் உண்மையைப் பொறுத்திருக்கின்றன. ஆனால் நம்முடைய மதம் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. எவரும் வேதங்களை உண்டாக்கி யிருப்பதாகச் சொல்லமுடியாது. அவை என்றுமழியா நித்தியமான தத்துவங்களின் சொரூபமாயிருக்கின்றன. ஞானிகள் அவைகளைக் கண்டுபிடித்தனர். இங்குமங்கும் சிற்சில இடங்களில் அவர்கள் பெயர்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால் அதற்குமேல் —அவர்கள் பெற்றோர், பிறப்பிடம் முதலிய விபரங்கள் ஒன்றும் நமக்குத் தெரியா. அவர்கள் தங்கள் பெயரைப்பற்றி நினைக்கவேயில்லை. அவர்கள் சில தத்துவங்களை உபதேசம் செய்தார்கள்; அதற்கு உதாரணமாகத் தங்கள் வாழ்க்கையை நடத்தப் பிரயத்தனம் செய்தார்கள். நமது மதம் எப்படிக் கடவுளை ரூபமாகவும் அரூபமாகவும் வணங்குவதற்கு இடமளிக்கிறதோ, அதுபோலவே அது தத்துவங்களையே அடிப்படையாகக் கொண்டதாக விருந்தாலும் உயர்ந்த மகான்களைப் போற்றுவதற்கும் எல்லையற்ற இடமளிக்கிறது. இந்து மதத்தில் இருப்பதுபோல் வேறு எந்த மதத்திலும் இவ்வளவு அவதார புருஷர்களும் மகான்களும் தீர்க்கதரிசிகளும் தோன்றியதில்லை. கடவுளின் அவதாரங்களுக்கு எல்லையே இல்லையென பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் எண்ணிறந்த

அவதார புருஷர்கள் தோன்றலா மென்பது அதன் பொருள். இவ்வவதார புருஷர்களில் சிலர் சரித்திர பூர்வ மானவர்கள் அல்லரென்று ரூபிக்கப்பட்டால், அது நம் மதத்தைப் பாதிப்பதேயில்லை. நம் மதம் தனி நபருடைய வாழ்க்கையின் மேலல்லாமல் கொள்கைகளை அடிப்படை யாகக் கொண்டிருப்பதால், அதை எப்பொழுதும் அசைக்க முடியாது. உலக மக்கள் அனைவரையும் ஒரு மனித ருடைய வாழ்க்கையைப் பின்பற்றும்படி செய்வது அசாத்தியம். நித்தியமான கொள்கைகளை ஆதாரமாகக் கொண்டாலும் கூட மக்கள் அனைவரையும் ஒன்று சேர்ப்பது கடினமான விஷயம். ஆனால் உலகின் பெரும் பான்மையான மக்களை ஒரு மதத்தினராகச் செய்வது எப்பொழுதாவது சாத்தியமெனில், அது கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டுதான் முடியுமேயொழிய, தனி மக்களுடைய வாழ்க்கைகளை அடிப்படையாகக் கொண் டல்ல. நான் முன் சொன்னபடி நம் மதத்தில் பலதரப் பட்ட பெரியோர்களுடைய வாழ்க்கைகளுக்கும் நிறைய இடமிருக்கிறது. ஒவ்வொருவரும் தாம் கோரும் இஷ்ட தேவதையை வணங்கலாமென்ற அற்புதமான கொள்கை நம் மதத்திலிருக்கிறது. எந்த அவதார புருஷர் அல்லது ஆசாரியரையும் நீங்கள் உங்கள் இஷ்டதேவதையாகக் கொள்ளலாம். உங்களுடைய இஷ்டதேவதை மற்ற வரையும்விட சிரேஷ்டமான தென்று கூட நீங்கள் நினைக்கலாம். அதில் தவறில்லை. ஆனால் அடிப்படை யான கொள்கைகளில் உறுதியாக விருக்கவேண்டும். இதில் ஆச்சரியமான ஒரு விஷயம் என்னவெனில், இம் மகான்களுடைய வாழ்க்கை எவ்வளவு தூரம் தம் மதத் திற்கு மூலாதாரமான கொள்கைகளைச் சார்ந்திருக்கின் றனவோ அவ்வளவு தூரம்தான் அவை உண்மை யானவை. ஸ்ரீ கிருஷ்ணபகவானின் பெருமைகூட என்ன

4

வெனில், அவர் இந்து சனுதன தருமத்தை மற்றெல்லோ ரைக் காட்டிலும் நன்ருக உபதேசம் செய்தார் என்பதும் வேதாந்தத்திற்கு மிக அருமையான வியாக்கியானம் செய் தார் என்பதும்தான்.

வேதாந்தம் உலக முழுதும் ஒப்புக்கொள்ளக்கூடிய மதமாயிருக்கிற தென்பதற்கு இரண்டாவது காரணம் என்னவெனில், அதன் உபதேசங்கள்தான் தற்கால விஞ் ஞான சாஸ்திர ஆராய்ச்சிக்கு முற்றிலும் ஒத்திருக்கின் றன. மிகப் பழங்காலத்திலே ஒரு வகைப்பட்ட இரு மக் கள் இரு வேறு துறைகளில் செல்லப் புறப்பட்டனர். அவர்களில் ஒருவர் இந்துக்கள், மற்ருருவர் கிரேக்கர் கள். இந்துக்கள் மனிதனுடைய உள்ளத்தையும் ஆத்மீக உலகத்தையும் ஆராய்ச்சி செய்தனர். கிரேக்கர்கள் வெளி உலகத்தை ஆராய்ச்சி செய்வதன் மூலம் தங்கள் லட்சியத்தை யடைய முயற்சி செய்தனர். அவர்களுடைய சரித்திரத்தில் பலவிதமான அனுபவங்களுக்குப் பிறகு அவ்விரண்டு மக்களுடைய ஆராய்ச்சிகளும் ஒரே வித மான முடிவுடன் பிரதித்வனிக்கின்றன. எல்லா மதங் களிலும், இந்துக்கள் அதாவது வேதாந்திகள்தான் தற் கால விஞ்ஞான சாஸ்திரங்களின் முடிவுகளை ஏற்றுக் கொள்ளக்கூடிய நிலைமையிலிருக்கின்றனர். விஞ்ஞான சாஸ்திரங்களைப் பின்பற்றுகிறவர்கள் தங்கள் முடிவு களைக் கைவிடவேண்டிய அவசியமில்லாமல், வேதாந்தத் தைப் பின்பற்றி ஆத்மீக உணர்ச்சி பெறமுடியும். தற் காலத்தில் விஞ்ஞான சாஸ்திரம் வந்திருக்கும் முடிவுக்கு வேதாந்தம் வெகு காலத்திற்கு முன்னமேயே வந்திருப்ப தாகத் தெரிகிறது. ஆனல் இரண்டிற்கும் ஒரு வித்தி யாசம். விஞ்ஞானம் ஸ்தூல பாஷையில் பேசுகிறது; வேதாந்தம் ஆத்மிக பாஷையில் பேசுகிறது.

வேதாந்தம் புத்தி பூர்வமாக இருக்கிறதென்பது எல்

லோர்ாலும் ஒப்புக்கொள்ளப் படுவதற்கு இன்னுமொரு காரணமாக விருக்கிறது. மேல் நாட்டிலுள்ள பௌதிக சாஸ்திர விற்பன்னர்களில் சிலர் வேதாந்தம் மிக அற்புத மான புத்தி பூர்வமாக இருக்கிறதென்று என்னிடம் உரைத்திருக்கின்றனர். அவர்களில் ஒருவரை எனக்கு நன்ருகத் தெரியும். அவர் உணவு உண்ணவும், வெளியில் செல்லவும் சிறிதுகூட நேரமின்றித்தம் ஆராய்ச்சிச் சாலே யில் ஆராய்ச்சி செய்து கொண்டிருப்பார். ஆனல் அவர் பல மணி நேரம் காத்திருந்தும் என் பிரசங்கங்களேக் கேட்பார். அதற்குக் காரணம், வேதாந்தம் விஞ்ஞான சாஸ்திரங்களின் முடிவுகளுக்கும் தற்கால ஆராய்ச்சிகளுக் கும் ஏற்றதாக விருக்கின்றதென அவர் சொல்லுவார். இவ்விதம் புத்தி பூர்வமாக ஒப்புக் கொள்ளப்பட்ட இரண்டு தத்துவங்களேப் பற்றி நான் உங்களுக்கு எடுத் துச் சொல்ல விரும்புகிறேன். அவற்றில் ஒன்று, மதங்கள் அனேத்தும் அடிப்படையாக ஒன்றென்பது. இரண்டாவது அனேத்தும் ஒன்றென்னும் கருத்து.

பாபிலோனியர்கள் சரித்திரத்திலும் யூதர்களுடைய சரித்திரத்திலும் அவர்கள் மத சம்பந்தமாக ஒரு விநோதை மான நிகழ்ச்சியைக் காண்கிருேம். இவர்கள் பல பிரிவு களாகப் பிரிந்திருந்தனர். ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு தெய்வ மிருந்தது. அத்தெய்வங்களனேத்திற்கும் ஒரு பொதுப் பெயரும் இருந்தது. பாபிலோனியர்களின் தெய் வத்தின் பெயர் 'பால்'. அத்தெய்வங்களில் முக்கிய மானது 'பால் மெரடாக்'. இவர்களில் ஒரு பிரிவு மற்ற பிரிவுகளே யுத்தத்தில் ஜெயித்து விடும். அதன் காரண மாக ஜெயித்தவர்கள் தெய்வம் மற்ற தெய்வங்களே விடப் பெரிதாகக் கருதப்படும். இவ்விதம் அந்த ஜாதியினர் அனேவருக்கும் ஒரு தெய்வம் ஏற்பட்டது. யூதர்களுடைய தெய்வங்களின் பெயர் 'மோலக்' என்பதாகும். அவை

களில் இஸ்ரேல் குலத்திற்குச் சேர்ந்த தெய்வத்தின் பெயர் 'மோலக் யாவர்'. இஸ்ரேல் குலத்தவர்கள் மற்ற வர்களை ஜெயித்து, அவர்கள் தெய்வங்களை அழித்துத் தங் கள் தெய்வத்தை யாவற்றிலும் உயர்ந்ததாக நிலை நாட்டி ஞர்கள். இவ்விதம் மதத்தின் காரணமாகச் சிந்தப்பட்ட ரத்தமும், செய்யப்பட்ட அக்கிரமங்களும் கொடுமைகளும் உங்களில் பலருக்குத் தெரிந்திருக்கும். இந்தியாவி லும் ஆரம்ப காலத்தில் பல பிரிவுகள் தம் தம் தெய் வத்தைத் தொழுது வந்திருக்கலாம்; அதனால் சண்டை சச்சரவுகளும் நேர்ந்திருக்கலாம். ஆனால் இந்தியாவின் சரித்திரம் வேருக இருந்தது. இந்தியாதான் சமரச நோக் கத்திற்கும் ஆத்மீக வாழ்விற்கும் உரிய நாடாகவிருக்க வேண்டியிருந்தது. ஆதலால் இச்சண்டைகள் அதிகம் நேரவில்லை. ஏனெனில் ஒரு மகான், சரித்திரம் எட்டிப் பார்க்கமுடியாத அப்பழங் காலத்திலே தோன்றி 'உண்மை ஒன்றே; பெரியோர்கள் அதைப் பலவாருகக் கூறுகிருர் கள் (ஏகம் சத்; விப்ரா பஹுதா வதந்தி)' என்றுரைத்தார். உலகில் இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட மகத்தான உண்மைகளில் இது சிறந்ததாக விருக்கின்றது. இந்துக் களாகிய நமக்கு இவ்வுண்மை நமது தேசீய வாழ்வுக்கு அடிப்படையாகவிருந்து வருகிறது. கடவுள் ஒன்றே, பெரியோர்கள் அதைப் பலவாருகக் கூறுகிருர்கள் என்ற இக்கருத்து நம்முடன் பல நூற்ருண்டுகளாக வளர்ந்து வந்து, நம் ரத்தத்தில் கலந்து, நம் தேசீய வாழ்க்கை முழு தும் வியாபித்து நம்முடன் ஒன்ருகி யிருக்கிறது. இதன் காரணமாக நம் நாடு சமரசம் நிறைந்ததாக விருக்கிறது. இங்குதான் இந்துக்கள் தங்களை நாசம் செய்ய வந்த மதத்தினர்களுக்கு சர்ச்சுகளும் மசூதிகளும் கட்டித் தருகி ருர்கள். இந்த சமரச மனப்பான்மையை உலகம் நம் மிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. உல

கில் வெறுப்பும் துவேஷமும் எவ்வளவிருக்கிறதென்பதை நீங்கள் அறிய மாட்டீர்கள். இந்த மதத் துவேஷத்தின் காரணமாக என் உடலை வெளி நாடுகளில் தான் நீக்க வேண்டியிருக்கு மென்று எனக்குப் பல தடவைகளில் தோன்றியதுண்டு. மதத்திற்காக ஒரு மனிதனைக் கொல்வது அங்கு வெகு சாதாரணம். மிகப் பெருமை பாராட்டிக் கொள்ளும் இந்த மேல் நாட்டு நாகரிகத்தின் மத்தியிலேயே இவ்விதமான கொலைகள் என்று வேண்டுமானாலும் நேரிடலாம். அந்த நாட்டின் மதத்திற்கு விரோதமாக ஒருவன் ஒரு வார்த்தை சொல்லுவானானால், அதற்காக அவன் சமூகத்தால் மிகக் கொடுமையாக நடத்தப் படுவான். நம்மிடமிருக்கும் ஜாதி துவேஷத்தைப் பற்றி அவர்கள் அதிகமாகப் பேசுகிறார்கள் அல்லவா ? என்னைப் போல் நீங்களும் மேல் நாட்டிற்குச் சென்று பாருங்கள். நீங்கள் கேள்விப்பட்டிருக்கக் கூடிய பிரபலமான சர்வ கலாசாலை ஆசிரியர்கள் கூடப் பொது ஜனங்களுக்குப் பயந்து, தங்கள் மதத்தைப் பற்றித் தாங்கள் உண்மையாக நினைப்பதில் நூற்றிலொரு பங்கும் வெளியில் சொல்லத் தைரியமில்லாத கோழைகளாக இருப்பதைக் காண்பீர்கள்.

ஆதலால் உலகம் இன்னும் சமரசம், சகிப்புத் தன்மை யென்ற உன்னதமான கருத்துக்களைத் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது. அதைப் பெற்றால் உலகத்தினர் நாகரிகம் மேம்பாடு அடையும். சகிப்புத் தன்மையின்றி எந்த நாகரிகமும் நீடித்திருக்க முடியாது. மத வெறியும், அதன் காரணமாக மக்களை மாய்த்தலும் துன்புறுத்தலும் அறவே ஒழிந்தாலொழிய எந்த நாகரிகமும் வளர முடியாது. ஒருவரை யொருவர் அன்புடன் பேணுவதுதான் நாகரிகத்தின் ஆரம்பமாகும். அதற்கு முதற்படி மற்றவர்கள் மதத்தைச் சமரச மனப்பான்மையுடன்

நோக்குதல். அது மாத்திரம் போதாது. நம்முடைய மதங்கள் வேறுபட்டிருந்தாலும் நாம் ஒருவருக்கொருவர் உதவியாக விருக்க வேண்டும். இந்தியாவில் இத்தகைய பரந்த நோக்கம் காணப்படுகிறது. இங்குதான் இந்துக்கள் கிருஸ்தவர்களுக்குக் கோயில்களும் முகம்மதியர்களுக்கு மசூதிகளும் கட்டித் தருகிறார்கள். இதுவே சரியான முறையாகும். அவர்கள் நம்மை வெறுக்கலாம்; நம்மிடம் மிருகத்தனமாகவும் குரூரமாகவும் நடந்து கொள்ளலாம்; நம்மை வையலாம், துன்புறுத்தலாம். எனினும் வெறுப்பல்ல, அன்புதான் கடைசியில் வெல்லும் என்பதையும் பொறுமைக்குத்தான் மிருக பலத்தைக் காட்டிலும் அதிக சக்தியிருக்கிறதென்பதையும் உலகிற்கு ரூபித்துக் காட்டுவதற்காக, நாம் அவர்களை அன்பால் ஜெயிக்கும் வரை அவர்களுக்குக் கோவில்களும் மசூதிகளும் கட்டிக் கொடுத்து வரவேண்டும்.

உலகம் நம்மிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய மற்றொரு கருத்து இப் பிரபஞ்ச முழுதிற்கும் அடிப்படையாக ஒரே ஆத்மா இலங்கிக் கொண்டிருக்கிற தென்ற உயர்ந்த தத்துவமாகும். ஐரோப்பாவிலுள்ள, ஏன் உலக முழுதிலுமுள்ள அறிவாளிகள் இம் மகத்தான உண்மையை நாடி நிற்கின்றனர். இவ்வுண்மை கற்றவர்களுக்கும் உயர்ந்த ஜாதியினர்களுக்கும் மாத்திரமல்லாமல், அவர்களைவிட அதிகமாகக் கல்லாதவர்களுக்கும், தாழ்ந்தவர்களுக்கும், பலவீனர்களுக்கும் அதிகத் தேவையாக விருக்கிறது. மேல் நாட்டு பௌதிக சாஸ்திர ஆராய்ச்சிகள் பிரபஞ்ச முழுதும் ஒன்று என்று ரூபித்திருக்கிற தென்பதை சென்னை சர்வகலாசாலையில் பட்டம் பெற்றவர்களாகிய உங்களுக்கு நான் சொல்ல வேண்டியதில்லை. நீங்கள், நான், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் முதலிய அனைத்தும் ஸ்தூல உலகில், அந்த எல்லையற்ற பிரகிருதி

சமுத்திரத்தில் சிறு சிறு அலைகளாக விருக்கிறோமென்று அவ்வாராய்ச்சிகள் ரூபித்திருக்கின்றன. பல ஆயிர வருஷங்களுக்கு முன்னமேயே இந்திய மனோதத்துவ சாஸ்திரம், உடலும் மனமும் இந்த எல்லையற்ற பிரகிருதி சமுத்திரத்தில் சிறு திவலைகள் என்று எடுத்துக் காட்டி யிருக்கின்றது. வேதாந்தம் இதற்கு மேல் ஒரு படி சென்று இவை யனைத்திற்கும் அடிப்படையாக ஒரே ஆத்மா நின்றியக்கம் செய்கிறதென்று உரைக்கிறது. பிரபஞ்சம் முழுமைக்கும் அடிப்படையாக ஒரே ஆத்மாவிருக் கிறது; எல்லாம் ஓர் உயிராக வாழுகிறது. பிரபஞ்ச முழு தும் அடிப்படையாக ஒன்று என்ற தத்துவம் இந் நாட்டில் கூடப் பலர் மனதில் பீதியை உண்டாக்கியிருக்கிறது. இப்பொழுது கூட அதை எதிர்ப்பவர்கள் பலர் இருக்கி றார்கள். எனினும் நான் சொல்லுவதைக் கேளுங்கள். உலகத்திற்கு இன்றைக்கு மிக அவசியமானதும், அனைவர்க் கும் புத்துயிர் கொடுக்கக் கூடியதுமான ஒப்பற்ற தத்துவம் அதுதான். நம்முடைய நாட்டில் புத்துயிர் ஊட்டுவதற்கும், நம் மக்களைத் தட்டி எழுப்பி, மேல் நிலைமைக்கு கொண்டு வருவதற்கும் நாம் வேண்டுவதும் இந்த உயிர்ச் சக்தி யளிக்கக் கூடிய கருத்தேயாம். இந்த உயர்ந்த கருத்தை அனுபவத்தில் கொண்டு வராமல் எவரும் நம் நாட்டைப் புனருத்தாரணம் செய்ய முடியாது.

புத்தி பூர்வமாகத் தங்கள் காரியங்கள் யாவற்றையும் செய்து வருவதாகச் சொல்லிக் கொள்ளும் மேல் நாட்டார் நீதி நியதிகளுக்கும் ஒழுக்க நெறிகளுக்கும் ஆதாரமாக விருக்கும் காரணத்தை யறிய விரும்புகிறார்கள். ஒருவர் எவ்வளவு உயர்ந்தவராகவும் தெய்விகத் தன்மையுள்ளவ ராகவும் இருந்த போதிலும் அவர் சொல்லுகின்றார் என்ற காரணத்தினாலேயே ஒன்று நீதியானது அல்லது நீதி யல்லாதது என்று ஒப்புக்கொள்ள முடியாதென்பதை

நீங்கள் நன்ருக உணர்வீர்கள். ஒரு பெரியார் சொல்லு கின்ற காரணத்திற்காகவே ஒன்றை நீதியானதென்று ஒப்புக்கொள்ள அறிவாளிகள் இப்பொழுது தயாரா யில்லை. அதற்கு மேல் இந்த நீதிமுறைகளுக்குக் காரண மாயிருக்கிற அடிப்படையான தத்துவங்களை அறிய அவர்கள் விரும்புகிருர்கள். ஓர் எல்லையற்ற மெய்ப் பொருள், நீங்கள் நான் இன்னும் ஜீவராசிகள் அனைத்திற் கும் ஆதாரமாக விருக்கிற தென்பதைத் தவிர, நீதி நியதி களுக்கு வேறு என்ன காரண மிருக்க முடியும்? நாம் அனைவரும் ஆத்மாவில் ஒன்றென்பதுதான் †நீதி நியதி களின் அடிப்படையான காரணம். நீங்களும் நானும் சகோதரர்கள் மாத்திரமல்ல, உண்மையில் ஒன்ருகவே யிருக்கிரேம். மனிதனுடைய விடுதலையைப் பற்றி உப தேசிக்கும் எல்லா சாஸ்திரங்களும், இவ்வுண்மையை உரைக்கின்றன. இந்திய தத்துவ சாஸ்திரம் உபதேசிப் பதும் இதுவே. இந்த ஏகத்வம்தான் எல்லா நீதி சாஸ்திரங்களுக்கும் ஆத்மீக வாழ்வுக்கும் அடிப்படை. நம் தாழ்த்தப்பட்ட மக்களை உயர்த்துவதற்கு இது அவசியம். அதுபோல் ஐரோப்பிய மக்களுக்கும் இது தேவையாக விருக்கிறது. இங்கிலாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, அமெரிக்கா முதலிய நாடுகளில் ராஜீய சமூகத் துறைகளில் நடத்தப்படும் இயக்கங்களுக்கு, அவர்களும் அறியாமல் இம்மகத்தான தத்துவம் அஸ்திவாரமாக விருந்து வருகிறது. மக்கள் அனைவரும் எல்லாவிதமான பந்தங்களிலிருந்தும் விடுபட வேண்டுமென்று உபதேசிக் கும் இலக்கியங்களில் அடிக்கடி இந்த வேதாந்தக் கருத்துக் கள் தோன்றுகின்றன. சில இடங்களில் இவ்வுயர்ந்த தத்து

† Ethics

வங்களை எங்கிருந்து பெற்றுர்களென்று அவைகளை எழுதிய வர்களுக்கே தெரியாது. சில இடங்களில் அவைகளைத் தாங்களே கண்டுபிடித்ததாகக்கூட நினைத்துக் கொள்ளு கிருர்கள். சில இடங்களில் அவை எங்கிருந்து வந்திருக் கின்றன வென்பதை உணர்ந்து, அவைகளுக்காகத் தாங் கள் கடமைப்பட்டிருப்பதையும் தைரியமாய்த் தெரிவித்துக் கொள்ள முன் வருகிருர்கள். அமெரிக்காவிலிருந்தபோது நான் அதிகமாக அத்வைதத்தையே பிரசாரம் செய்வ தாகச் சிலர் குறை கூறினுர்கள். துவைத வழிபாட்டில் எத்துணை மகத்தான கடல்போன்ற அன்பும், எல்லையற்ற இன்பமும், சாந்தமும் சந்தோஷமும் இருக்கிறதென்பதை நான் உணர்வேன். ஆனுல் நமக்கு, சந்தோஷத்தில்கூட அழுவதற்கு இது நேரமல்ல. நாம் இதுவரை அழுதது போதும் ; இன்னும் ஏழை மனதுடையவர்களாக ஆவதற்கு இது காலமல்ல. கண்ணீர்விட்டு, இரங்கி இரங்கி நாம் பஞ்சு மூட்டைகள் போல் மிருதுவாகி, செத்தவர்கள் போலாகிவிட்டோம். நமது தேசம் இப்பொழுது வேண்டு வது இரும்பு போன்ற தசைகளும் எஃகு போன்ற நரம்பு களுமே. எல்லையற்ற சக்தி வாய்ந்த, எவரும் தடுக்க முடி யாத, இந்த அண்டத்தின் ரகசியங்களை ஊடுருவித் தெரிய வல்லதும், அதற்காக அவசியமானுல் சமுத்திரத்திற் கடியி லும் சென்று சாவையும் எதிர்க்கக்கூடியதுமான மனேதிடம் தான் நமக்கு இப்பொழுது தேவை. இது தான் நமக்கு வேண்டும். இதை யுண்டாக்கி நிலைநிறுத்தத் துணை செய் வது, ஏகத்வ மென்ற அத்வைத இலட்சியத்தை நன்ருக உணர்ந்து, அதை அனுபவத்தில் கொண்டுவருவதுதான். நம்பிக்கை, நம்பிக்கை, நம்மிடம் நம்பிக்கை, கடவுளிடம் நம்பிக்கை—இதுதான் உயர்ந்த வாழ்வின் ரகசியம். உங் கள் முப்பத்து மூன்று கோடி தெய்வங்களிலும் இன்னும் அன்னியர் புகுத்தியிருக்கும் இதர தெய்வங்களிலும்

உங்களுக்கு நம்பிக்கை யிருந்து, உங்களிடம் உங்களுக்கு நம்பிக்கை யில்லையானால் உங்களுக்குக் கதி மோட்சமில்லை. தன்னம்பிக்கை கொண்டு, பலம் பெற்று எழுந்து நில்லுங்கள். அதுதான் நமக்குத் தேவை. நாம் முப்பத்து முக்கோடி மக்களாக விருந்திருக்கிறோம். எனினும் ஏன் இந்தியாவின்மேல் படையெடுத்த அன்னியர்கள் அனைவரும், அவர்கள் மிகக்குறைந்த பேர்களாகவிருந்த போதிலும், நம்மை ஜெயித்து ஆண்டு வந்திருக்கின்றனர்? அதற்குக் காரணம் அவர்களிடம் தன்னம்பிக்கை யிருந்தது; நம்மிடம் அது இருக்கவில்லை. நான் மேல் நாட்டில் கற்றதென்ன? கிருஸ்தவப் பாதிரிகள் மனிதன் பாவி யென்றும் தாழ்ந்தவன் என்றும் சொல்லிக் கொண்டிருக்கிறார்களெனினும் மக்கள் மனதில் நான் கண்டதென்ன வென்று உங்களுக்குத் தெரியுமா? ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் மக்கள் தங்களிடத்தில் அளவற்ற தன்னம்பிக்கை கொண்டிருப்பதைப் பார்த்தேன். ‘நான் ஓர் ஆங்கிலேயன், நான் எதையும் செய்து முடிக்கமுடியு’ மென ஒவ்வொரு ஆங்கில இளைஞனும் சொல்லுவான். அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலுள்ள எந்த தேசததிலும் அவ்விளைஞர்கள் இங்ஙனமே தன்னம்பிக்கையுடன் மொழிவார்கள். நம் பிள்ளைகளும் இவ்விதம் பேசுவார்களா? இல்லை இல்லை! அவர்கள் தந்தைகள் கூட இவ்விதம் பேசமாட்டார்கள்! நாம் தன்னம்பிக்கையை இழந்துவிட்டோம். ஆதலால் மக்கள் மனதில் அளவற்ற சக்தியை உண்டாக்குவதற்காக, அவர்கள் ஆத்மாவின் மகத்தான தன்மையையும் அத்வைத வேதாந்தத்தையும் உபதேசிப்பது இப்பொழுது அவசியமாயிருக்கிறது. இதற்காகத்தான் நான் அத்வைதத்தை உபதேசிக்கிறேன்.

துவைதிகளும் விசிஷ்டாத் துவைதிகளும் இதனால் மனம் வருத்தப்பட வேண்டிய அவசியமில்லை. கடவுள்

நம் உள்ளத்திலே யிருக்கிறுர்; தெய்வீகம் எல்லாவற்றி லும் நிறைந்திருக்கிறதென்ற தத்துவங்களே ஒப்புக் கொள்ளாத சித்தாந்தமே, இந்தியாவிலில்லே. அளவற்ற தூய்மையும், சக்தியும், பூரணத்துவமும் ஆத்மாவில் அடங்கியிருக்கின்றனவென்று வேதாந்தத்தைப் பின்பற் றும் எல்லா சித்தாந்தங்களும் ஒப்புக்கொள்ளுகின்றன. அப்பூரணத்துவம் சில சமயங்களில் வெளிப்படுகிறது. சில சமயங்களில் அடங்கி யிருக்கிறதென்று சிலர் நினேக்கிறுர் கள். ஆனுல் அதில் பூரணத்துவம் இருக்கிறதென்று அனேவரும் ஒப்புக்கொள்ளுகிறுர்கள். அத்வைத சித்தாந் தத்தின்படி அப்பூரணத்துவம் வெளிப்படுவதுமில்லே, அடங்குவதுமில்லே. ஆனுல் சில சமயங்களில் மறைந்து படுகிறது. இவ்விரண்டிற்கும் அதிக வித்தியாசமில்லே. ஒன்று மற்றென்றைவிட தர்க்க ரீதியாகச் சொல்லப்பட்ட தாக விருக்கலாம்; ஆனுல் எப்படிச் சொன்னுலும் அனு பவத்தில் ஒன்ருகத்தானிருக்கிறது. இந்த முக்கியமான எண்ணத்தைத்தான் உலகம் வேண்டி நிற்கிறது. மற்ற நாடுகளே விட நமது நாட்டிற்குத்தான் அது மிக அவசிய மாக விருக்கிறது.

என் சிநேகிதர்களே! வருத்தம் தரக்கூடிய உண்மை கள் சிலவற்றை உங்களுக்கு இனிச் சொல்லவேண்டும். ஓர் இந்தியன் ஓர் ஆங்கிலேயனுல் குரூரமாய் நடத்தப் பட்டால், இந்தியா முழுதும் எதிர்ப்புச் சப்தம் உண்டாவ தைப் பத்திரிகைகளில் பார்க்கிறேன். அதைப் படித்து நான் மிக வருந்தியிருக்கிறேன். ஆனுல் அடுத்த கணமே இதற்கெல்லாம் யார் காரணம் என்ற கேள்வி என் மன தில் பிறக்கிறது. ஒரு வேதாந்தி என்ற முறையில் நான் என்னே இக்கேள்வி கேட்டுக்கொள்ளாம லிருக்கமுடியாது. இந்துவாயிருப்பவன் தன்னுள்ளத்தை ஆராய்ந்து விஷயங் களே அறிந்து கொள்பவன். ஆதலால் இந்த நிலேமைக்கு

யார் காரணமென்று என்னை நானே கேட்டுக்கொள்ளு கிறேன். நம்முடைய இந்தத் தாழ்ந்த, இந்தக் கேவலமான நிலைமைக்குக் காரணம் நாமேயொழிய, ஆங்கிலேயர்கள் அல்லவென்ற பதில்தான் ஒவ்வொரு தடவையும் எனக்குக் கிடைக்கிறது. நம்முடைய மேல் ஜாதியார் சாதாரண மக்களைத் தங்கள் காலின்கீழ் தள்ளி மிதித்து வந்திருக் கிறார்கள். இந்தக் கொடுமையின் காரணமாக தாங்கள் சக்தியனைத்தையும் இழந்து, இந்த ஏழை மக்கள் தாங்கள் மனிதர்களென்பதைக் கூட அநேகமாய் மறந்து விட்டார் கள். அவர்கள் கேவலம் விறகு வெட்டிகளாகவும், தண் ணீர் இறைப்பவர்களாகவுமே இருக்கும்படி பல நூற் றாண்டுகளாகக் கட்டாயப் படுத்தப்பட்டிருக்கிறார்கள். மற்றவர்களுக்கு ஊழியம் செய்யும் அடிமைகளாகவே தாங்கள் தோன்றியிருப்பதாக அவர்களை மேல் ஜாதியார் நம்பச் செய்தார்கள். நாம் மிகப் பெருமை பாராட்டிக் கொள்ளும் தற்காலக் கல்வி பரவிவரும் இக்காலத்திலும் கூட,—சிலர் அவர்களுக்காகப் பரிந்து பேசலாம். ஆனால்— யாரே அவர்களை உயர்த்தும் பணியை மேற்கொள்ள முன் வருகிறார்கள்? இது மட்டுமல்ல. சிலர், பரம்பரை யாக மனப் பண்பிருப்பவர்களுக்குத் தான் உயர்ந்த கருத் துக்கள் ஏற்கும் என்று மேல் நாட்டிலே சொல்லப்படுகிற அசட்டுக் கொள்கையை எடுத்துக்கொள்ள, இவ்விதமான மிருகத்தனமான வாதங்களைப் பேசி, அவர்களை இன்னும் கேவலமாக நடத்த யத்தனிக்கிறார்கள். அமெரிக்காவில் நடந்த சர்வமத மகா சபையில், ஆப்பிரிக்காவில் பிறந்த நீக்ரோ இளைஞனொருவன் அழகான பிரசங்கமொன்று செய்தான். அவனிடத்தில் எனக்கு அக்கறையுண்டாகி சில சமயங்களில் அவனுடன் பேசிக்கொண்டிருந்தேன். ஆனால் அப்பொழுது அவனைப்பற்றி யொன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. பிறகு இங்கிலாந்தில் சில அமெரிக்கர்களைக்

கண்டு பேசிக்கொண்டிருந்தபோது, அவர்கள் அவனைப் பற்றிச் சொன்ன விருத்தாந்தம் இது. அவன் ஆப்பிரிக் காவின் மத்தியிலுள்ள ஓர் ஊரில் ஒரு நீக்ரோ தலைவனுக்குப் பிறந்தவனும். மற்றொரு நீக்ரோ தலைவனுக்கும் இவன் தகப்பனுருக்கும் சண்டையுண்டாகி, அதில் இவன் தந்தை கொல்லப்பட்டு, இவன் தந்தையும் தாயும் சமைத்து உண் ணப்பட்டார்கள். பையனையும் கொன்று சமைக்க வேண்டு மென்ற ஓர் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஆனால் பையன் தப்பி ஓடி, பல கஷ்டங்களிடையே பல நூறு மைல்கள் சென்று, கடற்கரையை அடைந்து, அங்கிருந்து ஓர் அமெரிக்கக் கப்பலில் அமெரிக்காவுக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கப்பட்டான். அப்பையன்தான் இந்த அழகான பிரசங்கம் செய்தவன். இதைப் பார்த்த பிறகு, பரம் பரையாக படித்து வந்தவர்களுக்குத்தான் படிப்பு ஏற்கு மென்ற கொள்கையைப்பற்றி நான் என்ன நினைப்பது! ஏ பிராம்மணர்களே! பறையனைவிடப் பிராம்மண னுக்குக் கல்வி கற்கும் சக்தி அதிக மிருக்கிறதெனில், பிராம்மணர்கள் படிப்பதற்கு இனிமேல் செலவு செய்ய வேண்டாம். அனைத்தையும் பறையர்கள் படிப்பிற்காகவே கொடுங்கள். பலவீனர்களுக்கே எல்லா உதவியும் கொடுக்கப்படவேண்டும். ஏனெனில் அவர்களுக்குத்தான் அவை தேவையாக விருக்கின்றன. பிராம்மணன் பிறவியிலேயே அறிவுள்ளவனுகப் பிறந்திருந்தால் அவன் தானே படித்துக்கொள்ள முடியும். மற்றவர்கள் பிறவியி லேயே புத்திசாலித்தன மற்றவர்களாகவிருந்தால் அவர் களுக்கே எல்லா ஆசிரியர்களும் கல்வி புகட்டட்டும். எனக்குத் தெரிந்தவரையில் இதுதான் நியாயம். இதுதான் தர்மம். நமது ஏழை மக்கள், நமது தாழ்த்தப்பட்ட சகோதரர்கள், உண்மையில் தாங்கள் யார் என்பதைக் கேட்டு அறிந்துகொள்ள வேண்டிய தவசியம். உயர்ந்த

வர்கள் தாழ்ந்தவர்கள், வலியார்கள் மெலியார்கள்,—இவர்கள் அனைவருக்கும் அடிப்படையாக அந்த எல்லையற்ற ஆத்மாவே யிருக்கிற தென்பதையும், அதன் மூலம் அனைவரும் அளவற்ற சக்தி பெற முடியுமென்பதையும், ஆண் பெண் குழந்தை அடங்கலாக எல்லோரும் ஜாதி வித்தியாசமின்றிக் கேட்டுணரட்டும்.

ஒவ்வொரு மனிதனுக்கும்—**उत्तिष्ठ जाग्रत प्राप्य वरान्निबोधत**-'எழுந்திரு விழித்திரு கோரிய கருமம் கைக்கூடும் வரை உழைத்திரு' என்ற தீர வார்த்தைகளை உரக்க உரைப்போமாக. எழுங்கள் விழியுங்கள். நாம் பலமற்றவர்கள் என்று நினைப்பது தவறு. அந்த மயக்கத்திலிருந்து விழியுங்கள். எவரும் உண்மையில் பலவீனர்களல்ல. ஆத்மா எல்லையற்றது, சர்வசக்தி வாய்ந்தது. எழுங்கள், உங்களுக்குள்ளிருக்கும் தெய்வத் தன்மையை வெளிப்படுத்துங்கள். அதிகமான சோர்வும், பலவீனமும், தங்களிடம் பலமில்லையென்னும் நம்பிக்கையிலிருந்து பிறந்த ஒரு மயக்கமும், நம் மக்களைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றன. எதிர்கால இந்துக்களே! என் இந்திய சகோதரர்களே! இம்மயக்கத்திலிருந்து விடுதலை யடையுங்கள், இதற்கு வழி நம்முடைய சாஸ்திரங்களிலேயே யிருக்கின்றது. உறங்கிக்கொண்டிருக்கும் ஆத்மாவைத் தட்டி எழுப்பி, ஒவ்வொருவருக்கும் அவர்கள் உண்மை இயல்பைப் புகட்டுங்கள். உறங்கிக்கொண்டிருக்கும் ஆத்மா விழிப்பெய்தினால், சக்தி வரும்; பெருமை வரும்; நன்மை வரும்; தூய்மை வரும்; மிக உயர்ந்த பொருட்கள் அனைத்தும் தாமே வந்தெய்தும். ஸ்ரீ கிருஷ்ணபகவான், கீதையின் முக்கியமான இத்தத்துவத்தை வெகு அழகாக இரு சுலோகங்களில் சொல்லியிருக்கிறார்: 'எவனொருவன் எல்லா உயிர்களிலும் பரமேசுவரனைக் காண்கின்றானோ, எவனொருவன் அழியும் பொருட்களில் அந்த அழியாப் பரம்பொரு

ளைக் காண்கின்றானோ அவனே உண்மையைக் காண்கிறான். ஏனெனில் அவன் எங்கும் பரம்பொருளைச் சமமாகப் பார்த்து, தன்னுடைய ஆத்மாவைத் தன் அறியாமையால் அழித்துக்கொள்ளாமல் யாவற்றினும் உயர்ந்த நிலையை அடைகிறான்.

எனவே இங்கும் இதர நாடுகளிலும் சேவை செய்வதற்கு வேதாந்திக்கு நிறைய இடமிருக்கிறது. இங்கும் இதர நாடுகளிலும், தாழ்த்தப்பட்ட மக்களை உயர்த்துவதற்காகவும் மனித வர்க்கத்தை மேம்படுத்துவதற்காகவும், அனைவருக்கும் அடிப்படையாக ஒரே அளவற்ற சக்திவாய்ந்த ஆத்மா விருக்கிறதென்ற இந்த அதி ஆச்சரியமான தத்துவம் உபதேசம் செய்யப்படவேண்டும். வேறுபாட்டுணர்ச்சியி லிருந்துதான் அறியாமையும், அஞ்ஞானமும், இன்னும் எல்லாக் கெடுதல்களும் பிறந்திருக்கின்றன. இதை என் அனுபவத்தில் நான் கண்டிருக்கிறேன். நம் சாஸ்திரங்களும் அவ்விதமே சொல்லுகின்றன. சமத்துவம், ஒற்றுமை, ஏகத்வம் முதலிய கருத்துக்களிலிருந்து எப்பொழுதும் நன்மையே பிறந்திருக்கிறது. இது வேதாந்தத்தின் லட்சியமாகும். ஆனால் லட்சியமாக வைத்திருப்பதென்பது வேறு; அதைத் தினசரி வாழ்க்கையில் கொண்டு செலுத்துவதென்பது வேறு. ஒரு லட்சியத்தைப் பின்பற்றும்படி சொல்லுவது எளிது; ஆனால் அதை நம் வாழ்க்கையில் எவ்விதத்தில் பின்பற்றுவதென்று காண்பிப்பது அரிது. எங்ஙனம் இந்த லட்சியத்தை நம் வாழ்க்கையில் அனுசரிப்பது ?

பல நூற்றாண்டுகளாக நம் மக்கள் மனதைப் பாதித்து வரும் அந்தக் கடினமான ஜாதிப் பிரச்னை நம் முன் இப்பொழுது தோன்றுகிறது. நான் ஜாதியை உடைத்தெறிய விரும்புபவனுமல்ல, ஒரு சாதாரண சமூக சீர்த்திருத்தக்காரனுமல்ல வென்பதை வெளிப்படையாக

முதலில் தெரிவித்துக்கொள்ள வேண்டும். உங்கள் ஜாதிகளுடனாவது அல்லது சமூக சீர்த்திருத்தங்களுடனாவது எனக்கு நேரிடையாக யாதொரு சம்பந்தமும் இல்லை. எந்த ஜாதியில் வேண்டுமானாலும் இருங்கள்; ஆனால் அதற்காக வேறு ஒரு மனிதனை அல்லது ஜாதியை வெறுப்பானேன்? அன்பு, அன்பை மாத்திரமே நான் உபதேசிக்கிறேன். அதற்குக் காரணம் நாம் அனைவரும் ஒரே ஆத்மாவை அடிப்படையாக உடையவராக விருக்கிறோம் என்ற வேதாந்த உண்மைதான். சென்ற நூறு வருஷங்களாக சீர்த்திருத்தக்காரர்களாலும் பலதிறப்பட்ட சீர்த்திருத்தத் திட்டங்களாலும் நம் நாடு நிறைக்கப் பட்டிருக்கிறது. இந்தச் சீர்த்திருத்தக்காரர்களிடம் தனிப் பட்ட முறையில் நான் யாதொரு குறையும் சொல்ல விரும்பவில்லை. அவர்களில் பெரும்பான்மையோர் நல்ல மனிதர்கள்; நல்ல எண்ணமும் கொண்டவர்கள். ஆனால் இந்த நூறு வருஷங்களாகச் செய்யப்பட்டிருக்கும் சீர்த்திருத்தங்கள் தேசத்திற்கு யாதொரு நிரந்தரமான நன்மையும் செய்யவில்லை யென்பது வெளிப் படை. ஆயிரக்கணக்கான மேடைப் பிரசங்கங்கள் நடந்திருக்கின்றன. பல புத்தகங்கள் இந்து மக்களையும் நாகரிகத்தையும் தூஷித்து எழுதப்பட்டிருக்கின்றன. எனினும் அனுபவத்தில் பயன் ஒன்றும் காணோம். இதற்குக் காரணமென்ன? இதற்குக் காரணம் கண்டு பிடிப்பது கஷ்டமல்ல. அவர்கள் செய்த தூஷணையே இதற்குக் காரணம்.

முதலில் நாம் நம்முடைய தொன்று தொட்டு வரும் தேசீயத் தன்மையைக் காப்பாற்ற வேண்டும். நாம் மற்ற தேசங்களிலிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்கள் பல இருக்கின்றன வென்பதை ஒப்புக்கொள்ளு கிறேன். ஆனால் நம் தற்கால சீர்திருத்தங்கள் பலவும்

மேல்நாட்டுப் பழக்கங்களின் வெறும் பிரதிபிம்பங்களாக விருக்கின்றன. அவை இந்தியாவிற்கு ஏற்கா. அதனுல் தான் இச் சீர்திருத்த இயக்கங்கள் யாதொரு பயனேயும் உண்டாக்கவில்லே. இரண்டாவதாக நிந்தனே மூலம் யாதொரு நன்மையும் செய்யமுடியாது. நம் சமூகத்தில் கெடுதல்கள் இருக்கின்றன வென்பது ஒரு குழந்தைக்குக் கூடத்தெரியும். ஆனுல் எந்த சமூகத்தில்தான் கெடுதல்கள் இல்லே? நான் பல நாடுகளேயும் மக்களேயும் நன்ருகத் தெரிந்து சொல்லுகிறேன். நமது மக்கள் பொதுவாக மற்ற மக்களேவிட அதிக ஒழுக்கமும் கடவுள் பக்தியும் உடையவர்களாக விருக்கிருர்கள். நம் சமூகத்திலிருக்கும் ஸ்தாபனங்கள், மற்ற சமூகங்களி லிருப்பதைவிட அதிகமான சந்தோஷத்தை மனித வர்க்கத்திற்குக் கொடுக்கக்கூடியதாக விருக்கின்றன. எனவே நான் வேண்டுவது சீர்திருத்தமல்ல; என்னுடைய லட்சியம் தேசீய முறையில் நம் நாடு அபிவிருத்தியும் வளர்ச்சியும் பெறவேண்டுமென்பதுதான். நம்முடைய நாட்டின் சரித் திரத்தைப் பார்த்தால், மனித வர்க்கத்தினுடைய மனதை உயர்த்துவதற்கு நம்முடைய நாட்டைப்போல் வேறெந்த நாடும் சேவை செய்ததில்லேயென்று எனக்குத் தெரிகிறது. ஆதலால் என்னுடைய நாட்டை நான் நிந்தனே செய்ய விரும்பவில்லே. 'இதுவரை நீங்கள் செய்தது நல்லது; எதிர்காலத்தில் இன்னும் நன்ருகச் செய்ய வேண்டு' மென்று நான் சொல்லுகிறேன்.

பல மகத்தான காரியங்கள் இந்நாட்டில் செய்யப்பட் டிருக்கின்றன. எதிர்காலத்தில் இன்னும் அரிய காரியங் கள் செய்வதற்கு இடமிருக்கிறது. நாம் ஒன்றும் செய்யாமல், இருக்கின்ற நிலேயிலேயே இருக்க முடியா தென்பது நிச்சயம். ஒன்றும் செய்யாமலிருந்தால் அது சாவுக் கறிகுறி. நாம் முன் செல்லவேண்டும் அல்லது

பின் செல்லவேண்டும். நாம் முன்னேற வேண்டும் அல்லது தாழ்ச்சியுறவேண்டும். நமது முன்னோர்கள் பல பெரிய காரியங்களைச் சாதித்தார்கள். நாம் இன்னும் அதிகமான பலம் பெற்று அவர்கள் செய்த காரியங் களைவிட உயர்ந்த காரியங்களைச் செய்து முடிக்க வேண்டும். நாம் எங்ஙனம் பின்சென்று நம்மைத் தாழ்த் திக்கொள்ள முடியும்? அது இயலாது; அது முடியாது. அவ்வழி நம்மைத் தாழ்வுக்கும் சாவுக்கும் கொண்டு போய் விடும். ஆதலால் நாம் முன் சென்று முன்னைவிட மகத்தான காரியங்களைச் செய்வோமாக. அதுதான் நான் உங்களுக்குச் சொல்ல விரும்புவது. நான் தற்காலிகமான சமூக சீர்திருத்தங்களை உபதேசிப்பவனல்ல. அல்லது சில சிறு குறைகளை நீக்குவதைப் பற்றியும் நான் நினைக்க வில்லை. நமது முன்னோர்களால் வெகு தெளிவாகக் குறிப் பிடப்பட்டிருக்கிற மனித வர்க்கத்தின் உயர்ந்த இலட்சி யத்தை இந்தவாழ்க்கையிலேயே அடைவதற்காக முனைந்து முன் செல்லும்படியாகத்தான் உங்களைத் தூண்டு கிறேன். அடிப்படையில் மனிதன் ஏகப்பொருளாவான், அவன் உண்மையில் தெய்விகத்தன்மையை உடையவன் என்ற வேதாந்தக் கருத்துக்களை நீங்கள் நன்றாக அறிய வேண்டுமென்றுதான் நான் விரும்புகிறேன். எனக்குப் போதுமான அவகாச மிருந்தால், நாம் செய்யவேண்டிய அனைத்தும் எப்படி நம் பெரியோர்களால் குறிப்பிடப்பட் டிருக்கிறதென்பதையும், இம்மாறுதல்களை அவர்கள் எவ்விதம் எதிர்பார்த்தார்களென்பதையும் உங்களுக்குச் சந்தோஷமாக எடுத்துரைப்பேன். அவர்களும் ஜாதி வித்தியாசங்களை உடைத்தெறிந்தார்கள். ஆனல் அவர்கள் தற்காலச் சீர்த்திருத்தக்காரர்கள் போலிருக்கவில்லை. அனை வரும் ஒன்ருக உண்டு குடிப்பதன் மூலம் அல்லது சில பயித்தியக்காரர்கள் தாங்களாக விரும்பிய இடத்தில் மணம்

செய்துகொள்வதன் மூலம் வித்தியாசத்தை ஒழிக்க முடியு மென அவர்கள் நினைக்கவில்லை.

மனிதர்களுக்குள் பிராம்மணனை நம் முன்னோர்கள் லட்சியமாகக் கொண்டிருந்தார்கள். நம் சாஸ்திரங்களி லெல்லாம் இது வெகுவாகக் கூறப்பட்டிருக்கிறது. ஐரோப்பாவில் மதத்திற்குத் தலைவர்களாக விருப்பவர்கள் கூட ஆயிரக்கணக்கான பவுன்கள் செலவு செய்து, தங் கள் குடும்பம் ஏதோ ஒரு மலையின் மேல்வாசம் செய்து கொண்டு, ஏழை மக்களைக் கொள்ளையடித்து வாழ்ந்து வந்த ஒரு பயங்கரமான கொடுங்கோலன் கால்வழியில் வந்ததாக ரூபிக்கப் பிரயத்தனம் செய்வார்கள். ஆனால் இந்தியாவிலோ மிகப் பெரிய அரசர்களும், ஒரு கந்தையை உடுத்திக்கொண்டு கிழங்கைத் தின்று, காட்டி லிருந்து தவம்செய்து கொண்டிருந்த ஒரு முனிவர் சந்ததி யிலிருந்து தோன்றியதாகச் சொல்லிக் கொள்ளுவார்கள். ரிஷியின் கால்வழி வந்தவர்கள் உயர்ந்த ஜாதியினராகக் கருதப்பெற்றனர். தாம் உயர்ந்த குடிப் பிறப்பென்று கருதும் முறை மற்றவர்கள் கருதும் முறைக்கு முற்றிலும் வேறுபட்டதாக விருக்கிறது. துறவும் தெய்விகத் தன்மை யும் நிறைந்த பிராம்மணனே நமக்கு லட்சிய புருஷனாகக் காணப்படுகிறான். லட்சியம் பிராம்மணன் என்றால் நான் எதைக் குறிப்பிடுகிறேன்? இவ்வுலக வாழ்க்கையை முற்றிலும் துறந்து, அளவற்ற ஞானத்திற்கு இருப்பிட மாயிருக்கும் தன்மையைத் தான் குறிப்பிடுகிறேன். அது தான் இந்து மக்களின் லட்சியமாகும். பிராம்மணன் சட்ட வரம்புகளுக்கும் அரச நியதிக்கும் மீறியவன்; அவன் உடலை வருத்த முடியாதென்று சொல்வதை நீங் கள் கேட்டதில்லையா? அது முற்றிலும் உண்மை. சுய நலம் நிறைந்த அறிவிலிகள் செய்த பொருளில் இதை எடுத்துக் கொள்ளாதீர்கள். வேதாந்தத்தின் கருத்துப்

படி அதை அர்த்தம் செய்து கொள்ளவேண்டும். பிராம் மணன் என்பவன் சுயநலத்தை முற்றிலும் கொன்று, அன்பையும் ஞானத்தையும் உபதேசம் செய்வதற்கே உயிர் வாழ்பவனுனல், ஒரு தேசம் இத்தகைய மனிதர் களையே கொண்டுள்ளதானல், அந்நாட்டிலிருக்கும் ஆண் பெண் குழந்தைகள் அனைவரும் இங்ஙனம் ஆத்மீக உணர்ச்சியும் ஒழுக்கமும் நற்குணமும் பெற்றவர்களா யிருந்தால், அத்தகைய நாடு சட்டத்திற்கு அப்பாற்பட் டது, அதாவது அத்தகைய நாட்டில் சட்டம் அவசியமில்லை யென்று சொல்லுவதில் என்ன ஆச்சரியமிருக்கிறது? அவர்களை ஆளுவதற்குப் போலீசும் ராணுவமும் எதற் காக? அவர்களை ஆளவேண்டிய அவசியம் தான் என்ன? அவர்களுக்கு அரசாங்கமே அவசியமில்லை. அவர்கள் புனிதமானவர்கள்; கடவுட் டன்மையைப் பெற்றவர்கள். அத்தகையவர்கள் தான் உண்மையான பிராம்மணர்கள். சத்திய யுகத்தில் எல்லோரும் பிராம்மணர்களாக விருந் தார்களாம். ஆரம்பதில் அனைவரும் பிராம்மணர் களாகவே யிருந்ததாகவும், மக்களின் தன்மை குலையவே பலவிதமான ஜாதிகள் தோன்றியதாகவும், மறுபடியும் எல்லோரும் பிராம்மணர்களாவார்களென்றும் மகா பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அம்மாறுதல் இப் பொழுது நடந்துகொண்டிருக்கிறது. ஆதலால் ஜாதிப் பிரச்னையை மேலிருப்பவர்களைக் கீழ் இழுப்பதன் மூலம் தீர்க்க முடியாது; அல்லது அது அளவின்றி உண்டு குடிப் பதுமல்ல; வரம்பின்றி போகங்களை அனுபவிப்பதுமல்ல, ஆனல் அனைவரும் ஆத்மீகத் துறையைப் பின்பற்றி, ஒவ் வொருவரும் லட்சியமான பிராம்மணத் தன்மையை அடை வதன் மூலம்தான் இது சாத்தியமாகும். ஆரியர்கள், ஆரியர்களல்லாதவர்கள், ரிஷிகள், பிராம்மணர்கள் அல்லது இதர ஜாதியினர்—இந்நாட்டில் பிறந்த அனைவருக்கும் ஒரு

கடமை விதிக்கப்பட்டிருக்கிறது. மேல் ஜாதியினர் கீழ் ஜாதியினர் என்ற அனைவரும் இடைவிடாது முயற்சி செய்து பிராம்மண லட்சியத்தை அடைய வேண்டுமென்பதே அது. இந்த வேதாந்தக் கருத்து இந்தியாவுக்கு மட்டுமல்ல, உலக முழுதும் பொருந்தும். மனித வர்க்கத்தை நிறைந்த அன்பும் தூய்மையும், ஆத்மீக உணர்ச்சியுமுள்ளவர்களாகச் செய்வதே நம் ஜாதிப் பாகுபாட்டின் உயர்ந்த நோக்கமாகும்.

இவைகளை எவ்விதமாகச் செய்வது? சாபமிடுதலும் வசை மொழி பேசுதலும் எவ்வித நன்மையையும் செய்யா வென்பதை நான் மறுபடியும் உங்களுக்கு எடுத்துக் காட்ட விரும்புகிறேன். இம்முறையில் பல வருஷங்கள் முயற்சி செய்து பார்த்தாகி விட்டது. ஆனால் இதனால் போற்றத் தக்க பலன் ஏதும் உண்டாகவில்லை. அன்பின் மூலமும் கருணையின் மூலமும் தான் நற்பயன் உண்டாகும். இது ஒரு பெரிய விஷயம். இது சம்பந்தமாக என் மனதில் நாடோறும் வந்துகொண்டிருக்கும் எண்ணங்களையும் கருத்துக்களையும் உங்களுக்குச் சொல்ல வேண்டுமானால், அதற்குப் பல தினங்களாகும். ஆதலால் ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்தி விட்டு இப்பேச்சை முடிக்க விரும்பு கிறேன். ஏ இந்துக்களே! நம் தேசமாகிய இக்கப்பல் பல யுகங்களாக ஓடிக் கொண்டிருக்கிறது. இன்று அது கொஞ்சம் பழயதாகி ஓட்டை விழுந்திருக்கலாம். அவ்விதமா யிருந்தால் நீங்களும் நானும் சேர்ந்து அந்த ஓட்டையை அடைப்பதற்கு முயற்சி செய்வோமாக. நமக்கிருக்கும் ஆபத்தை நம் தேசமக்களுக்கு எடுத்துரைப்போம். அவர் கள் விழித்து, இப்பணியில் உதவி செய்யட்டும். நம் உண்மை நிலையையும், மக்கள் இப்பொழுதாற்ற வேண்டிய கடமைகளையும் நம் மக்களுக்கு எடுத்துச் சொல்லும் பொருட்டு நான் தேச முழுதும் திரிந்து, என் சக்தியிருக் கும் வரை சொல்லுவேன். ஒருவேளை அவர்கள் என்னைக்

கேளாவிட்டாலும் அவர்களை ஒரு வார்த்தைகூடச் சொல்லித் திட்டமாட்டேன், அல்லது சாபமிட மாட்டேன். சென்ற காலத்திலே நாம் மிகஅறிய காரியங்களைச்செய்திருக்கிறோம். எதிர்காலத்தில் நாம் அதைவிடப் பெரிய காரியங்கள் செய்ய முடியாமற் போனாலும், நாம் அனைவரும் சமாதானத்துடன் ஒன்றாக மூழ்கி இறக்கிறோம் என்ற இந்த சமாதானமாவது நமக்கிருக்கட்டும். நீங்கள் அனைவரும் நிறைந்த தேச பக்தியுடையவர்களா யிருங்கள். நமக்காக இவ்வளவு மகத்தான சேவை செய்திருக்கும் இம்மக்களை நேசியுங்கள். பிறநாட்டு மக்களைப் பார்க்கப் பார்க்க எனக்கு உங்கள் பாலுள்ள அன்பு வளருகிறது. எனது நாட்டுச் சகோதரர் களே! நீங்கள் நல்ல தன்மையுடையவர்கள், பரிசுத்தமும் நிதானமும் உள்ளவர்கள். நீங்கள் எப்பொழுதும் கொடுமையாக நடத்தப்பட்டிருக்கிறீர்கள். அது இம்மாயப் பிரகிருதியின் விநோதம்போலும்! ஆனால் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். கடைசியில் ஆத்மா வெற்றி யடைந்தே தீரும். இதற்குமத்தியில் நாம் நம் தாய்நாட்டின் திருப்பணியில் ஈடுபடுவோமாக. நம் தேசத்தை நாம் நிந்திக்கவேண்டாம். நமது மிகப் புனிதமான இந்நாட்டி லிருக்கும் மிகப் பழமையான, இப்பொழுது க்ஷீணித்துப் போன ஸ்தாபனங்களையும், நாம் குறைகூற வேண்டாம். மிக மூடத்தனமானதாகத் தோன்றும் ஸ்தாபனங்களைக்கூட குறைகூறுதீர்கள். ஏனெனில் அவைகூட பழங்காலத்தில் கொஞ்சம் நன்மை செய்திருக்கவேண்டும். இந்த நாட்டு ஸ்தாபனங்களைப்போல் உயர்ந்த நோக்கங்களைப் பெற்ற ஸ்தாபனங்கள் உலகில் வேறு எங்குமில்லை யென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். உலகில் எல்லா நாடுகளிலும் ஜாதிகளிருக்கின்றன. ஆனால் எங்கும் அவை கள் முதலில் கொண்டிருந்த நோக்கம் இவ்வளவு உயர்ந்த தாக விருக்கவில்லை. ஏதாவதொரு ஜாதியின்றி இருக்க

முடியாதெனில், 'பணத்தை அடிப்படையாகக் கொண்ட ஜாதியைக் காட்டிலும், தூய்மையையும், பண்பையும், தியாகத்தையும் அடிப்படையாகக்கொண்ட ஒரு ஜாதிப் பாகுபாட்டை நான் விரும்புவேன். ஆதலால் வசவு வார்த்தைகளைப் பேசாதீர்கள். உங்கள் உதடுகளை மூடுங் கள். உங்கள் இருதயம் திறக்கட்டும். இந்நாட்டின் கதி மோக்ஷத்திற்காக உழைக்கவேண்டிய பொறுப்பு, உங்கள் பேரிலேயே இருக்கிறதென நினைத்து நீங்கள் ஒவ்வொரு வரும் உழையுங்கள். வேதாந்த ஒளியை ஒவ்வொரு குடும்பத் திற்கும் வீட்டிற்கும் பரப்புங்கள். அவர்கள் உள்ளங்களில் மறைந்திருக்கும் தெய்விகத் தன்மையை வெளிப்படுத்துங் கள். இதில் உங்களுக்குக் கிடைக்கக்கூடிய வெற்றி எத் தகையதாயிருப்பினும், ஓர் உயர்ந்த இலட்சியத்திற்காக வாழ்ந்து, உழைத்து, இருந்தோமென்ற சமாதானமாவது இருக்கும். மனிதவர்க்கத்தின் எதிர்காலம் இவ்விலட்சியத் தின் வெற்றியைப் பொறுத்திருக்கிறது.

---

# வேதாந்தமும் இந்திய வாழ்க்கையும்

(சென்னையில் பேசியது)

நம் மதமும் மக்களும் சாதாரணமாக இந்து வென்று அழைக்கப்படுகிறார்கள். பழங்காலப் பாரசீகர்கள் 'சிந்து' நதியை 'ஹிந்து' வென்றழைத்தார்கள். சமஸ்கிருதத்தில் 'ச' என்ற சப்தம் பாரசீகத்தில் 'ஹ' என்று மாறிற்று. எனவே 'சிந்து' 'ஹிந்து' வாயிற்று. கிரேக்கர்களுக்கு 'ஹ' வை உச்சரிப்பது கஷ்டமாயிருந்தது. ஆதலால் அந்த 'ஹ' சப்தமும் போய் 'இந்தியர்'களானோம். 'ஹிந்து' என்ற பதத்திற்கு சிந்து நதிக்கு இப்பக்கத்திலிருப்பவர்களென்று பொருள். அக்காலத்தில் அவ்வார்த்தை பொருத்தமாயிருந்திருக்கலாம். ஆனால் இக்காலத்தில் அது பொருந்தாது. ஏனெனில் சிந்து நதிக்கு இக்கரையில் இப்பொழுது இந்துக்களைத் தவிர, முகம்மதியர்கள், பார்சிகர்கள், கிருஸ்தவர்கள், பௌத்தர்கள், ஜையினர்கள் முதலியவர்களும் இருக்கிறார்கள். ஹிந்து என்ற வார்த்தை அதன் பொருள்படி இவர்கள் அனைவரையும் குறிக்க வேண்டும். ஆனால் அவர்களை ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர்களென்று சொல்ல முடியாது. பலவிதமான மத அனுஷ்டானங்களையும், கருத்துக்களையும், வழிபாட்டு முறைகளையும் உடைய நம் மதத்திற்கு வேறு ஒரு பொதுப் பெயர் கண்டு பிடிப்பது கடினமான காரியம். இந்த வேறுபட்ட அனுஷ்டானங்களுக்கு மேல் இவைகளைப் பிணைக்கக்கூடிய ஸ்தாபனம் ஒன்றும் நம் மதத்திலில்லை. நம் மதப் பிரிவுகள் அனைத்தும் ஒப்புக்கொள்ளக் கூடிய விஷயம் ஒன்றுதான்—எல்லோரும் வேதங்களை ஒப்புக்கொள்ளுகிறார்கள். வேதங்களை ஒப்புக்கொள்ளாதவர்களை ஹிந்து வென்று சொல்ல முடியாது.

வேதங்கள் கர்ம காண்டம் ஞான காண்ட மென்று பிரிக்கப்பட்டிருப்பது உங்களுக்குத் தெரியும். கர்ம காண் டம் பலவிதமான யாகங்களைப்பற்றிச் சொல்லுகிறது. அவை அநேகமாய்ப் பழக்கத்திலில்லை. ஞான காண்டத் தில், வேதங்களின் சத்தெல்லாம் திரட்டி யெடுத்தது போல் உபநிடதங்கள் இருக்கின்றன. இதை வேதாந்த மென்று சொல்லுகிறார்கள். நம்முடைய மத ஆசார்யர்கள் —அவர்கள் துவைதிகள், விசிஷ்டாத் துவைதிகள் அல்லது அத்வைதிகளாக விருப்பினும்—அனைவரும் வேதாந்தத்தை அனைவற்றிலும் உயர்ந்த பிரமாணமாக ஒப்புக்கொண் டிருக்கிறார்கள். ஆதலால் நாடு முழுதும் உள்ள இந்துக் களைத் தற்காலத்தில் ஒரு பெயர்கொண்டு அழைக்கலா மெனில் அதற்கேற்ற பெயர் 'வேதாந்திகள்' என் பதாகத்தான் இருக்கவேண்டு மென்று நினைக்கிறேன். இப்பொருளில்தான் வேதாந்தி அல்லது வேதாந்தம் என்ற வார்த்தைகளை நான் உபயோகப்படுத்துகிறேன். இக் கருத்தை இன்னும் தெளிவாக்கவேண்டும். ஏனெனில் சமீப காலத்தில் வேதாந்த மென்ற சொல் அத்வைத மென்ற பொருளில் சாதாரணமாக உபயோகப்படுத்தப் படுகிறது. வேதாந்தத்தை அடிப்படையாகக்கொண்டு ஸ்தாபிக்கப்பட்ட தத்துவ முறைகளில் அத்வைத மொன்று. விசிஷ்டாத் துவைதிகளும் வேதாந்தத்தைப் பின் பற்றுகிறார்கள். தங்களுடைய சித்தாந்தத்திற்கும் வேதாந் தத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறார்கள். இங்ஙனமே துவைதிகளும் மற்ற இதரர்களும் செய்கிறார் கள். ஆனால் வேதாந்தமென்றால் அத்வைதமென்று மக்கள் சாதாரணமாக நினைப்பதற்கு ஒரு காரணம் உண்டு. வேதங்களுக்கு அடுத்தபடி, அவைகளை விளக்கு வதற்கு ஸ்மிருதிகளும் புராணங்களும் ஏற்பட்டன. இவைகளுக்கு வேதங்களுக்கிருக்கும் அதிகாரமில்லை.

புராணங்களும் ஸ்மிருதிகளும் சுருதி அதாவது உபநிடதங்களினின்று வேறுபட்டால், சுருதியைத் தான் பின்பற்ற வேண்டுமென்பது விதி. சங்கரர் போதித்த அத்வைத சித்தாந்தத்திற்கு அவர் பெரும்பாலும் உபநிடதங்களிலிருந்தே மேற்கோள்கள் எடுத்தாண்டிருக்கிறார். சுருதியில் காணாத ஒன்றிரண்டு விஷயங்களுக்கு மாத்திரம் அவர் ஸ்மிருதியிலிருந்து மேற்கோள்கள் எடுத்திருக்கலாம். ஆனால் மற்ற பிரிவினர் அதிகமாக ஸ்மிருதிகளையும், குறைவாக சுருதிகளையும் ஆதாரமாகக் கொண்டிருக்கிறார்கள். துவைத சம்பிரதாயிகள் அளவுக்கு மீறி ஸ்மிருதிகளையும் புராணங்களையும் கையாளுகிறார்கள். இதன் காரணமாகத்தான் அத்வைதிகள் மாத்திரம் சரியான வேதாந்திகள் என்று கருதப்பட்டு வந்தார்கள் போலும்.

அது எப்படியிருப்பினும் வேதாந்தமென்ற பதம் இந்து மத சம்பிரதாயங்கள் அனைத்தையும் குறிக்கும். வேதாந்தம் வேதத்தில் ஒரு பகுதி. வேதங்கள் உலகில் தோன்றியிருக்கும் எல்லா நூல்களிலும் மிகப்பழமையானவையாக அனைவராலும் ஒப்புக்கொள்ளப்படுகின்றன. வேதங்கள் சிறிது சிறிதாக எழுதப்பட்டதாக இந்துக்கள் ஒப்புக்கொள்வதில்லை. அவைகள் ஒன்றாக உண்டாக்கப்பட்டன. அல்லது வேறு விதமாகச் சொல்லலாமெனில், அவை ஒரு பொழுதும் உண்டாக்கப்படவேயில்லை; அவை எப்பொழுதும் பகவானுடைய மனதில் இருந்து கொண்டிருக்கின்றனவென்று இந்துக்கள் நம்புகிறார்கள். வேதாந்த மென்பது துவைதம், விசிஷ்டாத்துவைதம், அத்வைதம் முதலிய அனைத்தையும் கொண்டுள்ளதாக விருக்கிறது. பௌத்த மதத்தையும், ஜைன மதத்தையும் கூட நாம் ஏற்றுக்கொள்ளலாம்— நம் இதயம் அதற்குப் போதுமான விசால முள்ளதாக விருக்கிறது. ஏனெனில் நன்றாக ஆராய்ச்சி செய்து பார்த்தால் பௌத்த

மதத்தின் சத்து முழுதும் உபநிடதங்களிலிருந்து எடுக்கப் பட்டிருப்பதைக் காணலாம். அவர்களுடைய அந்த அற்புதமான நீதி நியதிகள் கூட வார்த்தைக்கு வார்த்தை அப்படியே பல உபநிடதங்களில் இருப்பதைக் காணலாம். அவ்விதமே ஜைனர்களுடைய நற்கொள்கைகள் அனைத் தும், இந்திய மதத்தில் பிற்காலத்தில் ஏற்பட்ட அபி விருத்தியின் ஆரம்பம் அனைத்தும் உபநிடதங்களில் இருக் கின்றன. உபநிடதங்களில் பக்திலட்சியம் இல்லையென்று சிலர் சொல்லுகிறார்கள். உபநிடதங்களை ஆராய்ச்சி செய்தவர்களுக்கு, இவர்கள் சொல்லுவது தவறெனத் தெரியும். நீங்கள் மாத்திரம் சரியாகப் பார்த்தால், ஒவ் வொரு உபநிடதத்திலும் நிறைய பக்தி யிருப்பதைக் காண லாம். பிற்காலத்தில் புராணங்களிலும் ஸ்மிருதிகளிலும் அதிக விவரமாகக் காணப்படும் கருத்துக்கள் உபநிடதங் களில் விதைகளாக விருக்கின்றன. விதைகளாகவிருந்த அவை புராணங்களில் வளர்ச்சி பெற்று விவரிக்கப்பட் டிருக்கின்றன. இந்திய மக்களிடையே மலர்ந்திருக்கும் ஒவ்வொரு லட்சியத்திற்கும் வித்து உபநிடதங்களில் இருப்பதைக் காணலாம். உபநிடதம் பயிலாத சிலர் பக்தி சம்பிரதாயமே வெளி நாட்டிலிருந்து வந்திருப்பதாகச் சொல்லுகின்றனர். அவர்கள் கூற்று நகைப்பிற் கிடமாக விருக்கிறது. இது தவறென்று ரூபிக்கப்பட்டிருப்பது உங்களுக்குத் தெரியும். பக்திக் கருத்துக்கள் உபநிடதங் களில் மாத்திரமல்ல, அவைகளுக்கு முற்பட்ட சம்ஹிதை களிலும் இருக்கின்றன. சம்ஹிதைகளில் பயத்தின் காரணமாக பக்தியிருப்பதைக் காண்கிறோம். இந்திரன் அல்லது மற்ற தெய்வங்களை வழிபடுகிறவர்கள் அவர் களுக் கெதிரில் நடுங்குவதையும் பார்க்கிறோம். ஆனல் உபநிடதங்களில் பயத்தை அடிப்படையாகக் கொண்ட மதம் காணப்படுவதில்லை. அங்கு காணப்படும் மத

உணர்ச்சி அன்பையும் அறிவையும் அடிப்படையாகக் கொண்டதாக விருக்கிறது.

இந்த உபநிடதங்கள்தான் நமது சாஸ்திரங்களாக விருக்கின்றன. இவை பலவாருக வியாக்கியானம் செய்யப் பட்டிருக்கின்றன. நான் முன் குறிப்பிட்டிருக்கிறபடி எங் கெங்கு இவைகட்கும் இவைகளுக்குப் பின்ஞல் தோன்றிய புராணங்களுக்கும் வேறுபாடுகள் தோன்றுகின்றனவோ, அங்கெல்லாம் உபநிடதங்களேயே நாம் பின்பற்றவேண்டும். ஆனல் நாம் அனுபவத்தில் நூற்றுக்குத் தொண்ணூறு பாகம் புராணங்களேயும் நூற்றுக்குப் பத்து பாகங்கள் மாத்திரமே உபநிடதங்களேயும் இப்பொழுது பின்பற்றி வருகிருேம். ஒன்றுக்கொன்று மாறுபட்ட பல பழக்க வழக்கங்களேயும், சாஸ்திரங்களில் ஆதாரமில்லாத பல அபிப்பிராயங்களேயும் நாம் இப்பொழுது அனுசரித்து வருகிருேம். வேதங்களிலும், சுருதி அல்லது ஸ்ருமிதி முதலிய எந்த சாஸ்திரங்களிலும் கூறப்படாத பல பழக் கங்கள் நம் நாட்டின் பல பாகங்களிலும் காணப்படுவது ஆச்சரியமாயிருக்கிறது. எனினும் அவ்விடத்திலிருக்கும் ஒரு சிறு பழக்கம் மாறிஞலும் தன் இந்துமதமே அழிந்து விட்டதாக அக்கிராமவாசி நினேக்கிருன். அவன் மனதில் அதுவே வேதாந்தமாயிருக்கிறது. அவன் செய்து வருவ தற்கு சாஸ்திரத்தில் யாதொரு அதிகாரமும் இல்லேயென் பதையும், அதை விட்டுவிடுவதஞல் அவனுக்கு யாதொரு கெடுதலும் உண்டாகாமல், அதன்மூலம் நலமே அடை வான் என்பதையும் அவன் உணருவதில்லே.

இரண்டாவதாக இன்னுமொரு கஷ்டமிருக்கிறது. நம்முடைய சாஸ்திரங்கள் எண்ணிறந்தவையாக இருந் திருக்கின்றன. சாம வேதத்திற்கு ஆயிரம் கிளேகள் இருந்ததாக பதஞ்சலி மகா பாஷ்யத்தில் படிக்கிருேம். அவைகள் எல்லாம் என்னவாயினவென்று ஒருவருக்கும்

தெரியாது. அப்படியே ஒவ்வொரு வேதமும். இந்நூல் களின் பெரும் பகுதி மறைந்துவிட்டது. வேதங்களின் பல பாகங்களை, குறிப்பிட்ட குடும்பங்கள் பயின்று பாது காத்து வந்தன. அன்னியர் படையெடுப்பின் காரண மாகவோ அல்லது வேறு எந்த விதத்திலேயோ இக் குடும்பங்களில் பல அழிந்தன. அவைகளுடன் அவை பாதுகாத்து வந்த நூல்களும் அழிந்துபட்டன. ஒரு பிர தேசத்திலிருக்கும் பழக்கத்திற்கும் சுருதிக்கும் முரண் ஏற்பட்ட சமயங்களில், இப்பழக்கம் எழுதப்பட்டிருந்த வேதத்தின் பாகம் அழிந்துவிட்டதென்று சிலர் வாதாடு வதுமுண்டு. இவ்வளவு மாறுபாடான பாட பேதங்க ளிடையே, மாறுபாடான பாஷ்யங்களிடையே, இவை களுக்கு மத்தியில் திகழ்கின்ற உண்மையைக் கண்டு பிடிப்பது மிகச் சிரமமான காரியம். ஆனல் இவைகளுக்கு அடிப்படையாக, இவைகளை ஒற்றுமைப்படுத்தக் கூடிய மத்திய அம்சமொன்று நிச்சயமாய் இருந்திருக்கவேண்டு மென்று புலப்படுகிறது. இல்லாவிடில் அவை இவ்வளவு காலம் நீடித்திருக்க முடியாது.

நம் பாஷ்யக்காரர்களிடம் வரும்போது இன்னுமொரு பெருங் கஷ்டம் தென்படுகிறது. அத்வைத வாதியாக விருக்கக்கூடியவர் அத்வைதப் பொருள் தரக்கூடிய சுலோகங்கள் வரும்போது, அவற்றை அப்படியே வைத்துக்கொள்ளுகிருர். ஆனல் துவைத அர்த்தம் தரக் கூடிய சுலோகம் வரும்போது, அதைப் பலவிதமாகப் பிரித்தும் திரித்தும் அசம்பாவிதமான அர்த்தம் செய்கிருர். சில சமயங்களில் 'அஜா' என்ற பதத்திற்குப் பிறப்பில் லாதது என்று அர்த்தம் செய்யவேண்டியிருக்க, அதற்கு ஆடு என்ற விசித்திரப் பொருள் கொடுக்கிருர். இம்மா திரியே துவைத பாஷ்யக்காரர்கள் துவைதப் பொருள் கொடுக்கும் சுலோகங்களை அப்படியே வைத்துக்கொண்டு,

அத்வைதப் பொருள் கொடுக்கும் ஒவ்வொரு சுலோகத்தையும் கொலைசெய்து, தங்களிஷ்டம்போல் பொருள் செய்கிறார்கள். சமஸ்கிருத பாஷையின் நுட்பமும், வேதத்தின் பழமையும், சமஸ்கிருத இலக்கணத்தின் தன்மையும், ஒரு வார்த்தையின் பொருளுக்காக எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் விவாதம் செய்ய இடம் கொடுக்கின்றன. ஒரு பண்டிதன் தீர்மானம் செய்துவிட்டால், எந்த அர்த்தமற்ற வார்த்தையையும், வாதம் செய்து, மேற்கோள்கள் காட்டிச் சரியான சமஸ்கிருதமாக ரூபித்துவிடுவான். உபநிடதங்களைச் சரியாகப் பொருள் செய்வதில் இவ்வளவு கஷ்டங்களிருக்கின்றன. ஆனால் துவைதத்திலும் அத்வைதத்திலும் ஆழ்ந்த அனுபூதி அடைந்து, ஒரே சமயத்தில் உயர்ந்த ஞானியாகவும் பக்தராகவுமிருந்த, ஒரு மகானுடன் வாழ்ந்திருக்கக்கூடிய அரிய சந்தர்ப்பம் எனக்குக் கிடைத்தது. அவருடனிருந்த காரணத்தால், வேறு வேறு பொருள் கொடுக்கும் பாஷ்யக்காரர்களைக் குருட்டுத்தனமாக நம்பாமல், நான் சுயமாகவே, அவர்களைவிட நல்ல முறையில் பொருள் செய்ய முடியுமாவென்று முயற்சிசெய்து பார்த்தேன். அந்த ஆராய்ச்சியின் காரணமாக அந்த சுலோகங்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்டவையல்லவென்ற முடிவுக்கு வந்தேன். எனவே அந்த சுலோகங்களைக் கொலை செய்து, அவைகளுக்கு வேறு பொருள் செய்யவேண்டிய அவசியமே இல்லாமல் போய்விடுகிறதல்லவா? ஆஹா! அந்த சுலோகங்கள் எவ்வளவு அழகாகவும் அற்புதமாகவும் இருக்கின்றன! அவைகளில் ஒன்றுக்கொன்று முரண்பாடில்லை. ஆனால் அதி ஆச்சரியமான ஒற்றுமை காணப்படுகின்றது. அவை நம்மை ஒரு கருத்திலிருந்து மற்றொரு கருத்துக்குப் படிப்படியாக அழைத்துச் செல்லுகின்றன. எல்லா உபநிடதங்களிலும் நான் கண்ட உண்மையென்ன

வெனில் அவை துவைத பாவத்தில் ஆரம்பித்து உன்னதமான அத்வைத பாவத்தில் முடிகின்றன.

ஆதலால் இம்மகானுடைய வாழ்க்கையின் வாயிலாக நான் அறிந்துகொண்டது யாதெனில், துவைதிகளும் அத்வைதிகளும் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. இருவருக்கும் நம் தேசீய வாழ்க்கையில் மகத்தான இடமிருக்கிறது. நமது மத வாழ்க்கையில் அத்வைதத்தைப்போல் துவைதமும் இன்றியமையாதது. ஒன்றின்றி மற்றென்று இருக்கமுடியாது. ஒன்று மற்றென்றைப் பூர்த்திசெய்கிறது. ஒன்று கீழ்க் கட்டிடம், மற்றென்று மேல் கட்டிடம். ஒன்று வேராகவும் மற்றென்று பழமாகவும் இருக்கின்றன. எனவே உபநிடத வாக்கியங்களைத் திரித்து வேறு பொருள் செய்ய முயற்சிசெய்வது மதியீனமாகும். உபநிடதங்களின் பாஷை அற்புதமாக விருக்கிறது. அவை உலகிலேயே உயர்ந்த ஆத்மீக தத்துவத்தையும் ஆத்மீக உணர்ச்சியையும் உடைத்தாயிருக்கின்றன. அவை மனிதவர்க்கம் மோட்சமடைவதற்கு வழிகாட்டியாக விருக்கின்றன. தவிர, மனிதனுடைய உன்னதமான மனோநிலையை வர்ணித்திருக்கும் இலக்கியங்களில், உலக முழுதிலும் இவை வெகு அழகாக விருக்கின்றன. இந்து மக்களுடைய மனது உள்நோக்கிச் செல்வது என்னும் அவர்களுடைய தனிப் பெருமை உபநிடதங்களில் தெளிவாகத் தென்படுகிறது. எல்லா நாட்டு இலக்கியங்களிலும் மனிதனுடைய உன்னதமான நிலைமைகள் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அவை அனைத்தும் அநேகமாய் ஸ்தூல பாஷையில் விவரிக்க முயன்றிருக்கின்றன. உதாரணமாக, மில்டன், டான்டி, ஹோமர் முதலிய மேல்நாட்டுக் கவிகளை எடுத்துக்கொள்ளுங்கள். அவர்கள் கவிகளில் மிக அழகான பாகங்கள் இருக்கின்றன. அவைகளில் அந்த

அளவற்ற பரம்பொருளை ஸ்தூலமாகவும், இந்திரிய நுகர்ச்சி மூலமாகவும் சரீர பலத்தின் மூலமாகவும் தெளிவு படுத்த முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. நம் சம்ஹிதை களில்கூட இவ்விதமான முயற்சி செய்யப்படுவதைக் காண்கிறோம். உலக சிருஷ்டியை விவரிக்கும் அந்த அழகான ரிக்குகள் உங்களுக்குத் தெரிந்திருக்கும். இவை களிலும் அந்த மிக உன்னத நிலை ஸ்தூல பாஷையில் விவரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். ஆனல் எல்லை யற்ற பரம்பொருளை எல்லைக்குட்பட்ட ஸ்தூல பாஷையில் சொல்ல முடியாதென்பதை அவர்கள் சீக்கிரத்திலேயே உணர்ந்தனர். ஆதலால் அவர்கள் வேறு விதமான பாஷையைக் கைக்கொண்டனர். உபநிஷத்துக்களின் பாஷை புதிய முறையாக விருக்கிறது. பாஷை எதிர்மறை யாகவும், ஒரு வரம்புக்கு உட்பட்டதாகவுமிருக்கிறது. நம்மைப் புலன்களுக்கப்பால் அழைத்துக்கொண்டுபோய், புலன்களால் கிரகிக்கமுடியாத வொன்றைக் காண்பித்து, அதை கிரகிக்க முடியாவிடினும் அது இருக்கிறதென்ற நிச்சயத்தை நம் மனதில் உண்டுபண்ணுகிறது. உலகில் எந்த பாஷை இதற்கு ஈடாகும். 'அங்கு சூரியன் பிரகா சிக்காது ; சந்திரனும், நட்சத்திரங்களும், மின்னலின் ஒளியும் பிரகாசிக்கா. அப்படியிருக்க இச்சிறு நெருப்பு என் செய்யும்?' தவிர உலக முழுதிலும் தத்துவ ஆராய்ச் சியின் முடிவும், இந்துமதத்தின் துணிபுமான இக்கருத்தை வேறு எங்கு இவ்வளவு அழகாகவும் அற்புதமாகவும் சொல்லியிருப்பதைக் காணமுடியும் ?

**द्वा सुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते**
**तयोरन्यः पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्नन्यो अभिचाकशीति ।**
**समाने वृक्षे पुरुषो निमग्नोऽनीशया शोचति मुह्यमानः**
**जुष्टं यदा पश्यत्यन्यमीशमस्य महिमानमिति वीतशोकः ॥**

ஒரே மரத்தில் இரண்டு அழகான பறவைகள் ஒன்றுக்கொன்று மிகுந்த சிநேக பாவத்துடன் உட்கார்ந்து கொண்டிருக்கின்றன. ஒன்று அம்மரத்தின் பழங்களைத் தின்றுகொண்டிருக்கிறது. மற்றொன்று தின்னுமல் சாவதானமாகவும் கம்பீரமாகவும் உட்கார்ந்துகொண்டிருக்கிறது. கீழிருக்கும் பறவை இனிப்பும் கசப்புமான பழங்களைத் தின்பதனுல் சந்தோஷமும் துக்கமும் மாறி மாறி அடைகிறது. மற்றொன்றோ இனிப்புப் பழத்தையும் கசப்புப் பழத்தையும் உண்ணுமல், சுகத்தையும் துக்கத்தையும் நாடாமல் தன்னுடைய மகத்தான தன்மையிலேயே மூழ்கிக் கம்பீரமான தோற்றத்துடன் மேல் கிளையில் வீற்றிருக்கிறது. இது மனித ஆத்மாவின் சித்திரமாகும். மனிதன் பொருளையும் இன்பத்தையும் இதர ஆசைகளையும் நாடி, இன்று தோன்றி நாளை மறையும் தன்மையதான சுகத்தையும் துன்பத்தையும் பின்பற்றுகிறுன். உபநிடதங்களில் வேறு இடங்களில், மனித ஆத்மா தேர்ப்பாகனுக்கும், புலன்கள் கட்டுக்கடங்காத மதம்பிடித்த குதிரைகளுக்கும் ஒப்பிடப்பட்டிருக்கின்றன. குழந்தைகள் தங்கள் சுவர்ண மயமான இன்பக்கனவுகளைப் பின்பற்றுவதும், பின்னுல் அவையனைத்தும் வீண் எனக் கண்டுபிடிப்பதும், வயதானவர்கள் தாங்கள் சென்றுபோன காரியங்களை நினைத்துக்கொண்டு, இம் மாய வலையினின்று வெளிச்செல்ல முடியாமல் திண்டாடுவதும்—இதுதான் மனித வாழ்க்கையின் இயல்பாகவிருக்கிறது. எனினும் ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும் சிற்சில நேரங்களிலும் மனதில் வெளிச்சம் தோன்றுகிறது. ஆழ்ந்த துக்கத்தின் மத்தியில், ஏன் சில சமயங்களில் ஆழ்ந்த சந்தோஷத்தின் மத்தியில்கூட, நம் மனதைச் சூழ்ந்துகொண்டிருக்கிற இருள், சூரியனை மறைத்துக் கொண்டிருக்கும் மேகம்போல விலகி, நம்மையும்

6

அறியாது புலன்களுக்கு அப்பால், உலக சுகங்களுக்கும் துக்கங்களுக்கும் அப்பால், இயற்கைக்கும், தாம் நினைத்துக்கொண்டிருக்கும் சிறு இன்பங்களுக்கும், பொன், பெயர், கீர்த்தி முதலிய அனைத்திற்கும் மீறியதாக விருக்கும் ஒரு பரம்பொருளின் ஒளியைக் கணநேர மேனும் காணப் பெறுகிறோம். மனிதன் இவ்வொளியைக் கண்டு நின்று யோசிக்கிறான். இனிப்புப் பழத்தையும் கசப்புப் பழத்தையும் தின்னமல், தன் ஆத்மாவிலேயே மறந்து, ஆனந்தமாகவும் கம்பீரமாகவும் வீற்றிருக்கும் அந்த மற்றொரு பறவையைப் பார்க்கிறான். கீதை சொல்லு கிறபடி, 'எவனொருவன் ஆத்மாவையே நினைத்தவனாய், ஆத்மாவைத் தவிர வேறொன்றும் வேண்டாதவனாய், ஆத்மாவிலேயே திருப்திகொண்டவனாய் இருக்கிறானோ, அவனுக்கு என்ன வேலை யிருக்கமுடியும்? மனிதன் அந்நித்திய வஸ்துவின் ஒளியைக் காண்கிறான். ஆனால் அதை மறந்து மீண்டும் சுக துக்கத்தை அனுபவிக்கிறான். சிறிதுகாலத்திற்குப் பிறகு மீண்டும் அவ்வொளியைக் காண்கிறான். அடிபட அடிபட கீழ்ப்பறவை மேல்பறவைக் கருகில் மெள்ள மெள்ளச் செல்கிறது. அடி பலமானதாக விருந்தால் தனக்கு உயிருக்குயிராகவும் நண்பனாகவு மிருக்கும் மேல் பறவையினருகில் சீக்கிரம் செல்கிறது. அருகில் வரவர, மேல்பறவையைச் சூழ்ந்திருக்கும் பிரகாசம் தன்னைச் சுற்றிலும் உண்டாவதைக் காண்கிறது. நெருங்க நெருங்க தான் மறைந்து மேல் பறவையுடன் அப்படியே ஒன்றாகிவிடுகிறது. தான் உண்மையில் வேறல்லவென்பதையும், மேல்கிளையில் கம்பீரமாக வீற்றிருந்த அம்மேல் பறவையின் பிரதிபிம்பம்தான் என்பதையும் உணருகிறது. எல்லாம் அதனுடைய பிரகாசம். அந்த ஜோதியில் கலந்து இதுவும் பூரண திருப்தியும், சக்தியும், கம்பீரமும் பெற்றது. இச்சித்திரத்தில் உபநிட

தங்கள் நம்மை துவைத பாவத்திலிருந்து அத்வைத பாவத்திற்கு அழைத்துச் செல்லுகின்றன.

உபநிடதங்களில் நிறைந்திருக்கும் கவித்துவத்தையும், மனிதனுடைய உன்னதமான நிலையை அவை வெகு அழகாகச் சித்திரித்துக் காட்டும் தன்மையையும், அவைகளில் நிறைந்திருக்கும் மிக உயர்ந்த கருத்துக்களையும் விளக்கிக் காட்டக்கூடிய அருமையான வாக்குகள் கணக்கில்லாமல் எடுத்துரைக்கலாம். ஆனல் அதற்கு இப்பொழுது நேரமில்லை. அவைகளின் பாஷை, கத்திமுனை மாதிரி நேராக மனதில் பதிகின்றது. பொருளில் குழப்பமில்லாமல், வீண் வார்த்தைகளும் வாதங்களுமில்லாமல், அழகான சந்தத்தில் நேராகவும் உறுதியாகவும் அமைந்திருக்கின்றது. அனுவசியமான உவமைகளும், அடுக்கு வார்த்தைகளும், பொருளை இழக்கச் செய்கின்ற சொற்றொடர்களும், குழப்பத்தை யுண்டாக்கும் தர்க்கங்களும் அங்கு இல்லை. இவை இழிவு நிலையின் அறிகுறிகள். இத்தகையவற்றை உபநிடதங்களில் காண முடியாது. இவை மனிதர்களால் உண்டாக்கப்பட்டதாயின், இவைகளை யுண்டாக்கிய மனித சமூகம் அளவற்ற சக்தியை உடைத்தாயிருந்திருக்க வேண்டும்.

சக்தி, அளவற்ற சக்தி—இதைத்தான் உபநிடதங்கள் ஒவ்வொரு பக்கத்திலிருந்தும் எனக்கு உரைக்கின்றன. இந்த ஒரு மகத்தான விஷயத்தை நீங்கள் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்; அதுதான் நான் என் வாழ்க்கையில் கற்றுக்கொண்ட பெரும்பாடம். 'ஏ, மனிதனே! அளவற்ற சக்தியுடன் இருப்பாயாக. பலவீனம் உனக்கேற்றதல்ல' இதைத்தான் உபநிடதங்கள் உபதேசிக்கின்றன. 'மனித சுபாவத்தில் பலவீனத்திற்கு இடமில்லையா?' வென்று மனிதன் கேட்கிறுன். பலவீனமிருக்கிறது. ஆனல் அதிக பலவீனம் அந்த

பலவீனத்தைப் போக்குமா? அழுக்கால் அழுக்கைக் கழுவ முயற்சி செய்வாயா? பாவத்தால் பாவம் தொலையுமா? அதுபோல் பலவீனத்தால் பலவீனம் போகுமாவென்று உபநிடதங்கள் உரைக்கின்றன. "ஏ, மனிதனே! பலம், அளவற்ற பலம் உனக்கு வேண்டும், எழுந்து நின்று பலம் பெறு" என்று அவை சொல்லுகின்றன. உலக முழுதிலும் இந்த ஒரு நூலில்தான் 'அபீ' 'பயத்தை அகற்றி ஆண்மையோடிரு' என்ற வார்த்தை மீண்டும் மீண்டும் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. வேறு எந்த சாஸ்திரத்திலும் இப்பதம் கடவுளுக்காவது மனிதனுக்காவது உபயோகப்படுத்தப்படவில்லை. என் மனதில் இப்பொழுது பழங்காலத்துக் காட்சியொன்று தோன்றுகிறது. மேல் நாட்டில் பெரிய சக்ரவர்த்தியாக விளங்கின அலெக்சாண்டர் சக்ரவர்த்தி நம் சிந்து நதிக்கரையில் நின்று கொண்டிருக்கிறான். அங்கு காடுகளில் வசிக்கும் நம் சன்யாசி ஒருவரிடமும் அவன் பேசிக்கொண்டிருக்கும் தோற்றம் கண்முன் வருகிறது. அவனுடன் பேசிக்கொண்டிருக்கும் வயோதிக சன்யாசி யாதொரு உடையுமில்லாமல், நிர்வாணமாய், ஒரு கல்லின்மேல் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். சக்ரவர்த்தி, அவருடைய ஞானத்தைக் கண்டு அதிசயித்து, அவரைத் தன் நாட்டிற்கு (கிரீசுக்கு) வரும்படித் தூண்டுகிறான். அதற்காகப் பொன்னும் பதவியும் கொடுப்பதாகச் சொல்லுகிறான். இந்த வயோதிகர் அவனுடைய பொற்காசுகளையும் ஆசை வார்த்தைகளையும் பார்த்துப் புன்சிரிப்புச் சிரித்து, அவன் நாட்டிற்குச் செல்ல மறுக்கிறார். சக்ரவர்த்திக்குக் கோபம் வந்துவிடுகிறது. தான் அரசன் என்ற தோரணையில் நிமிர்ந்து நின்று, 'நீ வராவிடில், உன்னைக் கொல்வேன்' என்கிறான். அவர் இதைக் கேட்டுக் கலகலவென்று சிரித்துச் சொல்லுகின்றார்—"ஏ, அரசனே! இதுபோன்ற பொய் நீ என்றும்

சொன்னதில்லை. யார் என்னைக் கொல்லமுடியும்? ஏ! இவ்வுலகையாளும் சக்ரவர்த்தியே! நீயா என்னைக் கொல்லப் போகிறுய்? அது என்றும் முடியாது. ஏனெனில் நான் பிறப்பும் இறப்புமில்லாத ஆத்மா. நான் என்றும் பிறக்கவுமில்லை, என்றும் அழிவதுமில்லை. நான் எல்லையற்றவன், சர்வசக்தி வாய்ந்தவன். நீ என்னைக் கொல்லுகிறேன் என்று சொல்லுவது குழந்தை பேசும் அறியாப் பேச்சல்லவா?" இதுவல்லவா பலம்? இது வல்லவா சக்தி! என் சிநேகிதர்களே! என் சகோதரர் களே, நான் உபநிடதங்களை அதிகம் படிக்கப் படிக்க உங்களுக்காக அதிகம் கண்ணீர் சிந்துகிறேன். நாம் பலம் பெறுவதற்கு வழி அவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. நாம் வேண்டுவது பலம், பலம்தான். அதை யார் நமக்குக் கொடுப்பார்கள்? நம்மைப் பலவீனப்படுத்துவதற்கு ஆயிரக்கணக்கானவர்க ளிருக்கிறுர்கள். நாம் இதுவரை கேட்ட கதைகள் போதும். நம் புராணங்களிலிருக்கும் கதைகளைக்கொண்டு உலகிலிருக்கும் புத்தகசாலைகளில் முக்கால் பங்கை நிரப்பிவிடலாம். சென்ற ஆயிரம் வருஷங்களாக எவை எவை நம்மைப் பலவீனப்படுத்துமோ அவை யனைத்திற்கும் நாம் இடம் கொடுத்துவிட்டோம். இக்காலமெல்லாம், நாம் எப்படி நம் தேசீய வாழ்க்கை யைப் பலவீனப்படுத்துவதென்ற ஒரே நோக்கத்துடன் நாமிருந்து வந்திருப்பதாகத் தோன்றுகிறது. எவரும் கேவலமாக நினைத்து, நம்மைக் காலால் மிதிக்கக்கூடிய புழுக்களின் நிலைக்கு நாம் இப்பொழுது வந்துவிட்டோம். ஆதலால் உங்களில் ஒருவனுகிய நான், உங்களுடன் வாழ்ந்து இறப்பவனென்ற முறையில் உங்களுக்குச் சொல்லுகிறேன், கேளுங்கள். நாம் வேண்டுவது பலம், பலம்தான். ஒவ்வொரு துறையிலும் அளவற்ற பலம் வேண்டும். உபநிடதங்கள் அளவற்ற பலத்தைக் கொடுக்

கும் சுரங்கங்களாக விருக்கின்றன. உலக முழுதிற்கும் பலம் அளிக்கக்கூடிய சக்தி அவைகளில் இருக்கின்றன. அவைகளின்மூலம் உலக முழுதிற்கும், புத்துயிரும், புது உணர்ச்சியும், புது சக்தியும் அளிக்கமுடியும். எல்லா தேசங்களிலும் எல்லா மதங்களிலும் இருக்கும் பலவீனர் களேயும், தாழ்த்தப்பட்டவர்களேயும், துன்பத்தால் அழுந் தியவர்களேயும் அவை பேரிகை கொட்டி அழைத்து, 'ஆண்மையுடன் எழுந்து நின்று விடுதலே யடையுங்கள்' என்று உரக்கக் கூவுகின்றன. விடுதலே - பூர்ண சுதந் திரம் - மனதிற்கு, உடலுக்கு, ஆத்மாவிற்கு - இவையே உபநிடதங்களின் மூல மந்திரங்களாகும்.

இவ்வுலகிலேயே இந்த ஒரு சாஸ்திரந்தான் சுவர்க் கத்தைப் பற்றிப் பேசாமல், மனிதனுடைய விடுதலேயைப் பற்றிச் சொல்லுகிறது. இயற்கையின் தளேகளினின்று விடுதலேயடையுங்கள், பலவீனத்திலிருந்து விடுதலே பெறுங்கள் என்று அது உரைக்கின்றது. இச் சுதந்திரம் உங்கள் உள்ளத்தில் ஏற்கெனவே யிருக்கிறதென் பதையும் அது காண்பிக்கிறது. இது அதன் உபதேசங் களின் மற்ெருரு விசேஷ அம்சமாகும். இக்கொள்கை அத்வைதத்திற்கு மாத்திரம் உரியதொன்றல்ல. துவைதி களாக விருப்பவர்களும் ஆத்மா தன்னுடைய இயல் பிலேயே பூரணத் தன்மையுடையதென்று ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். கர்மபலத்தின் காரணமாக அப்பூரணத்துவம் மறைந்திருக்கிறதென்று அவர்கள் சொல்லுகிருர்கள். ஸ்ரீ ராமாநுஜருடைய விசிஷ்டாத் துவைத சித்தாந்தத்தின்படி ஆத்மா மலருகிறது அல்லது கூம்புகிறது என்று சொல்லுகிருர்கள். இது தற்கால பரிணமவாதிகள் † சொல்வதை முற்றிலும் ஒத்திருக் கிறது. ஆத்மா கூம்பியிருக்கும்போது, அதன் சக்தி

---

† Evolutionists

அதனுள் அடங்கியிருக்கிறது. நல்ல காரியங்களும் எண்ணங்களும் அதை மலரும்படி செய்து, அதன் பூரணத்தை வெளிப்படுத்துகின்றன. அத்வைதி, பரிணமம் இயற்கையிலிருப்பதாக ஒப்புக்கொள்ளுகிருனே யன்றி ஆத்மாவிலிருப்பதாக ஒப்புக்கொள்ளுவதில்லை. ஒரு திரையிருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். அதில் ஒரு துவாரமிருக்கிறது. நான் திரையின் அப்புறத்திலிருந்துகொண்டு இப்பெரிய கூட்டத்தைப் பார்க்கிறேன். நான் சிலரைத்தான் பார்க்கமுடியும். துவாரம் பெரிதாகப் பெரிதாக இக்கூட்டத்தின் அதிகமான பாகத்தைப் பார்க்கலாம். அத்திரை முழுதும் ஒரே துவாரமாகிவிட்டால், அதாவது திரையை முற்றிலும் விலக்கிவிட்டால் கூட்ட முழுமையும் பார்ப்பேன். இதில் நானும் மாறவில்லை. நீங்களும் மாறவில்லை; மாறுதலனைத்தும் திரையில்தானிருந்தது. பரிணமத்தைப் பற்றி அத்வைதி சொல்வது இதுதான். இயற்கை மறைவு மாறி ஆத்மாவை வெளிப்படுத்துகிறது. ஆத்மா என்றும் மாருமல் எல்லையற்றிருக்கிறது. ஆத்மா மாயையால் லேசாக மறைக்கப்பட்டிருக்கிறது. இம்மாயைத் திரையின் கனம் குறையக் குறைய ஆத்மாவில் புதைந்திருக்கும் அதன் இயல்பான மகத்துவம் வெளிப்பட்டு, வியக்தமாகிறது.

இந்த மகத்தான தத்துவத்தை இந்தியாவிடமிருந்து அறிந்துகொள்ள உலகம் காத்துக்கொண்டிருக்கிறது. யார் என்ன வேண்டுமானுலும் பேசட்டும்; அவர்கள் எப்படி வேண்டுமானுலும் தற்பெருமை பேசிக்கொள்ளட்டும். இக்கொள்கையை ஒப்புக்கொள்ளாமல் எந்த சமூகமும் பிழைத்திருக்க முடியாது. எல்லா விஷயங்களைப் பற்றிய கருத்துக்களும் இப்பொழுது மாறி வருவதை நீங்கள் கவனிக்கவில்லையா? முன்காலத்தில், ஒன்று நல்லதென்று ரூபிக்கப்படுகிறவரையில் அதைக்

கெட்டதென்று நினைப்பது பழக்கமாயிருந்தது. கல்வி முறையிலும், குற்றவாளிகளைத் தண்டிப்பதிலும், பயித்தியக்காரர்களை நடத்துவதிலும், வியாதிகளுக்கு வைத்தியம் செய்வதிலும் இதுதான் பழைய விதியாக விருந்தது. தற்காலம் வழங்கிவரும் புதிய விதி என்ன ? ஆரோக்கியமாயிருப்பது உடம்பின் இயல்பு. அது தன்னைத்தானே குணப்படுத்திக்கொள்ளுகிறது ; மருந்து உடலிலிருக்கும் சக்தியைக் காப்பாற்றத்தான் உதவி செய்யலாம் என்கிறார்கள் மேதாவிகள். குற்றவாளிகளை நடத்துவதைப் பற்றித் தற்காலச் சட்டம் என்ன சொல்லுகிறது ? அவன் எவ்வளவு கேவலமாக விருப்பினும் அவனுள்ளத்தில் தெய்வீகம் அல்லது உயர்ந்த தன்மை யிருக்கிறது. அதை அனுசரித்து அவனை நடத்தவேணுமென்கிறது அச்சட்டம். தற்காலத்தில் இங்ஙனம் கருத்துக்கள் மாறி வரும் காரணத்தால் குற்றவாளிகளைத் திருத்தும் பள்ளிக்கூடங்களும் கட்டப்படுகின்றன. ஒவ்வொரு மனித வுள்ளத்திலும் தெய்வீகம் புதைந்திருக்கிறதென்ற இந்தியக் கருத்து இதர நாடுகளிலும் எல்லாத் துறைகளிலும் புகுந்து, அவர்கள் அறிந்தோ அறியாமலோ வேலை செய்து வருகிறது. அதன் தத்துவம் உங்கள் சாஸ்திரங்களில்தானிருக்கின்றன. இதை மற்ற மக்கள் ஒப்புக்கொண்டுதானாக வேண்டும். இதன் காரணமாக ஒருவர் மற்றொருவர்பால் நடந்துகொள்ளும் முறையும், மக்கள் பலவீனத்தையே சுட்டிக் காண்பிக்கும் பழைய பழக்கமும் மாறும். இப்பொழுது நம்மைச் சிலர் தவறு செய்கிறோமென்று சொல்லலாம். பாபமென்ப தொன்றில்லை யென்ற மகா கெட்ட கருத்தை நான் பிரசாரம் செய்வதாக உலகின் ஓர் எல்லையிலிருந்து மற்றோர் எல்லை வரை என்னை இப்பொழுது சிலர் தூற்றுகிறார்கள் அல்லவா ? இவர்களுடைய சந்ததியார்களே நான் பாவத்தை விட்டு தெய்விகத்தன்மையை

உபதேசித்தவன் என்று என்னைப் போற்றுவார்கள். நான் மக்களுடைய கெட்ட குணங்களைப் பற்றிப் பேச வரவில்லை. அவர்களுடைய தெய்வீகத் தன்மையைப் பற்றிச் சொல்லத்தான் தோன்றியிருக்கிறேன் என்பதில் பெருமை கொள்ளுகிறேன்.

உலகம் உபநிடதங்களிலிருந்து தெரிந்துகொள்ள வேண்டிய இரண்டாவது பெரிய கருத்து, பிரபஞ்சம் முழுவதும் ஒன்று என்னும் உண்மை. தேசத்திற்கு தேசம் பிரித்து வைத்திருந்த எல்லைகள் இப்பொழுது மறைந்துகொண்டிருக்கின்றன. மின்சாரமும் நீராவியும் உலக முழுதும் போக்குவரத்து சாதனங்களை உண்டு பண்ணியிருக்கின்றன. எனவே நம் நாட்டினர் மற்ற நாடுகளில் பிசாசுகள் வசித்துக் கொண்டிருப்பதாக நினைக்கமுடியாது. மற்ற நாட்டினர்களும் இந்தியாவில் மனிதரைத் தின்னும் மனிதர் அல்லது காட்டு மிராண்டிகள் வசித்துக்கொண் டிருக்கிறார்களென்று சொல்ல முடியாது. நாம் வெளி நாடுகளுக்குச் சென்றால் அங்கும் நம் தேசத்திலிருப்பதுபோல் நமக்கு உதவியும் அன்பும் அளிக்கக் கூடிய சகோதர மனிதனைச் சந்திக் கிறோம். சில சமயங்களில் நம் நாட்டிலிருப்பவர்களைவிட நல்ல மனிதர்களைச் சந்திக்கிறோம். அவர்கள் இங்கு வரும்போதும் இதே சகோதரத் தன்மையைக் காணு கிறார்கள். எல்லா விதமான துக்கங்களுக்கும் காரணம் அறியாமை என்று நமது உபநிடதங்கள் கூறுகின்றன. சமூக, ஆத்மீக அல்லது மற்றெந்தத் துறையிலும் இது முற்றிலும் உண்மை. அறியாமையின் காரணமாகத்தான் நாம் ஒருவரை ஒருவர் வெறுக்கிறோம். அறியாமையின் காரணமாகவே நாம் ஒருவரை ஒருவர் தெரிந்துகொள்வது மில்லை, நேசிப்பதுமில்லை. ஒருவரை ஒருவர் நன்றாகத் தெரிந்துகொண்டதும் அன்பு பிறக்கிறது. ஏனெனில்

நாம் அனைவரும் உண்மையில் ஒன்றல்லவா ? இங்ஙனம் ஒற்றுமை யுணர்ச்சி தானகவே உண்டாவதைக் காண்கிறோம். ராஜீய சமுதாய உலகிலும்கூட, இருபது வருஷங்களுக்குமுன், தேசீய ' பிரச்னைகளாயிருந்தவை இப்பொழுது உலகப் பிரச்னைகளாக மாறியிருக்கின்றன. அவை உலகப் பிரச்னைகளாக இல்லாமல் தீர்க்க முடியாதனவாக விருக்கின்றன. சர்வதேச சங்கங்கள், பல தேசங்கள் சேர்ந்து ஒன்றுக சில விஷயங்களில் ஈடுபடுதல், சர்வதேச சட்டங்கள்—இம்மாதிரி உலக ஒற்றுமையைக் காண்பிக்கக்கூடிய பல அம்சங்கள் இப்பொழுது தோன்றிக்கொண்டிருக்கின்றன. உலக முழுதும் ஒன்றென்பதை இவைகள் ரூபிக்கின்றன. விஞ்ஞான சாஸ்திரம் படிப்பவர்களும் இதே முடிவுக்கு வந்துகொண்டிருக்கிறுர்கள். ஸ்தூலப் பிரகிருதி முழுதும் ஒரே சமுத்திரமாகவும், அதில் நீங்கள், நான், சூரியன், சந்திரன் முதலிய அனைவரும் சிறு சிறு சுழல்களாகவும் கருதப்படுகிறோம். மனோ உலகமும் ஓர் எல்லையற்ற சமுத்திரமாயிருக்கிறது ; அதில் நீங்களும் நானும் சிறு திவலைகளாக விருக்கிறோம். ஆத்மாவாகப் பார்த்தால் நாம் அனைவரும் ஒரே எல்லையற்ற ஒரு தன்மைத்தான பரம்பொருளாக விருக்கிறோம். மனிதன் நீதி நியதிப்படி நடக்க வேண்டுமென்று எல்லா சாஸ்திரங்களும் சொல்லுகின்றன. ஏன் நீதி நெறிப்படி நடக்கவேண்டும் ? அதன் அடிப்படையான தத்துவம் என்னவென்பதைப் பற்றி உலகம் அறிந்துகொள்ள விரும்புகிறது. அவர்கள் வேண்டும் அறிவனைத்தும் நம் புத்தகங்களில் தான் கிடைக்கும்.

இம்மகத்தான கருத்துக்கள் அன்னிய நாட்டினருக்கு அவசியமானல், நமக்கு இன்னும் பதின்மடங்கு அவை அவயசிமாக விருக்கின்றன. ஏனெனில் நாம் இவ்வரிய

உபநிடதங்களைப் பெற்றவர்களாயிருந்தும், நாம் மகரிஷிகளின் வம்சங்களில் பிறந்தவர்களென்று பெருமையடித்துக்கொண்டிருந்த போதிலும், மற்ற தேசங்களோடு ஒப்பிட்டுப்பார்த்தால் நாம் மிகப் பலவீனர்களாகவிருக்கிறோம். இதை நான் உங்களுக்கு எடுத்துக் காட்ட வேண்டியது அவசியமாயிருக்கிறது. முதலில் நம் சரீரம் பலவீனமுள்ளதாக விருக்கிறது. நமது துன்பங்களில் சுமார் மூன்றில் இரண்டு பங்குக்கு நமது சரீர பலவீனம் காரணமாயிருக்கிறது. நாம் சோம்பேறிகளாக விருக்கிறோம். நம்மால் உழைக்க முடிவதில்லை. நாம் ஒருவருக்கொருவர் சேர்ந்து வாழ முடியாது. நாம் ஒருவருக் கொருவர் நேசிப்பதில்லை; நம்மிடம் சுயநலம் நிறைந்திருக்கிறது. ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்ளாமலும், பொறாமைப் படாமலும் மூன்று பேர்கள் சேர்ந்து வாழ முடிவதில்லை. எந்த விதமான கட்டுப்பாடு மில்லாமல், சுயநலம் நிறைந்து, நெற்றியில் இப்படி யிட்டுக்கொள்ளுவதா அல்லது அப்படி யிட்டுக்கொள்ளுவதா வென்பதைப் பற்றி நூற்றுக்கணக்கான வருஷங்களாகச் சண்டை செய்து கொண்டிருக்கிறோம். ஒருவன் பார்த்து விட்டால் உண்ணும் உணவு கெட்டு விடுகிறதா வென்பது போன்ற அற்ப விஷயங்களை மகத்தானவைகளாகக் கொண்டு பல புத்தகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இதைத்தான் சென்ற சில நூற்றாண்டுகளாக நாம் செய்துவந்திருக்கிறோம். இவ்வளவு அழகான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டிருக்கும் மக்களிடம் ஏதாவது உயர்ந்த விஷயங்களை எதிர்பார்க்க முடியுமா? இது நமக்கு அவமானமாக இருக்கவில்லையா? ஆம், சில சமயங்களில் அவமானப்படுகிறோம். அற்பமாக நினைத்தாலும், இவைகளை நம்மால் விட முடிகிறதில்லை. நாம் கிளிபோல் பல விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்

டிருக்கிறோம்; ஆனால் பேசுகிறபடி செய்வதில்லை. பேசுவதும் அதன்படி செய்யாமலிருப்பதும் நமக்கு வழக்கமாய்ப் போய்விட்டது. இதற்குக் காரணமென்ன? நமது சரீர பலவீனம். இந்த பலமற்ற மூளை எதையும் செய்ய முடிகிறதில்லை. அதைப் பலப்படுத்த வேண்டும். முதலில் நம் இளைஞர்கள் பலமுடையவர்களாக வேண்டும். மத உணர்ச்சி அதற்குப் பிறகு வரும். எனது வாலிப நண்பர்களே! பலமுடையவர்களாகுங்கள். அதுதான் நான் உங்களுக்கு அளிக்கக்கூடிய புத்திமதி. நீங்கள் கீதையைப் படிப்பதைவிட கால்பந்தாடுவதன் மூலம் சுவர்க்கத்திற்கருகில் செல்வீர்கள். இவை தைரியமான வார்த்தைகள். உங்களுக்கு இவைகளைச் சொல்ல வேண்டியிருக்கிறது. ஏனெனில் நான் உங்களை நேசிக்கிறேன். செருப்பு எங்கு கடிக்கிறதென்று எனக்குத் தெரியும். எனக்குக் கொஞ்சம் அனுபவமிருக்கிறது. உங்கள் கை கால் தசைகளில் இன்னும் கொஞ்சம் பலம் வந்தால், கீதையை நன்றாக அர்த்தம் செய்துகொள்ளுவீர்கள்; உங்கள் ரத்தத்தில் வேகமிருந்தால் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அளவற்ற பராக்கிரமத்தை நீங்கள் நன்றாகப் புரிந்து கொள்ள முடியும். உங்கள் உடம்பு உங்கள் கால்களின மேல் நிமிர்ந்து நிற்க, நீங்கள் ஆண் பிள்ளைகள் என்ற உணர்ச்சி உங்களுக்குத் தோன்றும் போதுதான் நீங்கள் ஆத்மாவின் மகத்துவத்தையும் உபநிடதங்களின் தத்துவங்களையும் நன்றாக அறிந்துகொள்ள முடியும்.

நான் அத்வைதத்தையே உபதேசம் செய்வதாகச் சிலர் அதிருப்திப்படுகிறார்கள். நான் அத்வைதத்தையோ அல்லது வேறு எந்த தத்துவத்தையோ பிரசாரம் செய்ய விரும்பவில்லை. நமக்கு இப்போது அவசியமான தத்துவமெல்லாம் ஆத்மாவின் அந்த அதி ஆச்சரியமான கருத்துத் தான். அதாவது அதன் அழிவற்ற சக்தி, அதன் எல்லை

யற்ற தூய்மை, அதன் குறைவற்ற பூரணத்துவம். எனக்கு ஒரு குழந்தை யிருந்தால், அதைப் பிறவியி லிருந்தே 'நீ அந்தப் பரிசுத்தமான ஆத்மா' என்று சொல்லி வளர்ப்பேன். நம் புராணங்களிலிருக்கும் ராணி மதாலாசாவின் அழகான கதையை நீங்கள் கேட்டிருப்பீர்கள். தனக்கு ஒரு குழந்தை பிறந்ததும், அதைத் தன் கையினுலேயே எடுத்துத் தொட்டிலிலிட்டுத் தாலாட்டி 'நீ அந்தப் பரிசுத்தமான ஆத்மா. நீ குற்றம் குறையற்ற, பாபமற்ற, சர்வசக்தி வாய்ந்த மகத்தான ஆத்மாவின் சொரூபம்' என்று அவள் பாடினுளாம். இதில் மிகுந்த பயனிருக்கிறது. உங்களை மேன்மை யானவர்களென்று நினையுங்கள்; நீங்கள் மேன்மை யானவர்களாவீர்கள். உலக முழுதும் சுற்றியதால் நான் பெற்ற அனுபவ மென்ன? ஆங்கிலேயர்கள் தங்களைப் பாவிகள் என்று சொல்லிக் கொண்டிருக்கலாம்; ஆனுல் அதை அவர்கள் உண்மையில் நம்பியிருந்தால், அவர்கள் மத்திய ஆப்பிரிக்காவிலிருக்கும் நீக்ரோக்களைவிட மேம் பட்டவர்களாக விருந்திருக்க மாட்டார்கள். அவர்கள் அவ்விதம் நம்பவில்லை யென்பதற்காக, ஆண்டவன் அவர்களை ஆசீர்வதிக்கட்டும். அதற்குப் பதிலாக ஒவ் வொரு ஆங்கிலேயனும் தான் உலகத்தை ஆளப்பிறந்தவ னென நினைக்கிருன். தான் உயர்ந்தவனென்றும் தன்னுல் எதையும் செய்யமுடியுமென்றும் நினைக்கிருன்; தான் விரும்பினுல் சந்திர சூரிய மண்டலங்களுக்கும் போக முடியுமென நம்புகிருன். இந்த நம்பிக்கைதான் அவனைப் பெரியவனுக்குகிறது. தான் பாவியென்று தன்னுடைய மதகுரு கூறுவதை அவன் நம்பியிருந்தால், அவன் இப் பொழுதிருக்கும் சக்தி வாய்ந்த ஆங்கிலேயனுக விருக்க மாட்டான். ஒவ்வொரு நாட்டிலும் புரோகிதர்களும் குருட்டு நம்பிக்கைகளும் இருந்தாலும், அவர்களை மீறிக்

கொண்டு மக்கள் மனதிலிருக்கும் தெய்விக சக்தி வெளிப் படுவதைக் கண்டிருக்கிறேன். நாம் நம்பிக்கையை இழந்து விட்டோம். நான் சொல்லுவதை நம்புங்கள். ஓர் ஆங்கிலேயனுக்கிருப்பதில் ஆயிரத்திலொரு பங்கு நம்பிக்கைகூட நம்மிடமில்லை. இவை மிக வெளிப்படை யான, வருத்தம் தரக்கூடிய வார்த்தைகள்; ஆனால் இவைகளை நான் சொல்லாமலிருக்கமுடியாது. ஓர் ஆங்கில மகன் அல்லது மகள் நம்முடைய மத லட்சியங் களை ஏற்றுக்கொண்டால், அவர்கள் அதில் ஆழ்ந்து மூழ்கி—தாங்கள் அரசாளும் ஜாதியராகவிருந்த போதி லும், தங்கள் மதத்தினரும் சுற்றத்தாரும் தங்களை மிகக் கேவலமாக நினைத்துக் கேலிசெய்த போதிலும் - அவற்றை யெல்லாம் பொருட்படுத்தாது, நம் நாட்டிற்கு வந்து நம் மதத்தை, நமக்கே போதிக்கப் பாடுபடுகிறார்களென்பதை நீங்கள் கண்டதில்லையா? உங்களில் எத்தனை பேர்கள் அவ்விதம் செய்யமுடியும்? நீங்கள் ஏன் அவ்விதம் செய்ய முடியாது? உங்கள் மதத்தைப்பற்றி உங்களுக்குத் தெரியாதா? அவர்களைவிட உங்களுக்கு அதிகம் தெரியும். உங்களுக்கு அவசியமானதைவிட அதிகம் தெரியும்—அதுதான் உங்கள் கஷ்டம்! நீங்கள் அவ்விதம் செய்ய முடியாததற்குக் காரணம் உங்கள் ரத்தம் வெறும் தண்ணீர் போலிருக்கிறது; உங்கள் மூளையில் சக்தியில்லை; உங்கள் உடலில் பலமில்லை. நீங்கள் இந்த உடம்பை மாற்றிக்கொள்ள வேண்டும். சரீர பலவீனம்தான் இதற்குக் காரணம்; வேறொன்றும் அல்ல. சென்ற நூறு வருஷங்களாகச் சீர்திருத்தங்களைப்பற்றியும் லட்சியங் களைப்பற்றியும் வெறும் பேச்சுப் பேசிக் கொண்டே யிருந்திருக்கிறீர்கள். ஆனால் அவைகளை காரியாம்சத்தில் கொண்டுவர வேண்டிய காலம் வரும்போது உங்களைக் காணுவதற்கு இல்லை. இதைக் கண்டு உலகமே உங்களை

எள்ளி நகையாடுகிறது; சீர்திருத்தமென்ற பெயரே கேலிக்கிடமாக விருக்கிறது. இதற்கெல்லாம் காரண மென்ன? காரணம் உங்களுக்குத் தெரியும். நீங்கள் பலவீனமாயிருப்பதே இவை அனைத்திற்கும் காரணம்;— உங்கள் உடல் பலவீனமாயிருக்கிறது; உங்கள் மனது பலவீனமாயிருக்கிறது. உங்களிடமே உங்களுக்கு நம் பிக்கையில்லை. என் சகோதரர்களே! ஆயிரக்கணக் கான வருஷங்களாக ஜாதிக் கொடுமையும், அரசர் கொடுங் கோன்மையும், அன்னியர் அரசாட்சியும் உங்கள் பலத்தை யெல்லாம் போக்கி விட்டன. உங்கள் முதுகெலும்பு உடைந்து, இப்பொழுது புழுக்கள் போலாகி விட்டீர்கள். யார் உங்களுக்குப் பலம் கொடுப்பார்கள்? பலம், அளவற்ற பலம்தான் நமக்கு இப்பொழுது தேவை. இத்தகைய பலம் பெறுவதற்கு முதல்படி உபநிடதங் களைப் போற்றி, நாம் ஆத்மாவென்று நம்புவதுதான். 'என்னைக் கத்தி வெட்டாது, அஸ்திரம் துளைக்காது, நெருப்பு எரிக்காது, காற்று உலர்த்தாது; நான் சர்வ சக்தி வாய்ந்தவன், சர்வ ஞானமும் படைத்தவன்' என்ற இந்த அதி அற்புதமான, நம்மைக் காப்பாற்றக்கூடிய, வார்த்தை களை மீண்டும் மீண்டும் சொல்லுங்கள். நம்மைப் பலவீனர் களென்று சொல்லாதீர்கள். நாம் விரும்பும் எதையும் சாதிக்கமுடியும். நம்மால் செய்ய முடியாதது ஒன்று மில்லை என்று நினையுங்கள், நம்புங்கள். நாம் அனைவரும் அந்த மகத்தான ஆத்மாவை உடையவராயிருக்கிறோம். அதில் நம்பிக்கை வைப்போமாக. நசிகேதனைப்போல் அளவற்ற நம்பிக்கை பெறுவோமாக. அத்தகைய நம்பிக்கை உங்கள் ஒவ்வொருவருக்கும் வரவேண்டுமென நான் விரும்புகிறேன். அப்பொழுது நீங்கள் ஒவ்வொரு வரும் மகத்தான சக்தி பெற்று உலகத்தைக் கலக்கக்கூடிய மூளையைப் பெறுவீர்கள், நீங்கள் ஒவ்வொருவரும்

கடவுள் போன்ற எல்லையற்ற சக்தி பெறுவீர்கள். இத்தகைய பலமும் நம்பிக்கையும்தான் உபநிடதங்கள் நமக்களிக்கின்றன.

உபநிடதங்கள் ரகசியமானவை, அவைகளை சன்யாசிகள்தான் படிக்கலாம், என்று சிலர் பிதற்றுகிருர்கள். உபநிடதங்கள் சன்யாசிகள் கையிலிருந்தன. அவர்கள் காடுகளில் வசித்து வந்தார்கள். சங்கரர் கொஞ்சம், கருணைவைத்து கிரகஸ்தர்களும் அவைகளைப் படிக்கலாமென்ருர். எனினும் அவைகள் துறவிக்கு வேண்டிய விஷயங்களைத்தான் சொல்லுகின்றனவென்று மக்கள் நம்பிவந்தார்கள். ஆனல் நான் முன்னல் உங்களுக்குத் தெரிவித்தபடி வேதத்திற்கு மூலப் பொருளான அந்தக் கிருஷ்ண பகவானே எல்லாக் காலத்திற்குமாக முடிவாக கீதையில் சொல்லி யருளியிருக்கிருர். அவை எல்லா மக்களுக்கும் எல்லாத் தொழிலாளருக்கும் உரியவை. வேதாந்தத்திலிருக்கும் இவ்வுயர்ந்த கருத்துக்கள் காடுகளிலும் குகைகளிலும் வசிக்கும் சாதுக்களிடம் மாத்திரமல்லாமல், உலகெங்கும் பரவி ஏழை மக்கள் உள்ளத்திலும், மீன் பிடிக்கும் செம்படவர்களிடத்திலும், பள்ளியில் பயிலும் மாணவர்களிடத்திலும்—இன்னும் எல்லா மக்களிடத்திலும் குடிகொள்ள வேண்டும். எந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்பினும், ஆண் பெண் குழந்தை முதலிய அனைவரையும் அவை கூவி யழைக்கின்றன. இதைக் கேட்டு எவரும் பயப்படவேண்டிய அவசியமில்லை. செம்படவர்கள் போன்றவர்களெல்லாம் எப்படி உபநிடதங்கள் கூறும் லட்சியங்களைத் தங்கள் வாழ்க்கையில் பின்பற்ற முடியுமெனக் கேட்கலாம். இதற்கு வழி காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆத்மீக சக்தி எல்லையற்றது. நீங்கள் சிரத்தையுடன் அதற்காக முயற்சி செய்கிற அளவு, அதன் பயனைப் பெறுவீர்கள். சிறு அளவில்

சிரத்தையுடன் செய்தாலும், அது அற்புதமான பலனை அளிக்கும். ஆதலால் ஒவ்வொருவரும் தங்களால் இயன்ற அளவு சிரத்தையுடன் முயற்சி செய்யட்டும். மீன் பிடிப் பவன் தன்னை ஆத்மாவென நினைத்தால் அவன் இன்னும் திறமையுள்ள மீன் பிடிப்பவனுவான். ஒரு மாணவன் தன்னை ஆத்மாவென நினைத்தால் அவன் இன்னும் ஆற் றல் படைத்த மாணவனுவான். ஒரு வக்கீல் தன்னை ஆத்மாவென நினைத்தால் அவன் இன்னும் சிறந்த வக்கீ லாவான். இவ்விதம் எல்லா ஜாதியாரும் மக்களும் இதன் மூலம் மேம்பாடடைவார்கள்.

மனித சமூகம் இயல்பாகவே பல பிரிவுகளாகப் பிரிந் துள்ளது. ஆனுல் அவற்றில் ஏதாவது ஒரு பிரிவினர் அல்லது ஜாதியினருக்குத் தனி உரிமையிருந்தால் அத்தனி யுரிமை தொலையவேண்டும். சமூகம் இயல்பாகவே பல பிரிவுகளாக விருக்கிறது. சமூகத்தில் நான் ஒரு தொழில் செய்யலாம், நீங்கள் வேருென்று செய்யலாம். நீங்கள் ராஜ்யத்தை ஆளலாம், நான் செருப்புத் தைக்கலாம்; ஆனுல் அதன் காரணமாக நீங்கள் உயர்ந்தவர்களென்று சொல்ல முடியாது. என்னுல் ஆள முடியாமலிருக்கலாம், ஆனுல் உங்களால் செருப்புத் தைக்க முடியுமா? நான் செருப்புத் தைக்கலாம், நீங்கள் வேதம் படிக்கலாம்; ஆனுல் அதன் காரணமாக என்னை ஏறி மிதிக்க உங்களுக் கென்ன அதிகாரமிருக்கிறது? ஒருவன் கொலை செய்தால் அவனைப் புகழ்வதாம், வேறு ஒருவன் ஒரு பழத்தைத் திருடினுலும் அவனைத் தூக்கிலிட வேண்டுமாம்; ஜாதித் துவேஷத்தை அடிப்படையாகக் கொண்ட இந்த அக்கிர மங்கள் ஒழியவேண்டும். மனிதர் பல பிரிவுகளாக வாழ்வது நல்லது; அது வாழ்க்கையின் இயல்பு. மக்கள் பல பிரிவுகளாக வாழ்வதை எவரும் தடுக்க முடியாது. உலகமெங்கும் எங்கு சென்ருலும் ஜாதிகளும் பிரிவுகளும்

இருக்கக் காண்போம். ஆனால் அதன் காரணமாக எவருக்கும் தனி உரிமை யிருக்க வேண்டிய அவசியமில்லை. இந்தத் தனி உரிமைகளை மண்டையிலடித்து ஒழிக்க வேண்டும். மீன் பிடிப்பவனுக்கு வேதாந்தம் கற்பித்தால், அவன் 'நீ எவ்வளவு நல்ல மனிதனோ அவ்வளவு நல்ல மனிதன் நானும். நான் மீன் பிடிப்பவனாயிருக்கலாம், நீ தத்துவ ஞானியாகவிருக்கலாம். ஆனால் உன்னுள்ளத்திலிருக்கும் கடவுள் என்னுள்ளத்திலும் இருக்கிறார்' என்றுரைப்பான். எவருக்கும் தனி உரிமையில்லை, எல்லோருக்கும் வாழ்க்கையில் முன்னேற ஒரேவிதமான சந்தர்ப்பங்கள்—இத்தகைய சமூகம்தான் நமக்கு வேண்டும். ஒவ்வொருவர் உள்ளத்திலும் தெய்விகத்தன்மை யிருக்கிறதென்பதை அவர்களுக்குக் கற்பியுங்கள். அதற்கு மேல் அவரவர்கள் தங்கள் முன்னேற்றத்திற்கு வழி தேடிக்கொள்ளுவார்கள்.

சுதந்திரமே மனித வளர்ச்சிக்கு மிகப் பிரதானமானது. 'இந்தக் குழந்தை அல்லது அந்தக் குழந்தைக்கு நான் விமோசனம் அளிப்பேன்' என்று யாராவது சொல்லத் துணிவார்களானால், அது தவறு, முற்றிலும் தவறு என்று நான் உரைப்பேன். விதவைகளின் பிரச்னையைப் பற்றியும், பொதுவாகப் பெண்களுடைய நிலையைப் பற்றியும் என்னை அடிக்கடி கேட்கிறார்கள். நான் என்ன, ஒரு விதவையா இவ்வசட்டுக் கேள்வியைக் கேட்பதற்கு? நான் ஒரு பெண்ணா? என்னை ஏன் இக்கேள்வி கேட்கிறீர்கள்? பெண்களின் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு நீங்கள் யார்? விதவைகள் மேலும் பெண்கள் மேலும் ஆட்சி செலுத்தும் கடவுளா நீங்கள்? விலகி நில்லுங்கள்! அவர்கள் தங்கள் பிரச்னைகளைத் தாங்களே தீர்த்துக் கொள்ளுவார்கள். என்ன மமதை! என்ன அஹங்காரம்! ஒருவருக்கு வேண்டிய அனைத்தும் நீங்கள் செய்ய முடியு

மென்று நினைப்பதற்கு! விலகி நில்லுங்கள்! ஆண்டவன் எல்லோரையும் பார்த்துக் கொள்வான். உங்களுக்கு எல்லாம் தெரியுமென்று நினைப்பதற்கு நீங்கள் யார்? ஏ மதியீனர்களே! கடவுளுக்கு மேல் உங்களுக்குத் தெரியுமென்று நினைப்பதற்கு உங்களுக்கு அவ்வளவு தைரியமா? ஏனெனில் ஒவ்வொரு ஜீவனும் அந்தப் பர மாத்மாவைச் சேர்ந்ததென்பது உங்களுக்குத் தெரியாதா? உங்கள் வேலையைப் பாருங்கள். உங்கள் கர்மங்களைத் தீர்த்துக் கொள்ளுங்கள். உங்கள் மக்கள் உங்களை உயர்ந்த பீடத்தில் வைத்துப் பெருமைப் படுத்தலாம்; உங்கள் சமூகம் உங்களைப் பாராட்டலாம்; மதியீனர்கள் உங்களைப் புகழலாம். ஆயினும் ஆண்டவன் என்றும் உறங்குவதில்லை. ஒவ்வொருவனும் இந்த ஜன்மத்திலோ அல்லது வேறு ஜன்மத்திலோ தன் கர்மத்தின் பயனை அனுபவித்தே தீருவான்.

ஒவ்வொரு ஆண் பெண் குழந்தையையும் கடவுளாகப் பாவியுங்கள். நீங்கள் எவரையும் மேம்படுத்த முடியாது. நீங்கள் சேவைதான் செய்ய முடியும். பகவானுடைய குழந்தைகளுக்குச் சேவை செய்யுங்கள். உங்களுக்கு அந்த பாக்கியமிருந்தால் அவர்களுக்கு சேவை செய்வதன் மூலம் ஆண்டவனுக்கும் சேவை செய்தவர்களாவீர்கள். அவனுடைய குழந்தைகளுக்கு உதவியாகவிருக்கிற அதிர்ஷ்டத்தை, ஆண்டவன் உங்களுக் களிப்பானுனல், அதன் மூலம் நீங்கள் அவன் அருள் பெற்றவர்களாவீர்கள். ஆனல் இதன் காரணமாக உங்களைப்பற்றி அதிகம் நினைத்துக்கொள்ள வேண்டாம். மற்றவர்களுக்கு இச் சந்தர்ப்பம் கிடைக்காமலிருக்க உங்களுக்கு இது கிடைத்தது, ஆண்டவனுடைய அருள் உங்கள் பாலிருப்பதற்கு அறிகுறி யென்பதை உணருங்கள். இச்சேவையே இறைவனின் வழிபாடெனப் பாவித்துச் செய்யுங்கள். என்

னுடைய நன்மைக்காகவே நான் வழிபடுகிறேன். அதேபோல் நம்முடைய நன்மைக்காகவே நாம் ஏழை மக்களிடம் கடவுளைக் கண்டு வழிபடவேண்டும். தங்கள் மூலம் சேவை செய்து பகவானை வழிபடுவதற்கு நமக்குச் சந்தர்ப்பம் அளிப்பதற்காகவே ஏழை மக்களும் தரித்திரர்களும் தோன்றியிருக்கிறார்கள் போலும்! அதற்காகவே பகவானும் நோயாளி, பயித்தியக்காரன், குஷ்டரோகி, பாவி முதலிய ரூபங்களில் தோன்றுகிறான் போலும்! என்னுடைய வார்த்தைகள் தைரியமானவை. அவைகளை மறுபடியும் சொல்லுகிறேன். இந்த ரூபங்களில் கடவுளைச் சேவிப்பதற்கு இவ்வாழ்க்கையில் நமக்குச் சந்தர்ப்பம் கிடைத்தால் அது எல்லாவற்றிலும் உயர்ந்த உரிமையாகும். மற்றவர்கள்மேல் அதிகாரம் செய்யும் எண்ணத்தை விட்டு விடுங்கள். மற்றவர்களுக்கு நீங்கள் நல்லது செய்யமுடியுமென்ற எண்ணத்தையும் விட்டு விடுங்கள். ஒரு செடிக்குச் செய்யக்கூடிய அளவுதான் நீங்கள் ஒருவருக்கு உபகாரம் செய்யலாம். ஒரு விதை வளருவதற்கு உதவியாக அதற்கு வேண்டிய மண், தண்ணீர், காற்று முதலியவற்றை நீங்கள் கொடுக்கலாம். ஆனால் அதற்கு வேண்டியதை அதன் இயல்பின் படி தான் அது ஏற்றுக்கொள்ள முடியும். தன் இயல்பின் படி அது இவைகளைக் கிரகித்து வளருகிறது.

ஒளி! ஞான ஒளியை உலகமெங்கும் பரப்புங்கள். எல்லோரும் இந்த ஞானச்சுடரைப் பெற்று விளங்கட்டும். எல்லோரும் கடவுளை அடையும் வரை இப்பணி முடிவடையாது. ஏழை மக்களுக்கு இவ்வொளியை அளியுங்கள். அதைவிட அதிகமாகப் பணக்காரர்களுக்குக் கொடுங்கள்; ஏனெனில் அவர்களது அகங்காரத்தின் காரணமாக அவர்களுக்கு இது ஏழைகளைவிட அதிகமாகத் தேவையாகவிருக்கிறது. கல்லாதவர்களுக்கு இவ்

வொளியை அளியுங்கள்; அவர்களைவிட அதிகமாகக் கற்றவர்களுக்குக் கொடுங்கள். ஏனெனில் அவர்களுக்குத் தற்காலப் படிப்பினால் உண்டாயிருக்கும் அகந்தை மிக அதிகமானது. இவ்விதம் ஞான ஒளியை எல்லோரிடமும் பரப்புங்கள்; அதற்குமேல் பலனை ஆண்டவனுக்கு அர்ப்பணமாக விட்டு விடுங்கள்; ஏனெனில் பகவான் கீதையில் சொல்லுகிறபடி 'உன் கடன் பணி செய்து கிடப்பதே', 'அதன் பலனைப் பற்றிக் கவலைப்படாதே'. 'வேலைகளின் பலனால் கட்டுப் படாதே; வேலை செய்யாமலும் இராதே'.

இத்தகைய மகத்தான கருத்துக்களை நம் முன்னோர்களுக்களித்த அந்த பகவான், அவைகளை வாழ்க்கையில் கொண்டு செலுத்த நமக்கு ஆற்றலும் சக்தியும் அளிப்பாராக!

---

# இந்தியப் பெரியோர்கள்

*(சென்னையில் பேசியது)*

இந்தியப் பெரியோர்களைப்பற்றிப் பேசும்போது என் மனம், சரித்திரம் புகமுடியாத, நமது புராணங்களுக்கும் எட்டாத, அந்த மிகப் பழங் காலத்திற்குச் செல்லுகிறது. இந்தியாவில் பிறந்த பெரியோர்கள் எண்ணிறந்தவர்கள். இந்தியா இப்பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக, பெரியோர்களையுண்டாக்குவதைத் தவிர வேறு என்ன காரியத்தைச் செய்துகொண்டிருந்திருக்கிறது? ஆதலால் இவர்களில், மிக ஒளி வாய்ந்தவர்களாயும், புதிய சகாப்தங்களுக்கு அடிகோலியவர்களாயும் இருக்கக்கூடிய சிலருடைய வாழ்க்கை வரலாறுகளைப்பற்றி, மாத்திரம்

எனக்குத் தெரிந்ததை உங்களுக்குச் சொல்ல முயற்சி செய்கிறேன்.

முதலில் நம் சாஸ்திரங்களைப்பற்றி நாம் கொஞ்சம் தெரிந்துகொள்ள வேண்டும். இரண்டுவிதமான உண்மைகள் நமது சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன; ஒன்று என்றும் அழியா, சாசுவதமான உண்மைகள். இரண்டாவது அந்தந்த கால, தேச, வர்த்தமானங்களுக்கேற்பச் சொல்லப்பட்டவை. சாசுவதமான உண்மைகளென்று கருதப்பட்டவை கடவுளைப்பற்றியும் ஆத்மாவைப்பற்றியும், அவை யிரண்டிற்குமிருக்கும் அழியாத சம்பந்தத்தைப்பற்றியும் சொல்லுகின்றன. இவை எழுதப்பட்டிருக்கும் நூல்களுக்கு சுருதிகள் அல்லது வேதங்கள் என்று பெயர். இரண்டாவது வகை உண்மைகள் மனு, யக்ஞவல்கியர் முதலியவர்கள் எழுதிய ஸ்மிருதிகளிலும் புராணங்களிலும் தந்திரங்களிலும் சொல்லப்படுகின்றன. இவை சுருதிகளுக்குக் கீழ்ப்பட்டவை. அதாவது இவைகள் சுருதி வாக்குக்கு முரண்பட்டால், அப்பொழுது சுருதியைத்தான் ஏற்றுக்கொள்ள வேண்டும். இதுதான் விதி. மனிதனுடைய லட்சியம், அதை அடையும் மார்க்கம் - இவைகளைப்பற்றிய அமைப்படையான உண்மைகள் சுருதியில் கொடுக்கப்பட்டிருக்கின்றன; ஸ்மிருதிகள் இவைகளை ஆதாரமாகக்கொண்டு மேற்கொண்டு விவரிக்கின்றனவென்பது கருத்து. பொதுவாக சுருதியே போதுமானது. ஆத்மீக வாழ்வு நடத்துவதற்கு அதற்குமேல் சொல்லவும் முடியாது, தெரியவும் முடியாது. அதில் விடப்பட்ட விவரங்களை அவ்வப்போது காலத்திற்கேற்ப ஸ்மிருதிகள் சொல்லி வந்தன. இச்சுருதித் தத்துவங்களை வெளியிட்ட பெரியோர்கள் பலர்; அவர்களில் பெண்மக்களும் சிலர் இருக்கிருர்கள். அவர்களுடைய பிறப்பு, காலம் முதலிய விவரங்களைப்பற்றி

நமக்கு அதிகம் தெரியாது. அவர்களால் கண்டுபிடிக்கப் பட்ட உன்னதமான உண்மைகள் மாத்திரம் வேதங் களின் புனித இலக்கியங்களில் காப்பாற்றப்பட்டிருக் கின்றன. ஸ்மிருதிகளை எழுதிய காலத்தில், மகத்தான, பெரிய உலகத்தையே அசைக்கக்கூடிய பெரியோர்கள் நம்முன் தோன்றுகிருர்கள். அவர்கள் தாங்கள் செய்த உபதேசங்களைவிட உயர்ந்த உண்மைகளைத் தங்கள் வாழ்க்கையில் அனுஷ்டித்தவர்களாகவும் பெரிய மகான் களாயிருப்பதாகவும் நாம் காண்கிறோம்.

நம் மதத்தில் ரூபக் கடவுள், அரூபக் கடவுள் என்ற இரு கருத்துக்களுக்கும் இடமிருக்கிறதென்ற விஷயத்தை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். நம் மதத்தில் எத்தனையோ அரூபத் தத்துவங்கள் உபதேசிக்கப்பட் டிருக்கின்றன. அவற்றுடன் கடவுள் எண்ணிறந்த ரூபங் களில் வணங்கப்படுவதும் உண்டு. ஆனல் நம்மதத்திற்கு அடிப்படையாக விருக்கும் சுருதிகளும் வேதங்களும், எந்த ஒரு தனி மனிதருடைய வாழ்க்கையையும் சார்ந்தன வல்ல. அவதார புருஷர்கள், தீர்க்கதரிசிகள் - இவர்களைப் பற்றி ஸ்மிருதிகளிலும் புராணங்களிலும்தான் சொல்லப் படுகிறது. நம் மதத்தைத்தவிர உலகிலுள்ள மற்றெல்லா மதங்களும் அவைகளை ஸ்தாபித்த தனி மனிதருடைய வாழ்க்கைகளைச் சார்ந்திருக்கின்றனவென்பதை இந்த சந்தர்ப்பத்தில் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கிருஸ்துவ மதம், முகம்மதிய மதம், புத்தமதம், ஜைன மதம்—இவை முறையே ஏசு கிருஸ்து, முகம்மது நபி, கௌதம புத்தர், வர்த்தமான மகாவீரர்—இவர்களுடைய வாழ்க்கைச் சரித்திரங்களை அடிப்படையாகக்கொண்டு உண்டாகி யிருக்கின்றன. எனவே இம்மதங்களில் அவர்கள் வாழ்க்கைச் சரித்திரங்களில் சொல்லப்பட் டிருக்கிற விஷயங்கள் எவ்வளவு தூரம் உண்மையென்

பதைப்பற்றி பலத்த விவாதங்களிருக்கின்றன. பழங் காலத்தில் தோன்றின இவர்கள் வாழ்க்கை விபரங்களைப் பற்றி ஏதாவது சந்தேகம் உண்டாகுமானால், அவர்கள் ஸ்தாபனம் செய்த மதங்களாகிய கட்டிடங்களும் உடைந்துவிழத் தக்கனவாக விருக்கின்றன. நம் மதம் தனி நபர்களின் வாழ்க்கைகளை அடிப்படையாகக் கொள்ளாமலிருப்பதால், நமக்கு இக்கதி நேரவில்லை. நாம் நம் மதத்தைப் பின்பற்றுவது, ஒரு தீர்க்கதரிசி அல்லது அவதார புருஷர் அவ்விதம் சொன்னார் என்ற காரணத்திற்காகவல்ல. கிருஷ்ணன் காரணமாக நாம் வேதத்தை நம்புவதில்லை. வேதத்தின் காரணமாகக் கிருஷ்ணனை நம்புகிறோம். வேத வாக்குக்கு ஒப்பற்ற உதாரணமாக விருந்தான் என்பதுதான் கிருஷ்ணனுடைய பெருமை. இங்ஙனமேதான் மற்ற பெரியோர்களும் அவதார புருஷர்களும் போற்றப்படுகிறார்கள். மனிதன் பூரணத்துவத்தையும் மோட்சத்தையும் அடைவதற்கு அவசியமான அனைத்தும் நம் வேதங்களில் இருக்கின்றனவென்பது நமது நம்பிக்கை. அதற்குமேல் புதிதாக ஒன்றும் கண்டுபிடிக்க முடியாது. பூரண ஐக்கியம், ஏகத்வத்திற்குமேல் வேறு என்ன இருக்கமுடியும்? அதுதான் எல்லா ஞானத்தின் லட்சியமு மாகும். அவ்வைக்கியத்தை அடைந்தாய் விட்டது; இதற்குமேல் செல்லமுடியாது. 'தத்வம் அஸி' என்ற தத்துவத்தைக் கண்டுபிடித்தபோது ஆத்மீக ஞானம் பரிபூரணமடைந்து விட்டது. அது வேதத்திலிருக்கிறது. அதற்குமேல் செய்யவேண்டியதெல்லாம், அவ்வப்போது காலதேச வர்த்தமானங்களை அனுசரித்து, மக்களுக்கு இப்பழைய உண்மைகளை எடுத்துரைக்க வேண்டியதுதான்; இப்பணியை ஆற்றுவதற்காகவே பல பெரியோர்களும் ஆசார்ய புருஷர்களும் தோன்றினார்கள். "எப்பொழுது எப்பொழுது தர்மம் குன்றி அதர்மம் மேல்படுகின்றதோ

அப்பொழுதெல்லாம் அதர்மத்தை அழிப்பதற்கும், தர்மத்தைக் காப்பாற்றுவதற்கும், நான் பிறப்பெடுக்கிறேன்" என்று ஸ்ரீ கிருஷ்ணர் கீதையில் அருளியது இதை மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

இதிலிருந்து என்ன ஏற்படுகிறது? முதலாவதாக இந் நித்திய தத்துவங்கள் எவர்களுடைய தர்க்கம் அல்லது அதிகாரத்தையும் சாராமல், தங்களேயே அஸ்திவாரமாகக் கொண்டிருக்கின்றனவென்று ஏற்படுகிறது. இந்த ஒப்பற்ற தன்மை இந்து மதத்திற்கு மாத்திரம்தான் உண்டு. அது ஒன்றுதான் தனி மனிதர்களேவிட்டு, தத்துவங்களே மாத்திரம் போதிக்கிறது. எனவே, வேதாந்தம் ஒன்றுதான் உலகிற்குப் பொது மதமாக விருக்கமுடியும்; இப்பொழுதும் பொது மதமாக இருந்துகொண்டிருக்கிறதென்று நாம் சொல்லுகிறோம். ஒரு மனிதருடைய வாழ்க்கையின்பேரில் கட்டப்பட்ட எந்த மதமும் உலக முழுதும் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளத் தகுந்ததாக விருக்க முடியாது. நம் தேசத்தில் பல பெரியோர்கள் தோன்றியிருப்பதைப் பார்க்கிறோம். ஒரு சிறு ஊரில்கூட பலவிதமான மனிதர்கள் பலவிதமான லட்சியங்களேப் பின்பற்றுவதைக் காண்கிறோம். அப்படியிருக்க புத்தர், முகம்மது அல்லது கிறிஸ்துபோன்ற ஒரு மனிதரையே உலக முழுதும் பின்பற்றுவதெங்ஙனம் இயலும்? தவிர உலகிலுள்ள எல்லா ஒழுக்க முறைகளும், நீதிநெறிகளும், ஆத்மீக உணர்ச்சிகளும், மத சம்பிரதாயங்களும் அவ்வொருவருடைய அதிகாரத்தின் மூலமாகவே உண்மையாக ஒப்புக்கொள்ளப்பட வேண்டுமென்பது எங்ஙனம் சாத்தியமாகும்? வேதாந்தத்திற்கு எம் மனிதனுடைய அதிகாரமும் தேவையில்லே. மனிதனுடைய சாசுவதமான தன்மையை அது அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. அதன் நீதிநெறி மனித ஆத்மா அனேத்தும் ஒன்று

என்ற அழியாத் தத்துவத்தை அஸ்திவாரமாகக் கொண்டிருக்கிறது.

இரண்டாவதாக, பெரும்பான்மையான மக்களுக்குத் தங்கள் வழிபாட்டை நடத்துவதற்கு மனித சொரூபம் அவசியமென்பதை நம் பெரியோர்கள் மிகப் பழங்காலத்திலிருந்தே உணர்ந்தார்கள். ஏதாவது ஒரு மனித ரூபத்தில் அவர்களுக்குக் கடவுள் வேண்டும். புத்தபகவான், கடவுள் ரூபம் உடையவரல்லவென்று உபதேசித்தார். ஆனால் அவர் மறைந்து ஐம்பது ஆண்டுகளுக்குள் அவருடைய சிஷ்யர்கள் அவரையே ரூபக் கடவுளாக வணங்க ஆரம்பித்து விட்டார்கள். எனவே ரூபக்கடவுள் அவசியம். இது சம்பந்தமாய் இன்னொரு விஷயமும் நமக்குத் தெரியும். மனிதன் தன் சொந்தக் கற்பனையால் உண்டாக்கக் கூடிய தெய்வ உருவங்களைவிட, நடமாடும் தெய்வங்களாய் நம் மத்தியிலிருக்கும் பெரியோர்களின் வாழ்க்கைகள் சிறப்பாகவும் போற்றத் தகுந்தவனவாகவும் இருப்பதைக் காண்கிறோம். இப்படிப்பட்டவர்கள் சில நூற்றாண்டுகளுக் கொருதரம் நம்முன் தோன்றுகிறார்கள். நம் மனதில் கற்பனை செய்யக்கூடிய தெய்வங்களைவிட இவர்கள் வழிபடத் தகுந்தவர்கள். நானும் நீங்களும் நமது கற்பனையால் உண்டாக்கக்கூடிய எந்தத் தெய்வத்தைக் காட்டிலும் ஸ்ரீ கிருஷ்ணன் உயர்ந்தவர். நம் மனத்தில் நினைக்கக்கூடிய எந்த லட்சியத்தைக் காட்டிலும் புத்தர் அதிக உயர்வும் உயிர்ச் சக்தியும் உடையவர். எனவே நாம் கற்பனை செய்யக்கூடிய தெய்வங்களைக் காட்டிலும் இவர்களே வழிபடத் தகுந்தவர்கள். இதை நமது பெரியோர்கள் உணர்ந்திருந்தார்கள். எனவே இத்தகைய அவதார புருஷர்களைத் தெய்வமாக வழிபடுவதற்கு அவர்கள் அனுமதி யளித்தார்கள். இவ்வவதார புருஷர்கள் அனைவரிலும் உயர்ந்தவரான ஸ்ரீ கிருஷ்ணன்

இதற்குமேலும் ஒரு படி செல்லுகிறார். 'எங்கெங்கு மனிதனால் அபூர்வமான ஆத்மீக சக்தி வெளியிடப்படு கிறதோ, அங்கெல்லாம் நான் இருக்கிறேன் என்பதை உணர். என்னிடமிருந்துதான் அச்சக்தி தோன்றுகிறது' என்று அவர் கீதையில் அருளியிருக்கிறார். உலகிலுள்ள எல்லா தேசங்களிலும் தோன்றியிருக்கும் அவதார புருஷர்களை வழிபடும் உரிமையும் இதன் மூலம் இந்துக் களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்துவாக விருப் பவன் எந்த தேசத்திலுமிருக்கும் எந்த ஞானி அல்லது முனிவரையும் வணங்கலாம். நடைமுறையில் நாம் பல சமயங்களில் கிருஸ்தவர் கோவில்களுக்கும் முகம்மதியர் மசூதிகளுக்கும் போய் வணங்கி வருகிறோம். இது நல்லது. நாம் முன் சொன்னபடி நம்முடைய மதம் எல்லோரையும் தழுவியது. அது எல்லாவிதமான லட்சியங்களையும் தன்னுள் உடையதாக, பரந்த நோக்கத்துடனிருக்கிறது. இதுவரை உலகில் தோன்றியிருக்கும் மத லட்சியங்கள் அனைத்தையும் அது ஏற்றுக்கொள்ள முடியும். இனிமேல் வரக்கூடிய லட்சியங்கள் அனைத்தையும் தன்னுடைய பரந்த இருதயத்தில் ஏற்றுக்கொள்ளவும் வேதாந்தம் தயாராக விருக்கிறது.

இம்மகத்தான பெரியோர்கள், அதாவது அவதார புருஷர்களுக்கு, அடுத்தபடியில் ரிஷிகள் இருக்கிறார்கள். ரிஷியென்ற பெயர் அடிக்கடி வேதங்களில் வருகிறது. ரிஷிகள் ஆத்மீக விஷயங்களில் மிகுந்த அதிகாரம் பெற் றவர்கள். இதன் கருத்தை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். ரிஷிகள் என்பவர்கள் மந்திர திருஷ்டர்கள்—அதாவது ஆத்மாவைக் கண்டு அனுபவித்தவர்கள். ஆத்மா உண்டென்பதற்கு சாட்சியம் என்ன என்று மிகப் பழங் காலத்திலேயே கேட்கப்பட்டது. புலன்களின் மூலம் அதை நுகரமுடியாதென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह'
'எதை வார்த்தைகளும் எண்ணங்களும் எட்டமுடியாதோ
'न तत्र चक्षुर्गच्छति न वाक् गच्छति नो मनो'

அது கண்களுக்கும், வாக்குக்கும், மனத்திற்கும் எட்டாத'தென்று நெடுங்காலமாகச் சொல்லப்பட்டு வருகிறது. ஆத்மா, கடவுள், மனித வாழ்க்கையின் லட்சிய மான அந்த நித்திய வாழ்க்கை—இவைகளைப்பற்றி வெளி இயற்கை நமக்கு யாதொன்றும் தெரிவிக்க முடியாது. மனது சதா மாறிக்கொண்டிருப்பது; ஓர் எல்லைக்குட் பட்டது. அப்படியிருக்கும் இயற்கை எல்லையற்ற, என்றும் மாருத, நித்தியமான பரம்பொருளைப்பற்றி எவ்விதம் அறியமுடியும்? அது அசாத்தியம். அப்படி யானல் வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிற ஞானம் எங் கிருந்து வருகிறது? இந்த ஞானத்தை ரிஷிகள் அனுப வித்து அறிந்திருக்கிருர்கள். இந்த ஞானம் நமது புலன் களில் இல்லை. ஆனல் புலன்கள்தானு மனிதனுடைய அனைத்தும்? மனிதனுடைய லட்சியமனைத்தும் புலன்களி லிருக்கின்றதென்று சொல்ல யாருக்குத் தைரியமுண்டு? நம் அனைவருடைய வாழ்க்கையிலும் சிற்சில சமயங் களில்—நாம் மிகவும் நேசிக்கும் ஒருவர் இறக்கும் போது அல்லது வேறு வருத்தம் திடீரென்று உண்டாகும் போது, அல்லது உயர்ந்ததொரு இன்பம் அனுபவிக்கும் போது—நம் மனதில் ஆழ்ந்த சாந்தம் உண்டாகி, அச்சம யங்களில் நமது உண்மைத்தன்மையையும், நம் புலன்களுக் கப்பால், நம் வாக்குக்கும் மனதிற்கும் அப்பாலிருக்கும் அப்பரம்பொருளின் உணர்ச்சியையும் உணரக்கூடிய சந்தர்ப்பங்கள் கிடைக்கின்றன. வாழ்க்கையில் சில சம யங்களில் மட்டும் தோன்றக்கூடிய இந்த உணர்ச்சியை நாம் சாதனையின்மூலம் பண்படுத்திப் பூரணமாக்க

வேண்டும். ஆத்மா புலன்களால் அல்லது பிரக்ஞை யாலும் கூடக் கட்டுப்படுத்தப்பட்ட தல்லவென்பதைப் பல்லாயிரக் கணக்கான, வருஷங்களுக்கு முன்னரே மனிதன் கண்டுபிடித்தான். பிரக்ஞை என்பது வாழ்க்கை யின் வரையற்ற சங்கிலியில் ஒரு கொக்கிதானென் பதை நாம் உணரவேண்டும். உயிர்வாழ்வும் பிரக்ஞை யும் ஒன்றல்ல; பிரக்ஞை வாழ்க்கையில் ஒரு பகுதி. பிரக் ஞைக்கு அப்பால்தான் ஆத்மீக வீரர்கள் ஆராய்ச்சி செய் கிறார்கள். பிரக்ஞை புலன்களால் கட்டுப்படுத்தப் படுகிறது. பிரக்ஞையையும் புலன்களையும் கடந்து சென்று ஆத்மீக உண்மைகளை அறியவேண்டும். இங்ஙனம் புலன்களைக் கடந்து சென்று ஆத்மீக உண்மைகளை அறிபவர்கள் இன் னும் இருக்கிறார்கள். அவர்களுக்குத்தான் ரிஷிகள் என்று பெயர்.. ஏனெனில் அவர்கள்தான் ஆத்மீக உண்மைகளை நேருக்கு நேராகப் பார்க்கிறார்கள்.

ஆதலால் வேதங்களில் கூறப்பட்டிருக்கும் உண்மை களுக்குச் சாட்சியம் பிரத்தியட்ச அனுபவம்தான். என் முன்னிருக்கும் இம்மேஜையைக் காண்பதுபோல் அவை களையும் காணலாம். மேஜையைப் புலன்களால் அறிகி றோம். ஆத்மீக உண்மைகளைப் புலன்களுக்கும் பிரக்ஞைக் கும் மேம்பட்ட ஒரு நிலையில் காண்கிறோம். இந் நிலையை அடைந்தவர்கள் ரிஷிகளெனக் கருதப்படுகிறார் கள். ரிஷித்துவம் - ரிஷிகளாகும் அந்நிலை – ஒரு சிறு கூட்டத்தாருக்கு மாத்திரம் உரியதல்ல. எல்லாக் காலத் திலும், எல்லா இடங்களிலும், எல்லா மக்களும், ஆண் பெண் வேறுபாடின்றி ரிஷிகளாகலாம். ஞானிகளாயிருப் பவர்களின் சந்ததியில் பிறந்தவர்கள், அல்லாதவர்கள், ஆரியர்கள், ஆரியரல்லாதவர்கள், மிலேச்சர்கள் முதலிய அனைவருக்கும் ரிஷிகளாக உரிமையுண்டு என்று வத்சா யனர் பகிரங்கமாக உரைத்திருக்கிறார். வேதங்களில்

சொல்லப்பட்டுருக்கிற ஞானிகளின் நிலையென்பது இது தான். இதை நாமும் இதர நாட்டினரும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டோமானல், மதத்தின்பேரில் நடக்கும் சண்டை சச்சரவுகள் குறையும். மதம் என்பது புத்தகங் களிலோ, கொள்கைகளிலோ, ஆசாரங்களிலோ, அல்லது பேச்சிலோ, தர்க்கத்திலோ இல்லை. அனுபூதியே ஆத்மீக வாழ்க்கையின் அடிப்படையாகும். என் சிநேகிதர்களே! நீங்கள் ஒவ்வொருவரும் ரிஷிகளாகி, ஆத்மீக உண்மை களை நேருக்கு நேர் உணரும்வரை, உங்களுக்கு மத வாழ்க்கை ஆரம்பிக்கவில்லை. புலன்களுக்கு மீறிய உணர்ச்சியைப் பெறுகிறவரையில் மத வாழ்க்கை உங்க ளுக்குப் பேச்சளவில்தானிருக்கும். புத்தகங்கள் கொள் கைகள் முதலியன அந்நிலையைப் பெறுவதற்கு உதவி செய்யலாம். ஆனல் அனுபூதி பெறுகிறவரையில் உங்கள் பேச்சுக்கு அதிகாரமும் மதிப்பு மிரா. புத்தபகவான் சில பிராம்மணர்களுடன் பேசிக்கொண்டிருந்த சம்பாஷணை யொன்று இங்கு சொன்னல் பொருத்தமாயிருக்கும். அந்தப் பிராம்மணர்கள் கடவுளுடைய குணங்களைப் பற்றி விவாதித்துக்கொண்டு அவரிடம் வந்தார்கள். அப் பொழுது புத்தபகவான் அவர்களில் ஒருவனைப் பார்த்து, 'நீ கடவுளைப் பார்த்திருக்கிருயா?' என்று கேட்டார். அதற்கு அப்பிராம்மணன் 'இல்லை' யென்ருன். 'உன் தகப்பனர் பார்த்திருக்கிருரா?' என்ருர். 'இல்லை' என்ருன். 'உன் பாட்டனர் பார்த்திருக்கிருரா?' என்ருர். அதற்கும் 'இல்லை' என்ருன் பிராம்மணன். அதற்குமேல் புத்த பகவான் 'நீயோ, உன் தகப்பனரோ அல்லது உன் பாட்ட னரோ பார்த்திராத ஒருவரைப்பற்றிப் பேசி நீங்கள் ஏன் ஒருவருக்கொருவர் மண்டையை உடைத்துக்கொள்ளு கிறீர்கள்?' என்ருர். அதைத்தான் உலகம் செய்துகொண் டிருக்கிறது. 'இந்த ஆத்மாவை வெறும் பேச்சினலோ

அல்லது புத்தி நுட்பத்தினுலோ, அல்லது வெறும் வேதங்களைப் படிப்பதனுலோ அறியமுடியாது' என்று வேதம் உரைக்கிறது. இந்த வேத வாக்கை நாம் உலகிற்கு எடுத்துரைப்போம். உங்கள் சண்டை சச்சரவுகள் அனைத்தும் வீண். நீங்கள் பிரசாரம் செய்யும் கடவுளை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? நீங்கள் பார்த்திராவிடில், உங்கள் பிரசாரம் பயனற்றது. நீங்கள் எதைப்பற்றி மற்றவர்களுக்கு உரைக்கிறீர்களோ, அது உங்களுக்கே தெரியாது. கடவுளைக் கண்டிருந்தால் நீங்கள் சண்டை போடமாட்டீர்கள். அப்பொழுது உங்கள் முகமே பிரகாசிக்கும்.

உபநிடதங்களில் ஒரு கதை சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு முனிவர் தம் புதல்வனைப் பிரம்மனைப்பற்றி அறிவதற்காக அனுப்பி யிருந்தார். அவன் திரும்பிவந்த போது, நீ என்ன படித்திருக்கிருயென்று கேட்டார். அவன் பல சாஸ்திரங்களைப் படித்திருப்பதாகப் பதில் சொன்னுன். 'நீ இன்னும் படிக்கவேண்டி யிருக்கிறது, படித்துவா' வென்று அவனைத் திருப்பி அனுப்பி விட்டார். அவன் மறுபடியும் வந்தபோது, அதே கேள்வியைத் தந்தை சிலகாலம் பொறுத்து மீண்டும் கேட்டார். அதேமாதிரி பதிலே அவனும் சொல்ல, மறுபடியும் அவனைத் திருப்பி யனுப்பிவிட்டார். அடுத்த தடவை பையன் திரும்பியபோது பையன் முகத்தில் ஒளி வீசிக் கொண்டிருந்தது. 'ஏ பிள்ளாய்? உன் முகத்தில் பிரம்மனை அடைந்தவனுடைய ஒளி வீசுகின்ற' தென்று தந்தை உரைத்தாராம். கடவுளை நீங்கள் அடைந்தால் உங்கள் முகம், வாக்கு, தோற்றம் அனைத்தும் ஒரு புதிய மாறுதலடையும். அப்பொழுது உங்கள் ஜீவியமே மனித வர்க்கத்திற்குப் பெரும் ஆசியாக விருக்கும். ஒரு ரிஷியை எவரும் எதிர்க்கமுடியாது. இந்த ரிஷித்துவம்தான் நமது

மதத்தின் லட்சியம். பேச்சு, தர்க்கம், துவைதம், அத்துவைதம் முதலிய தத்துவங்கள் மட்டுமன்றி வேதங்கள் கூட அதற்குக் கீழ்ப்பட்டவைதான். இவை அந்நிலையை அடைய உதவியாக யிருக்கலாம். ஆனால் அதுதான் முக்கியமானது. வேத வியாகரணமெல்லாம் அவ்வளவு முக்கியமல்ல. அந்த ஒப்பற்ற அழிவற்ற ஒருவனை உணரும் ஞானம்தான் அனைத்திலும் உயர்ந்தது. இந்த ஞானத்தை அடைந்தவர்கள் ரிஷிகள். எனவே ரிஷித்துவம் என்பது ஒரு நிலை ; ரிஷிகள் அதை அடைந்தவர்கள். நாம் அனைவரும் ஒரு காலத்தில் இந் நிலையை அடைவோமென்று இந்து மதம் போதிக்கிறது. இதுதான் இந்துக்களின் லட்சியம். சில கொள்கைகளை நம்புவது, கோயில்களுக்குச் செல்வது, தீர்த்தங்களில் குளிப்பது - இவையல்ல நமது லட்சியங்கள். ரிஷித்துவத்தையடைந்து விடுதலை பெறுவதே நமது வாழ்க்கையின் நோக்கமாகும்.

இன்னும், பிற்காலத்தில் உலகிலே மகத்தான காரியங்களைச் செய்திருக்கும் பல பெரியோர்களையும் அவதார புருஷர்களையும் காண்கிறோம். பாகவதத்தின்படி அவர்கள் தொகை கணக்கற்றது. அவர்களில் இந்தியாவில் அதிகமாகப் போற்றப்படுகிறவர்கள் ராமனும், கிருஷ்ணனும் ஆவர். ராமன், முற்காலத்து வீரம் நிறைந்த மக்களுக்கு லட்சியமாய், உண்மைக்கும் ஒழுக்கத்திற்கும் உறைவிடமாய், ஒரு லட்சியமான புத்திரனையும், கணவனையும், அரசனையும் திகழ்வதை நாம் ராமாயணத்தில் காண்கிறோம். மிகத் தெளிவாகவும், சுத்தமாகவும், அழகாகவும், எளிமையாகவும் உள்ள பாஷையில் ராமனுடைய சரித்திரம் அப் பெரிய காவியத்தில் எழுதப்பட்டிருக்கிறது. சீதையைப் பற்றி என்ன சொல்வது? சீதை போன்ற இன்னுமொரு பெண்மணியை இதுவரை தோன்றியிருக்கும் உலக இலக்கியங்களில் ஒன்றிலும் காணமுடியாது. இனிமேலும்

காண்பதரிது. சீதை ஒப்பற்றவள். இதுவரை பல ராமர்கள் தோன்றியிருக்கலாம்; ஆனால் ஒரு சீதைக்குமேல் உலகில் தோன்றியதில்லை. அவளே இந்திய மாதர்களின் லட்சியமாய் விளங்குகிறாள். இந்திய மாதர்களிடமிருக்கும் நற்குணங்கள் அனைத்தும் அவளிடமிருந்தே பிறந்திருக்கின்றனவென்று தோன்றுகிறது. இந்தப் பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக இந்தியா முழுவதிலுமுள்ள எல்லா ஆண் பெண் குழந்தைகளுடைய வழிபாட்டையும் பெற்று அவள் வாழ்ந்து வந்திருக்கிறாள். அவள் தூய்மையைவிடத் தூய்மையானவள். அவளே பொறுமைக்கும் சகிப்புத்தன்மைக்கும் இருப்பிடம். அவள் கற்புக்கு அணிகலமாய், எல்லாக் கஷ்டங்களையும் சலிப்பின்றிச் சகித்தாள். இத்தகைய அவள், மனிதர்களுக்கும், தேவர்களுக்கும் தெய்வமாய், நம்முடைய தேசீய லட்சியமாய் எப்பொழுதும் இருந்து வருவாள். சீதையைப்பற்றி அறியாத எவரும் இருக்கமாட்டார்கள். எனவே இன்னும் அதிகம் சொல்லவேண்டிய அவசியமில்லை. நமது புராணங்கள், வேதங்கள், சமஸ்கிருத பாஷை முதலிய அனைத்தும் மறையலாம்; ஆனால் ஐந்து இந்துக்களிருந்தாலும் சீதையின் சரித்திரம் மறையாமலிருக்கும். சீதை நமது லட்சியமாய் நமது ரத்தத்தில் கலந்திருக்கிறாள்.

நாம் அனைவரும் சீதையின் குழந்தைகள். சீதையின் லட்சியத்தைவிட்டு நம் பெண்களின்மேல் தற்கால நாகரிகத்தைப் புகுத்தப் பிரயத்தனம் செய்தால், அது வியர்த்தமாகுமென்பதை நாம் அனுதினமும் காண்கிறோம். இந்திய மாதர்கள் சீதையின் அடிச்சுவடிகளையே பின்பற்றி வாழவேண்டும்.

ராமருக்குப் பிறகு, ஆண் பெண் குழந்தைகள் முதலிய அனைவராலும் பல்வேறு விதங்களில் மிகுந்த அன்புடன் போற்றப்படும் கிருஷ்ணன் தோன்றுகிறார்.

'மற்ற அவதார புருஷர்கள் பகவானுடைய சில அம்சங் களின் தோற்றங்கள். ஆனல் ஸ்ரீ கிருஷ்ணர் பகவானே அவதாரமாகி வந்தவர்' என்று பாகவதத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. அவருடைய வாழ்க்கையின் பலதிறப் பட்ட அம்சங்களேப் பார்த்தால், இவ்விதம் சொல்லியது ஆச்சரியமல்ல. அவர் முற்றத்துறந்த துறவியாக விருந் தார்; அதே சமயத்தில் அதி ஆச்சரியமான கிரகஸ்தரா கவும் இருந்தார். அவரிடம் ரஜோ குணத்தால் உண்டாக் கப்பெற்ற சக்தி அளவற்றிருந்தது, அத்துடன் பரம சாத்வீகம் பொருந்திய தியாகத்தின் மத்தியில் வாழ்ந்து வந்தார். நீங்கள் கீதையைப் புரிந்துகொள்ளாத வரை கிருஷ்ணனே அறிந்துகொள்ள முடியாது. அவர் தம் முடைய உபதேசங்களின் உயிர் பெற்ற உருவமாக விருந் தார். எல்லா அவதார புருஷர்களும் தாங்கள் உபதேசிக்க வந்த தத்துவங்களுக்கு லட்சியமாக விருந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ணரும் தாம் உபதேசித்த கீதையின் லட்சியமாய் விளங்கினர். பற்றின்றி வாழ்தல் என்ற கீதையின் முக்கிய உபதேசத்திற்கேற்ப அவர் வாழ்ந்து வந்தார். அவர் தம் ராஜ்யத்தையும் பொருட்படுத்தாது விட்டு விடுகிறர். அரசர்கள் அனைவரும் அவரை வந்து வணங்கி னர்கள். ஆனல் அவர் அரசராக விருக்க விரும்பவில்லே. கள்ளங் கபடற்ற சுபாவத்துடன் கோபிகளுடன் விளே யாடுகிறர்.

அவருடைய அதி ஆச்சரியமான அந்த பிருந்தவான லீலேகளே அர்த்தம் செய்துகொள்ளுவது மிகக் கடினம். ஒருவன் மிக உயர்ந்த, தூய்மையான தன்மையைப் பெற்ருலொழிய, அதைச் சரியாகத் தெரிந்துகொள்ள முடியாது. மிகப் புனிதமான அன்பைப் பருகித் திளேத்த வர்கள்தான் அந்த அதி அற்புதமான அன்புக் கதையை அறிந்துகொள்ள முடியும். எதையும் வேண்டாத, சுவர்க்

கத்தையும் விரும்பாத, உலகப்பொருள்கள் அனைத்தையும், அத்துடன் மறுமையையும் நினைக்காத, அந்த கோபிகளின் உன்னதமான பேரன்பின் தன்மையை யாரே உணர வல்லார்! என் சிநேகிதர்களே! இக் கோபிகளுடைய அற்புதமான அன்பின் மூலம் ரூபக் கடவுள் அரூபக் கடவுள் என்ற பிரச்னை தீருவதைக் காண்பீர்கள். மனித வாழ்க்கையின் உயர்ந்த லட்சியம் அரூபக் கடவுள் என்பதை நாம் உணர்வோம். எல்லாவற்றிலும் உயிர்க் குயிராய் நின்றிலங்கும் அரூபக் கடவுளே தத்துவ விசாரத்தின் முடிவென்பதையும் நாம் அறிவோம். எனினும், நாம் வழிபாடு செய்வதற்கும் பக்தி செய்வ தற்கும், நம் மனது கிரகிக்கக்கூடிய ஒரு வடிவத்தை நாடுகிறது. எனவே ரூபக் கடவுள்தான் மனிதன் நினைவுக்கு எட்டக்கூடிய உயர்ந்த லட்சியமாயிருக்கிறது. எனினும் புத்தியும் தர்க்க ஞானமும் அதற்கு விரோதமா யிருக்கின்றன. பிரம்மசூத்திரங்களில் கேட்கப்பட்டிருக் கும் அப் பழைய கேள்வி மறுபடியும் கிளம்புகிறது. திரௌபதி யுதிஷ்டிரரிடம் கேட்கிறாள்: 'சர்வ சக்தி வாய்ந்த ரூபக் கடவுள் ஒருவர் இருந்தால், நரகம் போன்ற இந்த உலகம் ஏன் சிருஷ்டி செய்யப்பட்டது? இது அவர் சிருஷ்டியாக விருப்பின், அவர் பாரபட்சமுடையவரா கத்தானே இருக்கவேண்டும்?' ஆதலால் ரூபக் கடவுள் என்ற கருத்து அறிவால் ஒப்புக்கொள்ளக்கூடியதாக வில்லை. அரூபக் கடவுளை கிரகிக்க முடிவதில்லை. கடவுள் ரூபத்துடன் கூடியவரா அல்லது அரூபமானவரா வென்ற இப் பிரச்னையை கோபிகளுடைய ஒப்பற்ற அன்பின் மூலம்தான் தீர்க்க முடியும்.

அவர்கள் கிருஷ்ணனுடைய புகழைக் கேட்க விரும்ப வில்லை. அவர் சகலத்தையும் சிருஷ்டி செய்தவர், சகல சக்தியும் வாய்ந்தவர், எதையும் சாதிக்க வல்லவர்

என்றெல்லாம் அவர்கள் உணர விரும்பவில்லை. அவர்கள் அறிந்த ஒரே விஷயம் அவர் எல்லையற்ற கருணைக்கடல் என்பதுதான். தங்களுடன் பிருந்தாவனத்திலிருந்த இளம் கிருஷ்ணனைத்தான் அவர்கள் போற்றிவந்தார்கள். அனைவருக்கும் தலைவனாய், அரசர்க்கு அரசனாய், அமர்ந் திருந்த அவர், அவர்களுக்கு என்றும் கோவலர் பாலக னாகவே இருந்தார். 'உற்றாரை யான் வேண்டேன், ஊர் வேண்டேன், பேர்வேண்டேன், கல்வியும் செல்வ மும் யான் வேண்டேன், சுவர்க்கமும் சுகமும் எனக்கு வேண்டாம். ஏ பகவானே! உன்னைப் பக்தி செய்து தொழுவதற்காக அந்த அன்பை அனுபவிப்பதற்காக, கணக்கற்ற நற் பிறவிகளை எனக்கு அளிப்பாயாக' என்று அவர்கள் பிரார்த்தனை செய்தார்கள். வேறு ஒரு நோக்கமும் இல்லாமல், அன்பு செய்வதற்காகவே அன்பு, பணியாற்றுவதற்காகவே பணி, சேவை செய்வதற் காகவே கடமை, என்ற கருத்து மனிதனுடைய மத வாழ்க் கையின் சரித்திரத்திலேயே ஓர் உன்னதமான இடத்தைக் குறிக்கின்றது. இது உலக சரித்திரத்தில் முதல் தடவையாக, எல்லா அவதார புருஷர்களிலும் மேம்பட் டவரான ஸ்ரீ கிருஷ்ணருடைய திருவாயிலிருந்து, இந்திய மண்ணிடையே பிறந்தது. அத்துடன் பயத்திற்காகவும் பொருட்களை இச்சித்தும் கடவுளைத் தொழுத காலம் ஒழிந்தது. அதற்குப் பதிலாக, அன்பு செய்வதற்காகவே அன்பு, பணியாற்றுவதற்காகவே பணி, சேவை செய்வ தற்காகவே கடமை என்ற அதி உன்னதமான கருத்துத் தோன்றிற்று.

அந்த அன்புதான் எத்தகையது! அவர்கள் அன்பின் தன்மையைத் தெரிந்துகொள்வது மிகக் கடினம் என்று முன்னமேயே சொல்லியிருக்கிறேன். இந்த அதி அற்புத மான அன்பைத் தப்பர்த்தம் செய்யும் மூடர்கள்

நம்மிடமும் இல்லாமலில்லை. இதைக் கேவலமாக நினைக்கும் இழிந்த அறிவினர் நம் ரத்தத்தில் பிறந்தவர்களுள்ளும் சிலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு நான் ஒன்றுதான் சொல்ல விரும்புகிறேன். முதலில் நீங்கள் உங்கள் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக்கொள்ளுங்கள். கோபிகளுடைய அன்பை வருணிக்கும் சரித்திராசிரியர் பிறவியிலேயே மிகப் புனிதமான சுகதேவர் என்பதையும் நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். மனிதன் மனத்தில் சுயநலம் இருக்கும்வரை, கடவுளை உண்மையாக நேசிப்பது அசாத்தியம். அத்தகையவர்களின் அன்பு வெறும் வியாபாரமே யொழிய வேறல்ல. பகவானே! நான் உனக்கு ஒன்று தருகிறேன், அதற்குப் பதிலாக நீ வேறொன்று தா' என்று உரைக்கின்றது அவர்கள் அன்பு. 'நீ வழிபடாவிடில், நீ நரகத்திற்குப் போவாய் அல்லது வேறு விதமாகக் கஷ்டப்படுவாய்' என்று தெய்வம் உரைப்பதாக நம் சிலர் பயத்தின் காரணமாகத் தெய்வ வழிபாடு செய்கிறார்கள். இத்தகைய தாழ்ந்த எண்ணங்களிருக்கும் வரையில் ஒருவன் கோபிகளுடைய எல்லையற்ற அன்பை எங்ஙனம் உணர முடியும்? 'ஓ உன்னுடைய முத்தம் ஒன்று கொடுத்தருள்வாய். உன்னால் முத்தமிடப்பட்டவர்களுக்கு உன்மேலுள்ள அன்பு சதா தழல்விட் டெரிகிறது; அவர்கள் துன்பமெல்லாம் தொலைந்து, உன்னைத் தவிர மற்ற நினைவுகள் அனைத்தையும் மறக்கிறார்கள்' என்று அவர்கள் தெய்விக அன்பால் உன்மத்தரானார்கள்.

முதலில் பொன், பெயர், புகழ் முதலிய இவ்வற்ப ஆசைகளை மறந்துவிடுங்கள். அப்பொழுதுதான் நீங்கள் கோபிகளுடைய அன்பின் தன்மையை உணர முடியும். அப்புனிதமான அன்பை பூரண மனப் பரிசுத்தமடையாதவர்களால் அறிய முடியாது. காமமும், லோபமும்

மற்ற ஆசைகளும் நிறைந்த அற்ப மனிதர்களுக்கு கோபிகளின் மாசற்ற அன்பில் குறை சொல்லத் தைரிய மிருக்கிறதா? இவ்வன்புதான் ஸ்ரீ கிருஷ்ணவதாரத்தின் மகிமையாகும். கீதையின் உயர்ந்த தத்துவங்கள்கூடத் தன்னை முற்றிலும் மறந்த இவ்வன்புக்கு ஈடாகா. ஆத்மீக லட்சியத்தைப் பின்பற்ற விரும்புகிறவர்கள் படிப்படியாக உயர்ந்து செல்லும் மார்க்கம் கீதையில் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆனல் இங்கு, அன்பு மதுவுண்டு, பேரின்பத்தில் தன்னையும் மறந்து திளைத்து, ஆசார்யன், சிஷ்யன், புத்தகங்கள், சுவர்க்கம், கடவுள் என்ற அனைத்தையும் மறந்து **அன்பு அன்பு** என்ற ஒரே உணர்ச்சி மாத்திர மிருக்கிறது. இவ்வன்பில் ஈடுபடுகிற வர்கள் உலகிலுள்ள அனைத்தையும் மறந்து, தாம் அன்பு செய்யும் கிருஷ்ணனைத் தவிர வேறு எதையும் பார்ப்ப தில்லை. அவ்வன்பின் முதிர்ச்சியால் சகலமும் கிருஷ்ண மயமாகி, ஒவ்வொரு முகமும் கிருஷ்ணன் முகமாகத் தென்படுகிறது. தாங்களும் கிருஷ்ணமயமாகி விடுகிருர் கள். இதுதான் அந்த அற்புதமான ஸ்ரீ கிருஷ்ணனுடைய அன்பின் தன்மையாகும்.

வீண் விபரங்களைப் பற்றிப் பேசுவதில் உங்கள் பொழுதைப் போக்கவேண்டாம். அவருடைய வாழ்க் கைக்கு அடிப்படையாக விருக்கும் முக்கிய அம்சங்களை எடுத்துக்கொள்ளுங்கள். அவருடைய வாழ்க்கையில் சரித்திர சம்பந்தமான முரண்பாடுகளிருக்கலாம். பிற் காலங்களில் அவர் வாழ்க்கையில் செருகப்பட்ட சம்பவங்களும் இருக்கலாம். எனினும் அதற்கு முன்னிராத உயர்ந்த கொள்கையை உபதேசித்த ஒரு மகானுடைய வாழ்க்கை இவைகளுக்கு அடிப்படையாக இருந்திருக்கவேண்டும். சாதாரணமாக தீர்க்கதரிசிகள் முன்னிருந்த கருத்துக்களைப் பூரணப்படுத்திக் கூறுகிருர்

கள்; அல்லது தங்கள் காலத்திலே நிலவியிருந்த கருத்துக்களை உருவகப்படுத்திக் கூறுகிறார்கள் என்னலாம். அத்தகையவர்களைப் பற்றி அவர்கள் வாழ்க்கை உண்மையானதா, அல்லவா என்று சந்தேகிக்க இடமிருக்கிறது. ஆனால் எவ்வித பலனையும் எதிர்பாராமல் பணியாற்றுவதற்காகவே வேலை, அன்பு செய்வதற்காகவே அன்பு சேவை செய்வதற்காகவே கடமை என்ற லட்சியங்கள் அவரால்தான் முதன்முதல் உபதேசிக்கப்பட்டன. அவர் காலத்திற்குமுன் அவை யிருந்தனவென்று சொல்லக் கூடியவர்களிருந்தால், அதை ரூபிக்கும்படி அவர்களை அறைகூவி யழைக்கிறேன். இவைகளைப் போதித்த ஒருவர் இருந்திருக்கத்தான் வேண்டும். இக் கருத்துக்கள் வேறு எவரிடமிருந்தும் பெற்றிருக்க முடியாது; ஏனெனில் அவை அக்காலத்து வாயுமண்டலத்திலிருக்கவில்லை. ஸ்ரீ கிருஷ்ணன்தான் இத் தத்துவங்களை முதன் முதலில் உபதேசம் செய்தருளினர். அவருடைய சிஷ்யரான வியாசர் அவைகளை உலகிற்கு எடுத்துரைத்தார். அவர் உபதேசங்கள் அனைத்திலும் உயர்ந்தது அவர் கோபிகளுக்குக் கொடுத்த இவ்வுன்னத அன்புதான். அன்பு உன்மத்தம் உங்கள் மனத்தில் புகுந்து கோபிகளுடைய அருட் பேரன்பின் தன்மையை உணர்ந்தால்தான், நீங்கள் உண்மையில் அன்பின் தன்மையை உணர்ந்தவர்களாவீர்கள். உலகத்தை மறந்து, சுயநலத்தைத் துறந்து, தூய்மையின் உருவமாகி, தத்துவார்த்தங்களின் ஆராய்ச்சியையும் மறந்து, அந்த அன்புப் பயித்தியத்திலே ஈடுபடும்போதுதான், அன்பு செய்வதற்காகவே அன்பு என்ற அந்த கோபிகளின் எல்லையற்ற அன்பின் மகிமையை அறிவீர்கள். அவ்வன்பே அனைத்திலும் உயர்ந்தது. அதைப் பெற்றால் அனைத்தும் பெற்றவர்களாவீர்கள்.

இந்த உயர்ந்த நிலையிலிருந்து அடுத்த படிக்கு வருகிறோம்—ஸ்ரீ கிருஷ்ண பகவான் கீதையை உபதேசித்தருளினர். நமது தேசத்தில் புதிய முறையாக ஒரு வாதம் கிளம்பியிருக்கிறது. கோபிகளுடைய லீலைகள் நன்றாகவில்லை யெனச் சில ஐரோப்பியர்கள் நினைக்கிறார்கள். டாக்டர் இன்னார் அப்படி நினைக்கிறார்; அப்படியானால் அந்தப் பாகம் போகவேண்டியதுதான். ஐரோப்பியர்கள் அனுமதியின்றிக் கிருஷ்ணன் இருக்க முடியுமா? முடியவே முடியாது! மகா பாரதத்தில் இரண்டு இடங்களில் தவிர வேறு இடங்களில் கோபிகளைப் பற்றிச் சொல்லப்படவில்லை. அவைகளும் முக்கியமான இடங்கள் அல்ல. திரௌபதி பிரார்த்தனையிலும் சிசுபாலன் பேச்சிலும் மட்டுமே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவை பின் செருகப்பட்டனவையாகத்தா னிருக்கவேண்டும் என்று அவர்கள் வாதம் செய்கிறார்கள். ஏன்? ஐரோப்பியர்களுக்குப் பிடிக்காததை அவசியம் எடுத்துவிட வேண்டுமல்லவா? ஆதலால், இவை பின்னால் செருகப்பட்டவை! இப்படியே கிருஷ்ணனைக்கூடப் பின்னால் செருகப்பட்டவன் என்று சொல்லிவிடலாமே! இம் மனிதர்களுடைய மதமே வியாபாரமாக விருக்கிறது. இங்கு ஒரு காரியம் செய்து மறுமையில் அதற்காக வட்டியுடன் இன்பம் அனுபவிக்க வேண்டுமென்ற வியாபார மனப்பான்மையுள்ளவர்கள் அவர்கள். அத்தகைய மனப்பான்மையில் கோபிகளுடையது போன்ற அன்பிற்கு இடமேது?

வேதங்களுக்கு கீதையைவிட நல்ல பாஷ்யம் இது வரையில் எழுதப்படவில்லை. இனிமேலும் எழுதமுடியாது. உபநிடதங்கள் பல்வேறு விதமாகப் பொருள் செய்யப்பட்டிருப்பதால் அவைகளைக் கிரகிப்பது கடினமாயிருக்கிறது. எனவே வேதங்களுக்கு மூலப் பொருளான

அந்த பகவானே திருவுருவம் தாங்கி வந்து, அவைகளின் பொருளை விளக்கும்பொருட்டுக் கீதையை உபதேசம் செய்தருளினர். இந்த உபதேசத்தைத் தான் தற்கால இந்தியாவும் உலகமும் நாடி நிற்கின்றன. அதற்குப்பின் வந்த பாஷ்யக்காரர்கள், கீதைக்கு வியாக்கியானம் எழுதும்போது கூடப் பலசமயங்களில் அதன் உண்மைக் கருத்தை உணராமலிருந்தது ஆச்சரியமான விஷயம். கீதை என்ன உபதேசிக்கிறது, பாஷ்யக்காரர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்பதைப் பார்ப்போம். அத்வைதி யாக விருக்கும் பாஷ்யக்காரர், உபநிஷதங்களிலிருக்கும் துவைதப் பொருள் கொடுக்கும் சுலோகங்களை மாற்றிச் சித்திரவதை செய்து அவைகளுக்குள் அத்வைதப் பொருளைப் புகுத்த முயற்சி செய்கிறார். பாஷ்யக்காரர் துவைதியாக விருந்தால் அவர் அத்வைதப் பொருள் கொடுக்கும் சுலோகங்களைச் சித்திரவதை செய்து அவை களுக்குத் துவைதப் பொருள் வருவிக்க முயற்சி செய் கிறார். ஆனால் கீதையில் இங்ஙனம் கருத்துக்களை மாற்றியமைக்க முயற்சியே யில்லாமலிருப்பதைக் காண் பீர்கள். அவைகள் எல்லாம் சரி, என்று பகவான் சொல்லுகிறார். 'மனித ஆத்மா ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்குப் படிப்படியாக மேலே சென்று கடைசியில் தன் அந்திய லட்சியமான நிர்குணப் பிரம்மனை அடைகிறது' என்று கீதை உபதேசம் செய் கிறது. கர்ம காண்டம் கூட நேராக மோட்சம் அளிக்காதெனினும், அதைப் பெறுவதற்கு உதவியாக விருக்கலாம் என்று கீதையில் காட்டப்படுகிறது. விக்கிர கங்கள், பூஜைகள், சின்னங்கள்—இவையனைத்தும் ஒரு நிபந்தனையின்பேரில் உதவியாக விருக்கும்; அதாவது முதலில் உள்ளத் தூய்மை வேண்டும். உள்ளத் தூய்மை

யும் சிரத்தையும் இருந்தால் மாத்திரமே எல்லா வழிபாடு களும் பயன் அளிக்கும்.

இத்தனை விதமான வழிபாடுகளும் வழிபாட்டு முறை களும் அவசியமாவென்பது அடுத்த கேள்வி. ஆம் அவசியம் தான். இல்லாவிடில் அவை ஏன் இருக்க வேண்டும்? தற்காலத்தில் சிலர் சொல்லுகின்றதுபோல மதம் என்பது கெட்ட அக்கிரமக்காரர்களால் பணம் சம்பாதிப்பதற்காகச் செய்யப்பட்ட சூழ்ச்சியல்ல. இது பார்வைக்கு எவ்வளவு சரியாகத் தோன்றினும் உண்மையல்ல. மதங்கள் மனித ஆத்மாவின் அவசியத்தை யொட்டிப் பிறந்தவை. இப்பலவிதமான அனுஷ்டானங்களும் பலதிறப்பட்ட மனித உள்ளங்களின் வேட்கையைத் தணிக்க உண் டானவை. இவ்வேட்கை தீர்ந்த அந்நாளே, இவைகளும் மறைந்துவிடும். அவ்வேட்கை யிருக்கும்வரை மற்றவர்கள் எவ்வளவு கண்டனம் செய்தாலும் அவை யிருந்தே தீரும். விக்கிரக ஆராதனையை ஒழிப்பதற்காக நீங்கள் கத்தி களையும் பீரங்கிகளையுங் கொண்டு உலகம் முழுதும் ரத்தப் பெருக்கெடுத்து ஓடும்படி செய்யலாம்; ஆனால் அவைகளின் அவசிய மிருக்கும்வரை அவை இருந்தே தீரும். அங்ஙனமே பலவிதமான வழிபாடுகளும் மத அனுஷ்டானங்களும் இருக்கும். அவை ஏன் இருக்க வேண்டுமென்பதை கீதையிலிருந்து தெரிந்துகொள்ளு கிறோம்.

இந்திய சரித்திரத்தில் வருத்தம் தரக்கூடிய நிகழ்ச்சி கள் இப்பொழுது ஆரம்பிக்கின்றன. பல வகுப்புகளும் சண்டை செய்துகொள்ளும் சப்தம் கீதையிலே லேசாகக் கேட்கின்றது. பகவான் அவைகளுக்கு மத்தியில் தோன்றி அவைகளைச் சமரசப்படுத்துகிறார். மதங்களுக்குள் சமரசம் போதித்த பெரியோர்கள் அனைவரிலும் சிரேஷ்ட ராய் விளங்கின அவர் சொல்லுகிறார்: 'எல்லா மதங்

களும் என்னுள்ளே நூலில் மணிபோல் தொடுக்கப்பட்டிருக்கின்றன.' கீதையின் காலத்திலேயே பல மதப் பிரிவுகளுக்குள்ளும் சண்டை யிருந்திருப்பதாகத் தெரிகிறது. ஸ்ரீ கிருஷ்ணனுடைய உபதேசங்களின் காரணமாக இச்சண்டைகள் ஒய்ந்து, கொஞ்ச காலம் சமாதானமாகவும் சமரசத்துடனும் கழிந்திருக்கலாம். ஆனல், இச் சச்சரவுகள் மறுபடியும் கிளம்பின. அக்காலத்து அவை மதச் சண்டையாக மட்டுமில்லாமல் ஜாதிச் சண்டையாகவும் இருந்தன. நமது சமூகத்தில் முக்கிய அம்சங்களாக விருந்த க்ஷத்திரியர்களுக்கும் பிராம்மணர்களுக்கும் சண்டை யுண்டாயிற்று. இந்தச் சண்டை சச்சரவுகளை நீக்கி, நாட்டில் உயர்ந்த வாழ்க்கையை மறுபடியும் ஸ்தாபிப்பதற்காக மறுபடியும் ஒர் ஆத்மிகப் பெருவெள்ளம் பெருகி நாடு முழுவதும் பாயவேண்டியிருந்தது. அங்ஙனம் தோன்றிய வெள்ளம் சுமார் ஆயிர வருஷங்கள் ஆத்மிக உணர்ச்சியை நாடு முழுதும் பரப்பிற்று. அவ்வெள்ளத்தின் சிகரமாக வந்தவர் கௌதம புத்தர்.

அவருடைய உபதேசங்களைப் பற்றி உங்கள் அனைவருக்கும் தெரிந்திருக்கும். அவரை நாம் கடவுளின் அவதாரமாக வணங்குகிறோம். உலகம் அதுவரை கண்டிராத உயர்ந்ததொரு நீதி மார்க்கத்தை உலகிற்கு எடுத்துரைத்த உன்னதமான மகா புருஷர் அவர். அவர் ஒரு மகத்தான கர்ம யோகியாக விளங்கினர். ஸ்ரீ கிருஷ்ணனே தன்னுடைய உபதேசங்களை வாழ்க்கையில் நடத்திக்காட்ட மறுபடியும் தோன்றிய மாதிரி இருந்தது அவரது வாழ்க்கை. கீதையின் மூலம் உபதேசிக்கப்பட்ட அதே வாக்குகள் மறுபடியும் புத்தர் பெருமான் திருவாயிலிருந்து தோன்றுகின்றன. 'ஆத்மிகத் துறையில் சிறிய முயற்சிகூட மரண பயத்திலிருந்து காப்பாற்றும்;

பெண்கள், வைசியர்கள், சூத்திரர்கள் முதலிய எல்லோருக்கும் கடவுள் தன்மையென்ற யாவற்றினும் உயர்ந்த பதவியை அடைய உரிமையுண்டு.' தம் பாசபந்தங்களை உடைத்தெறிந்து, உயர்ந்த ஆத்மிக நிலையை அடைய அனைவருக்கும் உரிமை யுண்டென்று கீதையில் சொல்லப் பட்ட வாக்கு புத்தர் உபதேசங்களிலும் காணப்படுகிறது. ' கடவுள் தூய்மையையும் சமதிருஷ்டியும் உடையவர். எனவே உலகப்பற்றைத் துறந்து அனைவரையும் சமமாகப் பாவிப்பவர்கள் இவ்வாழ்க்கையிலேயே கடவுளை அடைகிறார்கள்.' 'இங்ஙனம் கடவுள் எங்கும் உறைவதை அறிந்த ஞானி, எவருக்கும் கெடுதல் செய்யாதவனாய், பரமபதத்தை யடைகிறான்.' இந்த உயர்ந்த வாக்கியங்களுக்கு உயிருள்ள உதாரணமாயிருக்கும் பொருட்டே கீதையை உபதேசம் செய்த அந்த பகவான் மறுபடியும் புத்த பகவானாகத் தோன்றினான் போலும்! அந்த சாக்கிய முனி, தீனபந்துவாய், ஏழைகளின்பால் மகத்தான கருணை யுடையவனாய், அவர்களுக்கு உபதேசம் செய்வதற்காகவே தெய்வீக பாஷையாகக் கருதப்பட்ட சமஸ்கிருத பாஷையையும் விட்டு, அக்காலத்து மக்கள் பேசிக்கொண்டிருந்த பாஷையிலேயே தம் உபதேசங்களைத் திருவாய் மலர்ந் தருளினார். தம் அரியாசனத்தையும் ராஜ்யத்தையும் துறந்து, பரம தரித்திரர்களிடமும் தாழ்த்தப்பட்ட மக்களிடமுமே வாழ்ந்து, அவர்களைத் தம் விசாலமான இருதயத்துடன் சேர்த்து அணைத்துக்கொண்டார்.

அவருடைய மகோன்னதமான தன்மையைப்பற்றியும் மகத்தான வேலையைப் பற்றியும் நீங்கள் அறிவீர்கள். ஆனால் அவர் வேலை முறையில் ஒரு தவறு இருந்தது. அதற்காக நாம் இன்னும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறோம். நான் இங்ஙனம் உரைப்பதன் மூலம் புத்த பகவானிடம் குறை கண்டுபிடிப்பதாக நினைக்காதீர்கள்.

அவருடைய தூய்மையான தன்மை அளவற்ற மகிமை யுடையது. ஆனால் துரதிர்ஷ்ட வசமாய், அவருடைய உன்னதமான லட்சியங்களை, அப்பொழுது இந்து மதத்தில் சேர்ந்த நாகரிகமற்ற பல மக்கள் கிரகிக்க முடியாதவர் களாயிருந்தார்கள். இம்மக்கள் பலவிதமான குருட்டு நம்பிக்கைகளுடனும் கோரமான அனுஷ்டானங்களுட னும் இந்து மதத்திற்குள் நுழைந்தார்கள். அந்த சமயத்தில் அவர்கள் நாகரிகமுடையவர்களாக ஆக்கப் பட்டதாகத் தோன்றிற்று. ஆனால் சில நூற்றுண்டுகள் கழியுமுன், அவர்களுடைய முன்னேர்கள் பின்பற்றி வந்த பாம்பு, பிசாசு ஆராதனைகள் வெளிக்கிளம்பின. இதன் காரணமாக இந்தியா முழுதும் ஒரே குருட்டு நம்பிக்கை மயமாக மாறிற்று. பௌத்தர்கள் உயிர்ப் பிராணிகளைப் பலியிடக் கூடாதென்ற கொள்கையை அனுசரித்து, வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் யாகங்களைக் கண்டித் திருந்தனர். இந்த யாகங்கள் தனி வீடுகளில் செய்யப் பட்டு வந்தன. அந்த யாகத்திற்கு வேண்டிய ஆடம்பர மெல்லாம் நெருப்புத்தான். இந்த யாகங்கள் ஒழிக்கப் பட்டன. ஆனால் அவைகளுக்குப் பதிலாக நீங்கள் இப்பொழுது காணும் ஆடம்பரமான கோவில்களும் பூசைகளும் புரோகிதர்களும் தோன்றினர்கள். புத்தர், பிராம்மணர்கள் செய்து வந்த விக்கிரக ஆராதனையை அழித்தாரென்று சில படித்தவர்கள் எழுதுவதைப் பார்த் தால் எனக்குச் சிரிப்பு வருகிறது. தற்கால பிராம்மணர் களும் விக்கிர ஆராதனையும் பௌத்த மதத்தால்தான் உண்டாக்கப்பட்டன வென்பதை அவர்கள் அறியார்கள்.

ரஷ்யா நாட்டைச் சேர்ந்த சரித்திராசிரியர் ஒருவர் இரண்டு வருஷங்களுக்கு முன் ஏசுநாதரைப்பற்றி ஓர் அபூர்வமான சரித்திரமொன்று எழுதியிருந்தார். அதில் ஏசுநாதர் பிராம்மணர்களிடம் கற்றறிந்து கொள்வதற்

காகப் பூரிக் கோவிலுக்குச் சென்றதாகவும், அப்பிராம் மணர்களுடைய குறுகிய மனப்பான்மையும் விக்கிரக ஆராதனையும் கண்டு வெறுப்பெய்தி, அங்கிருந்து திபேத்திற்குச் சென்றதாகவும், அங்கு லாமாக்களிடம் பயின்று பூரணமடைந்து திரும்பிச் சென்றதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்திய சரித்திரத்தை மேல் போக்காகப் படித்தவர்கள் கூட இதை முற்றிலும் அபத்த மென உணர்வார்கள். பூரிக்கோவில் அக்காலத்தில் பௌத்தர்களுக்குச் சேர்ந்ததாக விருந்தது. மற்ற பல கோவில்களைப் போல் இதுவும் பிற்காலத்தில் இந்துக் கோவிலாக மாற்றப்பட்டது. பூரி (ஜகன்னாத்) கோயிலில் அக் காலத்தில் ஒரு பிராம்மணன்கூட இருந்திருக்க முடியாது. இந்த ரஷ்யநாட்டு சரித்திராசிரியர் ஆராய்ச்சி எவ்வளவு அழகாக விருக்கிறது!

எல்லா உயிர்களின்பாலும் அளவற்ற கருணையையும், உலகிலேயே மிக உயர்ந்த நீதி மார்க்கத்தையும் புத்த பகவான் உபதேசித்தருளியிருந்தார். எனினும் அவர் கட் டிய கட்டிடம் அனைத்தும் கொஞ்ச காலத்தில் இடிந்து விழத் தலைப்பட்டது. பௌத்த மதம் க்ஷீணித்த பிற்பாடு இந்திய சமூகத்தில் ஏற்பட்ட பயங்கரமான வீழ்ச்சியைப் பற்றியும் சீர்கேட்டைப் பற்றியும் சொல்ல எனக்கு நேர மும் இல்லை, மனதும் இல்லை. மிகக் கோரமான அனுஷ் டானங்களும், மிகக் கேவலமான நூல்களும் தோன்றின. மிக மிருகத்தனமான பழக்கங்கள் கூட மதத்தின் பெய ரால் கையாளப்பட்டன.

இந்நிலையிலிருந்து இந்தியா காப்பாற்றப்பட வேண்டி யிருந்தது. எனவே பகவான் மறுபடியும் தோன்றினர். 'தர்மம் குன்றும் போதெல்லாம் நான் தோன்றுவேன்' என்று சொன்ன ஈசுவரன் மறுபடியும் திருவவதாரம் செய்தார். இம்முறை தெற்கே அத்தோற்றுவாய் நேர்ந்

தது. ஆதி சங்கரர் தம் பதினறுவது பிராயத்திற்குள் தாம் எழுதவேண்டிய எல்லா நூல்களையும் எழுதி முடித்ததாகச் சொல்லப்படுகிறது. அவருடைய வாழ்க்கை மிக அற்புதமானது. இப்பதினறு ஆண்டுப் பிள்ளையின் நூல்கள் தற்கால உலகிற்கே ஓர் அதிசயமாக விருக்கின்றன. அவ்விளைஞனும் அதி ஆச்சரியமானதொரு மகா புருஷனுக விருந்தான். இந்திய சமூகத்தை அதன் பழைய பரிசுத்த நிலைமைக்குக் கொண்டு வரவேண்டுமென்று அவர் விரும்பினர். அவர் முன்னிருந்த இமாலயம் போன்ற வேலையை நினைத்துப் பாருங்கள்! அக்காலத்தில் நாடு இருந்த நிலைமையைப் பற்றி உங்களுக்குக் கொஞ்சம் சொல்லியிருக்கிறேன். டார்டார்கள், பெலூச்சிகள் முதலிய நாகரிகமற்ற மக்கள் பலர் பௌத்தர்களாகி நம் சமூகத்தில் கலந்தார்கள். தங்கள் பழைய கோரமான பழக்கங்களையும் அவர்கள் தங்களுடன் கொண்டு வந்த காரணத்தால், நாடு முழுதும் மிகக் கோரமானதும் மிருகத் தன்மையானதுமான பழக்கங்கள் நிறைந்தன. இதுதான் அவ்விளைஞர் பௌத்தர்களிடமிருந்து பெற்ற ஆஸ்தி. அன்றையலிருந்து இன்றுவரை இல்வாழ்க்கையிலிருந்து மக்களைக் காப்பாற்ற வேதாந்தம் முயற்சி செய்து வருகிறது. அப்பணி இன்னும் நடந்து கொண்டிருக்கிறது. அது இன்னும் முடிந்தபாடில்லை. சங்கராச்சாரியார் ஒரு பெரிய தத்துவஞானி. பௌத்த மதமும் வேதாந்தமும் உண்மையில் வேறல்ல வென்பதையும், அவை அடிப்படையாக ஒன்று தானென்பதையும் அவர் எடுத்துக் காண்பித்தார். ஆனல் புத்த பகவானுக்குப் பின் வந்தவர்கள் அவருடைய தத்துவங்களின் உண்மையை உணராமல், கடவுள் இல்லை யென்று சொல்லி நிரீசுவரவாதிகளாகி, வீழ்ச்சி யடைந்தார்கள் என்பதையும் அவர் எடுத்துரைத்தார். இதன் காரணமாக மக்கள் அனைவரும் தங்கள்

பழைய மதத்திற்குத் திரும்பினுர்கள், ஆனுல் அவர்கள் அதுவரை பின்பற்றி வந்த அனுஷ்டானங்களை என்ன செய்வது ?

சங்கரருக்குப் பிறகு அருள் ஒளி பெற்ற ராமானுஜர் தோன்றினுர். சங்கரருடைய புத்தி அதி நுட்பமானது ; ஆனுல் அவருடைய இருதயம் அவ்வளவு விசாலமானதாக இருக்கவில்லை. ராமானுஜருடைய இருதயம் விசாலமான தாக விருந்தது. தாழ்த்தப்பட்ட மக்களுக்காக அவர் பச்சாத்தாபப்பட்டு வருந்தினுர். அவர்களுடைய பழைய அனுஷ்டானங்களையும் பழக்க வழக்கங்களையும் இயன்ற வரையில் பரிசுத்தப்படுத்தி, புதியதாக்கி, அவைகளை அவசியமாக வேண்டியிருந்தவர்களுக்கு அளித்தார். அதே சமயத்தில் உயர்ந்த ஆத்மீக சாதனைகளையும் பிராம்மணர்க ளிடமிருந்து பறையர் வரை அனைவருக்கும் உரிமை யாக்கினுர். இதுதான் ஸ்ரீ ராமானுஜர் செய்த அரும்பணி யாகும். இப்பணி வட இந்தியாவுக்கும் பரவியது. இது அங்கு பல பெரியோர்களால் மேற்கொள்ளப்பட்டது. ஆனுல் அது வெகுகாலத்திற்குப் பிறகே, அதாவது முகம்மதிய ஆட்சியின் போதே பரவியது எனலாம். இப்பணியை மேற்கொண்டவர்களில் மிக சிரேஷ்ட மானவர் சைதன்ய தேவர். ராமானுஜருக்குப் பின் வந்த எல்லாப் பெரியோர்களும் ‘ அனைவருக்கும் ஆத்மீக வாழ்வில் சம உரிமை உண்டு ’ என்ற தத்துவத்தை உபதேசித்தருளினுர்கள். ராமானுஜர், சங்கரர் - இவர் களுக்கு முந்திய தீர்க்கதரிசிகளின் உபதேசமும் அதுவே யாம். சங்கரர் குறுகிய மனப்பான்மை யுடையவரென்று சிலர் சொல்லுகிறுர்கள். அவர்கள் ஏன் அப்படிச் சொல்ல வேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. அவ ருடைய நூல்களில் யாதொரு விதமான குறுகிய மனப் பான்மையும் காணப்படுவதில்லை. இக்குறை அவர்பால்

சொல்லப்படுவதற்குக் காரணம் அவருடைய சீடர் களுடைய குறைபாடுகளே போலும்.

வங்காளத்தில் தோன்றிய சைதன்ய தேவர் கோபி களின் அன்புப் பைத்தியத்திற்குத் தற்கால உதாரணமாக விளங்கினுர். பிராம்மண குலத்திலே, தர்க்கத்தைச் சிறப் பாகப் பயின்ற ஒரு குடும்பத்திலே பிறந்து, தாமும் வாதங் களில் வெல்வதையே மனிதன் எய்துதற்குரிய பெருமை யாகக் கொண்டு, தர்க்கம் வியாகரணத்திற்கு ஆசிரியராக விருந்த அவர், ஒரு பெரியோருடைய அருள் பெற்று, அதன் காரணமாக அவருடைய வாழ்க்கையே மாறப் பெற்று, தர்க்கம் வியாகரணம் முதலிய அனைத்தையும் விடுத்து, பக்திப் பயித்தியத்தில் ஈடுபட்டு, உலகிலேயே பக்தியை உபதேசிக்கும் ஆசாரியர்களில் சிரேஷ்டமானவ ராஞர். அவருடைய பக்திப் பெருக்கு வங்காளம் முழு தும் பரவி, அனைவருக்கும் ஆறுதலளித்தது. அவருடைய அன்பும் கருணையும் எல்லையற்றிருந்தது. பரிசுத்தவான் பாவி, இந்து முசல்மான், நல்லவர்கள் கெட்டவர்கள், வேசிகள் விபசாரிகள், முதலிய அனைவர்பாலும் அவ ருடைய கருணையிருந்தது. அவரைப் பின்பற்றும் மதப் பிரிவினர், காலாந்தரத்தில் வீழ்ச்சி யடைந்திருந்தபோதி லும், இன்று கூட தாழ்த்தப்பட்டவர்களுக்கும், ஜாதிப் பிரஷ்டர்களுக்கும், பலவீனர்களுக்கும் அவருடைய மதம் புகலிடமாக விருப்பதைக் காணலாம். உண்மையை உரைக்க வேண்டுமாஞல், இன்னுமொரு விஷயமும் நான் இங்கு சொல்லவேண்டும். ஞானத்தை அடிப்படையாகக் கொண்ட மதப் பிரிவுகளில் ஒரு சமரச மனப்பான்மை யிருக்கிறது. சங்கரரைப் பின்பற்றுகிறவர்கள் எல்லா மதங்களும் ஒரே நோக்கத்தை யுடையனவென்பதை ஒப் புக் கொள்ளுவார்கள். ஆஞல் அவர்கள் மிகுதியாக ஜாதித் துவேஷம் கொண்டவர்களாக இருக்கிருர்கள்.

9

ஆனல் வைஷ்ணவர்களிடம் இத்தகைய ஜாதித் துவேஷ மில்லை ; ஆனல் மதத் துவேஷமிருப்பதைக் காணலாம்.

சங்கரருக்கு அதி நுட்பமான மூளையிருந்தது. ராமா நுஜருக்கு அதி விசாலமான ஹிருதயம் இருந்தது. இத் தகைய நுட்பமான மூளையும் விசாலமான இருதயமும் ஒன்ருகச் சேர்ந்து ஒருவர் பிறப்பதற்குக் காலம் ஏற்றதாக விருந்தது. சங்கரருடைய அதி கூர்மையான புத்தியும், சைதன்யருடைய அதி அற்புதமான பரந்த எல்லையற்ற கருணையும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற ஒரு பெரியார் தோன்றுவதற்குக் காலம் தகுதியாக விருந்தது. எல்லா மதங்களிலும் அந்த ஒரே பரம்பொருளைக் காணக் கூடிய ஒருவர்—ஏழைகளுக்காகவும் பலவீனர்களுக்காகவும், சமூ கத்திலிருந்து தள்ளப்பட்டவர்களுக்காகவும் தாழ்த்தப் பட்டவர்களுக்காகவும், இந்தியாவிலோ அல்லது வெளி நாடுகளிலோ, இவ்வுலகிலிருக்கும் ஒவ்வொருவருக்காகவும் மனதிரங்கி, நைந்துருகி, ஒவ்வொரு உயிரிலும் கடவுளைக் காணக்கூடிய ஒருவர்—அத்துடன் ஒன்றுக்கொன்று வாத மிட்டுக் கொண்டிருக்கும் இவ்வுலகிலுள்ள எல்லா மதங் களையும் சமரசப்படுத்தக் கூடிய உயர்ந்த கருத்துக்களை யும், உலக முழுதும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஒரு மதத்தை யும் உண்டாக்கக்கூடிய மகத்தான அறிவுசுடர் பொருந் திய ஒருவர் இக்காலத்தில் தோன்றவேண்டியது அவசிய மாகவிருந்தது. அத்தகைய மனிதர் ஒருவர் பிறந்தார். அவருடைய திருவடிகளில் அமர்ந்து, அவருடைய உப தேசங்களைப் பெறக்கூடிய பேரதிர்ஷ்டம் எனக்குக் கிடைத்தது. அத்தகைய ஒரு மகா புருஷர் தோன்றுவ தற்குக் காலமும் சமயமும் ஏற்றதாகவிருந்தது. எனவே அவரும் தோன்றி யருளினர். அதில் மிக ஆச்சரியமான விஷயமென்னவெனில், மேல் நாட்டு எண்ணங்களையும் கருத்துக்களையும் மிகுதியாகக் கொண்டு, மேல் நாட்டு

நாகரிகத்தையே தன் குறியாகக் கொண்ட ஒரு நகருக் கருகிலேயே அவர் வாழ்க்கையின் வேலையை நடத்தி வந்ததுதான்! அவருக்கு யாதொரு புத்தகப் படிப்பும் இருக்கவில்லை; தம் கையெழுத்துப் போடக்கூட அவர் கற்றுக் கொள்ளவில்லை. ஆனால் அவர் அறிவு, மகத்தான தாகவிருந்தது. நமது சர்வகலாசாலைகளில் மிகத் திறமை யுள்ளவர்களென்று பட்டம் பெற்றவர்கள்கூட அவர் அறிவின் திறனைக் கண்டு அதிசயித்தார்கள். இந்த ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் ஓர் அற்புதமான மனித ராக விருந்தார். அவரைப் பற்றிச் சொல்ல ஆரம்பித் தால், பேச்சு மிகப் பெருகிவிடும். அவரைப்பற்றிச் சொல்ல இன்று எனக்கு நேரமில்லை. ஒன்று மட்டும் அவரைப் பற்றி இப்பொழுது சொல்ல விரும்புகிறேன். அவர் இதுவரை இந்தியாவில் தோன்றிய மகரிஷிகள் அனைவருடைய ஞானத்தையும் ஒருங்கு பெற்று, தற் காலத்திற்கு அவசியமான தர்மத்தை உபதேசம் செய்யத் தோன்றியிருக்கிறார். அவருக்கு அடிப்படையாக தெய்விக சக்தி வேலை செய்கிறது. ஓர் ஏழைப் பிராம்மண பூசாரி யின் மகன், ஓர் உள்நாட்டுக் குக்கிராமத்தில் பிறந்தவர். எவரும் அறியாமல் பிறந்து வாழ்ந்தவர், இன்று ஆயிரக் கணக்கான மக்களால் ஐரோப்பாவிலும் அமெரிக்காவி லும் தொழப்படுகிறார்; நாளை இன்னும் பல்லாயிரக்கணக் கான பேர்களால் தொழப்படுவார். பகவானின் திருச் சித்தத்தை யாரே அறிவார்கள்? என் சகோதரர்களே! இப்பொழுது நீங்கள் கடவுளுடைய அருட் குறிப்பைக் காணவில்லை யென்றால், உங்களைக் குருடர்கள், பிறவிக் குருடர்களென்றுதான் சொல்ல வேண்டும். வேறு சந்தர்ப்பமும் அவகாசமும் கிடைத்தால், அப்பொழுது உங்களுக்கு அவரைப் பற்றி அதிகம் சொல்லுகிறேன், நான் இப்பொழுது சொல்ல விரும்புவது இதுதான்: நான்

சொன்ன வார்த்தைகளில் ஏதாவது உண்மையிருக்குமானல் அது அவருடையதே. நான் உரைத்ததில் ஏதாவது தவறுகள் இருக்குமானல், அவை யனைத்தும் என்னுடையனவே.

---

# எனது போர் முறை†

(சென்னையில் பேசியது)

கூட்ட மிகுதியால் அன்றையதினம் நம்மால் சரிவர நடத்த முடியாமற் போனதினலே சென்னை வாசிகள் ஒரு மனதாய் என்னிடம் காட்டிய பேரன்பிற்காக என் வந்தனத்தை செலுத்துவதற்கு ஏற்றதாக இத்தகுந்த தருணத்தை எடுத்துக் கொள்கிறேன். எனக்களிக்கப்பட்ட அந்த வரவேற்புப் பத்திரங்களின் ஒவ்வொன்றிலுமுள்ள அழகான சொற்களுக்காக, என்னை அதிற்கண்டுள்ள பிரியமும் பெருமையும் வாய்ந்த மொழிகளுக்குத் தகுந்த பாத்திரனய்ச் செய்யும்படி ஆண்டவனைப் பிரார்த்திப்பதைத் தவிர, எனது நன்றியறிதலை வேறு எவ்விதம் சரிவர எடுத்துச் சொல்வதென்பது எனக்கு விளங்கவில்லை. நம்முடைய மதத்திற்காகவும், நம்முடைய தாய் நாட்டிற்காகவுமே எனதுயிருள்ளளவும் நான் உழைக்கவும், அவற்றிற்கு என்னைத் தகுதியுடையவனய்ச் செய்யவும் கடவுள் அருள்புரிவாராக.

சீமான்களே! எனது எல்லாக் குறைகளுக்குமிடையே என்னிடம் கொஞ்சம் தைரியமும் இருப்பதாக நான் எண்ணுகிறேன். இந்தியாவிலிருந்து மேற்குத் திசைக்குச் சொல்லவேண்டிய செய்தி யொன்று என்னிட

---

† இப்பிரசங்கம் மாத்திரம் சுவாமி ருத்ரானந்த சுவாமிகளால் மொழிபெயர்க்கப்பட்டது.

யிருந்தது; அதை யான் தைரியமாக அமெரிக்கர்களுக்கும் ஆங்கில ஜனங்களுக்கும் அளித்தேன். உங்களுக்கு, நான் இன்றை விஷயத்தை யெடுத்துக் கொள்வதற்கு முன்னால், சில தைரியமான வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். என்னை எதிர்க்கவும் எனது முன்னேற்றத்தைத் தடுக்கவும், கூடுமானால் என்னை யெங்குமில்லாதபடி அடியோடு ஒழித்தும் விடும்படியான சில யுக்திகள் என்னைச்சுற்றி நிகழ்ந்து வந்தன. இவ்வித அற்ப காரியங்கள் எக்காலத்தும் முற்றுப் பெறுவாதலால், அதன்படி இவைகளும் தவறிப்போனதற்குக் கடவுளைப் போற்றுவோமாக! ஆனால் சென்ற மூன்று வருஷங்களாக சில புரட்டுக்கள் இருந்து வந்திருக்கின்றன; நான் வெளி நாடுகளில் இருக்குமளவும் ஒரு வார்த்தையும் பேசாது மௌனமாயிருந்தேன். ஆனால் இப்பொழுது எனது தாய் நாட்டின் நிலத்தில் நின்றுகொண்டு அவற்றை விளக்கும்பொருட்டு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். அவ்வார்த்தைகளின் பயனாய் என்ன நேரிடுமோவென்று நான் சிறிதும் கவலைகொள்ளவில்லை; அவ்வார்த்தைகளிலிருந்து நீங்கள் என்னைப்பற்றி என்ன அபிப்பிராயங் கொள்வீர்களென்பதைப் பற்றியும் நான் யோசிக்கவில்லை. அதைப் பற்றி எனக்குச் சிறிதும் கவலையில்லை. ஏனென்றால், நான்கு வருடங்களுக்கு முன்னால் ஒரு தடியும் கமண்டலத்தையும் கையிற்கொண்டு உங்கள் நாட்டிற்குள் எவ்வித சன்னியாசியாக நுழைந்தேனோ அதே சன்னியாசியாக இன்றைக்கும் நான் இதோ இப்பரந்த உலகத்தை என் முன்னாற்கொண்டு இங்கு நிற்கின்றேன். முகவுரையை அதிகமாக வளர்த்தாமல், விஷயத்தை யான் ஆரம்பிக்கிறேன். 'தியஸாபிகல்' சபை (Theosophical Society) யைப்பற்றித் தலைப்பிலேயே சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இத் தியஸாபிகல் சபையாரால் இந்தி

யாவில் உண்மையாகவே சிறிது நன்மை பயக்கப்பட்டிருக் கிறதென்பது சொல்லாமலே விளங்கும். ஆதலால் இவர் களிடம், முக்கியமாக அன்னி பெஸண்ட் அம்மாளிடம், ஒவ்வொரு ஹிந்துவும் நன்றி பாராட்டுகின்றனர். இவ ரைப்பற்றி நான் ஒரு சிறிதே அறிந்துள்ளே னென்றா லும், அறிந்தமட்டில், இவர் நமது தாய் நாட்டிடம் யதார்த்தமான நல்லெண்ணங் கொண்டவராயும், தமது சக்திக்கியன்றளவு நமது நாட்டின் முன்னேற்றத்திற்காக வேலை செய்து வருவதாகவும் நான் அபிப்பிராயப்படு கிறேன். அதற்காக ஒவ்வொரு உண்மையான இந்திய னுடைய நன்றியறிதலும், எல்லா ஆசீர்வாதங்களும், அவரையும் அவருடைய சகாக்களையும் அடைவதாக. ஆயி னும் இஃதொரு தனிவிஷயம்—தியஸாபிகல் சங்கத்திற் சேருவதென்பது வேறொன்றாகும். ஒருவர் ஏதாவ தொன்று சொன்னால் அதைப் பாராட்டுவது, மதிப்பது, பிரியப்படுவது ஒரு விஷயம்; அதைச் சிறிதும் யோசித் துப் பாராமலும், கண்டனம் செய்யாமலும், தீர அலசிப் பார்க்காமலும் அப்படியே ஒப்புக்கொண்டு விடுவதானது முற்றிலும் மாறுபட்ட விஷயமாகும். அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் நான் பெற்ற சில நன்மைகளுக்காக இத் தியஸாபிக் சங்கத்தார் மிகவும் உதவி செய்ததாக எங்கும் பிரஸ்தாபம் இருந்து வருகிறது. இதில் ஒவ்வொரு வார்த் தையும் தப்பென்று நான் உங்களுக்குச் சொல்ல வேண்டி யிருக்கிறது; ஒவ்வொரு வார்த்தையும் பொய்யேயாகும். இவ் வுலகத்திலே பல்வேறு அபிப்பிராயங்களிடத்தும் தயாள எண்ணம், அனுதாபம் முதலியவைகளைப்பற்றி எங்கு பார்த்தாலும் வெகு பிரமாதமான பிரசங்கங்களைக் கேட்கிறோம். இது மிகவும் மேன்மையானதே; ஆயினும் உண்மையில், ஒருவன் தான் சொல்லும் எல்லா வார்த்தை களையும் மற்றொருவன் நம்பும் வரையில், அவனிடம் மிக

வும் தயாளமாயிருக்கிறுன்; மாறுன அபிப்பிராயங்கொள் ளத் துணிந்தாலோ, அந்த க்ஷணமே எல்லா தயாள குண மும் பறந்துவிடும்; அந்த அனுதாபமும் அன்பும் மறைந்து போகும்.

பிறகு, தங்களிஷ்டம்போல் கோடரியைத் தீட்டும் வேறு சிலர் இருக்கின்றனர்; எந்நாட்டிலேனும் இதற்குத் தடங்கல் விளைக்கக் கூடிய ஏதாவதொரு சம்பவம் நேரிட்டு விட்டாலோ அவர்களின் உள்ளம் எரிகின்றது; அளவற்ற குரோதம் உண்டாகிறது! இன்னது செய்வ தென்று அவர்களுக்குத் தோன்றவில்லை. இந்தியர் தங்கள் வீடுகளைத் திருத்திக்கொள்ள முயலுகிறுர்களென் ருல், இந்தக் கிறிஸ்தவப் பாதிரிமார்களுக்காவதென்ன? இந்தியர் தங்களாலியன்ற அளவு தாங்களே சீர்திருத்தம் செய்துகொள்ள முயலுகிறுர்களென்றுல், இந்த பிரம்ம ஸமாஜத்தாருக்கும் மற்ற சீர்திருத்தக்காரர்களுக்கும் விளை யும் தீங்கென்ன? ஏன் அவர்கள் எதிர்த்து நிற்க வேண்டும்? ஏன் இவ்விஷயங்களுக்கு அவர்கள் மிகவும் விரோதிகளா யிருக்கவேண்டும்? ஏன்? ஏன் என்று தான் கேட்கிறேன்! ஏனென்றுவது எப்படி யென்றுவது கேட்கக் கூடாதபடி அவ்வளவு கொடுமையானதாய் அவர்களுடைய பொருமையும் பகைமையும் இருப்பதாக எனக்கு தோன்றுகிறது. நான்கு வருஷங்களுக்கு முன்னுல், எவருமறியாத ஓர் எளிய துணையற்ற சன்னியாசி யான யான் ஸமுத்திரங்களைக் கடந்து வெகு தூரத்திற் கப்பாலுள்ள அமெரிக்காவுக்குப் போகுங் காலத்தில், எனக்கு எவ்வித சிபார்சும் இல்லாததாலும், அன்றி அத் தேசத்தில் உதவி புரியக்கூடிய நண்பர்கள் எவருமில்லாத படியாலும், தியஸாபிக் சங்கத்துத் தலைவரின் உதவியைச் சற்று எதிர்பார்த்தேன். அவர் அமெரிக்க தேசத்தின ராதலாலும், இந்தியாவின்மேல் பற்றுள்ளவரென நான்

நினைத்ததாலும் அந்நாட்டிலுள்ள யாராவது சிலரிடம் என்னை அறிமுகம் செய்து ஒரு சிபார்சுக் கடிதம் கொடுக்கும்படி வேண்டினேன். அதற்கு அவர் "நீர் தியசாபிக் சங்கத்தில் சேருவீரா?" என்று என்னை வினவினர். முடியாதெனக் கூறினேன். "உங்களது கொள்கைகளை யான் பெரும்பாலும் நம்பவில்லை யாதலால் எங்ஙனம் உங்களுடன் சேரமுடியும்?" என்றேன். "அப்படியாயின், யான் உமக்கு ஏதும் செய்ய இயலா திருப்பது பற்றி மிகவும் வருந்துகிறேன்" என்று சொல்லி மறுத்துவிட்டார். இதுதானு எனக்கிழைத்த ஒத்தாசை? ஈண்டிருக்கும் எனது தியஸாபிக் நண்பர்கள் இதற்கு விடையளிக்கட்டும். பிறகு சென்னையிலுள்ள சில நண்பர்களின் உதவியால் நான் அமெரிக்காவுக்குச் சென்றது நீங்கள் யாவரு மறிந்த விஷயமே. அநேகமாய் அவர்களெல்லோரும் இங்கு விஜயம் செய்திருக்கின்றனர். ஆனுல் ஜஸ்டிஸ் சுப்பிரமணிய அய்யர் மாத்திரம் இன்று வரவில்லை. இவருக்கு யான் மிகவும் அதிகமாக நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன். அவர் மிகுந்த விவேகமுடையவர்; எனதாருயிர் நண்பர்களுள் ஒருவர்; உண்மைச் சிநேகிதர்; இந்தியாவின் உண்மைப் புதல்வரு மாவர். சர்வ மத ஸபை ஆரம்பமாவதற்கு சில மாதங்கள் முன்பு நான் அமெரிக்காவை யடைந்தேன். என்னிட மிருந்த பணம் மிகவும் குறைவாகவே யிருந்ததால் சீக்கிரம் செலவாய்விட்டது. குளிர்காலமும் நெருங்கிற்று; என் னிடமோ மெல்லிய கோடை காலத்து உடைகளிற் சிலவே இருந்தன. குளிர் மிகுந்த அச்சமயம் இன்னது செய்வ தென்று எனக்குப் புலப்படவில்லை. யாசகம் செய்வ தெனத் தெருக்களிற் சென்றிருப்பேனுயின், சிறைவாசமே எனது முடிவாயிருந்திருக்கும். எனது கையில் கடைசியாக இருந்த சில ரூபாய்களைக் கொண்டு இங்கு சென்னை

யிலுள்ள எனது நண்பர்களுக்கு ஒரு தந்தியடித்தேன். இச்செய்தியை தியஸாபிக் ஸபையார் அறிந்தார்களோ இல்லையோ, "அப்பா, இப்பொழுது பேய் துலைந்துவிடும்; கடவுள் நம்மை ரக்ஷிப்பாராக" என்று கூறலாயினர். எனது கஷ்டத்தைக் கண்டு அளவிலா மகிழ்ச்சிக்கொண்டனர். இதுதானா எனக்குச் செய்யும் உபகாரம்? என் தியஸாபிக் நண்பர்கள் என்ன பதில் சொல்லுகிறார்கள்? இச்சமாசாரங்களை யெல்லாம் நான் சொல்லியிருக்க மாட்டேன்; ஆனால் எனது சகோதரர்கள் அறிய விரும்பியதனாலேயே அவை வெளிவந்தே தீரவேண்டும். இவற்றைப்பற்றிக் கடந்த மூன்று வருஷங்களாக நான் வாயே திறக்கவில்லை. மௌனமே எனது முக்கிய கொள்கையாயிருந்தது. ஆனாலும் இன்று அவை அம்பலத்துக்கு வந்தே தீரவேண்டும். இம்மட்டோ? ஸர்வ மத ஸபையில் அவர்களிற் சிலரை யான் கண்டேன். அவர்களை நெருங்கிப் பேச விரும்பினேன். அப்பொழுது அவர்கள் முகத்திற் காணப்பட்ட கொடூரமான பார்வையானது இன்னும் என் ஞாபகத்தில் இருக்கிறது. "தேவர்கள் கூடும் இடத்தில், இவ்வற்பப் புழுவுக்கு என்ன வேலை" என்று கேட்பது போல் தோன்றிற்று. இதுதான் ஒரு வேளை எனக்கு அவர்கள் செய்த உதவியாயிருக்கக் கூடுமோ?

ஸர்வ மத ஸபையில் எப்படியோ எனக்குச் சற்று ஆதரவு கிடைத்ததும், மிகவும் அருமையான வேலை செய்யக்கூடிய பாக்கியம் எனக்குக் கிடைத்தது. ஆனால், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இத் தியஸாபிக் சபையார் என்னை வீழ்த்திவிட முயற்சித்து வந்தனர் என்பது உண்மை. அச்சபையின் எல்லா அங்கத்தினரும் எனது பிரசங்கங்களை கேட்கவேண்டாமென அறிவிக்கப்பட் டிருந்தனர். காரணம் யாதெனில், அவர்களுடைய ஸபை

யின் அந்தரங்க சட்ட திட்டங்களிற் கண்டிருக்கும் பிர காரம் அவ்வந்தரங்கப் பகுதியிற் சேர்ந்துள்ள அங்கத்தி னர் எவராயினும், அவர்களின் (மஹாத்மாக்கள்) குதுமி, மொரியா விடமிருந்து மாத்திரமே எவ்வித போதனைகளை யும் பெறவேண்டு மென்பதாம். இம்மஹாத்மாக்கள் ரூபமற்றவர்க ளென்றுலும், அவர்களின் பிரதிநிதிகளாக, கனம் ஜட்ஜ் அவர்களும் பெஸண்ட் அம்மாளும் இருக் கின்றனர். ஆகவே, அவ்வந்தரங்கப் பகுதியில் சேருவ தென்ருல், ஒருவன் தனதெல்லா சுதந்திரத்தையும் ஒப் படைத்து விடுதல் என்று பொருள்படுகிறது. நிச்சயமாக இப்படிப்பட்ட காரிய மெதுவும் நான் செய்ய முடியாது; யாரேனும் இங்ஙனம் ஏதாவது செய்தாலும், அவனை யொரு ஹிந்துவென்று அழைக்கவும் மாட்டேன். கனம் ஜட்ஜின் பேரில் எனக்கு மிகுந்த விசுவாசம் உண்டு. அவர் மிகவும் மேலானவராயும், நிதானமுள்ளவராயும், கபட மற்ற வெள்ளை மனத்தினராயும் இருந்தார். தவிர தியஸா பிக் ஸபையினர் இவரைப்போன்ற வேறு தகுந்த பிரதி நிதியை எக்காலத்தும் பெற்றிருக்கவுமில்லை. பெஸண்ட் அம்மாளும் இவருமாக, இருவருக்குள் தங்கள் மஹாத் மாவே சரியானது என்று சண்டையிட்டுக் கொண்டிருந்த விஷயத்தைப்பற்றி நான் எவ்வித முடிவும் சொல்வதற் கில்லை. இதில் மிகவும் ஆச்சரியமான சங்கதி எது வென் ருல், இருவரும் ஒரே மஹாத்மாவை தம்முடையதே யென்று வாதாடியதே யாகும். இதன் உண்மையைக் கடவுளே யறிவர். அவரே நியாயாதிபதி; இரு கக்ஷியும் சமமாயிருக்குங் காலத்தில், வேறு யாரால் நியாயங் கூற முடியும்!

அமெரிக்கா முழுவதும் அவர்கள் எனது வேலைக்கு அடிகோலியது இப்படித்தான்! எனக்கு மற்ருெரு தடையாயிருந்த கிறிஸ்தவப் பாதிரிமார்களோடு இவர்கள்

சேர்ந்தனர். இக்கிறிஸ்தவப் பாதிரிமார்கள் எனக்கு விரோதமாக நிற்கவில்லை யென்று சொல்வரேல், அவ்வொவ்வொரு வார்த்தையும் பொய்யென்பது நிச்சயம். அவர்கள் விளைத்த இன்னல்கள் உள்ளங்கை நெல்லிக்கனி போல் நன்குய்ப் புலப்படுகின்றன. அன்னிய நாட்டிலே நான் ஓர் எளியவனுய்த் துணையற்றிருந்தகாலே, இவர்கள் நகரத்துக்கு நகரம் சென்று என்னைப்பற்றி இழிவாகத் தூற்றி வந்தனர். நான் சென்று தங்கின ஒவ்வொரு வீட்டிலிருந்தும் என்னைத் துரத்திவிடத் தங்களாலியன்றவரை முயற்சித்தனர். என்னுடன் நண்பராய்ச் சேர்ந்த ஒவ்வொரு மனிதனையும் என்னிடம் விரோதங்கொள்ளுமாறு எல்லா வழிகளிலும் முயன்றனர். இவ்விதம் பல வழிகளிலும் வேலை செய்து என்னை வேறு வழியின்றிப் பட்டினியாக்கவும் முயற்சி செய்தனரென்றல் வேறென்ன வேண்டும்! இவ்வித வேலையில், எனக்கு விரோதியாக இவர்களுடன் சேர்ந்துகொண்ட என் சொந்த நாட்டுச் சகோதரர் ஒருவரைப் பற்றி வெளியிடுவதற்கு எனக்கு வருத்தமுண்டாகிறது. அவரே இந்தியாவிலுள்ள சீர்திருத்தச் சபையின் தலைவராவர். யான் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் உண்மை யென்பதை என்னிடமுள்ள அத்தாக்ஷிகளைக் கொண்டு ருஜூப்பித்துக் காட்ட என்னல் முடியும். நான் குறிப்பிடுகிற இப்பெரியார் "கிருஸ்து இந்தியாவுக்கு வந்திருக்கிருர்" என்ற மந்திரத்தைச் சதா உருச் செய்து கொண்டிருக்கிருர். கிறிஸ்து இந்தியாவில் வருவதற்கு வழி இதுவேயோ யென்று அவரை நான் கேட்கிறேன். இந்தியாவைச் சீர்த்திருத்தும் வழி இதுதானே? என் சிறு வயது முதற்கொண்டே இப் பிரபுவை யான் அறிவேன். எனதுயர்ந்த நண்பர்களுள் ஒருவராகவும் இருந்தார். வெகு நாட்களாய் என்னுட்டுச் சகோதரர் ஒருவரையும்

பார்க்காமலிருந்து இவரை யான் அங்கு சந்தித்தபோது, நான் அளவற்ற சந்தோஷங் கொண்டேன். அதற்குப் பதிலாய் அவரிடமிருந்து நான் பெற்ற பரிகாரம் இதுவே யாகும்.

என்றையதினம் **ஸர்வ மத ஸபை** யானது என்னைப் புகழ்ந்ததோ, அன்றே **சிகாகோ**விலுள்ள எல்லா ஜனங்களும் என்னைத் தெரிந்து கொண்டனர். அந்நாள் முதற் கொண்டு இவருடைய மனப்பான்மை மாறிவிட்டது; ரகஸியமாகத் தம்மாற்கூடிய அளவு எனக்குத் தீங்கு விளைவிக்க முயற்சித்தார். **கிறிஸ்து** இந்தியாவுக்கு வரப் போகும் வழி இதுதானே? **கிறிஸ்து** நாதரின் அடிகளில் இருபத்து நான்கு வருடங்கள் உட்கார்ந்து கற்ற படிப்பினை இஃதேயோ? கிறிஸ்தவ மதமும், கிறிஸ்தவ சக்தியுமே இந்திய ஜனங்களை முன்னேற்றப் போகிற தென்று நமது சீர்திருத்தக்காரர்கள் முழங்குகின்றனர். முன்னேற்றத்திற்கு இப்பெரியார் செய்த இதுவேதான் உற்றவழி போலும்! இவரை ஓர் உதாரண புருஷராய்க் கொண்டால் முன்னேற்றம் எவ்வளவு அழகாய் ஏற்படு மென்பதை நீங்களே யோசியுங்கள்.

இன்னும் ஒரு வார்த்தை,—இந்த அறிவாளிகளாகிய சீர்திருத்தக்காரர்களால் நடத்தப்பெறும் பத்திரிகையைப் படித்தேன். அதில், யான் ஒரு சூத்திரன் என்றும், ஒரு சூத்திரன் சன்னியாசியாவதற்கு என்ன உரிமை யிருக்கிறதென்றும் ஆக்ஷேபிக்கப்பட்டிருக்கிறேன். இதற்கு யான் கூறும் மறுமொழி யென்னவென்றால்,—என்னுடைய வம்சம் சூத்திர ஜாதியானால், பின் அப்பத்திராதிபரின் வம்சம் நீச ஜாதியாகும். ஒவ்வொரு பிராம்மணனும் தினந்தோறும் "**யமாய தர்ம ராஜாய சித்ரகுப்தாய வைநம:**" என்ற மந்திரத்துடன் யாருடைய பாதங்களில் சரணமடைகிறார்களோ அவருடைய வழியைச் சேர்ந்

தவன் நான். ஒவ்வொரு மனிதனுடைய நல்வினை தீவினை களையும் அவ்வப்போது பதிவு செய்து வருபவரும், தர்மங் களுக்கெல்லாம் அதிதேவதையுமான யமதர்ம ராஜனின் அடிகளை வணங்குபவன் நான். க்ஷத்திரியர்களெல்லாம் யாருடைய வம்சத்தில் தோன்றி யிருக்கிறார்களோ, அவரின் பாதங்களிற் பணிபவன் நான். உங்கள் காவியங் களிலேனும் புராண இதிகாஸங்களிலேனும் நம்பிக்கை சிறிதளவேனும் இருக்குமானால் என் வம்சத்தார் தாங்கள் பண்டை நாளிற் செய்த அரும்பெரும் காரியங்கள் ஒரு புறமிருக்க, இந்தியாவிற் பாதியை அநேக நூற்றாண்டுகள் அரசாண்டு வந்துளரென்பதை இவ்வங்காள சீர்திருத்தக்காரர்கள் உணரட்டும். என்னு டைய ஜாதியானது மதிக்கப்படாது புறக்கணிக்கப்படு மாயின் பின் இக்கால இந்திய நாகரிகத்தின் பெருமை யென்ன இருக்கிறது!

இந்நாகரிக வளர்ச்சிக்கும் மேன்மைக்கும் காரண புருஷர்களாய்த் தோன்றி நலம்புரிந்த சீரியோர் அனைவரும் எனது ஜாதியிலேயே தோன்றியுள்ளனர். வங்காளத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டாலும், தத்துவ ஞானத்தில் எவரினும் மேம்பட்டவரும், கவிகளுள் சிரேஷ்டரும், சரித்திர மெழுதுவதில் வன்மை பெற்றவரும், புராதன வஸ்து சாஸ்திரங்களை ஆராய்ந்துணர்வதில் சிறந்தவரும் முதன்மை பெற்ற மதாசாரியர்களும் ஆக இவர்களெல் லோரும் எனது வம்சத்திலன்றோ தோன்றியிருக்கின்றனர். நவீன சாஸ்திர ஆராய்ச்சிக்காரர்களுள் முதன்மை பெற்றவர், இந்தியாவில், எனது வம்சத்திலேயே தோன்றி யுள்ளார். என்னுடைய ஜாதி சூத்திர ஜாதியா! பின் இப் பத்திராதிபர், மறுமுறையும் கூறுகிறேன், பறைய ராவார். குற்றங்கூற முன் வந்த இவர் நமது சரித்திரங் களைச் சற்று ஆராய்ந்துணர்ந்திருத்தல் வேண்டும்;

பிராம்மண க்ஷத்திரிய வைசியர்களுள் எவருக்கும், சன்னியாச ஆசிரமம் ஏற்க பாத்தியம் உண்டென்பதையும், இம் மூவருணத்தினற்கும் வேதங்களில் சமமான உரிமை யுண்டு என்பதையும் அவர்கள் உணர்ந்திருக்கவேண்டும். இடையில் சிறு உதாரணத்திற்காக இதை யான் எடுத்துச் சொன்னேனென்றுலும், என்னேச் சூத்திரனென்று அவர்கள் அழைத்து விட்டதால் எனக்கு எவ்வழியிலும் குறைவு நேரிட்டுவிடாது. எனது முன்னேர்கள் ஏழைகளுக் கிழைத்த கொடுமைகளுக்குச் சற்று பரிகாரமாயிருக்குமென எண்ணியே இங்கே இதைச் சொல்ல நேர்ந்தது. நான் ஒரு பறையனுகப் பிறந்திருப் பேனுனல், இன்னும் அதிகமான சந்தோஷத்தையே யடைவேன். ஏனென்றுல், தாம் பிராம்மணருக்கெல்லாம் பிராம்மணராயிருந்தும் ஒரு பறையனுடைய இல்லத்தைச் சுத்தம் செய்ய விரும்பிய ஓர் மஹானுபாவரின் சீடன் நான். உண்மையில் அப்பறையன் அதற்குச் சம்மதிக்கான். ஓர் பிராம்மண சன்னியாசி தனது வீட்டைச் சுத்தம் செய்வதைப் பார்க்க அவன் எவ்வாறு சம்மதிப்பான்? ஆகவே இப்பிராம்மண சன்னியாசி நடுநிசியில் எழுந்து எவரு மறியாதபடி அப்பறையனின் வீட்டினுட் புகுந்து மலங்கழிக்கும் கக்கூசு முதலான இடங்களேச் சுத்தஞ் செய்து அவ்விடத்தைத் தம் தலேமயிரைக் கொண்டு துடைத்தார். இவ்விதம் ஒரு தரந்தானு? தம்மை எளி யோர்க்கும் அடியவராய் ஆக்கிக்கொள்ளுவான் கருதிப் பலதரம் அவர் அம்மாதிரிச் செய்தார். அம்மஹானுபா வரின் பாதங்களேயே சிறியோனுகிய நான் சதா என் தலேமீது தாங்கி நிற்கின்றேன்; அவரே எனது நாயகர்; அவ்வீரரைப் பின்பற்றியே நான் நடப்பேன். இவ்விதம் ஓர் உண்மை ஹிந்துவானவன், செல்வாக்குகளேதையும் நாடாது விட்டு, தன்னுடைய சொந்த நடத்தையாலேயே

முதலில் எல்லார்க்கு மடியவனுகி, அதன் பின்னரே, தன்னேயும், தன் நாட்டு ஜனங்களேயும் உயர்த்தவேண்டும். இருபது வருஷத்து மேற்கத்திய நாகரீகமோ, தன் சொந்த சினேகிதன் ஒருவனே, தன் வருவாய்க்குத் தடையாக இருப்பானேவென்று தான் எண்ணிய காரணத்தினுலே, அன்னிய நாட்டில் பட்டினிபோட முயற்சிக்கும் அம் மனிதனின் செய்கையை விளக்குகிறது. முன்சொன்ன மற்ருேர் உதாரணமோ, உண்மையான வைதீக தர்மத்தால் தன்னுட்டு மக்கட் குண்டாகும் பயனே விளக்குகிறது. இச்சீர்திருத்தக்காரர்களில் ஒவ்வொரு வரும், எல்லோருக்கும் ஊழியம் செய்யவும், ஒரு பறைய னுடைய வீட்டைச் சுத்தம் செய்யவும், தயாராயிருக் கட்டும்; அப்பொழுதே அப்படிப்பட்ட ஒருவரின் அடிகளில் உட்கார்ந்து நான் ஏதாவது கற்றுக் கொள்வேனே யன்றி அதற்கு முன்னுல் முடியாது. அடுக் கடுக்காய் கணக்கின்றி பேசும் பெரிய பேச்சுக்களேவிட, ஒரு துளி காரியமேனும் செய்தலே மேலானது.

இப்பொழுது சென்னேயிலுள்ள **சீர்திருத்தச் சபை** யாரைப்பற்றிச் சில வார்த்தைகள் கூறுகிறேன். அவர் கள் என்னிடம் மிகவும் பிரியமாய் இருந்து வந்திருக்கின்ற னர். மிகவும் அன்பாக என்னிடம் பேசி, வங்காளச் சீர் திருத்தக்காரர்களுக்கும் தங்களுக்கும் உள்ள வித்தி யாசத்தை எனக்கு எடுத்துரைத்தனர். அதை நான் மனப்பூர்வமாய் ஒப்புக் கொள்கிறேன். இது சமயம் வங்காளமிருக்கும் நிலேமைக்கும் மதராஸுக்கும் மிகுந்த வித்தியாசம் இருக்கிறதென்று நான் அடிக்கடி சொல்லி வந்திருப்பது உங்களிற் பெரும்பாலோர்க்கு நினேவிருக் கும். ஒரு சமயம் ஒருமுகமாகவும், மற்ருெரு சமயம் அதற்கு நேரெதிர்முகமாகவும் மாறி மாறி இயங்குவிக் கும் வங்காளச் சீர்திருத்தங்களேப் போன்றவை சென்னே

யில் ஏற்படுத்தப்படவில்லை. இங்கே மிகவும் மெதுவான, ஆனால் ஸ்திரமான, முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது; சீர்திருத்தத்தில் வளர்ச்சி தோன்றுகிறதேயன்றி பிற் போக்கில்லை. ஒருவாறு வங்காளச் சீர்திருத்தங்களால் பழைய பழக்க வழக்கங்கள் பிசகானவையென்று கருதிப் புறக்கணிக்கப்பட்டிருக்க, ஈண்டு மதராஸிலோ எல்லாச் சீர்திருத்தங்களிலும், கொஞ்சம் கொஞ்சம் விருத்தியேற் பட்டிருக்கிறது. ஆகவே இந்த விஷயத்தில் சென்னைச் சீர்திருத்த சபைகளைச் சேர்ந்தோர், தங்களுக்கும் வங் காளத் திருத்தக்காரர்களுக்கும் உள்ள வித்தியாசத்தை எடுத்துக்காட்டுவதை நான் முற்றிலும் ஒப்புக்கொள்ளு கிறேன். ஆனால், ஒரு விஷயம் இவர்கள் உணர்ந்தா ரில்லை; இவர்களிற் சிலர் மெதுவாக என்னைத் தங்களுடன் சேர்ந்துவிடும்படி செய்ய முயற்சிக்கிறார்களென்று எனக் குத் தோன்றுகிறது. அவ்விதம் முயலுவது மிக விசித் திரமான காரியமே. தன்னுடைய வாழ்நாட்களில் பதி னன்கு வருஷகாலம் பட்டினியையே துணையாய்க்கொண் டும், நாளைக்கு என்ன சாப்பிடுவது எங்கே உறங்குவது என்பதுங்கூட தெரியாமல் காலங் கழித்துவந்த ஒருவனை திருப்பிவிடுவதென்பது இவ்வளவு லேசாய் முடியக்கூடிய காரியமல்ல. அடுத்தவேளைக்குச் சாப்பாடு எங்கிருந்து வரும் என்பதுகூடத் தெரியாமலும், அநேகமாய்த் துணியே யில்லாது **தெர்மாமீடரில்** பூஜ்யத்துக்குக் கீழ் முப்பது டிக்கிரி வரையில் காட்டக்கூடிய அவ்வளவு அதிகக் குளிருள்ள பிரதேசத்தில் வசிக்கத் துணிந்த ஒரு வனை மெதுவாய்த் திருப்பிவிடுவதென்பது இங்கே முடியக் கூடிய காரியமல்ல. என் சொந்த வழியில் எனக்குச் சிறிது விருப்பம் உண்டு; அனுபவமும் கொஞ்சம் இருக் கிறது. இவ்வுலகத்துக்கு உபயோகமான செய்தி என் னிடம் ஒன்றிருக்கிறது; அதை நான் சிறிதளவும் அஞ்சா

மலும், இதன் பயனுய் எதிர்காலத்தில் என்ன விளைந்து விடுமோ வென்ற ஏக்கமின்றியும் தைரியமாய் வெளியிடு வேன். இச்சீர்திருத்தக்காரர்களுக்கு ஒன்று சொல்லு கிறேன். இவர்களுள் எவ்வரையும்விட நான் ஒரு பெரிய சீர்திருத்தக்காரனுவேன். ஏனெனில், இவர்கள் விரும்பும் சீர்திருத்தங்களெல்லாம் மிகவும் அற்ப அளவே யுடையன வாயிருக்க, நான் விரும்புவது அடிமுதல் உச்சி வரை யில் சீராகக்கூடிய ஓர் பெரிய சீர்திருத்தமாகும். அனு சரிக்கும் முறையில்தான் வித்தியாசம் இருக்கிறது. அவர் களுடையது அழிவுமுறை; என்னுடையதோ அமைப்பு முறையாகும். சீர்திருத்துவதில் எனக்கு நம்பிக்கை இல்லை; வளர்ச்சியில்தான் எனக்கு நம்பிக்கை யுண்டா கிறது. கடவுளைப்போல் உன்னத ஸ்தானத்தில் நின்று கொண்டு "நீ இவ்விதமே செய்யவேண்டும்; அவ்வாறு செய்யக்கூடாது" என்று ஜன சமூகத்திற்குக் கட்டளை யிட நான் துணியமாட்டேன். இராமபிரான் இலங்கைக் கிட்ட அணையில் தானும் பங்கெடுத்துக்கொண்டு தனது சிறு தேகத்தால் அற்ப அளவு மண் தூசியைக் கொண்டு சேர்த்து அளவற்ற ஆனந்தங்கொண்ட ஓர் சிறு அணிலைப் போலவே நானும் என்னுற் கூடிய அளவு பணி இயற்ற விரும்புகின்றேன். இதுவே எனது கொள்கை. அதி ஆச்சரியமான இத்தேசீய இயந்திரம் நீண்ட காலமாய் வேலை செய்து கொண்டிருக்கிறது! நம்முன்னுல் இத் தேசீய வாழ்வென்னும் நதியானது வெகு காலங்களாக ஓடிக்கொண்டிருக்கிறது! இதை நல்லதல்லவென்றுரைக்க எவரே துணிவர்? அல்லது இனி யெப்படி அஃது ஓடு மென்றறியவாவது வெளியிடவாவது எவரால் கூடும்? அவ்வப்போது தற்செயலாய் நிகழும் ஆயிரக்கணக்கான சம்பவங்களால் தூண்டப்பட்டு, சில சமயங்களில் மந்த மாயும் மற்ற காலங்களில் வெகு விசையாயும் இருந்து

வருகிறது. அதைத் தங்களிஷ்டப்படி இயங்குவிக்க எவருக்குத் துணிவு உண்டாகும்? **கீதை**யில் சொல்லப் பட்டிருக்கிற பிரகாரம் நம்மாலானதைச் செய்துவிட்டு அத்துடன் திருப்தியடைவதே நமது கடன். எரியும் நெருப்புக்கு விறகிடுவதுபோல, அதற்கு வேண்டிய காரணங்களைச் செய்தலே நமது வேலை; அது தானே வளர்ச்சி பெறும்.

நமது ஜன சமூகத்தில் ஏராளமான கொடுமைகள் இருப்பது உண்மையே; அப்படியே மற்றைய எல்லாச் சமூகங்களிடத்தும் இருந்தே வருகின்றன. ஈண்டு சில வேளைகளில் விதவைகளின் கண்களினின்றும் ஊறும் தண்ணீரால் பூமி நனைகிறதென்றால், அங்கே, மேனாடு களிலோ விவாகமாகாதவர்கள் விடும் பெருமூச்சானது ஆகாயத்தையே விஷமாக்கி விடுகிறது. இங்கு வறுமைப் பிணியானது ஜனங்களை வாட்டுகின்றது; அங்கோ, தங் கள் பெருமித வாழ்க்கையினாலேற்பட்ட களைப்பினால் அவர்கள் அவதிப்படுகின்றனர். இங்கே வயிற்றுக்கில் லாத கொடுமையால் மனிதர் தற்கொலை செய்துகொள்ள விரும்புகின்றனர்; அங்கேயோ அளவுகடந்த சாப்பாட் டின் பயனாய்த் தற்கொலை செய்து கொள்கின்றனர். தேகத்திலுள்ள கீல் வாதத்தைப்போல், இத்தகைய கொடுமைகள் எல்லாவிடத்தும் இருந்து வருகின்றன. காலிலுள்ள வாதத்தை மருந்து முதலியவைகளால் போக்குவீராயின், அது உடனே தலைக்கு வந்து விடுகிறது. அங்கிருந்து விரட்டினால் இன்னோர் இடத்திற்குச் சென்றுவிடும். இவ்விதம் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத் துக்குத் துரத்தலாமேயொழிய அடியோடு ஒழித்துவிடுவ தென்பதியலாது. அறியாத சிறு பிள்ளைகளே அதைத் தாங்கள் சொஸ்தப்படுத்திவிடக் கூடுமெனவும், அதற்குத் தாங்கள் கருதும் வழியே மிகவும் சரியாமெனவும் நினைக்

கின்றனர். நல்லது, கெட்டது இவை யிரண்டும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்களைப்போல் எக்காலத்தும் இணைபிரியாதவையென நமது அறிவு நூல்கள் கூறுகின்றன. நல்லது கிட்டினுல், கூடவே கெட்டதும் கிட்டும்; கெட்டது வந்தால் நல்லதும் கூடவே வரும். கடலின் நீர்ப்பரப்பில் ஓர் அலை உண்டாகுமாஞல், அதற்குக் காரணமாக அங்கே ஓரிடத்தில் தாழ்வும் உண்டாயிருக்க வேண்டுமல்லவா? வாழ்வென்பதே துன்பமாகும். ஒருவன் மூச்சு விடுவதாலேயே எண்ணிறந்த ஜீவ ஜந்துக்களைக் கொல்லுகிருன்; அவ்வாறு சில ஜந்துக்களையேனும் கொல்லாது ஒரு மூச்சுக்கூட விட முடியாது. ஒருவன் ஒரு கவளம் உணவு அருந்திய போதிலும், அவன் அதினின்றும் பிற ஜந்துக்களை மோசம் செய்தவனேயாகிருன். இதுதான் உலக நடை. இது உண்மையானதே. ஆகவே, துன்பங்களைப் போக்கிவிட வேண்டுமென்று நாம் எவ்வளவு பிரமாதமாகப் பேசியபோதிலும் அவை யாவும் வீண் வார்த்தைகளே யன்றி உண்மையில் ஒன்றும் நடவாது. துன்பங்களை யொழிக்கும் விஷயத்தில் ஒவ்வொருவரும் இதை நன்ருய் உணர வேண்டுவதவசியம். அப்பொழுதே நம்மிடமுள்ள குருட்டுத்தனமான பிடிவாதம் நீங்கி நாம் சாந்தமடைவோம். எங்கெங்கே குருட்டுத்தனமான பிடிவாதங்களைக் கொண்ட சீர்திருத்தக்காரர்கள் இருந்தனரோ அங்கெல்லாம் அவர்கள் தங்கள் காரியத்திற் கொஞ்சமேனும் சித்தியடையவில்லையென்பதை சரித்திரங்கள் நன்ருய்க் காட்டுகின்றன. அமெரிக்கா தேசத்தில் அடிமைத் தனத்தைப் போக்குவதற்காக ஏற்பட்ட ஓர் யுத்தத்தைவிடப் பெரியதொரு சுதந்திரப் போரை யூகிப்பதும் சாத்தியமில்லை. அது உங்களெல்லோருக்கும் தெரிந்ததே. அதனுல் விளைந்த பயன் என்ன? முன்னிருந்ததைவிட நூறு மடங்கு கேவல

மான நிலையிலன்றோ இன்று அவ்வடிமைகள் இருக்கின்றனர்? முன்பு இவ்வடிமை நீக்ரோக்கள் (ஆடு மாடுகளைப் போல்) யாருடையவேனும் சொத்துக்களா யிருந்து வந்தனர். ஆகவே அவர்கள் எஜமானர்களால் அழிந்து போகாவண்ணம் பார்க்கப்பட்டு வந்தனர். இன்றைக்கோ அவர்கள் யாருடைய சொத்தாகவும் இல்லை. அவர்களின் உயிருக்கு மதிப்பென்பது கிடையாது. வெறும் வியாஜங்களைக்கொண்டு உயிருடன் கொளுத்தப்படுகின்றனர். அவர்களின் கொலைகளுக்கு சட்டமுமில்லை—கேள்வி முறையுமில்லை—ஏனென்றால் அவர்கள் கருப்புத் தோலையுடைய 'நிக்கர்கள்.' அவர்கள் மனித வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர்! மிருகங்கள்கூட ஆகமாட்டார்கள்! மேற்கண்ட குருட்டுப் பிடிவாதமான கட்டாய விதிகளால் கொடுமைகளை யொழிக்க முயலுவதன் பயனாய் விளையும் பலன் இதுவே. நன்மை செய்யும் நற்கருத்தோடெனினும், இவ்வித பிடிவாத நியதிகளை யனுஷ்டித்த எல்லா இயக்கங்களின் பயனும் இதுவே யென்பதை சரித்திரம் தெளிவாகக் காட்டும். நான் அதைப் பார்த்திருக்கிறேன். என் சொந்த அனுபவமே எனக்கு இதைப் போதித்திருக்கிறது. கண்டன முறையைக் கொண்ட எந்தச் சீர்திருத்தச் சபையாருடனும் யான் சேர ஒருப்படேன். கண்டனம் எதற்காக? ஒவ்வொரு சமூகத்திலும் குறைகள் இருக்கின்றன வென்பது உண்மையே; இதை யாவரும் அறிவர். ஒவ்வொரு குழந்தையுங்கூட மேடையில் நின்று வாக் சாதுர்யமாய் இந்து சமூகத்தின் குறைகளைப் பற்றி மிக்க ஆர்வத்துடன் நமக்குப் பிரசங்கித்தல் கூடும். ஊர் சுற்றித் திரியும் கல்வியறிவற்ற ஒவ்வொரு அன்னிய நாட்டினனும் தனது ரயில்வே பிரயாணத்திலேயே இந்தியாவைக் கண்டு அதன் உண்மையான நிலைமையைக் கண்டுகொண்டதாக

எண்ணிக்கொண்டு இந்தியாவிலுள்ள கொடுமைகளைப் பற்றி மிகவும் சாமர்த்தியமாகப் பிரசங்கம் செய்கிறான். நாம் அதை ஒப்புக்கொள்ளுகிறோம். எவரும் குறைகளை எளிதில் எடுத்துக் காட்டிவிடலாம். ஆனால் அக்குறைகளினின்றும் நீங்கவொரு உபாயம் தேடிக் கொடுப்பவனே ஜன சமூகத்தின் தோழனாவான். தண்ணீரில் மூழ்கிக் கொண்டிருக்கும் ஒருவன், தனக்குத் தத்துவோபதேசம் செய்யவரும் ஒரு சாஸ்திரியை "ஐயா முதலில் என்னைத் தண்ணீரிலிருந்து கரையேற்றும்! மற்றவை பின்னலாகட்டும்" என்றல்லவோ கத்துவான்! அதுபோல இன்று நமது ஜனங்களும் "ஐயா! போதுமான பேச்சுக்கள், பிரசங்கங்கள் கேட்டாய்விட்டன! எங்களை வெளியேற்றக் கைகொடுக்கும் புண்ணியவான் எங்கே? உண்மையாக எங்கள் பேரில் அன்புகொள்ளும் மனிதன் எங்கே! எங்கள் நிலைமையைக் கண்டு மனப் பூர்வமாய் இரங்கும் மனிதன் எங்கே?" என்றல்லவோ கேட்கின்றனர். ஏ! அப்படிப் பட்டவனன்றோ தேசாபிமானி! இதனாற்றான் இச்சீர்திருத்த முறைகளிடம் நான் மாறான அபிப்பிராயம் கொண்டுள்ளேன். நூறு வருஷங்களாய் இவ்வியக்கங்கள் நடந்து வருகின்றன. அதனால் விளைந்த பயன் என்ன? மிகவும் தூஷணைகளைக் கொண்டதும் எல்லாவற்றையும் கண்டிக்கக் கூடியதுமான ஏராளமான புத்தகங்களும் கிரந்தங்களும் சிருஷ்டிக்கப் பட்டிருக்கின்றன! இதுதான் பயன். கடவுளே! இது ஏனோ? வைதீகர்களை அவர்கள் குறை கூறினர், கண்டித்தனர், திட்டினார்கள். வைதீகர்களும் சளைத்தாரில்லை; பதிலுக்குப் பதில் இவர்களைத் திட்டப் பின்வாங்கவில்லை. இதன் பயனாய் இந்திய ஜாதிக்கும், இந்திய நாட்டுக்குமே அவமானத்தை யுண்டாக்கக் கூடிய கிரந்தங்கள் ஒவ்வொரு இந்திய பாஷையிலும் ஏராளமாய் சிருஷ்டிக்கப்

பட்டுவிட்டன. இதுவா சீர்திருத்தம்? நமது நாட்டைப் பெருமைப்படுத்துவது இப்படித்தானோ? இது யாருடைய குற்றம்?

பின் யோசிக்க வேண்டிய இன்னொரு முக்கிய விஷயமும் உள்ளது. இங்கே இந்தியாவில் நாம் எக்காலத்தும் அரசர்களால் ஆளப்பட்டு வந்திருக்கிறோம். நமது சட்டங்களை அரசர்களே நிறுவி வந்தனர். இப்பொழுதோ அத்தகைய அரசர்கள் இல்லை; முன்போல் நடத்துவதற்கு ஒருவரேனும் கிடையாது. நமது அரசாங்கத்திற்கோ துணிவு இல்லை. அது ஜனசமூகத்தின் அபிப்பிராயங்களை யொட்டியே வழிகளைத் திருத்திக்கொள்ள வேண்டியதா யிருக்கிறது. எல்லா சமூகங்களும் முன்னேற்றத்தை யடையக்கூடிய ஒரு பலமான, தீவிரமான, முடிவைத் தீர் மானித்து ஜன சமூகமானது ஒரு பொதுவான அபிப் பிராயத்துக்கு வருவதென்பது சீக்கிரத்தில் முடியக் கூடிய காரியமல்ல. நீடித்த காலம் செல்லலாம்; அது வரை நாம் காத்திருக்க வேண்டியிருக்கிறது. சீர்திருத்தம் வேண்டுவோர் எங்கே? அதைக் கோரும் ஜனங்கள் யார்? முதலில் அவர்களைத் தயாராக்குங்கள். அஃதின்றி சிறு பான்மையோரின் கருத்துக்களை அமுலுக்குக் கொண்டு வருவதால் தீமையே விளையும். ஒரு சிலர் சில விஷயங் களைக் குறையெனக் கூறிவிடுவதால், முழு சமூகமும் அவர்கள் சொற்படி நடக்க முடியாது. இதுவே இந்தியா வில் காரியங்கள் நடைபெறாததற்குக் காரணம். ஆகை யால் முதலில் ஜனசமூகத்தைப் படிப்பியுங்கள். உள்ள நிலைமையைத் தெளிவாய் உணரும்படி செய்யுங்கள். சட்டசபைகளைக் கூட்டுங்கள். அப்பொழுது நியதிகள் தாமாய்த் தோன்றும். முதலில் பலத்தையடைய முயலுங் கள்; நியதிகளும் வழிகளும் தாமாய் வரும். தம் சொந்தப் பொறுப்பில் சமூகத்தை நடத்திவந்த அரசர்களை யிழந்த

நமக்குள் ஒரு திடமான, முடிவான பொது அபிப்பிராயம் உண்டாகச் செய்ய வேண்டும். ஆகையால் இச்சமூக சீர்திருத்தங்களுக்குக் கூட ஜனங்களைப் படிப்பிக்க வேண்டியது முதற்கடமையாகின்றது. சென்ற நூறு வருஷங்களில் அனுஷ்டானத்திற்குக் கொண்டு வரப்பட்ட எல்லாச் சீர்திருத்தங்களும் வெறும் அலங்காரார்த்த மாகவே யிருக்கின்றன. இவற்றுள் ஒவ்வொன்றும் முதலிரண்டு உயர்ஜாதி ஜனங்களுக்கானவையே யொழிய ஏனையோர்க்கு ஒரு சிறிதும் சம்பந்தங் கொண்டவையல்ல. உதாரணமாய் விதவா விவாகத்தை யெடுத்துக் கொண் டால், அது நூற்றுக்கு எழுபது பேருக்கு மேலுள்ள இந்திய ஸ்திரீகளுக்குக் கொஞ்சமும் சம்பந்தப்பட்டதல்ல. இவ்விஷயங்களெல்லாம் இந்தியாவிலுள்ள படித்த உயர்ந்த ஜாதி ஜனங்களுக்குத்தான் ஏற்பட்டவை. இவற்றால் ஏழைப் பொதுமக்கட் கேற்படும் நஷ்டங்களைக் கவனி யுங்கள்! இவர்கள் செய்யும் ஒவ்வொரு முயற்சியும், தங்கள் சொந்த காரியங்களையே கவனிப்பதற்கும் அன்னிய நாட்டினரின் பார்வைக் கேற்றுப்போல் தங்களைச் சீராக அழகுபடுத்திக் கொள்வதற்குமே யாகும். இத் தகைய காரியங்கள் சமூக சீர்திருத்தங்களாகா. எல்லா வற்றிற்கும் அடிப்படையான, மூலகாரணமாக வுள்ள வற்றை நீங்கள் அணுகவேண்டும். இதைத்தான் பூர்த்தி யான சீர்திருத்தமென நான் கூறுகின்றேன். இவ்வடிப் படையான இடத்தில் தீயைமூட்டி மேல்நோக்கி எரிய விட்டு, ஒருமைப்பட்ட இந்திய ஜாதியாகச் செய்யுங்கள். இது அவ்வளவு சுலபமான காரியமல்ல; மிகவும் பிரமாத மான காரியமே. என்றாலும், என் வார்த்தைகளை மனதிற் கொள்ளுங்கள்; அவசரப்படாதீர்கள்; இப்பெருங் காரியம் பல நூற்றாண்டுகளாய் நம்முன் கிடக்கின்றது. இன்றைய தினம், முக்கியமாக இப்பக்கங்களில், புத்த

மதத்தையும் அதன் கொள்கைகளையும் பற்றிப் பிரமாத மாய்ப் பேசுவது ஒரு வழக்கமாய்ப் போய்விட்டது. தற் காலம் தோன்றும் நாட்டினது இழிந்த நிலைக்குக் காரணம் புத்த மதத்தின் பிற்காலத்திய இயக்கங்கள்தாமென்பதை இவர்கள் உணருவதில்லை.

புத்த மதம் நமக்காக வைத்துப் போனதெல்லாம் இதுவே. புத்த மதத்தின் எழுச்சிகளையாவது அதன் வீழ்ச்சிகளையாவது என்றும் படித்துத் தெரிந்து கொள் ளாத மனிதர்களிற் சிலர் புத்த மதமானது, அதனிடத் துள்ள அபூர்வ நீதிகளாலும் கௌதம புத்தரது ஆச்சரிய கரமான சக்தியாலுமே பரவிற்றென்று எழுதியிருக்கும் சில புத்தகங்களை நீங்கள் படிக்கிறீர்கள். புத்தர் பெருமா னிடம் எனக்கு அத்யந்த பக்தியும் மரியாதையும் உண்டு. ஆயினும் நான் சொல்வதைக் கவனியுங்கள். புத்த மதம் பரவியதற்கு அதனின் கொள்கைகள், அவருடைய சக்தி இவைகளைவிட, அவர் உயிர் நீத்தபின் வெகுகாலம் கழிந்து ஆங்காங்கு கட்டப்பட்ட பெரிய கோயில்களும், அவற் றுள் பிரதிஷ்டை செய்யப்பட்ட விக்கிரஹங்களும், நாட்டில் பலவிடத்தும் செய்யப்பட்டு வந்த சிறப்பான கர்மானுஷ்டானங்களும் சடங்குகளுமே காரணங்களாகும். இந்தச் சிறப்பான கோயில்களும் வெளிச்சடங்குகளும் ஜனங்களின் மனதைக் கவர்ந்ததுபோல், நீண்டகாலமாய்த் தங்கள் தங்கள் வீடுகளில் தினந்தோறும் தேவர்களுக்கு ஆஹுதி கொடுக்க வேத முறைப்படி அமைக்கப்பட்ட தங்களுடைய சிறு ஹோமகுண்டங்கள், அவ்வளவு திருப் தியை யுண்டாக்கவில்லை. ஆதலின், ஜனங்கள் பழையன விடுத்து நவீன முறையைக்கொண்டு இவ்விதமே புத்த மதத்தினராக மாறினர். நாட்கள் ஆக ஆக யாவும் சீர் கெடலாயின. அது முற்றிலும் அஸம்பாவிதமாய் விட்டது. இதைப்பற்றி இக்கூட்டத்தில் பேசவும் என்

றல் கூடவில்லை. ஆனால் அதை யறிய விரும்புவோர் தென்னிந்தியாவிலுள்ள பெரிய கோயில்களிற் காணப் படும் சித்திரவேலைகளைப் போய்ப் பார்த்தால் இதன் உண்மை விளங்கும். பிற்காலத்திய புத்த மதத்தினரிட மிருந்து நாம் பெற்ற பூஷணமெல்லாம் இத்தன்மையதே. பிறகு பெரிய சீர்த்திருத்தக்காரர்களான ஸ்ரீ சங்கராசாரி யரும் அவரின் சீடர்களும் தோன்றினர். அவர் தோன்றி யது முதல் இற்றை நாள் வரையும் இந்திய மக்களிடத்தே மறுபடியும் மெதுவாக அப்பழைய வேதாந்த மதத்தின் புனிதமான, மாசில்லாத, பரிசுத்தத் தன்மை பரவி வரு கின்றது. இப்பெரியோர்களுக்கும் நாட்டிடத்திருந்த கொடுமைகள் நன்றாய்த் தெரியும். எனினும், மக்களை யொருநாளும் அவர்கள் கண்டித்தாரில்லை. "உங்கள் முறைகளெல்லாம் முற்றும் பிசகானவை. நீங்கள் அவற்றை விட்டொழித்து விடவேண்டும்" என்று இவர் கள் சொல்லவில்லை; ஒரு நாளும் இல்லை. இன்று டாக்டர் **பரோஸ்** என்ற எனது நண்பரொருவர் கிறிஸ்தவ மத மானது **கிரேக்க ரோமன்** மதானுஷ்டானங்களையும் அவற்றின் செல்வாக்குகளையும் முந்நூறு வருஷங்களுக் குள் மாற்றிவிட்டதாகச் சொல்லுகிறாரென்று அறியலா னேன். இவ்வார்த்தைகள், ஐரோப்பா, கிரீஸ், ரோம் முதலிய நாடுகளை நேரிற்கண்ட மனிதர் ஒருவரின் வார்த்தைகளல்ல வென்பது நிச்சயம். கிரேக்க ரோமன் மதச் செல்வாக்குகள் அங்கு இன்றளவும் இருந்தே வரு கின்றன. பிராடெஸ்டெண்டு தேசங்களிற்கூட பழைய தெய்வங்களே வேறு பெயர்களைக் கொண்டு புது மாதிரி யாக வருகின்றன. அவர்கள் பெயர்களை மாத்திரம் மாற்றி விடுகிறார்கள். பழைய தேவர்கள் ஞானிகளாகவும், தேவி கள் **மேரி**களாகவும் மாறிவிடுகின்றனர். முன்னே நடந்த அனுஷ்டானங்களும், சடங்குகளும் புதுப்பெயர் கொண்டு

இன்று நடக்கின்றன. **பாண்டிபெக்ஸ் மாக்ஸிமஸ்** என்ற பழைய பெயர்கூட இன்று அங்கே காணப்படுகிறது. ஆகவே, மதத்திருத்தங்களை முற்றிலும் மாற்றிப் புதிதாக அமைத்து விடுவதென்பது எந்நாளும் முடியாத காரியமென்பதை இது ருஜூபிக்கின்றது. அவைகள் ஜனங்களால் சுலபமாய் ஒப்புக்கொள்ளப் படுவனவல்ல. சங்கராசாரியார் இதை யறிந்திருந்தார்; ராமானுஜரும் இதை யறிந்தவரே. ஆகையால் அவர்கள் செய்யக் கூடியதாயிருந்த ஒரே வழி யெதுவெனில், நடைமுதலிலிருக்கும் மதாசாரங்களை மேலான நோக்கத்திற்கு மெதுவாகக் கொண்டு வருவதேயாகும். (முன் கண்ட) மற்றொரு (அடியோடு மாற்றும்) வழியைப் பின்பற்ற அவர்கள் முனைந்திருந்தால் அவர்கள் பெரிய கபடர்களாயிருந்திருப்பர். ஆத்மாவானது தாழ்ந்த நிலையிலிருந்து பல படிகளின் வழியாய் உயர்ந்த நிலைக்கேகும் வளர்ச்சி மார்க்கத்தையே ஒட்டியதாக அவர்களின் மதக் கோட்பாடுகள் இருந்தன. ஆதலால் அவைகள் அவசியமாகவும் உதவியாயும் இருந்தன. இங்ஙனமிருக்கக் கண்டனம் செய்யவேண்டிய அவசியம் என்ன?

விக்கிரஹ ஆராதனை மிகவும் தப்பான காரியமென்று சொல்வது இந்நாளில் ஸர்வ சாதாரணமாய் விட்டது; ஒவ்வொரு மனிதனும் சற்றும் நிதானித்துப் பார்க்காமல் அதை உடனே ஒப்புக்கொண்டு விடுகிறான். ஏன், நானும் அப்படி நினைத்ததுண்டு. இக் குற்றத்திற்காகவே விக்கிரஹ ஆராதனையிலிருந்தே எல்லா மேன்மைகளையும் அடைந்த ஒரு மனிதரின் பாதங்களிற் பணிந்து அவரடியிலே உட்கார்ந்து நான் உபதேசத்தைப் பெறவேண்டியவனானேன். இங்கே நான் குறிப்பிடுவது ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரைப் பற்றியே. இந்துக்களே! விக்கிரஹ ஆராதனையிலிருந்து இத்தகைய பரமஹம்ஸர்கள்

தோன்றி யிருக்கின்றனரென்றால் நீங்கள் வேண்டுவது எது? விக்கிரஹ ஆராதனையா? அல்லது சீர்திருத்தக் காரர்கள் கொள்கைகளா? பதில் சொல்லுங்கள்! விக்கிரஹ ஆராதனையால் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரை யுண்டாக்கக் கூடுமானால், நீங்கள் இன்னும் ஆயிரம் விக்கிரஹங்களை வைத்துக் கொண்டால்தான் என்ன? இறைவன் உங்கட்குத் துணைபுரிவாராக. உங்களாலான எவ்வழியிலேனும் இத்தகைய சீரிய நிலையினரை உண்டாக்குமின்! 'விக்கிரஹ ஆராதனை' கண்டிக்கப்படுகிறது!—ஏன்! ஏனென்று கேட்டால் ஒருவரும் அறியார். சில நூற்றாண்டுகளுக்கு முன்னால் யூத வம்சத்திற்றோன்றிய எவனோ ஒருவன் அதைக் கண்டித்தானாம்; அதாவது, தானுதரித்த விக்கிரஹங்களைத் தவிர மற்ற ஒவ்வொருவருடைய விக்கிரஹங்களையும் அவன் கண்டித்து விட்டான்! ஏதாவது ஓர் அழகான உருவத்திலேயோ அன்றி விக்கிரஹத்திலேயோ பகவான் இருப்பதாக பாவிப்பதென்றால் அது மிகவும் கொடுமையானதாம்; வெகு பயங்கரமானதாம்; கொடிய பாபச் செயலாம்! ஆனால், இரு பக்கங்களிலும் இரண்டு தேவதூதர் உட்கார, மேலே மேகமானது வந்து குவிய (இவ்வளவு ஆடம்பரத்துடன்) ஆண்டவன் ஹிருதயத்தில் இருப்பதாக பாவிப்பதென்றால், அதுவே மேலானதாம், தெய்வீகம் பொருந்தியதாம், எல்லாவற்றிலும் தூய்மையானதாம்! ஆண்டவன் ஒரு புரு வடிவாய் வந்தால், அது தூய்மையானவற்றுளெல்லாம் தூய்மையானது! ஆனால் இறைவன் ஒரு பசுவின் வடிவாய் வருவதென்றாலோ, அது அறியாதவர்களின் வெறும் மூடபக்தியே; அதைக் கண்டித்தொழித்து விடு! இப்படித்தான் உலக நடையிருந்துவருகிறது. இதனாற்றான் "எவ்வளவு அறிவீனரா யிருக்கின்றனர் மானிடர்!" என்று கூறுகிறார் ஒரு கவி.

இதனாற்றான் தன்னைப்போல் பிறரையும் பாவித்து அவரவர்களின் நிலைக்கேற்றவாறு விஷயங்களைச் சீர் தூக்கிப் பார்ப்பதென்பது அருமையா யிருக்கின்றது. இதுவே ஜன சமூகத்தின் கொடுமைகளுள் தலை சிறந்தது. இதுவே எங்கும் தோன்றுகிற துவேஷம், பொறாமை, சச்சரவு, யுத்தம் முதலிய எல்லாத் தீமைகட்கும் காரண மாகும். சிறுவர்களே! ஏ மீசை முளைத்த சிசுக்களே! ஒருநாளும் இச்சென்னையை விட்டு வெளிப்போகாத நீங்கள், எழுந்து நின்று, பாரம்பரியமாய் வந்த ஆயிரக் கணக்கான ஆசாரங்களைக்கொண்டுள்ள இம்முப்பத்து முக்கோடி ஜனங்களுக்கும் புதிய விதிகளை நிர்ணயிக்கப் புறப்பட்டு விட்டீர்கள்! உங்களுக்கு வெட்கமில்லையா? இம்மடமையை விட்டு இப்பொழுதே விலகுங்கள். உங்கள் பாடங்களை நீங்கள் முதலில் கற்றுக்கொள் ளுங்கள். ஒழுக்கமிலாச் சிறுவர்காள்! கடுதாசியில் ஏதோ சில வரிகளைக் கிறுக்கிவிட்டு அதை ஒரு மடையனைக் கொண்டு அச்சேற்றி வெளியிட்டு விடுவதாலேயே, இவ் வுலகத்துக்கெல்லாம் போதிக்கக்கூடிய ஆசிரியர்களாகி விட்டதாக நினைத்துக் கொள்ளுகிறீர்கள்! நீங்கள் சொல் வதே இந்தியாவின் பொதுஜன வாக்கென்று எண்ணு கிறீர்கள் போலும்!—அப்படித்தானே!

இச் சென்னையிலுள்ள சீர்த்திருத்தக்காரர்களிடம் எனக்கு மிகுந்த மரியாதையும் அன்பும் உண்டு. தங்கள் நாட்டினிடமும், ஏழை ஜனங்களிடமும், தாழ்த்தப்பட்ட மக்களிடமும் அவர்கள் கொண்டிருக்கும் அன்பிற்காக இச்சென்னைச் சீர்த்திருத்தக்காரர்களிடம் நான் மிகுந்த மதிப்பையும் அத்யந்த அன்பையும் கொண்டுள்ளேன். ஆனால் சகோதர வாஞ்சையோடு அவர்களுக்கு யான் சொல்லக்கூடியது என்னவென்றால், அவர்கள் கொண் டுள்ள முறையானது தப்பென்பதே. நூற்றுக்கணக்கான

வருடங்களாய் அம்முறை அனுஷ்டிக்கப்பட்டிருக்கிறது. சிறிதும் பயனில்லே. ஆகவே இப்பொழுது ஒரு புது முறையைக் கண்டுபிடிக்க நாம் முயலுவோம். இந்தியாவிலே சீர்திருத்தக்காரர்கள் தேவையாயிருந்த காலம் எப்பொழுதாவதுண்டா? இந்திய சரித்திரத்தை நீங்கள் படித்திருக்கிறீர்களா? சங்கரர் யார்? ராமானுஜர் யார்? சைதன்னியர் யார்? கபீர் யார்? தாது யார்? ஒருவர் பின் ஒருவராய், முதன்மை பெற்ற சிறப்பு வாய்ந்த நக்ஷத்திரக் குழாமெனத்தோன்றிய இவ்வாசாரியர்கள் யார்? தாழ்ந்த வகுப்பாரிடம் ராமானுஜர் இரக்கங் கொள்ளவில்லேயா? அவர் தமது வகுப்பாருடன் பறையர்களேயும் சேர்த்துக் கொள்ளத் தம் ஆயுள் நாளளவும் முயன்று வரவில்லேயா? மகம்மதியரையும் அவ்வாறு சேர்த்துக்கொள்ள முயலாதொழிந்தனரோ? நானக் என்பார் இந்துக்களோடும், மகம்மதியர்களோடும் கலந்து நாட்டிற் புதியதொரு நிலேமையை யுண்டாக்கவில்லேயோ? அவர்களெல்லோரும் இவ்வாறே முயன்றனர். அவர்களாற் செய்யப்பட்ட அரிய வேலே இன்றளவும் நடந்தே வருகின்றது. அவர்கள் தற்காலச் சீர்திருத்தக்காரர்களேப்போல் வீண் ஆடம்பரங்கள் செய்து பெருமை பேசிக் கொள்ளவில்லே. இன்றைய சீர்திருத்தக்காரர்கள் செய்வதுபோல் அவர்கள் எப்பொழுதும் பிறரைச் சபித்தது கிடையாது. ஆசீர்வாதங்களே அவர்களின் வாய்களினின்றும் சதா ஒலித்துக் கொண்டிருந்தன. அவர்கள் ஒருநாளும் கண்டனம் செய்திலர். சமூகமானது எப்பொழுதும் வளர்ச்சி யடைய வேண்டுமென்பதையே ஜனங்களிடை உரைத்துவந்தனர். நாட்டின் பண்டைய நிலேதனே நோக்கி யுணர்ந்தவராய் "ஓ இந்துக்களே! நீங்கள் செய்துவந்தனவெல்லாம் நல்லனவே; ஆயின் சகோதரர்களே! இனி அதைவிட இன்னும் மேலான காரியங்களேச் செய்வோம். நீங்கள்

நல்லவர்களாகவே இருந்து வருகிறீர்கள்; இப்பொழுதோ நாம் இன்னும் மேலானவர்களாவதற்கு முயலுவோம்" என்றே கூறினர். இதிலுள்ள அளவற்ற வித்தியாசத்தைக் கவனியுங்கள். நம்து இயற்கைக் கொத்த வழிகளிலன்றே நாம் முன்னேறவேண்டும். அன்னிய தேசத்து ஜனங்களால் நமக்குக் காட்டப்படும் புதிய வழிகளில் நமது ஆசாரங்களைத் திருத்தப் பிரயத்தனப் படும் செய்கைகளனைத்தும் வீணானவையே. அது முற்றுப் பெருத காரியம்; அவ்விதம் எந்நாளும் நடைபெருதென்பது திண்ணம். நாம் திருந்தி, முற்றிலும் மாறி இதர தேசத்தினரைப்போல் ஆவதென்பது முடியாத காரியம். இங்ஙனம் அருளிய ஈசனை நாம் போற்றுவோமாக. இதனுல் அன்னியரின் சமூக ஏற்பாடுகளை நான் கண்டிக்க வரவில்லை. அவைகள் அவர்களுக்கு ஏற்றவைகளே; ஆனுல் நமக்குச் சிறிதும் பொருந்தா. அவர்களுக்கு அமிருதமாயிருப்பது நமக்கு விஷமாயிருக்கலாம். இதை நாம் முதலில் உணரவேண்டும். அவர்களின் சாஸ்திர ஆராய்ச்சிகளுக்கும், அவர்களின் சமூக ஏற்பாடுகளுக்கும், அவர்களின் பரம்பரையான கொள்கைகளுக்கும் ஏற்றவாறு அவர்கள் தற்கால நிலையை யடைந்திருக்கின்றனர். நாமோ, நமது புராதன அனுஷ்டான முறைகளுக்கும் ஆயிரக்கணக்கான வருஷங்களாய் இயற்றிவரும் கர்ம பலன்களுக்கும் ஏற்றவாறு, நமது சொந்த வழியிலேயே, நமதியற்கைக்கொத்த முறையிலேயே தான் விருத்தியடையவேண்டும். எக்காலத்தும் அதனையொட்டியே நாம் நமது காரியங்களைச் செய்ய வேண்டும்.

பின் எனது முறை எது? நமது பழைய பெரியோர்களான ஆசாரியர்களின் கொள்கைகளைப் பின்பற்றுவதே எனது முறை. அவர்கள் செய்துவந்த வேலையை யான்

நன்ருய்ப் படித்துணர்ந்திருக்கிறேன். அவர்களனுசரித்த மார்க்கத்தைக் கண்டு பிடிக்கும் பேற்றையும் நான் பெற்றிருக்கிறேன். சமூகங்களை ஏற்படுத்தியவர் அம்மகான்களே. சமூகங்களுக்குப் பலத்தையும், தூய்மையையும், உயிரையும் தந்த பெரியோர் அவர்களே. அவர்கள் மிகவும் ஆச்சரியமான காரியங்களைச் செய்திருக்கின்றனர். நாமும் அம்மாதிரியே இன்னும் ஆச்சரியமான வேலைகளைச் செய்தல்வேண்டும். தற்கால நிலையும் சந்தர்ப்பங்களும் சிறிது மாறுபாடடைந்திருக்கின்றன. அதற்கேற்ருற்போல் நமது வேலை முறையையும் சிறிதளவே மாற்றிக் கொள்ளவேண்டும்; அவ்வளவுதான். மனிதர்களின் மனப்போக்கானது எவ்விதம் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருக்கின்றதோ, அவ்வாறே தேசீய சமூகங்களும் தனித்தனியே வெவ்வேருன முக்கிய நோக்கங்களைக் கொண்டனவாயிருக்கின்றன. ஒரு தேசமானது இங்கிலாந்தைப்போல், ராஜீய பலத்தையே முக்கிய நோக்காய்க் கொண்டு அதற்கேற்றபடி நடந்துகொண்டு வருகிறது. மற்ருென்ருே சௌக்கியமான லௌகீக வாழ்க்கை முக்கியமாகக் கொண்டிருக்கிறது. இம்மாதிரியே எல்லா நாடுகளும் வெவ்வேறு லக்ஷியங்களைக் கொண்டிருக்கின்றன. நமது இந்தியாவிலோ மதமே முக்கியமானது. மற்றதெல்லாம் இத்தெய்வீக வாழ்க்கைக்கு அனுகுணமானவைகளே. எந்த சமூகமானது நூற்றுக்கணக்கான வருஷங்களாய் அனுசரித்து வந்த தனது முக்கிய லக்ஷியத்தினின்றும் மாறுகிறதோ, அந்தச் சமூகம் உடனே நசித்துப் போகும். ஆகையால் நீங்கள் உங்கள் மதத்தைத் தூர எறிந்துவிட்டு ராஜ்ய தந்திரத்தையோ, சமூக ஏற்பாடுகளையோ, அன்றி வேறெந்த விஷயத்தையோ உங்கள் தேசீய வாழ்க்கையின் முக்கிய நோக்கமாக எடுத்துக்கொள்ள முயலுவீர்களாருல் அந்த க்ஷணமே

நீங்கள் அழிந்து விடுவீர்கள். இவ்விதம் அழிந்துபோகாம லிருக்க வேண்டுமானால் நீங்கள் எக்காரியத்தையும் எல்லா வேலைகளையும் மத சம்பந்தமாகவே செய்தல் வேண்டும். உங்கள் எல்லா நாடி நரம்புகளும் இம்முக்கிய நோக்கத்திற் கொத்த வழியிலேயே துடிப்பதாக. மதமே உங்கள் முதுகெலும்பாக இருக்கட்டும். அமெரிக்காவில், அதனால் எவ்வெவ் வழியில் சமூக ஏற்பாடுகளுக்கு நன்மை யுண்டாகுமென்பதை எடுத்துக் காட்டாமல் அவர்களுக்கு மதத்தைப் போதிக்க முடியவில்லை யென்பதை நான் கண்டிருக்கிறேன். வேதாந்தத்தினால் எப்படி ராஜீய விஷயங்களில் ஆச்சரியமான மாறுதல்களை அடையக் கூடுமென்பதைக் காட்டாமல் இங்கிலாந்தில் மதத்தைப் போதிக்க என்னால் கூடவில்லை. அதுபோலவே, இங்கே, இந்தியாவில் சமூகச் சீர்திருத்தங்களை, இப்புதுத் திருத்தங் களால் எவ்வாறு இன்னும் மேலான தெய்வீக வாழ்க் கையைக் கொள்ள இயலுமென்பதைக் காட்டியே போதித்தல் கூடும். ராஜீய விஷயங்களையோ, அவற்றால் இத்தேசத்தின் இன்றியமையாதனவான பாரமார்த்திக வழிகள் எப்படி விருத்தியடையும் என்பதைக் காட்டுவ தாலேயே போதிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு மனித னுக்கும் தனித்தனி சொந்த நோக்கமிருப்பது போலவே ஒவ்வொரு சமூகத்துக்கு முண்டு. நீண்ட காலத்துக்கு முன்பே நமது நோக்கமானது இன்னதெனத் தீர்மானிக் கப்பட்டிருக்கிறது. எக்காலத்தும் அதையே நாம் கைக் கொள்ளவேண்டிய தவசியம். அது அவ்வளவாகக் கெட்ட தொரு நோக்கமல்ல. இவ்வுலகத்தில் பொருளை நினைப் பதை விடுத்து தெய்வ அருளை சிந்தித்திருப்பது ஒரு கெட்ட நோக்கமா? மனிதனைவிட்டு தெய்வமே சத்திய மெனக் கொள்வது அவ்வளவு இழிந்த நோக்கமா? இவ் வுலக வாழ்க்கையில் தீவிரமான வெறுப்பும், மோக்ஷ

மெனும் அவ்வுலகத்தே அவ்வளவு தீவிரமான திட நம்பிக் கையும், அவ்வளவு மேலான தியாக பலமும், இறைவ னிடம் அவ்வளவு பக்தியும், அழிவற்ற பரமாத்மாவி னிடத்து அளவில்லாத நம்பிக்கையும் பல நூற்றுண்டு களாய் உங்களிடம் இருந்து வருகின்றன. உங்களுள் எவரேனும் அவற்றை விட்டு விடுங்கள் பார்க்கலாம்! ஒருவராலும் முடியாதென நான் உறுதியாய்க் கூறு கிறேன். அறியாமையின் காரணமாய்ச் சில மாத காலம் நாஸ்திக வாதம் பேசி, அதனுல் நீங்கள் வெறும் லௌகிகர்களாய் மாறிவிட்டதாய்க் கூறி என்னை ஏய்க்கப் பார்க்கலாம். ஆனுல் உங்கள் நிலை இன்ன தென்பதை நான் நன்ருய் அறிவேன். நீங்கள் லௌகீக வாழ்க்கையை ஒரு சமயம் கைக் கொள்ளுவீர்கள். மறுபடியும் தீவிரமான ஆஸ்திகர்களாய் மாறி விடுவீர்க ளென்பது நிச்சயம். உங்களது இயற்கையை நீங்கள் எவ்விதம் மாற்றிக்கொள்ள முடியும்? ஒருநாளும் முடியாது.

ஆகவே இந்தியாவில் எவ்வழியில் முன்னேற்ற முண்டாக வேண்டுமானுலும், முதன் முதல் மதமானது வெகுவாய் உயர்த்தப்படவேண்டும். ராஜீய ஞானத்தை யும் சமூகச் சீர்த்திருத்தங்களையும் இந்தியாவில் பரப்ப வேண்டுமென்று நீங்கள் நினைத்தால், முதலில் நாட்டை தெய்விகமான ஆத்மார்த்திக விஷயங்களால் நிரப்புங்கள்! இதுவே முதல் முதல் நடைபெறவேண்டிய காரியமாகும்! முக்கியமாய் நாம் முதலிற் செய்யவேண்டிய வேலை எது? ஒரு சில ஜனங்களிடம் மறைந்து கிடக்கும் நமது சுருதிகள், உபநிஷத்துக்கள், புராணங்கள் முதலியவை களிற் பொதிந்து விளங்கும் ஆச்சரியகரமான உண் மைகளை வெளிப்படுத்தி நாடு முழுதும் பரவும்படி செய்யுங்கள்! தேச முழுவதும், வடகோடியிலிருந்து தென்

கோடிக்கும், கிழக்கு முனையிலிருந்து மேற்கு முனை வரையிலும் இமயம் முதல் குமரி வரையிலும், சிந்து முதல் பிரம்மபுத்திரா வரையும் உள்ள எல்லாப் பாகங்களிலும் பரவும்படிப் பிரசாரம் செய்யவேண்டும்! ஒவ்வொருவரும் இவ்வுண்மைகளை அறிதல் அவசியம். ஏனென்றால் "இது முதலில் கேட்கப்படவேண்டும்; கேட்டபின் அதைப் பற்றிச் சிந்தித்தல் வேண்டும்; பின்பு தியானம் செய்ய வேண்டும்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் ஜனங்கள் முதலில் இதைக் கேட்கட்டும். தங்களுடைய சொந்த சுருதிகளிலுள்ள மேலான உண்மைகளை ஜனங்கள் கேட்குமாறு செய்பவர் எவராயினும், இன்று மகா கீர்த்தி வாய்ந்ததொரு கர்மாவைச் செய்தவராவர். இதற்கு இணையான வேறொரு கர்மாவே கிடையாது. இக்கலியுகத்திலே ஒருவன் முக்தி யடைவதற்கு வேண்டிய வழி ஒன்றுதான். மற்ற யுகங்களிற் செய்யவேண்டிய பெரிய யாகங்கள், கொடிய தவங்கள் முதலியவைகள் இக்காலத்தில் வேண்டியதில்லை. ஆனால், ஒரே ஒரு கர்மா இருக்கிறதென்று மனு கூறியுள்ளார். அதுதான் ஈகை அல்லது தானம். அதிலும் கொடுக்கக் கூடிய எல்லா தானங்களிலும் உத்தமமானது ஆத்ம ஞானத்தை யளிக்கும் மேலான வித்யா தானமே. அடுத்துவருவது லௌகீக அறிவைக் கொடுக்கும் தானமாகும். அதற்கடுத்தது ஓர் உயிரைக் காப்பாற்றுவதாகும். நான்காவது அன்ன தானம். மனு இவ்விதம் உரைத்துப் போந்தார்; ஜனங்களும் இன்னும் அதன்படி நடந்து வருகின்றனர். இந்த அபூர்வமான தர்ம குணம் வாய்க்கப் பெற்ற உங்கள் ஜாதியைப் பாருங்கள். இவ்வெளிய வறுமை நிறைந்த நாட்டின்கண் எவ்வளவு தர்மங்கள் ஆங்காங்கு நடக்கின்றனவென்பதைக் கவனியுங்கள். நாட்டின் விருந்தோம்பும் குணந்தானென்னே! ஒரு மனிதன் தன் நண்பர்

களுடன் கூட விருக்குங்கால் எவ்வளவு நன்மை யடை வாரோ அதைவிட அதிகமாய் உயர்ந்த எல்லா நலங் களுடனும் நாட்டின் ஒரு முனையிலிருந்து மற்றொரு முனைக்குச் செல்லக்கூடிய அவ்வளவு தயாளம் இந் நாட்டிலன்றி வேறெங்கும் காணீர்! ஓர் கவளம் உணவு இருக்கும் வரையும் பிச்சைக்காரர்கள் பட்டினி கிடக்காத இந்த நாட்டின் ஈகைத் தன்மையைப் பாருங்கள்!

ஈகையுளெல்லாம் தலையதாகிய பாரமார்த்திக ஞானத் தைப் பரவச் செய்வதில் உள்ள ஓர் ஊக்கத்தைப் பற்றி ஈண்டு சில வார்த்தைகள் கூறுகிறேன். ஆத்ம ஞானத்தின் வியாபகமானது இந்திய நாட்டின் எல்லைக் குள் மாத்திரமே இருக்கும்படி மட்டுப்படுத்துதல் கூடாது. அஃது உலக மெங்கணும் பரவுதல் வேண்டும். அங்ஙனமே இதுகாறும் நடந்து வந்திருக்கிறது. இந்தியா வின் மேலான எண்ணங்கள், உயர்ந்த தத்துவங்கள் எக்காலத்தும் இந்தியாவை விட்டு வெளி நாடுகளுக்குச் சென்றதில்லை என்றாவது, அன்னிய நாடுகளுக்கு உபதேசம் செய்வதன் பொருட்டு முதல் முதலில் வெளி யேறிச் சென்ற சன்னியாசி நான்தான் என்றாவது எவரேனும் உங்கட்குரைப்பரேல் அவர்கள் தங்கள் நாட்டின் சரித்திரத்தை அறியாதவரேயாவர். எவ்வெக் காலங்களில் உலகமானது இத்தகைய உதவியை வேண்டி நின்றதோ, அவ்வக் காலங்களிலெல்லாம் இந்தியாவி னின்றும் என்றுமழியாத் தெய்வீக ஊற்றானது பொங்கி யெழுந்து, முழு உலகத்தையும் வெள்ளமாக்கி யிருக் கிறது. உலகத்தில் ராஜீய ஞானத்தைப் பரவச் செய்த காலங்களிலெல்லாம், அதற்காக யுத்த பேரிகைகளை முழக்கி ஏராளமான சைன்யங்களைத் திரட்டி மிகுந்த அமளியுடன் பல பாகங்களுக்குக் கொண்டுபோக

வேண்டி யிருந்தது. தீயையும், வாளையுங் கொண்டே லௌகீக ஞானத்தையும் சமூக அறிவையும் சில சமயங் களில் (ஜனங்களைத் துன்புறுத்திப்) பரவும்படி செய்திருக் கிறார்கள். ஆனால் ஆத்மீய ஞானமோ எவ்வித ஆடம் பரமுமின்றி மௌனமாகவே போதித்தல் கூடும். அஃதோ, கண்ணுக்குப் புலப்படாமலும், செவிக்குக் கேளாதபடியும், அவ்வளவு மெலினமாய்ப் பூமியில் விழுந்து ஏராளமான ரோஜாப் புஷ்பங்களை மலரச் செய்யும் பனியை நிகர்த்தது. இவ்விதமே இந்தியாவானது அடிக்கடி பல சமயங்களில் உலகத்திற்கு ஆத்ம ஞானத்தை யளித்து வந்திருக்கின்றது. பிற நாடுகளை ஜெயிக்கும் வல்லமைபெற்ற ஒரு ஜாதியினர் புறப்பட்டு உலகத்திலுள்ள பல தேசங்களையும் ஒன்றாகப் பிணைத்து ஒன்றுக்கொன்று சம்பந்த முண்டாகும்படி போக்கு வரவுக்கு வேண்டிய பல வழிகளை ஏற்படுத்திய காலங் களிலெல்லாம், இந்தியாவும் உடனே எழுந்து உலகத்தின் முன்னேற்றத்தையும் நலத்தையுங் கருதி, தனது பங்காகிய ஆத்ம ஞானத்தை எல்லா நாட்டினருக்கும் அளித்து வந்திருக்கிறது. வெகு காலத்திற்கு முன்பே இந்தியா இவ்வாறு செய்தது; புத்தர் பிறந்த பின்பும் ஒரு முறை நிகழ்ந்தது; இதற்கு சாக்ஷியங்கள் சைனா தேசத் திலும், ஆசியா மைனரிலும், மலேயா தீபங்களின் மத்தி யிலும் இன்றைக்கும் காணப்படுகின்றன. கிரீஸ் தேசத்து மஹா வல்லமை படைத்த ஜெயசீலனான அலெக் ஸாந்தர் ஒரு சமயம் அக்காலத்திய உலகத்தின் நாலா பக்கங்களையும் ஒன்று சேர்த்த காலத்தில் இவ்வாறு நடந்தது. அக்காலத்தில் இந்தியாவின் ஆத்ம ஞான மானது உலகம் முழுவதும் பரவி வெள்ளக் காடாக்கியது. இதுகாலை மிகவும் பெருமை வாய்ந்ததென்று டம்பமாய்ப் பேசிக்கொள்ளும் ஐரோப்பிய நாகரீகமானது, அவ்வாத்ம

ஞான வெள்ளத்தின் ஒரு சிறு துளியால் ஏற்பட்ட பயனேயாகும். அதே சந்தர்ப்பம் இப்பொழுது மறுபடியும் தோன்றி யிருக்கிறது. ஆங்கிலேயர் தமது பலத்தால் இதற்குமுன் ஒரு காலத்திலும் இல்லாதபடி, இப்பொழுது உலகத்திலுள்ள பல தேசங்களையும் ஒன்றுபடுத்தி யிருக்கின்றனர். உலகத்தின் ஒரு முனையிலிருந்து மற்றொரு முனைக்குப் போகக் கூடியவாறு, பல சாலைகளையும் வழிகளையும் உண்டாக்கி யிருக்கிறார்கள். ஆங்கிலேயரின் திறமையால், இன்று உலகமானது இதற்கு முன் என்றுமில்லாத விதமாய் ஒன்று சேர்க்கப்பட்டிருக்கிறது. இன்றைய தினம் எங்கும் நிர்மாணிக்கப்பட்டிருக்கும் வியாபார ஸ்தலங்களைப் போல், சரித்திரமேற்பட்ட நாள்முதல் இதுவரையிலும் என்றும் இருந்ததாகத் தெரியவில்லை. எனவே, தெரிந்தோ, தெரியாமலோ இந்தியாவானது உடனே எழுந்து ஆத்மஞான விஷயங்களை மழை போல் தானமாகப் பொழிகிறது. இவை மேற்கண்ட பல சாலைகளின் வழியாகவும் ஓடிப் பாய்ந்து உலகத்தின் நான் கெல்லைகளுக்குமுட்பட்ட எல்லா பாகங்களையும் நிரப்ப வேண்டும். நான் அமெரிக்காவுக்குச் சென்றது என் செயலல்ல; அன்றி உங்கள் செயலுமல்ல. இந்தியாவை நலமுறச் செய்துவரும் நம் பாரத மாதாவே என்னை யனுப்பினாள்; என்னைப் போன்ற நூற்றுக்கணக்கான பேர்களை உலகத்தின் எல்லா நாடுகளுக்கும் அனுப்பப் போகிறாள். பூமியிலுள்ள எந்தச் சக்தியும் இதைத் தடுக்க இயலாது. ஆகையால் இது நடந்தே தீரவேண்டும். நீங்கள் உங்கள் மதத்தைப் பரவச் செய்ய இந்தியாவை விட்டு வெளியேறிச் செல்லவேண்டும். உலகத்திலுள்ள ஒவ்வொரு தேசத்திற்கும் ஒவ்வொரு ஜாதியாருக்கும் நீங்கள் உங்கள் மதத்தைப் போதிக்கவேண்டும். ஆத்ம ஞானத்தைப் பரப்புவீர்களானாலும், அத்துடன் லௌகீக

ஞானமாகட்டும், அல்லது நீங்கள் விரும்புவது வேறெந்த ஞானமாகட்டும், எல்லாம் தாமாகவே உண்டாகும்.

இந்நாட்டிலே, நீங்கள் ஆத்மஞானத்தைப் பற்றி அடியோடு மறந்து, லௌகீக ஞானத்தை மாத்திரம் பெற முயற்சி செய்வீர்களாயின், யான் தெளிவாய்க் கூறுகிறேன், நிச்சயமாய் உங்கள் முயற்சிகள் யாவும் வீணாகவே முடியும். அதில் இந்திய ஜனங்களுக்கு ஒருநாளும் பற்றுதல் உண்டாகாது. மிகப் பெரிய புத்த மத இயக்கமும் இங்கே தவறிப்போனதின் காரணங்களுள் இதுவும் ஒன்றாகும். ஆகையால் பிரிய மிகுந்த நண்பர்காள்! எனது முறை யாதென்றால், நம் நாட்டு இளைஞர்களுக்கு நல்ல பயிற்சியைக் கொடுக்கவும், அவர்களை இந்தியாவில் மாத்திரமின்றி அன்னிய நாடுகளுக்கும் சென்று நமது வேதங்களிற் பொலிந்து விளங்கும் அரிய உண்மைகளை மக்கட்குப் போதிக்க வல்லவராய் ஆக்குதற்கும் தகுந்த சங்கங்கள் பல இந்தியாவில் ஸ்தாபித்தல் வேண்டுமென்பதே. இதற்கு வேண்டுவது என்ன? மனிதர்—ஆண்மையுடையோர்—தம் மனச் சாக்ஷிக்கு மாறாய் நடவாத வீரர்தான் தேவை. தீரமும் திட நம்பிக்கையும், சிரத்தையும் உடைய சிறுவர்களே வேண்டும். இத்தகைய வீர வாலிபர்கள் நூறு பேர் முன் வரட்டும்; இவ்வுலகத்தையே தலைகீழாய் மாற்றி விடலாம். இப்படிப்பட்டவர்களின் மனோசக்தி, பிரபஞ்சத்திலுள்ள வேறெதையும் விட, வலிமை படைத்ததாகும். இவர்களின் மனோசக்திக்கு முன்னால் எதுவும் நிற்க முடியாது; பணிய வேண்டியதுதான். ஏனென்றால் வலிமை படைத்த, மாசிலா மனத்தின் சங்கற்பமானது சர்வ சக்தியையும் உடையது. அது இறைவனிடமிருந்தே உண்டானதாகும். இதை நிச்சயமென நம்புங்கள்! தாமதமின்றி உங்கள் நாட்டுச் சகோதரர்களுக்கும்

உலகத்தின் மற்றெல்லாத் தேசத்தினருக்கும் உங்கள் மதத்தின் மேலான உண்மைகளைப் புகட்டுங்கள்! புகட்டுங்கள்!! இது சமயம் உலகமானது அவற்றை எதிர்பார்த்து நிற்கின்றது. அநேக நூற்றுண்டுகளாய் மக்களிடத்து இழிந்த பிற்போக்கான கொள்கைகளை புகட்டப்பட்டிருக்கின்றன. அவர்கள் மிகவும் தாழ்ந் தவர்களே என்றும், அநேகமாய் எல்லோரும் மனிதர்களே அல்லர் என்றும் உலக முழுதும் சொல்லப்பட்டு வந்திருக் கின்றனர். இத்தகைய தப்பான கொள்கைகளாற் பல நூற்றுண்டுகளாய் பயமுறுத்தப்பட்ட எளியோர், இதன் பயனாய், நாளடைவில் மிருகங்களுக்குச் சமானமாகவே ஆய்விட்டார்கள். ஆத்மாவைப் பற்றிக் கேள்விப்பட ஒருநாளும், அவர்கள் இடங்கொடுக்கப்படவில்லை. ஆத்மா வைப் பற்றி அவர்களைக் கேட்கும்படி செய்யுங்கள். ஆத்மாவானது கடையரிலும் கடையோரான இழிந்தோ ருள்ளும் இருக்கிறதென்பதை அவர்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளட்டும்! பிறப்பிறப்பு இல்லாததும், கத்தியால் குத்த முடியாததும், தீயினுல் எரிக்க வொண்ணுததும், காற்றுல் உலராததும், அழிவில்லாததும், ஆதியந்தமற்ற தும், சர்வ சுத்தமாயும், சர்வ சக்தியுடையதும், சர்வ வ்யாபியாய் விளங்குவதுமான இவ்வாத்மாவைப் பற்றி ஒவ்வொருவரும் காதால் கேட்கட்டும்! ஆகவே ஆத்மா வைப்பற்றி எங்கும் புகட்டுங்கள்! பிரசாரம் செய் யுங்கள்! செய்து, உங்களிடத்திலேயே நீங்கள் நம்பிக்கை யுள்ளவர்களாகுங்கள். உங்களுக்கும் ஆங்கிலேயருக்கும் உள்ள வித்தியாச மென்ன? மதம், கடமை முதலியவை களைப்பற்றி எவ்வளவு வேண்டுமானுலும் பேசட்டும்; ஆனுல் வித்தியாசமின்னதென்பதை நான் அறிந்து கொண்டு விட்டேன். வித்தியாசம் இதுதான்—ஆங்கி லேயன் தன்னிடத்தில் நம்பிக்கை யுடையவன். உங்க

ளுக்கோ உங்களிடத்தில் நம்பிக்கை கிடையாது. தான் இங்கிலீஷ்காரன் என்பதிலும், எதையும் செய்ய தனக்கு வல்லமை யுண்டென்றும் அவன் தீவிரமாய் நம்புகிறுன். இந்த நம்பிக்கையே அவனுக்குப் பூரிப்பையும் அளவற்ற பலத்தையுங் கொடுக்கிறது. தான் நினைத்த காரியம் எதையும் உடனே செய்து முடிக்கிறுன். ஆனுல் உங்களால் ஒன்றும் செய்ய முடியாதென்று வெகு காலமாய்ச் சொல்லப்பட்டும் போதிக்கப்பட்டும் வந்திருக்கிறீர்கள்; எனவே நாளுக்கு நாள் பாழாகிக்கொண்டு வருகிறீர்கள். ஆகையால் அடியோடு ஒழிந்துபோகாமல் நீங்கள் வாழ வேண்டுவதானுல், உங்களிடத்தில் நம்பிக்கை கொள் ளுங்கள். இனி வேண்டுவது யாதெனில், நமது பலத்தைப் பெருக்கிக்கொள்வதே யாகும். நாம் பலவீனர்களாய் விட்டோம்; அதன் பயனுய், ரகஸிய வித்தைகள் (Occultism) போன்ற பல கேவலமான விஷயங்க ளெல்லாம் நம்மிடம் புகுந்து விட்டன. இவைகளில் பெரிய உண்மைகள் இருந்தாலும் இருக்கலாம், ஆனுல் இவை நம்மை அநேகமாய் அழித்துவிட்டன. உங்கள் நரம்புகளை வலிமை பெறச் செய்யுங்கள். இரும்பினை யொத்த தசையும் எஃகுப் போன்ற நரம்புகளுமே இப்பொழுது நமக்கு வேண்டும். வெகு நாட்களாய் அழுது கொண்டிருந்து விட்டோம்; இனி அவ்வழுகை வேண் டாம்! சுய பலங்கொண்டெழுந்து வீரமனிதர்களாய் நில்லுங்கள்! நம்மை ஆண்மை படைத்தவர்களாக்கும் மதமே நமக்கு வேண்டும்! ஆண்மக்களாக்கும் கொள்கை களே நமக்கு வேண்டும்! எங்கும் இவ்வித ஆண்மை பயக்கும் படிப்பே நமக்கு வேண்டும். உண்மை எதுவெனத் தீர்மானிப்பதற்கு இதுதான் பரீக்ஷை. எந்த ஒன்று தேகத்திற்குப் பலவீனத்தைத் தருகிறதோ, எது நமது அறிவையும் மனத்தையும் பலவீனமாக்குகிறதோ அந்த

ஒன்றை உடனே நஞ்செனு ஒதுக்கித் தள்ளுங்கள்! இது உயிரற்றது; இது உண்மை யாகாது. எது பலத்தைக் கொடுக்கிறதோ அதுதான் உண்மை. உண்மை பரிசுத்த மானது. உண்மையே சர்வ ஞானத்தையும் அளிப்பது. ஆகையால் உண்மை என்பது பலத்தைத் தரவேண்டும்; அறிவைப் புகட்டவேண்டும், வீரியத்தைப் பெருக்க வேண்டும். ஏதோ அற்ப அளவு உண்மை இருந்தாலும் ரகஸிய வித்தைகள் எல்லாம் நமக்குப் பலவீனத்தையே தருவனவாகும். எனது வார்த்தைகளை நம்புங்கள்! அதைப்பற்றி எனது முழு ஆயுட்கால அனுபவத்தையே நான் இப்பொழுது கூறுகிறேன். இந்தியாவில் நான் அடி வைக்காத இடம் கிடையாது. அநேக குகைகளுள்ளும் நுழைந்திருக்கிறேன். இமயமலையிலும் வசித்து அங்கே தங்கள் வாழ்நாள் முழுவதும் கழித்த பலபேர்களையும் அறிந்திருக்கிறேன். எனது முடிவான தீர்மானம் இது தான். முன்சொன்ன ரகஸிய வித்தைகள் யாவும் நமது வலிமையைக் குறைப்பனவேயாகும். எனது தேசத்தாரை நான் மிகவும் அன்பாய் நேசிக்கிறேன். இப்பொழுதிருக்கும் உங்கள் வலிமையற்ற நிலைமையையும், நாளுக்கு நாள் வீணாய்ப் பிற்போக்கடைந்து வருவதையும் பார்க்க என்னால் சகிக்க முடியவில்லை! இனியும் அவ்வாறு நீங்கள் துர்ப்பலத்தினராவதை நான் பார்க்கமுடியாது! ஆகை யால், "போதும், போதும்!" என்று கூவி, க்ஷீணித்துவரும் எனது நாட்டினர் நன்னிலையை யடைவதற்காக, உங்கள் பொருட்டும், உண்மையின் பொருட்டும் இப்பொழுதே என் குரலை உயர்த்திப் பேசக் கடமைப்பட்டிருக்கிறேன். இப்பொழுதுள்ள நிலையோடேனும் நில்லுங்கள்! ஆண்மை யுடனிருங்கள்! உங்கள் உபநிஷத்துக்களைத் திரும்ப வும் அணுகுங்கள். பலவீனத்தைத் தரும் இந்த அற்ப இரகஸிய வித்தைகளை விட்டு விலகி, பிரகாசம் பொருந்தி

யதும், பலத்தைத் தருவதுமான மிக மேலான தத்துவங்களைக் கொண்டு விளங்கும் உபநிஷத்துக்களிடமே திரும்பச் செல்லுங்கள்! இந்த தத்துவ சாஸ்திரத்தையும், இதிலுள்ள சாதாரண உண்மைகளையும் எடுத்துக் கொள்ளுங்கள்! உலகத்திலுள்ள உயர்ந்த உண்மைகளெல்லாம் மிகவும் சாதாரணமானவையேயென்று நான் சொல்வதை நம்புங்கள். நீங்கள் இங்கு இருப்பது எவ்வளவு சாதாரணமானதோ அவ்வளவு சாதாரணமே அவைகளும். உபநிஷத்துக்களிலுள்ள இவ்வுண்மைகள் உங்கள் முன்னால் நிற்கின்றன. அவற்றைக் கடைப் பிடித்து நடவுங்கள். இந்தியாவின் கதிமோக்ஷம் அப்பொழுது புலப்படும்.

இன்னும் ஒரு வார்த்தை; அதனுடன் முடித்துவிடுகிறேன். இன்று தேச பக்தியைப்பற்றி எல்லாரும் பேசுகிறார்கள். தேசபக்தியில் எனக்கு நம்பிக்கையுண்டு. தேசாபிமான விஷயத்தில் என்னுடைய சொந்த நோக்கமொன்றும் என்னிடம் உளது. ஏதேனும் பெரிய காரியமொன்றைச் செய்து நிறைவேற்றவேண்டுமானால் அதற்கு மூன்று விஷயங்கள் மிகவும் அவசியமானவை. முதல் முதல் இருதய பூர்வமான உணர்ச்சி வேண்டும். விவேகத்தினாலும், புத்திசாலித்தனத்தினாலு மாவதென்ன? அவை சிறிது தூரம் சென்று அங்கே நின்றுவிடுகின்றன. அருள் சுரப்பது, ஆர்வமுண்டாவது, இருதயத்தின் மூலமாய்தான். முடித்தற்கரிய காரியங்களை முடிக்கவல்லது அன்புதான். பிரபஞ்சத்திலுள்ள இரகசியங்களெல்லாம் அறிவதற்கு வாயிலா யிருப்பதும் இவ்வன்புதான். ஆகையால் சீர்த்திருத்தக்காரர்களாகவோ, தேசாபிமானிகளாகவோ இருக்க உத்தேசிக்கும் என் சிநேகிதர்காள்! இத்தகைய உணர்ச்சியை நீங்கள் முதலில் கொள்ளுங்கள். உங்களிடம் உண்மையில் இவ்வுணர்ச்சி இருக்கின்றதா?

தேவர்களுடையவும், ரிஷிகளுடையவும் சந்ததியாரான கோடானுகோடி ஜனங்கள் இன்று மிருகங்களுக்குச் சமதையாக அவைகளின் சகோதரர் போன்ற நிலைக்கு வந்து விட்டனரே என்ற உணர்ச்சி உங்களுக்கு இருக்கின்றதா? லக்ஷக்கணக்கான ஜனங்கள் இன்றையதினம் உணவின்றிப் பட்டினியாய்க் கிடக்கிறார்களே! லக்ஷக் கணக்கான ஜனங்கள் பல நூற்றாண்டுகளாய் இப்பட்டினியால் மடிந்து வருகின்றார்களே யென்ற உணர்ச்சி உங்களுக்கு இருக்கின்றதா? அஞ்ஞானமானது இருண்ட மேகம்போல் சூழ்ந்து நாட்டைக் கவிந்துகொண்டு விட்டதே யென்பதை நீங்கள் உணருகின்றீர்களா? அவ்வுணர்ச்சி உங்களை அமைதியற்றவர்களாக்கி விட்டதா? உங்களை நித்திரையற்றவர்களாய்ச் செய்கின்றதா? அது உங்கள் இரத்தத்திற்குள் பிரவேசித்து இரத்தக் குழாய்களின் வழியே சுற்றி உங்கள் இருதயத்தைப் போல் ஓயாது துடித்துக்கொண்டிருக்கின்றதா? அஃது உங்களை அநேகமாய்ப் பித்தர்களாக்கிவிட்டதா? நாட்டின் துக்கம், சீர்கேடு என்ற இவ்வொரே கவலை உங்களைப் பிடித்துக்கொண்டு விட்டதா? அதனால் உங்கள் பெயர், புகழ், பெண்டு பிள்ளைகள், சொத்து சுதந்தரங்கள் எல்லாவற்றையும் மறந்தீர்களா? உங்கள் தேகத்தையுங் கூட மறந்துவிட்டீர்களா? இந்த நிலைக்கு வந்துவிட்டீர்களானால் அதுவே தேசாபிமானியாவதற்கு முதற்படியாகும். நான் அமெரிக்காவிற்குச் சென்றது சர்வ மத மகா சபையை உத்தேசித்தல்ல வென்பது உங்களிற் பெரும்பாலோருக்குத் தெரியும். என்னிடம், என் இருதயத்திற் புகுந்திருக்கும் இவ்வுணர்ச்சிப் பேய்தான், நான் போனதற்குக் காரணம். நான் பன்னிரண்டு வருஷ காலம் இந்தியா முழுவதும் சுற்றினேன். முன்னேற்றத்திற்கான வேலை செய்யும் மார்க்கமொன்றும் புலப்படாத

தனுலேயே அமெரிக்கா சென்றேன். இது அச்சமயம் என்னை அறிந்திருந்தவர்களில் அநேகமாய் எல்லோருக்கும் தெரிந்த சங்கதியே. இந்த சர்வமத சபையைப் பற்றி யாருக்கென்ன கவலை? இங்கே என் சொந்த இரத்தமும் சதையும் நாளுக்கு நாள் நசித்துப் போய்க் கொண்டிருக்கும்போது அவைகளைப் பற்றி யாருக்குக் கவலை?

இவ்வுணர்ச்சி உங்களிடம் இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும், வெறும் வசைமொழிகளிலும் உபயோக மற்ற பேச்சுக்களிலுமே உங்கள் சக்தியை யெல்லாம் செலவிடாது, ஏதாவது காரியத்திற் கொணரும் வழி யொன்றைக் கண்டுபிடித்தீர்களா? வீணான தூஷணைகளை விட்டு உபயோகமான காரிய மேதேனும் செய்யவும், சில இனிய மொழிகளால் ஜனங்கள் படுந் துன்பங்களைச் சற்றே தணியும்படி செய்யவும், நடை பிணங்களாகிக் கிடக்கும் இக்கேவல நிலையினின்றும் அவர்களை விடுவிக்கவும், ஏதாவதொரு மார்க்கத்தைக் கண்டுபிடித்தீர்களா? இவைகளைச் செய்தால் மாத்திரம் போதாது. உங்கள் காரியத்தில் இடையூறுகள் மலைபோல் திரண்டு வரினும் அவற்றைத் தயங்காது எதிர்த்துச் செல்லும் திடமான மனோ சங்கற்பம் உங்களிடம் இருக்கின்றதா? முழு உலகமும் சேர்ந்து கையிற் கத்தி கொண்டு எதிர்த்து நின்றாலும், அப்பொழுதும் நீங்கள் சரியென்று நினைக்கும் காரியத்தைச் சற்றும் பின்வாங்காது செய்ய வல்ல தைரியம் உங்களிடம் இருக்கின்றதா? உங்கள் பெண்டு பிள்ளைகளே உங்களுக்கு விரோதமாய் நிற்பினும், உங்கள் பணமெல்லாம் இழக்க நேரிடினும், அதனுலுங்கள் பெயரே கெடுவதானாலும், மற்றெல்லாச் செல்வங்களும் போய்விடுவதா யிருந்தாலுங்கூட அப்பொழுதும் எடுத்த காரியத்தை விடாமல் உறுதியாய்

நிற்பீர்களா? சகலமும் துறக்க நேரிடும் அக்காலத்தும், நீங்கள் கருதிய உங்கள் லக்ஷ்யம் கைகூடும் வரையில், இடைவிடாது உறுதியாய் நடந்து மேல் நோக்கிச் செல்வீர்களா? பர்த்ரஹரியார் சொல்வது போல் "ஞானிகளானோர் நிந்திப்பதானாலும் நிந்திக்கட்டும், அல்லது புகழ்வதென்றாலும் புகழட்டும்; சகல பாக்கியங்களையுங் கொடுக்கும் லக்ஷ்மி தேவியானவள் வந்தாலும் வரட்டும்; அன்றித் தனக்கிஷ்டமான விடத்திற்குப் போயினும் போகட்டும்; மரணமானது இன்றே வந்தாலுஞ்சரி; அல்லது இன்னும் நூறு வருஷங்கள் கழித்து வரினுஞ்சரி; எவனொருவன் உண்மையினின்றும் மயிரிழையேனும் பிறழா திருப்பானோ அவனே உறுதியுடையோனவான்." இவ்வுறுதி உங்களிடம் இருக்கின்றதா? இந்த மூன்று விஷயங்களும் - உண்மை யுணர்ச்சி, தக்க வழியொன்று காணல், கண்ட அவ்வழியில் உறுதியுடனுழைத்தல் ஆகிய இவை - உங்களிடம் இருக்குமானல், உங்களுள் ஒவ்வொருவரும் அற்புதங்களைச் செய்வீர்கள். நீங்கள் பத்திரிகைகளில் எழுத வேண்டியதில்லை. பிரசங்கங்கள் செய்துகொண்டு ஊரூராய்ச் சுற்ற வேண்டியதில்லை. உங்கள் முகமே பிரகாசித்துக்கொண்டிருக்கும். அதுவே போதுமானது. நீங்கள் குகைகளுக்குள் வசித்தாலுங்கூட உங்கள் எண்ணங்களானவை அக் கற்சுவர்களின் வழியாகவும் ஊடுருவிச் சென்று பல நூற்றாண்டுகள் வரை, அதாவது தகுதியுள்ள சிலர் தோன்றி அவர் மனத்துட் புகுந்து அங்கே வேலை செய்யும்வரை, உலக முழுதும் பரவிச் சூழ்ந்துகொண்டிருக்கும்.

இன்னும் ஒரே ஒரு வார்த்தை. அதிக நேரம் உங்களைத் தாமதிக்க வைக்கிறேனே வென்று அஞ்சுகிறேன். எனது நாட்டு சகோதரர்களே! என் பிரிய நண்பர்களே! எனதருமைக் குழந்தைகளே! நமது

ஜாதீயக் கப்பலானது கோடானுகோடி ஜனங்களே யேற்றிக்கொண்டு வாழ்க்கையென்னும் கடலைக் கடந்து அக்கரை சென்றிருக்கிறது. ஒலி மிகுந்து விளங்கிய பல நூற்றுண்டுகளாய் ஓடிக்கொண்டிருந்த இக்கப்பலின் மூலமாய் அநேக கோடி ஜனங்கள் இக்கடலைக் கடந்து ஆனந்த நிலையாகிய அக்கரையை அடைந்திருக்கின்றனர். ஆனால், இன்றைக்கோ நம்முடைய குற்றத்தினலேயே இக்கப்பலில் ஓர் ஓட்டை யுண்டாகிச் சிறிது கெடுதல் ஏற்பட்டிருக்கிறது.—அதற்காக அதைச் சபித்துவிடத் துணிகிறீர்களா? உலகத்திலேயே வேறெதையும் விட மிகவும் அபரிமிதமான வேலை செய்து வந்த இதனைச் சபிக்க, தூஷணை வார்த்தைகளைப் பேச, எழுந்து நிற்பது உங்களுக்கு நியாயமா யிருக்கின்றதா? நமது ஜன சமூக மாகிய இந்த ஜாதீயக் கப்பலிலே இன்று சில ஓட்டைகள் காணப்பட்டால், அதன் வீர புத்திரர்களாகிய நாம் இங்கு இருக்கின்றோமே! அவ்வோட்டைகளை அடைக்க யாவரும் முற்படுவோம். மனப்பூர்வமாய்க் கடைசி வரையில் உழைப்போம். நம்மால் முடியாவிட்டால் இறப்போம். ஆகையால் தூஷிப்பதை விடுத்து நாமெல்லோரும் ஒன்று கூடிக் கப்பலைப் பழுது பார்ப்பதிலேயே நமது மனத்தைச் செலுத்துவோம். இச்சமூகத்தைப் பற்றிக் கடுமையான ஒரு வார்த்தையேனும் பேசாதீர்கள். முற்காலத்தில் அஃதிருந்த மேன்மையைக் கண்டறிந்த நான் எப்படி அதை விரும்பாமலிருக்க முடியும்? பூரணமான அன்பு எனக்கு இருக்கின்றது. நீங்கள் தேவர்களின் வம்சத்தில் தோன்றியவர்கள் என்றதனலேயே, மகா கீர்த்தி வாய்ந்த முன்னேர்களின் குழந்தைகளாய் நீங்கள் இருப்பத னலேயே உங்களிடம் எனக்கு அளவற்ற அன்புண்டா கிறது. எல்லா ஆசீர்வாதங்களும் நன்மைகளும் உங்களுக்கு உண்டாவதாக! சபித்தலென்பது ஒரு நாளும் வேண்டாம்.

எனதன்புள்ள குழந்தைகாள்! எனது எல்லா முறை களையும் உங்களுக்குச் சொல்வதற்காகவே நான் உங்க ளிடம் வந்திருக்கிறேன். நீங்கள் அதைக் கேட்பீர்க ளானல், உங்களோடு கூடி யுழைக்க நானும் தயாரா யிருக்கிறேன். நீங்கள் செவி கொடுக்காமல், என்னை இந்தியாவைவிட்டு வெளியே உதைத்துத் துரத்துவ தென்றாலும், மறுபடியும் நான் திரும்பி வந்து, "சகோத ரர்களே! நாமெல்லோரும் முழுகிக்கொண்டிருக்கிறோம்; உங்களுடன் கூடியிருக்கவே நானும் வந்துள்ளேன்; முழுகிப் போவதே நமது கதியாகுமானல், நாமெல்லோரும் ஒன்றாய் முழுகிவிடுவோம்; ஆனல் சாபங்கள் மாத்திரம் நமது வாயினின்றும் ஒருநாளும் வராமலிருக்கட்டும்" என்று உங்களுக்குக் கூறுவேன்.

---

# எதிர்கால இந்தியா

(சென்னையில் பேசியது)

நம் நாடு மிகப் பழமையானது. உலகில் அறிவும் ஞானமும் முதலில் இங்குதான் தோன்றி, பின் இதர நாடுகளுக்குச் சென்றன. நம் நாட்டில் பெரிய ஆறுகள் சமுத்திரம் போல் ஓடிக்கொண்டிருக்கின்றன. இவை நம் நாட்டில் ஆத்மிகப் பெருவெள்ளம் பெருக்கெடுத்துப் பாய்வதற்கு ஸ்தூல அறிகுறிகள் போல் விளங்கு கின்றன. இமயமலையின் சிகரங்கள் ஒன்றின்மேல் ஒன்றாக உயர்ந்து வானை அளாவிக் கொண்டிருக்கின்றன. இவை கடவுளை நோக்கி நம் நாட்டில் செய்யப்படும் அளவற்ற முயற்சிக்கு அறிகுறியாக விருப்பதுபோல் திகழ்கின்றன. இம்மண்ணில் மகத்தான பெரியோர்கள்

பலர் பிறந்து வாழ்ந்திருக்கிறார்கள். மனிதனுடைய தன்மையைப் பற்றியும் ஆத்மாவின் இயல்பைப் பற்றியும் முதலில் ஆராய்ச்சி செய்யப்பட்டு, 'மனிதன் நித்தியமான ஆத்மாவாவான்; அனைவருக்கும் மேலான ஒரு கடவுள் உண்டு; அவர் எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் பரவி உயிர்க்குயிராய் விளங்குகிறார்' என்ற உண்மைகள் இங்குதான் கண்டு பிடிக்கப்பட்டன. இன்னும் மதத்திற்கும், தத்துவ சாஸ்திரத்திற்கும் சிகரமாக விளங்கக்கூடிய பல உன்னதமான கருத்துக் களும் இங்குதான் தோன்றியிருக்கின்றன. இந் நாட்டில்தான் ஆத்மிகப் பெரு வெள்ளம் அவ்வப் போது பெருக்கெடுத்து, உலகிற்கு ஆத்மிக உணர்ச்சி அளித்திருக்கிறது. தற்காலத்தில் ஆத்மிக வாழ்வில் க்ஷீணித்துவரும் மனித வர்க்கத்திற்கு உயிர்ச்சக்தி கொடுக்கக்கூடிய ஆத்மிக வெள்ளம் மறுபடியும் இங்கிருந்துதான் புறப்படப் போகின்றது. நூற்றுக் கணக்கான அன்னியர்களின் படையெடுப்புக்களையும், பலதிறப்பட்ட மக்களுடைய குடியேற்றங்களையும், இவைகளினால் ஏற்பட்ட பல கஷ்டங்களையும் இந்தியா தாங்கி வந்திருக்கிறது. எனினும் அது குன்றாத சக்தி யுடன், அழியாத வாழ்வுடன், பாறைபோல் எதனாலும் பாதிக்கப்படாமலிருந்து வந்திருக்கிறது. ஆத்மாவைப் போல் இதுவும் ஆதியந்தமற்றதாய் நித்தியமானதாகத் தோன்றுகிறது. இத்தகைய நாட்டின் அருமைக் குழந்தை களாக நாம் பிறந்திருக்கிறோம்.

இந்திய நாட்டின் அருமைக் குழந்தைகளே! இன்று நாம் வாழ்க்கையில் செய்து முடிக்கவேண்டிய சில விஷயங் களைப் பற்றி உங்களிடம் பேச விரும்புகிறேன். நம்முடைய பழம் பெருமைகளை நான் உங்களுக்கு ஞாபகப்படுத்திய தற்குக் காரணமிருக்கிறது; பழங் கதைகளைப்பற்றிப்

பேசுவதில் பயனில்லை. அது நம்மைத் தாழ்த்துகின்றது; ஆதலால் நாம் எதிர்காலத்தைப் பற்றியே நினைக்க வேண்டும் என்று சிலர் உரைக்கிறார்கள். அவர்கள் உரைப்பது உண்மைதான். ஆனால் பழையதிலிருந்து தானே புதியதை உண்டாக்க வேண்டும்! ஆதலால் உங்களால் இயன்ற அளவு திரும்பிப் பாருங்கள்; நமக்குப் பழங் காலத்தில் உயிர்ச்சக்தி அளித்த அந்த ஊற்றுக்களி லிருந்து வந்து கொண்டிருக்கும் திவ்யமான நீரை நன்றாகப் பருகி, அதற்குமேல் எதிர்நோக்கி, முன்சென்று ஒரு புதிய, மகத்தான, உன்னதமான, முன்னைவிட உயர்ந்த, இந்தியாவை உண்டாக்குங்கள். நமது முன் னோர்கள் மிகப் பெருமைவாய்ந்தவர்களாக விருந்தார்கள். அதை முதலில் நாம் ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். நாம் எத்தகையவர்கள், நாம் எத்தகைய பெருமைவாய்ந்த கால்வழியில் தோன்றி யிருக்கிறோம் என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். அதில் நாம் நம்பிக்கை கொள்ளவேண்டும். பழங்காலத்தில் நாம் மகத்தான காரியங்களைச் செய்திருக்கிறோம். அவைகளைப் போல் எதிர்காலத்திலும் மகத்தான காரியங்களைச் சாதிக்கக் கூடிய சக்தி நம் ரத்தத்தில் உண்டென நாம் உணர வேண்டும். இந்த நம்பிக்கையிலிருந்து முன்னைவிட சிறப் பானதொரு இந்தியாவை ஆக்கக்கூடிய சக்தியை நாம் பெறுவோம். சரித்திரத்தில் பல காலங்களில் வீழ்ச்சியும் தாழ்வும் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளைப்பற்றி நாம் அனைவரும் அறிவோம். ஆனால் அவைகளைப்பற்றி நாம் அதிகம் நினைத்து வருந்தவேண்டியதில்லை. அத்தகைய காலங்களும் ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு அவசியம் போலும்! ஒரு பெரிய மரம் ஓர் அழகான கனிந்த பழத்தை உண்டாக்குகிறது. அப்பழம் தரையில் விழுகிறது. மண்ணில் விழுந்து, அது அழுகிக் கெடுகிறது. அப்படி

அழுகுவதிலிருந்து அதற்கு வேர் ஏற்பட்டு, எதிர்காலத்தில் மிகப் பெரிய மரமாக வளரக்கூடிய செடியாகிறது. அப்பழம் அழுகாமல் இச்செடி தோன்ருது. அதுபோல் நாம் தற்காலத்தில் அனுபவித்துவரும் வீழ்ச்சியும், நமது நாட்டின் முன்னேற்றத்திற்கு அவசியம் போலும். இவ் வீழ்ச்சியிலிருந்து எதிர்கால இந்தியா பறந்துகொண் டிருக்கிறது. அது இப்பொழுதுதான் முளைத்து வருகிறது; அதன் முதல் இலைகள் வெளித் தோன்றியாய்விட்டன. அனைவருக்கும் நிழல் அளிக்கக்கூடிய ஒரு மிக மகத்தான பெரிய மரமாக அது வளரப் போகின்றது. அதைப்பற்றித் தான் நான் இன்று உங்களிடம் பேச நினைத்திருக் கிறேன்.

மற்றெல்லா நாடுகளைக் காட்டிலும் இந்தியாவி லுள்ள பிரச்னைகள் சிக்கலானவையாகவும் பெரியன வாகவும் இருக்கின்றன. வழிமுறை, மதம், பாஷை, அரசாங்கம்—இவை யனைத்தும் சேர்ந்திருந்தால் மக்கள் ஒரு தேசீய சமூகமாக உண்டாகின்றனர். மற்ற தேசங் களின் மக்களை எடுத்துக்கொண்டால், அவர்கள் சாதா ரணமாக ஒரு வழிமுறையிலிருந்து வந்தவர்களாக விருப் பார்கள். ஆனல் இந்த நாட்டிலோ, ஆரியர்கள், திரா விடர்கள், டார்டார்கள், துருக்கர்கள், மொகலாயர்கள் ஐரோப்பியர்கள்—என்ற பலதிறப்பட்ட மனித வர்க்கத் தைச் சேர்ந்தவர்கள் இந்திய நாட்டுச் சமுதாயத்தில் சேர்ந்திருக்கின்றனர். பாஷைகளை ஆராய்ந்தால், பல திறப்பட்டவை இங்கு காணப்படுகின்றன. பழக்கவழக் கங்களோவெனில், ஐரோப்பியர்களுக்கும் இந்தியர் களுக்கும் இருக்கும் வித்தியாசங்களைவிட அதிகமான வித்தியாசம் சில உட்பிரிவுகளுக்குள் இருக்கிறது.

நாம் அனைவருக்கும் பொதுவாகவிருப்பது ஒன்றுதான். அதுதான் நமது புனிதமான மதமாகும். அது ஒன்றுதான்

நம்மை ஒன்ருகப் பிணக்கும் சக்தியாக விருக்கிறது. அதன்மேல் நமது தேசீய வாழ்க்கையை நிர்மாணம் செய்ய வேண்டும். ஐரோப்பாவில் ராஜீயக் கருத்துக்கள் தேசீய ஒற்றுமையை உண்டுபண்ணுகின்றன. ஆசியாவில் மத லட்சியங்கள் தேசீய ஒற்றுமைக்கு அடிப்படையாக விருக்கின்றன. ஆதலால் நமது நாட்டின் எதிர்கால வாழ்க்கைக்கு மத ஒற்றுமை மிக அவசியமானதாகும். இந்நாடு முழுதிலும் ஒரு மதம் நிலவவேண்டும். ஒரு மதம் என்ருல் என்ன? கிருஸ்தவர்களும், முகம்மதியர்களும், பௌத்தர்களும் சொல்லுகின்ற பொருளில் ஒரு மதமல்ல. நம்முடைய மதப் பிரிவுகள் பல வேறு விதமான முடிவு களைக் கொண்டிருக்கின்றன. எனினும் அவைகள் யாவற் றுக்கும் பொதுவாகச் சில கொள்கைகள் இருக்கின்றன. இப்போதுக் கொள்கைகளைக் கொண்டு, எல்லோரும் அவரவர்களுக்கேற்ற முறையைப் பின்பற்றி, தங்கள் தங்கள் வாழ்க்கையை நடத்த நம் மதம் எல்லையற்ற சுதந்திரம் அளிக்கிறது. இந்த ஜீவாதாரமான கொள்கை களை நாம் அனைவருக்கும் உபதேசம் செய்யவேண்டும். ஒவ்வொரு ஆண், பெண், குழந்தைக்கும் இவற்றை எடுத் துரைத்து, அவர்கள் இவைகளைப் புரிந்துகொண்டு, தங்கள் வாழ்க்கையில் பின்பற்றும்படி செய்யவேண்டும். இதுதான் நாம் செய்யவேண்டிய முதல் வேலை. எனவே அதை முதலில் செய்து முடிக்கவேண்டும். ஆசியாவில் குறிப்பாக இந்தியாவில், மக்கள் வேறு வேறு மனிதவர்க் கத்தைச் சேர்ந்தவர்களாக விருக்கலாம்! அல்லது வேறு வேறு பழக்கவழக்கங்களை உடையவர்களாக விருக்கலாம்; அல்லது வேறு வேறு பாஷைகள் பேசுகிறவர்களாக விருக்கலாம். ஆனல் இவ்வேறுபாடுகள் அனைத்தும் மதத் தினல் உண்டாகும் ஐக்கிய உணர்ச்சிக்குமுன் மறைவதை நாம் காண்கிருேம். இந்திய மக்களுக்கு மத வாழ்க்கையே

அனைவற்றிலும் உயர்ந்தது. அதுதான் இந்திய வாழ்க்கையின் முக்கிய அம்சமாக இருந்து வருகிறது. நாம் மக்களின் இயல்பை அனுசரித்துத்தான் வேலை செய்ய முடியும். ஆத்மிக வாழ்க்கைதான் அனைவற்றிலும் உயர்ந்ததென்ற உண்மை ஒருபுறமிருக்கட்டும்; இந்தியாவில் வேறெவ்விதமாகவும் வேலை செய்ய முடியாது. முதலில் இத்துறையைப் பலப்படுத்தாமல், வேறு துறைகளில் முயற்சி செய்வது பயனற்ற வேலையாக முடியும். எனவே, நமது முதல் வேலை பல்லாயிரக் கணக்கான வருஷங்களாக நமக்குப் பாறைபோல் அடிப்படையாக இருந்து வரும் மத வாழ்க்கையை ஒன்றுபடுத்தலேயாம். த்வைதிகள், விசிஷ்டாத்துவைதிகள், அத்வைதிகள், சைவர்கள், வைஷ்ணவர்கள், பாசுபதர்கள் முதலிய இந்து மதத்தைச் சேர்ந்த எல்லாப் பகுதியார்களுக்கும் பொதுவாக இருக்கக்கூடிய கொள்கைகளை நாம் எடுத்துரைக்கவேண்டும். நம் நாட்டின் நன்மைக்காகவும் நம்முடைய நன்மைக்காகவும் நமக்குள்ளிருக்கும் அற்பமான சண்டை சச்சரவுகளை அகற்றவேண்டுமென்பதையும் நாம் அனைவருக்கும் போதிக்கவேண்டும். இச்சண்டைகள் முற்றிலும் தவறானவை. நமது சாஸ்திரங்கள் இவைகளை அனுமதிப்பதில்லை. நம் முன்னோர்கள் இவைகளை வெறுத்திருக்கிறார்கள். பெரும் புகழும் நிறைந்து வாழ்ந்த நமது மூதாதைகள், சிறு விஷயங்களுக்காகச் சண்டையிட்டுக் கொண்டிருக்கும் தங்கள் மக்களை அவமானத்துடன் பார்க்கிறார்கள்.

இச்சண்டை சச்சரவுகளை விட்டுவிட்டால், மற்றெல்லா விஷயங்களிலும் அபிவிருத்தியுண்டாகும். நமது உடம்பிலுள்ள ரத்தம் சுத்தமானதாயும் பலமுள்ளதாயும் இருந்தால், எவ்விதமான நோய்க் கிருமியும் நம் உடம்பை பாதிக்க முடியாது. ஆத்மிக வாழ்வே நமது

தேசத்தின் உயிர்ச் சக்தி. அது சரியாகவும் பலத்துடனும் இருந்தால், மற்ற எல்லாம் நன்ருக நடைபெற்று வரும். அது சரியானபடியிருந்தால், ராஜீய, சமூக, பொருளா தாரப் பிரச்னைகள் அனைத்தும் தீர்ந்து நாடு க்ஷேமமாக விருக்கும். தற்கால ஆங்கில வைத்தியப்படி, நோய் உண்டாவதற்கு இரண்டு காரணங்கள் இருக்கவேண்டு மென்பதை நாம் அறிவோம்; அதாவது ஒன்று வெளியி லிருந்து வரும் நோய்க்கிருமி: இரண்டாவது நமது உடம்பின் நிலை. நம்முடைய உடல் பலவீனப்பட்டு, அந்தக் கிருமியை எதிர்க்கமுடியாத பலக் குறைவான நிலையிலிருந்தாலன்றி, எந்த நோய்க் கிருமிக்கும் நம் உடம்பில் நோயை உண்டாக்கக்கூடிய சக்தி கிடையாது. உண்மையைச் சொல்லுமிடத்து, லட்சக்கணக்கான கிருமிகள் நம் உடம்பில் வந்து போய்க்கொண்டிருக் கின்றன. ஆனல் உடலில் பலம் இருக்கும்வரை, அவை பாதிக்கா; உடலில் பலக் குறைவு ஏற்பட்டால், அவை உடலைத் தாக்கி, நோயை உண்டாக்குகின்றன.

நமது தேசிய வாழ்க்கையும் இத்தகையதுதான். நம் தேசிய வாழ்க்கை பலவீனமாகும்போதுதான், நோய்க் கிருமிகளான ராஜீய, சமூக, கல்வித் துறைகளில் ஏற்படும் குறைகள் நம் சமுதாயத்தில் நுழைந்து பாதிக்க ஆரம்பிக்கின்றன. இதைக் குணப்படுத்துவதற் காக நோயின் அடிப்படையான காரணத்தை அறிந்து, நமது ரத்தத்திலிருக்கும் அசுத்தங்களை நீக்க வேண்டும். ரத்தத்தைப் பரிசுத்தப்படுத்தி, உடலை வலுவாக்கி மனிதனைப் பலப்படுத்துவதே நம் நோக்கமாயிருக்க வேண் டும். அதற்குமேல் அவனே வெளியிலிருக்கும் விஷக் கிருமி கள் தன்னைப் பாதிக்காமல் தடுத்துக்கொண்டு, நோய் வாய்ப்படாமல் பார்த்துக்கொள்வான். நம்முடைய பலமும் சக்தியும், ஏன், நம்முடைய தேகத்தின் உயிர் நாடியே

மதத்திலிருக்கிறதென்பதைப் பார்த்தோம். அது நல்லதா அல்லது கெட்டதா, அது சரியா அல்லது தவறானதா? இங்ஙனம் மதத்தை உயிர் நாடியாகக் கொண்டிருப்பது நாளடைவில் நமக்கு நன்மையை உண்டாக்குமோ அல்லது தீமையை உண்டாக்குமோ வென்பதைப் பற்றி நான் உங்களிடம் விவாதிக்க விரும்பவில்லை. நல்லதற்கோ கெட்டதற்கோ, அது அவ்விதம் அமைந்திருக்கிறது. அதை நாம் மாற்றிக்கொள்ள முடியாது. ஆத்மிக வாழ்வில் எனக்கிருக்கும் நம்பிக்கை உங்களுக்கு இல்லாவிடினும், அதை நீங்கள் ஒப்புக்கொண்டுதானாக வேண்டும். அது நம் இயற்கையுடன் சேர்த்துப் பிணைக்கப்பட்டிருக்கிறது. அதை விட்டால் நாம் அழிந்து விடுவோம். அதுதான் நமது மக்களின் ஜீவாதாரம்; எனவே அதை நாம் பலப்படுத்த வேண்டும். அதுதான் நம் உயிர் நாடியாக யிருந்து வந்திருக்கிறது; எனவே அதை வலுவாக்கவேண்டும். அதை ஜாக்கிரதையாகப் பேணிவந்த காரணத்தினால்தான், பல நூற்றாண்டுகள் நம் நாட்டின் மேல் வந்த கோரமான படையெடுப்புகள் அனைத்தையும் நம் மக்கள் தாங்க முடிந்தது. நம் முன்னோர்கள் பல கொடுமைகளை அனுபவித்தார்கள்; சாவையும் எதிர்த்தார்கள்; ஆனால் தங்கள் மதத்தை விட்டுவிடவில்லை. கோவில்களுக்குப் பின் கோவில்கள் அன்னிய நாட்டு அரசர்களால் அழிக்கப்பட்டன; ஆனால் அவ்வரசர்கள் மறைந்ததும், இடிந்த கோவில்களின் கோபுரங்கள் மறுபடியும் மேல் கிளம்பின. தென்னிந்தியாவிலிருக்கும் சில பழைய கோவில்களும், கூர்ஜரத்தில் சோமநாதத்திலிருப்பது போன்ற ஆலயங்களும், எண்ணிறந்த புத்தகங்களைப் படிப்பதை விட அதிகமான சரித்திர ஞானத்தை நமக்குப் புகட்டுகின்றன. இவ்வாலயங்கள் நூற்றுக்கணக்கான தடவைகள் அழிக்கப்பட்டன! ஆனால் நூற்றுக்கணக்கான

நடவைகள் மீண்டும் புதுப்பிக்கப்பட்டு அழகாக விளங்கு கின்றன. அவை நம் தேசீய மனதைக் காண்பிக்கின்றன. நம் தேசத்திற்கு உயிர் நாடியாக விருக்கும் இவ் வுணர்ச்சியை நாம் பின்பற்றுவோமாக. அதைப் பின் பற்றினுல், அதிலிருந்து நமக்கு மற்றெல்லாப் பெருமையும் உண்டாகும். அதைவிட்டால் நாம் அழிந்து படுவது நிச்சயம். மற்ற விஷயங்கள் அவசியமானவையல்ல வென்று நான் சொல்லவில்லே. ராஜீய சமூக முன்னேற்றங் கள் அவசியமானவையல்லவென்று நான் சொல்வதாக நீங்கள் நினேக்கலாகாது. நான் உரைப்பது இதுதான்: மதமே அனேத்திலும் முக்கியமானது; மற்ற அனேத்தும் அதற்கு அடுத்தபடியானவை. இதை நீங்கள் எப்பொழு தும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று நான் விரும்புகிறேன். இந்தியாவின் மனதில் மதமே பிரதானமானதாக விருக்கிறது. எனவே அதைப் பலப் படுத்தவேண்டும். அதை எங்ஙனம் செய்வதென்று நீங்கள் கேட்கலாம். அதைப்பற்றி எனக்கிருக்கும் யோசனேகளே யெல்லாம் உங்களுக்கு எடுத்துரைக் கிறேன். அவை என் மனதில் வெகு காலமாக இருந்து வந்திருக்கின்றன. சென்னேயிலிருந்து அமெரிக்காவுக்குப் புறப்படுவதற்கு முன்னமேயே இவை என் மனதிலிருந் தன. இவைகளேப் பரப்புவதற்காகவே அமெரிக்காவுக்கும் இங்கிலாந்திற்கும் சென்றேன். எனக்கு சர்வமத சபை யைப்பற்றியோ அல்லது மற்ற விஷயங்களேப்பற்றியோ யாதொரு அக்கரையும் இல்லே. மேல் நாடு செல்வதற்கு அது ஒரு சந்தர்ப்பம் அளித்தது. அவ்வளவுதான். இக் கருத்துக்களேப் பரப்ப வேண்டுமென்ற நோக்கம்தான் என்னே உலக முழுதும் அழைத்துச் சென்றது.

என்னுடைய முதல் எண்ணம் இது: ஆத்மீக வாழ்க்கைக்கு அவசியமான ஞானத்தைப் புகட்டும் மணி

மொழிகள் பல நமது சமய நூல்களில் நிறைந்திருக்கின்றன. இப்பொழுது அவை சாதாரண மக்களுக்கு எட்டாத இடங்களில் - மடாலயங்களிலும், காடுகளிலும் - சிலர் கைவசப்பட்டிருக்கின்றன. இந்ஞான மணிகள் எல்லோருக்கும் பயன்படுமாறு முதலில் செய்யப்பட வேண்டும். சாதாரண மக்கள் அறியவொண்ணாதது, பல ஆயிர வருஷங்களுக்குமுன் எழுதப்பட்ட சமஸ்கிருத பாஷையில் இவை புதைந்து கிடக்கின்றன. இவ்வரும் கருத்துக்கள் எல்லோருக்கும் கிட்டும்படி செய்ய வேண்டும். சமஸ்கிருதம் தெரியினும், தெரியாதிருப்பினும், இவை இந்தியாவில் பிறந்த ஒவ்வொரு இந்திய மகனுக்கும் மகளுக்கும் சொந்த உடைமையாக வேண்டும். இவை ஸமஸ்கிருதத்திலிருப்பது, இவற்றைப் பரப்புவதற்குப் பெருங் கஷ்டமாகவிருக்கிறது. எல்லோரும் சமஸ்கிருதத்தில் வல்லுனராகும்வரை இக் கஷ்டத்தை நீக்க முடியாது. நான் என் ஆயுள் முழுதும் இப்பாஷையைப் பயின்று கொண்டிருக்கிறேன்; எனினும் எனக்கே ஒவ்வொரு புத்தகமும் புதிதாகத் தோன்றுகிறதெனில், சாதாரண மக்களுக்கு இதைப் பயிலுவது எவ்வளவு சிரமமாயிருக்கும்! எனவே இவ் வெண்ணங்கள் பொது ஜனங்களுடைய சொந்த பாஷையில் மொழி பெயர்க்கப்பட வேண்டும்.

இத்துடன் சமஸ்கிருத பாஷையும் பயிலப்பட வேண்டும். சமஸ்கிருத சுலோகங்களின் தொனியிலேயே ஒரு கன்னியமும் சக்தியும் இருக்கின்றன. ஸ்ரீராமானுஜர், சைதன்யர், கபீர்தாஸ் இவர்கள் நம் நாட்டுமக்களை உயர்த்துவதற்காகச் செய்த முயற்சியின் காரணமாக, அவர்கள் வாழ்க்கைக் காலத்திலேயே, அரும்பயன் உண்டாயிற்று. எனினும் இப்பெரியோர்களுடைய உபதேசங்களின் பயன், அவர்கள் மறைந்த பிறகு, ஒரு நூற்றாண்டு கூட நீடித்திருக்கவில்லை. அதன் காரணத்தை நாம்

ஆராய வேண்டும். அதன் இரகசியம் இதுதான். அவர்கள் தாழ்த்தப்பட்ட மக்களை உயர்த்தினார்கள். அவர்கள் முன்னேற வேண்டுமென்ற விருப்பம் அவர்கள் மனதில் பூரணமாக விருந்தது. ஆனால் அவர்கள் எல்லா மக்களிடமும் சமஸ்கிருத பாஷையைப் பரப்பவில்லை. புத்த பகவான்கூட பொது ஜனங்களை சமஸ்கிருதம் பயிலாமல் தடுத்தபோது, ஒரு தவறு செய்தார். அவர் நினைத்த பயனை விரைவில் அடைய விரும்பினார். எனவே தம்முடைய உபதேசங்களை அக்காலத்து பாஷையாகிய பாலியில் மொழி பெயர்த்து, உபதேசம் செய்தருளினார். அது நிறைந்த பயனை யளித்தது. அக்காலத்து மக்கள் பாஷையில் இவர் பேசினார்; எனவே அவர்களும் அவ்வுபதேசங்களை உணர்ந்துகொண்டார்கள். அதன் பயன் மகத்தானதாக விருந்தது. அவருடைய உன்னதமான கருத்துக்கள் நாடெங்கும் வெகு சீக்கிரத்தில் பரவின. ஆனால் அத்துடன் சமஸ்கிருதமும் பரப்பப்பட்டிருக்க வேண்டும். புத்தர் பிரான் உபதேசங்களால் ஞானம் உண்டாகியிருந்தது; ஆனால் அத்துடன் கண்ணியமும் பண்பும் உண்டாக வில்லை. பண்புக்குத்தான் வரக்கூடிய எதிர்ப்புக்களைத் தாங்கும் சக்தி யிருக்கிறது. வெறும் கல்விக்கு அவ்வளவு வலிமை யில்லை. உலகத்திற்கு வெறும் அறிவுரைகளைப் புகட்டல் மாத்திரம் அதிகப் பயனை அளிக்காது. இரத்தத்தில் பண்பும் இருக்கவேண்டும். தற்காலத்தில் பல தேசங்களில் மனப் பண்பின்றி வெறும் கல்வியை மாத்திரம் பெற்றிருப்பதைப் பார்க்கிறோம். அதனால் அவர்கள் அதிகப் பயனை அடைவதில்லை. மனப்பண்பு இல்லாவிடில் அவர்கள் கேவலம் மிருகங்கள் மாதிரியும் காட்டு மிராண்டிகள் மாதிரியுந்தா னிருப்பார்கள். கல்வி யறிவு நமது உடம்பின்தோல் ஆழத்திற்கு மேல்செல்வதில்லை. நாம் தற்காலம் பெற்றிருக்கும் நாகரிகமும் அவ்வளவு தூரம்தான் எட்டியிருக்கிறது.

ஒரு சிறு கீறல் கூட உள்ளிருக்கும் மிருகத்தன்மையை வெளிப்படுத்திவிடுகிறது. இம்மாதிரி சம்பவங்கள் சில சமயங்களில் நேருகின்றன. இதுதான் வெறும் கல்வி புகட்டுவதிலுள்ள ஆபத்து. பொது ஜனங்களுக்கு அவரவர்கள் தாய் மொழியில் புகட்டுங்கள். அவர்களுக்கு உயர்ந்த கருத்துக்களைக் கொடுங்கள். அதன் மூலம் அவர்கள் விஷயங்களை அறிந்து கொள்வார்கள். அதற்கு மேல் மனப் பண்பும் அவர்களுக்கு அளிக்கப்பட வேண்டும். அதை நீங்கள் அவர்களுக்கு அளிக்கும் வரை, அவர்களைச் சாசுவதமாக உயர்த்தியதாகச் சொல்ல முடியாது. பொது ஜனங்கள் சமஸ்கிருதத்தைப் பயிலாத வரை, ஒரு சிலர் அதைப் பயின்று, மற்றவர்களைவிடத் தாங்கள் உயர்ந்த ஜாதியென்று விளங்க இடமிருக்கிறது. தாழ்த்தப்பட்ட மக்கள் சாசுவதமாக உயர்வெய்துவதற்கு என்னுடைய அபிப்பிராயத்தில் ஒரே உபாயம்தானிருக்கிறது; அதாவது அவர்கள் சமஸ்கிருதக் கல்வியைப் பெறுவது. இங்ஙனம் செய்வதை விடுத்து, உயர்ந்த ஜாதியாரை வைவதும் நிந்திப்பதும் ஒரு நன்மையும் செய்யாது. இந்தச் சண்டை சச்சரவுகளினால், இந்த துரதிர்ஷ்டமான தேசத்தில் இப்பொழுதிருப்பதைவிட இன்னும் அதிகப் பிளவுகள் உண்டாகுமே யொழிய வேறொரு நற்பயனும் உண்டாகாது. மேல் ஜாதியாரிடமிருக்கும் கல்வியறிவையும் பண்பையும் அனைவரும் மேற்கொள்வதே ஜாதி வித்தியாசத்தை யொழிப்பதற்குச் சரியான வழியாகும். இதைச் செய்தால் நீங்கள் விரும்பியதை அடைந்தவர்களாவீர்கள்.

இந்த சந்தர்ப்பத்தில் சென்னை மாகாணத்திற்கு முக்கியமான ஒரு விஷயத்தைப் பற்றிப் பேச விரும்புகிறேன். தென்னிந்தியா முழுதும் திராவிடர் என்ற வர்க்கத்தார் இருந்ததாகவும், வட இந்தியா முழுவதும் ஆரியர்கள் என்ற தனி வர்க்கத்தார் இருந்ததாகவும், தென்னிந்தியாவிலிருச்

கும் பிராம்மணர்கள் மாத்திரம் வட இந்தியாவிலிருந்து வந்த ஆரியர்களென்றும், தென்னிந்தியாவிலிருக்கும் மற்ற அனைவரும் அவர்களிடமிருந்து முற்றிலும் வேறுபட்ட திராவிடர்களென்றும் சொல்லப்படுகிறது. இந்த ஆராய்ச்சிக்காரர்களுக்கு மிகுந்த வணக்கத்துடன் நான் ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அவர்கள் கூற்று முற்றிலும் ஆதாரமில்லாதது. இவ்வாதத்திற்கு ஒரே ஒரு காரணம் தான் உண்டு; அதாவது தென்னிந்தியாவிலும் வட இந்தியாவிலும் வேறு பாஷைகள் வழங்கி வருகின்றனவென்பது தான். அவர்கள் இருவருக்கும் பாஷையைத் தவிர, வேறு ஒரு வித்தியாசமும் எனக்குத் தெரியவில்லை. வட இந்தியர்கள் பலர் இக்கூட்டத்திலிருக்கிறார்கள். நம் ஐரோப்பிய நண்பர்களை, தென்னிந்தியர்களிடமிருந்து அவர்களைப் பொறுக்கியெடுக்கச் சொல்லிப் பாருங்கள். அவர்களால் இருவருக்குமுள்ள வித்தியாசத்தைக் கண்டு பிடிக்க முடியாது. பாஷையை யொட்டிய இச்சிறு வித்தியாசத்தைத் தவிர நமக்குள் வேறு வித்தியாசம் கண்டு பிடிக்க முடியாது. இதிலிருந்து பலத்த வாதங்களைக் கிளப்பியிருக்கிறார்கள். பிராம்மணர்கள் சமஸ்கிருதத்தைப் பேசிக் கொண்டிருந்த தனி வர்க்கத்தினராம்! அப்படியானால், அவர்கள் திராவிட பாஷையை மேற்கொண்டு தங்கள் பாஷையான சமஸ்கிருதத்தையே மறந்து விட்டார்கள் போலும்! மற்ற ஜாதியினரும் ஏன் அப்படியே செய்திருக்கக் கூடாது? மற்ற ஜாதியினரும் வட இந்தியாவிலிருந்து வந்து, இத்திராவிட பாஷையை ஏற்றுத் தங்கள் பாஷையை ஏன் மறந்திருக்கக்கூடாது? இந்த வாதம் இரண்டு பக்கத்திற்கும் பேசுகிறது. இம்மாதிரி அறிவற்ற வாதங்களை நம்பாதீர்கள். திராவிடர்கள் என்ற ஒரு ஜாதி மக்கள் இருந்திருக்கலாம்; அவர்கள் நாளடைவில் மறைந்திருக்க வேண்டும். எஞ்சியிருக்கக் கூடிய சிலர் மலைகளிலும் காடுகளிலும் வசித்துக் கொண்டிருக்கலாம். அவர்

கள் பாஷையையும் மற்றவர்கள் எடுத்துக்கொண்டிருக்கலாம். ஆனால் இங்கு இருப்பவர்கள் எல்லாம் வட இந்தியாவிலிருந்து வந்த ஆரியர்கள்தான். இந்தியா முழுவதிலும் ஆரியர்கள்தான் இருக்கிறார்கள். வேறு மக்கள் ஒருவரும் இல்லை.

இன்னுமொரு வாதமும் சொல்லப்படுகிறது. அதாவது இப்பொழுது சூத்திரர்கள் என்று சொல்லப்படுகிறவர்களெல்லாம் இந்தியாவின் ஆதி மக்களாம். அவர்கள் ஆரியர்களால் அடிமையாக்கப்பட்டவர்களாம். மற்ற நாட்டு சரித்திரங்களில் நடந்திருப்பதுபோல் இங்கும் நடந்திருக்கிறதென அவ்வாராய்ச்சிக்காரர்கள் உரைக்கிறார்கள். அமெரிக்கர்கள், ஆங்கிலேயர்கள், டச்சுக்காரர்கள், போர்ச்சுகேயர்கள் முதலியவர்கள் ஆப்பிரிக்காவிலிருந்து நீக்ரோக்களைக் கொண்டுவந்து, தாங்கள் சுகமாயிருந்துகொண்டு அவர்களிடம் வேலை வாங்கிக் கொண்டிருந்தார்கள். அந்த நீக்ரோக்களுக்குப் பிறந்த கலப்பு ஜாதியினரை அடிமைகளாக வைத்துக் கொண்டிருந்தனர். இந்நிலைமை நெடுங்காலமிருந்து வந்தது. இந்த விசித்திரமான உதாரணத்தை வைத்துக் கொண்டு, இந்தியாவிலும் பல்லாயிர வருஷங்களுக்கு முன் இவ்விதம் நடந்திருக்க வேண்டுமென்று நமது ஆராய்ச்சிக்காரர்கள் கனவு காண்கிறார்கள். இந்த ஆரியர்கள் எங்கிருந்து வந்தவர்கள்? அவர்கள் மத்திய திபேத்திலிருந்து வந்ததாகச் சிலர் சொல்லுகிறார்கள். மத்திய ஆசியாவிலிருந்து வந்ததாகச் சிலர் சொல்லுகிறார்கள். ஆங்கிலேயர்கள் அவர்களுக்குச் சிவப்பு மயிர் இருந்ததாகச் சொல்லுகிறார்கள். வேறு சிலர் அவர்களுக்குக் கறுப்பு மயிர் இருந்ததாக ஊகிக்கிறார்கள். தங்களுடைய மயிர் கறுப்பாயிருந்ததால், ஆரியர்களுடையதும் அவ்விதமிருந்ததென அவர்கள் நினைக்கிறார்கள்! கடைசியாக, சுவிட்சர்லாந்து குளக்கரையில், அவர்கள் ஆரம்பத்தில் வாழ்ந்து

கொண்டிருந்ததாக ஒரு புது ஹேஷ்யம் தோன்றி யிருக்கிறது. இந்த ஹேஷ்யங்களனைத்தும், இத்துடன் இவ்விவாதமனைத்தும், அக்குளத்திலேயே விழுந்து மூழ்கிப் போனால், அதற்காக நான் வருத்தப்படமாட்டேன். சிலர் ஆரியர்கள் வட துருவத்திலிருந்து வந்ததாகச் சொல்லுகிறார்கள். ஆண்டவனருளால் அவர்கள் எங்கு வேண்டுமானாலும் இருந்துபோகட்டும். ஆனால் நம்முடைய சாஸ்திரங்களைப் பொறுத்த மட்டில், இவற்றிற்கு யாதொரு ஆதாரமும் இல்லை. இந்தியாவுக்கு வெளியிலிருந்து அவர்கள் வந்தார்களென்று சொல்வதற்கே அதில் ஆதாரமொன்றும் இல்லை. பழங்காலத்து இந்தியாவில் ஆப்கானிஸ்தானமும் சேர்ந்திருந்தது. சூத்திரர்கள் எல்லாம் ஆரியர்கள் அல்லாதவர்களென்றும், அவர்கள் மிகப் பெரும்பான்மையோராக விருந்தார்களென்றும் சொல்லும் வாதமும் தர்க்கத்திற்கும் அறிவுக்கும் ஒவ்வாததாயிருக்கிறது. அந்தக் காலத்தில் ஒரு சில ஆரியர்கள் வந்து குடியேறி, லட்சக்கணக்கான அடிமைகளுடன் வாழ்ந்துவந்தார்கள் என்று சொல்வதும் ஏற்றுக்கொள்ளக்கூடியதாக வில்லை. இந்த அடிமைகள் அவர்களை ஐந்து நிமிடங்களில் தொவையலாக்கிச் சாப்பிட் டிருப்பார்கள். நம் ஜாதி வித்தியாசத்திற்கு உண்மைக் காரணம் மகா பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. சத்தியயுக ஆரம்பத்தில் பிராம்மணர்களென்ற ஒரு ஜாதிதான் இருந்தது. அதாவது அப்பொழுது எல்லோரும் பிராம்மணர்களாக விருந்தார்கள். அதற்குப் பிறகு தொழில் வேறுபாட்டால், அவர்கள் பலவிதமான ஜாதிகளாகப் பிரிந்துகொண்டே போனார்கள். இதுதான் யுத்திபூர்வமாக இருக்கிறது. இதுதான் உண்மை. இனிமேல் வரவிருக்கும் சத்திய யுகத்தில் எல்லா ஜாதியினரும் பழைய உயர்ந்த நிலைக்குத் திரும்பச் செல்லவேண்டும். எல்லா

ஜாதியினரும் உயர்ந்த நிலையை அடைவதுதான் ஜாதிப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு வழியாகும்.

பிராம்மணீயம், பிரம்மனை அடைதல்தான் இந்திய மக்களின் லட்சியமாகும். சங்கராச்சாரியார் தம்முடைய கீதா பாஷ்யத்தில் இதை வெகு அழகாகச் சொல்லி யிருக்கிறார். பிராம்மணன் என்பவன் கடவுளை அடைந்து பூரணத்தைப் பெற்றவன், அந்த லட்சியம் நம்மைவிட்டு அகலக்கூடாது. ஜாதி முறை க்ஷீணித்துப் போயிருக்கும் இக்காலத்திலும்கூட, பிராம்மணன் நம் சமூகத்திற்குச் செய்திருக்கும் சேவைகளை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். கடவுள்தன்மை பெற்ற பலரை அவர்கள் உண்டாக்கி யிருக்கிறார்கள். அத்துடன் அவர்களுடைய குறைகளையும் நாம் தைரியமாகக் கண்டிக்கவேண்டும். 'பிசாசுக்கும் அதன் உரிமையைக் கொடு' என்ற ஆங்கிலப் பழமொழி யொன்று இருக்கிறது. அதற்கேற்ப அவர்கள் செய்த நற்காரியங்களையும் நாம் பாராட்ட வேண்டும். ஆனால் நண்பர்களே ! இந்த ஜாதிச் சண்டைகளால் யாதொரு நன்மையும் உண்டாகாது. அவை நமக்குள் இன்னும் அதிகமான பிளவுகளை யுண்டாக்கி, நம்மைப் பலவீனப்படுத்தித் தாழ்த்துமே யொழிய, வேறொரு நற்பயனையும் விளைவிக்கா. சில ஜாதியினருக்கு மாத்திரம் தனி உரிமைகள், தனிச் சலுகைகள் என்ற காலமெல்லாம் இந்திய மண்ணிலிருந்து பறந்தோடிப் போய்விட்டன. இது ஆங்கில அரசாட்சியின் நற்பயன்களில் ஒன்றாகும். முகம்மதிய ஆட்சியிலும்கூட இந்த நற்பயன் ஏற்பட்டது. அப்பொழுதும் தனி உரிமைகள் ஒழிக்கப்பட்டன. முகம்மதிய ஆட்சிகூட முற்றிலும் கெட்டதல்ல. எதுவும் முற்றிலும் கெட்டதல்ல ; எதுவும் முற்றிலும் நல்லதல்ல. ஏழைகளுக்கும், தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் முகம்மதிய ஆட்சி சுதந்திரம் அளித்தது. அதன் காரணமாகத்தான்

நம் மக்களில் ஐந்தில் ஒரு பங்கு முகம்மதியர்களானார்கள். கத்தியும், நெருப்பும் கொண்டே இம்மத மாறுதல் அனைத்தும் நடந்ததென நினைப்பது பயித்தியக்காரத்தன மாகும். நீங்கள் ஜாக்கிரதையாக இல்லாவிட்டால் உங்கள் சென்னை மாகாணத்தில் ஐந்திலொரு பங்கு, ஏன் பாதிப் பேர்கள் கூட கிருஸ்தவராகி விடுவார்கள். நான் மலையாளத்தில் பார்த்ததைவிட முட்டாள்தனமான விஷயம் உலகில் எங்கேயாவது இருக்கிறதா ? பாவம்! பறையர்கள், மேல் ஜாதியினர் நடக்கும் தெருக்களில்கூட நடக்க அனுமதிக்கப்படுவதில்லை. ஆனால் அவன் பெயரை மாற்றி, வாயில் நுழையாத ஓர் ஆங்கிலேய அல்லது முகம்மதியப் பெயரை வைத்துக்கொண்டால், அப்பொழுது அவன் சரியாகப் போய்விடுகிறானும்! மலையாளத்திலிருப்பவர்கள் அனைவரும் முழுப் பயித்தியக் காரர்கள் என்பதைவிட வேறு என்ன நாம் நினைக்க முடியும் ? இந்தக் கொடிய பழக்கங்களிலிருந்து தங்களைத் திருத்திக்கொள்ளும் வரை, இந்தியாவிலுள்ள மற்ற அனைவரும் அவர்களை மிகக் கேவலமாக நடத்தவேண்டும். இவ்வளவு கோரமான பிசாசுத்தனமான பழக்கங்களைப் பின்பற்ற அவர்களுக்கு அவமானமாகவிருக்கவில்லையா ? இத்தாழ்த்தப்பட்டவர்கள் நம் குழந்தைகளாக விருக்கும் வரை அவர்களைப் பட்டினிபோட்டுச் சாகடிக்கிறோம் ; அவர்கள் மதத்தை மாற்றிக்கொண்டவுடன், அவர் களுக்கு விருந்துபோடுகிறோமென்றால், இதைவிடப் பயித் தியக்காரத்தனம் வேறு உண்டா ? இந்த வெட்ககரமான ஜாதி வித்தியாசங்கள் அறவே ஒழியவேண்டும்.

மேல் ஜாதியினரைக் கீழ் ஜாதியினர் நிலைமைக்குத் தாழ்த்துவதல்ல, ஜாதிப் பிரச்னையைத் தீர்க்க வழி. கீழ்ச் சாதியினரை மேல் ஜாதியினர் நிலைமைக்கு உயர்த்துவதே அதைத் தீர்க்க வழி. இதுதான் நம் சாஸ்திரங்களில்

சொல்லப்பட்டிருக்கும் மார்க்கமாகும். நம் சாஸ்திரங்களைப் படிக்காதவர்களும், அல்லது படித்திருந்தாலும் அவைகளைப் புரிந்துகொள்ளாதவர்களும் என்ன வேண்டுமானாலும் சொல்லிக்கொண்டிருக்கட்டும். தெரிந்தவர்களுக்கு நம்முடைய முன்னோர்களுடைய வேலைத் திட்டம் விளங்குகிறது. நம்முடைய தேசிய வாழ்க்கை பல சகாப்தங்களாகப் படிப்படியாக வளர்ந்துகொண்டிருப்பதை அவர்கள் காணுகிறார்கள். அவர்களுடைய வேலைத் திட்டமென்ன? நமது சமூகத்தின் ஒரு கோடியில் பிராம்மணன் இருக்கிறான். மற்றொரு கோடியில் சண்டாளன் இருக்கிறான். சண்டாளர்கள் அனைவரையும் பிராம்மணர்கள் நிலைமைக்கு உயர்த்தியாக வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக அவர்களுக்குப் பல உரிமைகள் கொடுக்கப்படுவதைக் காண்பீர்கள். "ஒரு சூத்திரன் வேதத்தைக் கேட்டால், அவன் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்று; அவனுக்கு ஒரு வரியாவது ஞாபகமிருந்தால், அவன் நாக்கை வெட்டிவிடு. அவன் ஒரு பிராமணனைப் பார்த்து, 'ஏ பிராம்மணா' என்றழைத்தால், அவன் நாக்கை வெட்டு" என்ற இம்மாதிரி கோரமான, மிருகத்தனமான வாசகங்கள் சில புத்தகங்களில் இருக்கின்றன. இவை பிசாசுத்தனமானவை, மிருகத்தனமானவையென்று சொல்லவேண்டிய அவசியமில்லை. இம்மாதிரிப் பிசாசுகள் முற்காலத்திலும் தோன்றியிருக்கிறார்கள். எல்லாக் காலங்களிலும் இத்தகைய பிசாசுகள் இருந்திருக்கிறார்கள். ஆனால் பிற்காலத்தில் இவ்வாசகங்கள் கொஞ்சம் மாறுவதைக் காண்கிறோம். 'சூத்திரர்களுக்கு உயர்ந்த விஷயங்களைக் கற்பிக்காதீர்கள்' என்றிருக்கிறது. அதற்கடுத்தபடி மாறுதல்கள் தென்படுகின்றன. 'சூத்திரர்கள் பிராம்மணர்களுடைய பழக்க வழக்கங்களைப் பின்பற்றினால், அது நல்லது. அவர்கள் அவ்விதம் செய்யும்படித்

தூண்டப்பட வேண்டும்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்ஙனம் இவ்வேலை மெதுவாக நடந்துகொண்டிருக்கிறது. அதன் முழு விபரமும் உங்களுக்குச் சொல்ல இப்பொழுது நேரமில்லை. ஆனால் கிரியாம்சையில் எல்லா ஜாதியினரும் உயர்ந்து வருவதைக் காண்பீர்கள். நம் சமூகத்திலிருக்கும் ஆயிரக்கணக்கான ஜாதிகளில் சிலர் பிராம்மணர்களாக மாறியிருப்பதையும் காண்கிறோம். ஒரு ஜாதியினர் தங்களைப் பிராம்மணர் என்று சொல்லிக் கொள்வதை யார் தடுக்க முடியும்? பத்தாயிரம் பேர்கள் கொண்ட சில ஜாதிகள் இருக்கின்றன வென்று வைத்துக் கொள்வோம். இவர்கள் கட்டுப்பாடாகச் சேர்ந்து, தங்களைப் பிராம்மணர்கள் என்று அழைத்துக்கொள்ளத் தீர்மானம் செய்துகொண்டால் எவரும் அதைத் தடுக்க முடியாது. இங்ஙனம் ஆகியிருப்பதை நானே என் வாழ்க்கையில் பார்த்திருக்கிறேன். இந்த ஜாதிகள் எல்லாம் தனித்தனி சமூகங்களாக விருக்கின்றன. எனவே இவர்கள் அனைவரும் சேர்ந்து ஒரு முடிவுக்கு வந்தால் மற்றவர்கள் என்ன செய்ய முடியும்?

சங்கராச்சாரியார் முதலிய பெரிய ஆசாரிய புருஷர்கள் புதிய ஜாதி சமூகங்களை உண்டாக்கினார்கள். அவர்கள் உண்டாக்கிய அற்புதமான விஷயங்களையெல்லாம் நான் உங்களுக்குச் சொல்லக்கூடாது. அவைகளைச் சொன்னால் உங்களில் சிலர் கோபித்துக்கொள்ளலாம். என் சுற்றுப் பிரயாணங்களில் அவர்கள் செய்த அபூர்வமான சில விஷயங்களைக் கவனித்திருக்கிறேன். அவர்கள் அதி ஆச்சரியமான காரியங்களைச் செய்திருக்கிறார்கள். பெரிய பெலூச்சிக் கூட்டங்களை அவர்கள் க்ஷத்திரியர்களாகச் செய்து விடுவார்கள். செம்படவக் கூட்டத்தார்களை பிராம்மணர்களாக மாற்றி விடுவார்கள். அவர்கள் மகத்தான ரிஷிகளாயிருந்தார்கள். அவர்கள்

சேவையை நினைத்து வணங்குவோமாக. நீங்களும் ரிஷிகளாகுங்கள்—அதுதான் ரகசியம். நாமெல்லோரும் ரிஷிகளாக வேண்டும். ரிஷியாவதென்றால் என்ன? பரிசுத்தமான ஆத்மாக்களாக வேண்டும் என்பதுதான் அதன் பொருள். நீங்களும் பரிசுத்தமாகுங்கள். அப்பொழுது நீங்கள் மகத்தான சக்தியைப் பெறுவீர்கள். 'நானும் ஒரு ரிஷி' என்று சும்மா சொல்லிக்கொண்டிருந்தால் போதாது. நீங்கள் ரிஷிகளாக விருந்தால், மற்றவர்கள் தாங்களாகவே உங்களுக்குக் கீழ்ப்படிவார்கள். உங்களிடமிருந்து ஓர் அபூர்வமான சக்தி வெளித் தோன்றும். அச்சக்தியின் காரணமாக மற்றவர்கள் உங்களைப் பின்பற்றுவார்கள்; உங்கள் சொற்படி கேட்பார்கள்; தங்கள் விருப்பத்திற்கு மாருகக்கூட, உங்கள் சக்தியால் தூண்டப்பட்டு உங்கள் வேலைக்கு உதவுவார்கள். அதுதான் ரிஷித்துவமென்பது.

இது பல தலைமுறைகளில் செய்துமுடிக்க வேண்டிய பணியாகும். ஆனல் இப்பொழுது நான் உங்களுக்குச் சொல்ல விரும்புவது இதுதான். இச்சண்டைகள் நிற்க வேண்டும். முக்கியமாக தற்காலத்தில் நடந்துகொண்டிருக்கும் ஜாதிச் சண்டைகளைக் குறித்து நான் வருந்துகிறேன். இவை ஓயவேண்டும். இரண்டு தரத்தாருக்கும் இவை யாதொரு நற்பயனையும் விளைவிக்கா. குறிப்பாக பிராம்மணர்கள், தனி உரிமைகளும் சலுகைகளும் அனுபவித்த காலம் மலையேறி விட்டதென்பதை உணர வேண்டும். ஒவ்வொரு உயர்ந்த ஜாதியினரும் தாங்கள் சாவைத் தாங்களே தேடிக்கொள்ளுகிருர்கள். அவர்கள் எவ்வளவு சீக்கிரம் அவ்விதம் செய்து கொள்ளுகிருர்களோ அவ்வளவிற்கும் நன்மையே. காலம் நீடிக்க நீடிக்க, அவர்கள் அதிகம் கஷ்டப்பட்டு, அதிக கடினமான சாவைப் பெறவேண்டியிருக்கும். ஆதலால் மற்ற மக்க

ளுடைய முன்னேற்றத்திற்காக உழைப்பது பிராம்மணர்க ளுடைய கடமையாகும். அப்படிச் செய்கிறவன்தான் பிராம்மணன் ஆவான். அதைவிட்டு ஒருவன் பணம் சம்பாதிப்பதில் ஈடுபடுவானுனல், அவன் பிராம்மணனுக மாட்டான். உங்களுக்கும் இவ்விஷயத்தில் ஒரு கடமை யுண்டு. உண்மையான பிராம்மணனுக்கும், உங்கள் உதவியைப் பெற்றுக்கொள்ள அருகனுக விருப்பவனுக் கும்தான் நீங்கள் உதவி புரியவேண்டும். அத்தகைய தானம்தான் நம்மை சுவர்க்கத்திற்குக் கொண்டுபோய் விடும். அப்படியல்லாதவனுக்குத் தானமளித்தால் அது நம்மை நரகத்திற்குக் கொண்டுபோய் விடுமென நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆதலால் இதைப்பற்றி நீங்கள் ஜாக்கிரதையாக விருக்கவேண்டும். லௌகீகத் தொழிலில் ஈடுபடாதவன்தான் பிராம்மணன். லௌகீகத் தொழில்கள் பிராம்மணனுக்காக ஏற்பட்டனவல்ல; அவை மற்ற ஜாதியினருக்காக ஏற்பட்டவை. பிராம் மணர்களை நான் ஒன்று கேட்டுக்கொள்ளுகிறேன். நூற்றுக்கணக்கான வருஷங்களாகப் பெற்று வந்திருக்கும் கல்வியையும் பண்பையும் இந்திய மக்கள் அனைவருக்கும் அளிப்பதற்காக அவர்கள் உழைக்கவேண்டும். உண்மைப் பிராமணீயமென்பது என்னவென்பதை பிராம்மணர்கள் அறியவேண்டும். மனு உரைத்திருப்பதுபோல், ‘பிராம் மணன் எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாக இருப்பதால்’ அவனுக்கு இவ்வளவு உரிமைகளும் மதிப் பும் கொடுக்கப்பட்டன. தன்னுடைய அருட் களஞ்சி யத்தைத் திறந்து, தன்னிடமிருக்கும் அருட் செல்வம் அனைத்தையும் அவன் உலக முழுதிற்கும் வழங்க வேண்டும். அவனே இந்திய சமூகத்தின் முதல் போதக னுகவிருந்தான்; அவனே துறவுபூண்டு துறவு லட்சியத் தைப் பின்பற்றினுன் என்பதை மற்ற ஜாதியினர் உணர

வேண்டும். மற்ற ஜாதியினரைவிட அவன் அதிக முன் னேற்றமடைந்திருந்ததால் அது அவனுடைய பிழையா? மற்ற ஜாதியினர் ஏன் அவ்விதம் கற்று முன்னேறவில்லை? அவர்கள் ஏன் சோம்பேறிகளாயிருந்து பிராம்மணனை முற்றவிட்டார்கள்? ஆனால் முன்னேற்ற மடைவதென்ப தொன்று; அதைக் கெட்ட வழியில் உபயோகப்படுத்துவ தென்பது வேறு. எந்தவிதமான அதிகாரமும் கெட்ட வழி யில் உபயோகப் படுத்தப்பட்டாலும் அது பிசாசுத்தன மாகிறது. அது நன்மை செய்வதற்காகவே உபயோகப் படுத்தப்பட வேண்டும். ஆதலால் நெடுங்காலமாகத் தான் சேகரித்து வைத்திருக்கும் ஞானத்தை பிராம்மணன் இப் பொழுது பொதுஜனங்களுக்கு அளிக்க வேண்டும். இங் ஙனம் அவன் கொடுக்காத காரணத்தால்தான், முகம்மதிய படையெடுப்புக்கள் சாத்தியமாயின. இதே காரணத்தினால் தான் நாம் புழுவிலும் கேவலமாகி, சென்ற ஆயிரம் வரு ஷங்களாக இந்தியாவின்மேல் படையெடுத்துவரும் அனை வர் காலின் கீழும் மிதிக்கப்பட்டிருக்கிறோம். ஆதலால் நமது முன்னோர்கள் சேகரித்துவைத்திருக்கும் அறிவுப் பொக்கிஷத்தின் பூட்டுக்களை உடைத்து, அந்த அருஞ்செல் வத்தை அனைவருக்கும் வழங்குவதே நமது முதற் பணியா கும். அதை வெளியில் கொண்டுவந்து அனைவருக்கும் அணியுங்கள். பிராம்மணன்தான் இப்பணியை முதலில் செய்யவேண்டும். ஒரு பாம்பு ஒருவனைக் கடித்துவிட்டால், அவன் பிழைக்கவேண்டுமானால், கடித்த அப்பாம்பே அதன் விஷத்தை உறிஞ்சி எடுக்கவேண்டு மென்ற பழமொழி யொன்றுண்டு. அதுபோல் தன்னால் உண்டான கெடுதலைத் தானே தீர்க்கப் பிராம்மணன் முன்வரவேண்டும்.

பிராம்மணரல்லாத நண்பர்களுக்கு நான் சொல்ல விரும்பும் சில விஷயங்களுண்டு. கொஞ்சம் பொறுமை யுடனிருங்கள். அவசரப்படாதீர்கள். ஒவ்வொரு தட

வையும் பிராம்மணனிடம் சண்டையிட்டுக்கொண்டே யிருக்காதீர்கள். நான் முன் காண்பித்தபடி உங்கள் நிலைமைக்கு நீங்கள்தான். காரணம். உங்களை யார் ஆத்மிக வாழ்வையும் சமஸ்கிருதக் கல்வியையும் பராமுகம் செய்யச் சொன்னார்கள்? இவ்வளவு காலம் நீங்கள் என்ன செய்துகொண்டிருந்தீர்கள்? இவ்வளவு காலம் அசட்டையாக இருந்துவிட்டு, மற்றவர்களுக்கு அதிக புத்திக்கூர்மையும் அறிவும் இருக்கிறதென்று, இப்பொழுது வந்து ஏன் கூச்சலிடுகிறீர்கள்? வீண் விவாதங்களிலும் சண்டைகளிலும், பத்திரிகைகளுக்கு எழுதுவதிலும் உங்கள் சக்தியை வீணாக்கிக் கொள்வதற்குப் பதிலாக, இப்பயனற்ற சண்டைகளைவிட்டு, பிராம்மணனுக்கிருக்கும் கல்வியையும் அறிவையும் அடையப் பிரயத்தனம் செய்வீர்களாக. அப்பொழுது உங்கள் காரியம் கைகூடும். நீங்கள் சமஸ்கிருதத்தை நன்றாகப் பயின்று, பண்டிதர்களாகுங்கள். நிறையப் பொருள் செலவு செய்து, சமஸ்கிருதப் படிப்பை அனைவரிடமும் பரப்புங்கள். அதுதான் நீங்கள் செய்யவேண்டிய வேலையாகும். இதை நீங்கள் செய்து முடிப்பீர்களானால், நீங்களும் பிராம்மணர்களைப் போலாவீர்கள். இந்தியாவில் சமஸ்கிருதப் படிப்புக்கு எப்பொழுதும் உயர்ந்த மதிப்பு இருந்து வந்திருக்கிறது. அதை நீங்கள் பெற்றுவிட்டால், உங்களுக்கு விரோதமாக எவரும் ஏதும் சொல்லமுடியாது. அதுதான் பெரிய ரகசியம். எனவே அதை மேற்கொள்ளுங்கள்.

மனிதன் தன் எண்ணங்களினாலேயே கட்டுண்டிருக்கிறான். உலக முழுதும் அத்தகைய சக்தியால்தான் கட்டுண்டிருக்கிறது. மனத் திடம்தான் மனிதனிடமிருக்கும் அருஞ் சக்தியாகும். மனத்திடம் இருப்பவனிடம் ஓர் ஒளியுண்டாகிறது. அவன் மற்றவர்களைத் தன் வயப்படுத்தி, தன்னைப்போலவே அவர்களையும்

நினைக்கச் செய்கிறான் : இம்மாதிரி மகத்தான சக்திவாய்ந்தவர்கள் உலகில் பல சந்தர்ப்பங்களில் தோன்றுகிறார்கள். சக்திநிறைந்த புருஷர்கள் தோன்றும்போது, அவர்கள் தங்கள் எண்ணங்களை நம் மனத்தில் புகுத்துகிறார்கள். அதன் காரணமாக நாமும் அவ்வெண்ணங்களை நினைத்து சக்தியுடையவர்களாகிறோம். ஏன் ஸ்தாபனங்கள் அல்லது சங்கங்கள் தனி மனிதர்களைவிட அதிகம் சக்திவாய்ந்தவைகளாக இருக்கின்றன? ஏன் இந்தியாவிலிருக்கும் நாற்பது கோடி மக்களை நான்கு கோடி ஆங்கிலேயர்கள் ஆளுகிறார்கள்? மனோ தத்துவ சாஸ்திரத்தின்படி இதன் காரணமென்ன? இந்த நான்கு கோடி பேர்களும் ஒருமிக்க (ஒன்றாக) நினைக்கிறார்கள். அதன் காரணமாக அளவற்ற சக்தியைப் பெறுகிறார்கள். ஆனால் நாற்பது கோடி மக்களாகிய நாம் ஒற்றுமையின்றிப் பல்வேறாக நினைக்கிறோம். அதன் காரணமாக நம் சக்தி குறைவுபடுகிறது. ஆதலால், எதிர்கால இந்தியாவைச் சிறப்பானதாகச் செய்யவேண்டுமானால், நாம் அனைவரும் ஒன்று சேர்ந்து, ஒரு மனத்தினராகி, ஒரு சங்கமாக ஆகவேண்டும். அதுதான் அளவற்ற சக்தி அளிக்கக் கூடிய ரகசியம். அதர்வணவேத சம்ஹிதையிலுள்ள ஒரு வெகு அழகான சுலோகமொன்று இப்பொழுது என் ஞாபகத்திற்கு வருகிறது. 'நீங்கள் எல்லோரும் ஒரு மனத்தினராக விருங்கள்; நீங்கள் எல்லோரும் ஓர் எண்ணத்துடன் வாழுங்கள்.' ஒரு மனத்துடனிருந்த காரணத்தால் தான் தெய்வங்கள் தங்கள் தெய்வத்தன்மையைப் பெற்றன. ஒருமை மனதுடனிருந்தாற்றான் நீங்களும் தெய்வத்தன்மையை அடைவீர்கள். ஒரு மனத்தினராக இருத்தல் தான் தனி மனிதர்களும் சமூகங்களும் வெற்றிபெறும் ரகசியம். 'ஆரியர்கள்', 'திராவிடர்கள்', பிராம்மணர்கள் பிராம்மணரல்லாதவர்கள் என்று சண்டையிட்டுக்கொண்

டிருக்கும் வரை, எதிர்காலத்தில் ஒரு பெருமை வாய்ந்த இந்தியாவை உண்டாக்கக்கூடிய சக்தியை நீங்கள் பெற மாட்டீர்கள். எதிர்கால இந்தியா இவ்வொற்றுமை யுணர்ச்சியையே முற்றிலும் சார்ந்ததாகவிருக்கிறதென் பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். ஒருமை மனதும் ஒற்றுமை யுணர்ச்சியும் ஒன்றுகக் காரியங்களைச் செய்தலும்தான் வாழ்க்கையில் வெற்றிக்கு வழி. ஒவ்வொரு சீனு மனிதனும் தன் விரும்பம்போல் தனித்தனி நினைக்கிருன். ஒரு சில ஜப்பானியர்கள் சேர்ந்து நினைக்கிருர்கள். அதன் பயனை நீங்கள் அறிவீர்கள். உலக சரித்திரம் முழுதும் இப்படித்தான் நிகழ்கிறது. ஒற்றுமை யாகவிருக்கும் சிறு தேசங்கள் கட்டுப்பாடில்லாத பெரிய சமுதாயங்களை ஆண்டு வருவதைப் பல இடங்களில் காண்கிருேம். இதற்குக் காரணமிருக்கிறது. சிறு தேசங்கள் ஒன்றுக நினைத்து, ஒன்றுகக் காரியங்களைச் செய்து அபிவிருத்தி யடைகின்றன. தேசம் பெரியதாக ஆக, அது கட்டுக்கடங்காமல் போகிறது. அவர்கள் ஒற்றுமையில்லாமலே பிறந்து, ஒருவருக்கொருவர் சேர்ந் துழைக்க முடியாதவர்களாயிருக்கிருர்கள். ஆதலால் இச்சில்லரைச் சண்டைகளை நிறுத்தி நாம் ஒற்றுமைப்பட வேண்டியது அத்யாவசியமாயிருக்கிறது.

நம்மிடம் இன்னுமொரு குறையிருக்கிறது. சகோதரி களே! உங்கள் பெயரை இவ்விதம் உபயோகப்படுத்து வதற்காக நீங்கள் தயவு செய்து என்னை மன்னிப்பீர் களாக. பல நூற்றுண்டுகளாக நாம் அடிமையாகவிருந்த காரணத்தால், கேவலம் பெண்கள் கூட்டம் போலாகி விட்டோம்; நீங்கள் மூன்று பெண்களை, இந்நாட்டிலோ, அல்லது வெளி நாடுகளிலோ, ஐந்து நிமிடங்கள் சேர்த்து வைத்துப் பாருங்கள்; அவர்கள் அதற்குள் சண்டை போட்டுக் கொள்வதைப் பார்ப்பீர்கள். மேல் நாடுகளில்

பெண்கள் பெரிய சங்கங்கள் அமைத்து, தங்களுக்கிருக்கும் ஆற்றலைப் பற்றி அதிகமாகப் பேசுகிறார்கள். ஆனால் உடனே தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்ளுவார்கள். அது காரணமாக ஓர் ஆண் பிள்ளை போய் அங்கு ஆதிக்கம் செலுத்துவான். உலக முழுதிலும் இன்னும் பெண்கள் மேல் ஆண்கள் அதிகாரம் செய்யவேண்டியிருக்கிறது. நாம் பெண்கள் போலாகி விட்டோம். ஒரு பெண், பெண்களுக்குத் தலைவியாக வரத் தலைப்பட்டால், எல்லோரும் அவளைத் தூஷித்து, பலவாறாகத் திட்டி உட்காரும்படி செய்து விடுவார்கள். ஆனால் ஓர் ஆண் பிள்ளை வந்து அவர்களை அடக்கி, மிரட்டினால், அவனுடைய அதிகாரத்தைச் சரியென்று ஒப்புக்கொள்ளுவார்கள். இது ஒரு விதமான † மெஸ்மெரிசம், ஒரு விதமான சக்தியாகும். இம்மாதிரி ஒருவர் மற்றவர்களை வசப்படுத்தும் சக்தி உலகில் நிறைந்திருக்கிறது. நம் நாட்டுச் சகோதரர்களில் ஒருவர் பெரிய மனிதராக முன்வர முயன்றால் நாம் அனைவரும் அவரை அங்ஙனம் விடமாட்டோம். ஆனால் அந்நிய நாட்டு மனிதனொருவன் வந்து நம்மைக் கேவலமாக நடத்தினால், அது பரவாயில்லை. இத்தகைய வாழ்வுக்கு நாம் பழக்கப்பட்டு விட்டோம். அடிமைகள் உயர்ந்த மக்களாக முடியாது. ஆதலால் அடிமைத்தன்மையை விட்டு விடுவீர்களாக.

அடுத்த ஐம்பது வருஷங்களுக்கு இந்த மகத்தான நம் தாய் நாட்டைப் பற்றியே நாம் நினைப்போமாக. அதுவொன்றே நமது வாழ்க்கையின் முக்கிய அம்சமாக விருக்கட்டும். இக்காலத்தில் மற்றெல்லா தெய்வங்களும் நம் மனதை விட்டகலட்டும். நமது தேகம், நமது மக்கள் -

---

† Mesmerism, *ஒரு மனிதன் தன் சக்தியால் மற்றவனைத் தன் வயத்தினன் ஆக்குதல்.*

இவைதான் நம் உயிருள்ள தெய்வங்களாகவிருக்கின்றன. இத்தெய்வத்தின் கைகளும், கால்களும் கண்களும், சரீர மும் நாடு முழுதும் எங்கும் பரவியிருக்கின்றன. மற்ற தெய்வங்களனைத்தும் இப்பொழுது உறங்கிக் கொண் டிருக்கின்றன. நம்மைச் சுற்றிலும் பரவி, எங்கும் திகழ்ந்து கொண்டிருக்கும் இவ் விராட் புருஷனை வழிபடு வதை விடுத்து, நாம் வேறு தெய்வங்களை நாடிச் செல்ல வேண்டுமா? இந்தத் தெய்வத்தை நாம் முதலில் வழிபடு வோமாக; அதற்கு மேல் மற்ற தெய்வங்களை வழிபடக் கூடிய சக்தியை நாம் பெறுவோம். அரை மைல் நகர்ந்து கடக்க இயலுமுன், அனுமானைப் போல் கடலைத் தாண்ட யத்தனம் செய்தால், அது முடியுமா? அது முடியாத காரியமாகும். எல்லோரும் யோகிகளாக முடியுமா? அல் லது எல்லோரும் உட்கார்ந்து தியானத்தில் ஆழ்ந்திருப்பது தான் சாத்தியமான விஷயமா! நாள் முழுதும் உலக வாழ்க்கையில் ஈடுபட்டு, மாலையில் கொஞ்சம் உட்கார்ந்து, மூக்கைப் பிடித்துக் கொண்டால் தியானம் கை கூடி விடுமா? மூன்று தரம் மூக்கைப் பிடித்து சுவாசத்தை விட்ட உடனே ரிஷிகள் காற்றில் பறந்து வந்து உங்க ளுக்குச் சித்தியளித்து விடுவார்களா? சாதனை யென்பது விளையாட்டான காரியமல்ல. இவ்விதமாகச் செய்து சித்திபெறலாமென்று நினைப்பதெல்லாம் அறிவீனமாகும். ஆத்மிக வாழ்வின் முதல் அவசியம் சித்த சுத்தி; அதாவது உள்ளம் தூய்மையுடையதாக விருக்கவேண்டும். அது எப்படி உண்டாகிறது? முதலில் நம்மைச் சுற்றியிருப் பவர்களைத் தெய்வமாக நினைத்து வணங்குங்கள். இந்த விராட் புருஷனைப் பஜியுங்கள். நம்மைச் சுற்றியிருப் பவர்களைத் தெய்வமாக நினைத்து வழிபாடு ஆற்றுங்கள். அவர்களைத் தெய்வமாக வழிபடுவதுதான் நாம் செய்தற் கேற்றது. உலகில் வாழும் மனிதர்களும் இதர ஜீவ ஜந்

துக்களும்தான் நமது தெய்வங்கள்; முக்கியமாக நமது தேச மக்களே நமது முதல் வழிபாட்டிற்கு உரியவர்கள். ஒருவர்க்கொருவர் சண்டையிட்டுக் கொள்வதையும் பொருமைப் படுவதையும் விட்டு, இத்தகைய உயர்ந்த பரிசுத்தமான மனப்பான்மையை மேற்கொள்வீர்களாக. நமது பழங் கருமங்களின் காரணமாக இப்பொழுது நாம் இவ்வளவு துக்கம் அனுபவித்து வருகிறோம். இவ்வளவு கஷ்டங்களும் நம்மை விழிப்பெய்தச் செய்யாவிடில், அது மிக வருத்தகரமான விஷயமாகும்.

நாம் இன்று எடுத்துக் கொண்டிருக்கும் விஷயமோ மிகப் பெரிது. ஆதலால் அதை எங்கு நிறுத்துவதென்று எனக்குத் தெரியவில்லை. சென்னை மாகாணத்தில் நாம் செய்ய வேண்டிய சில காரியங்களைப் பற்றிச் சுருக்கமாய்ச் சில வார்த்தைகள் சொல்லி இப்பிரசங்கத்தை முடித்து விடுகிறேன். ஆத்மிகக் கல்வி, லௌகிகக் கல்வி இவ் விரண்டையும் நாம் சரியான முறையில் திருத்தி யமைக்க வேண்டும். நான் சொல்வது உங்களுக்கு விளங்குகிறதா? இதைப் பற்றியே நீங்கள் சதா நினைத்து, இதைப் பற் றியே பேசி, இதைப் பற்றியே கனவு கண்டு, கடைசியாக இதைச் செய்து முடிக்க வேண்டும். இத்தகைய ஆர்வ மும் முயற்சியும் உங்களிடம் ஏற்படும் வரையில் நம் நாட் டிற்குக் கதி மோட்சமில்லை. நீங்கள் இப்பொழுது பெற்றுவரும் கல்வி முறையில் பல நல்ல அம்சங்கள் இருக்கின்றன. ஆனல் அதன் கெடுதல்கள் அதன் நல்ல அம்சங்கள் யாவற்றையும் மறைக்கும்படி அவ்வளவு அதிகமாக விருக்கின்றன. முதலாவதாக அது நம் மக்க ளுக்கு மனிதத் தன்மையளிக்கக்கூடிய கல்வியாக இல்லை. அது முற்றிலும் எதிர்மறைத் தன்மையதாக விருக்கிறது. எதிர்மறை உணர்ச்சியை உண்டுபண்ணும் கல்வி அல்லது பயிற்சி சாவினும் கொடிது. ஒரு குழந்தை பள்ளிக்குச்

சென்றதும், 'தன் தகப்பனுர் ஒரு மடையன்' என்று அதற்கு முதற்பாடமாக கற்பிக்கப்படுகிறது; இரண் டாவதாக அதன் பாட்டனுர் அறிவிழந்தவரென்றும், மூன்ருவதாக அதன் ஆசிரியர்கள் பாசாங்குக்காரரர் களென்றும், நான்காவதாக நம் சாஸ்திரங்கள் அனைத்தும் பொய் யென்றும் – இவ்வாருக அதற்குக் கற்பிக்கப்படு கிறது. இதன் காரணமாக அக்குழந்தை பதினறு வய தடையும் போது, எந்த விதமான நம்பிக்கையும், பற்றுக் கோடும் இல்லாத, எதிர்மறை உணர்ச்சியையே ரூபமாகக் கொண்ட ஓர் உயிரற்ற, எலும்பற்ற வஸ்துவாகிருன். இக்கல்வியின் பயனைகச் சென்ற ஐம்பது வருஷங்களில் மூன்று மாகாணங்களிலும் ஓர் உயர்ந்த மனிதன் கூட உண்டாக்கப்படவில்லை. தற்காலத்தில் நம் தேசத்தில் தோன்றியிருக்கும் அறிவாளிகள் அனைவரும் வெளி நாடு களில் கல்வி பயின்றவர்களாகவோ அல்லது நம் நாட்டில் இன்னும் சிற்சில இடங்களில் திகழும் பழைய கலாசாலை களில் பயின்று தங்களைப் பரிசுத்தப்படுத்திக் கொண் டிருப்பவர்களாகவோ இருக்கிருர்கள்.

கல்வி யென்பது ஒருவனுடைய மூளையில் பல விஷ யங்களைத் திணிப்பதன்று. அப்படித் திணிக்கப்படும் விஷயங்கள் வாழ்நாள் முழுதும் செரியாமல் உபத்திரவம் செய்து கொண்டிருக்கும். அதனல் என்ன பயன்? கற்கும் விஷயங்கள் நன்ருக ஜீரணமாகிப் பயன்பட வேண்டும். அவை உயிர் ஊட்டுவனவாய், ஊக்கம் அளிப்பனவாய், மனிதத்தன்மை தருவனவாய், ஒழுக்கம் அமைப்பனவாய், இருக்க வேண்டும். நீங்கள் ஐந்தே ஐந்து கருத்துக்களை நன்ருக கிரகித்து, அவற்றை உங்கள் வாழ்க்கையிலும் நடத்தையிலும் ஊன்றி நிற்கும்படி செய்வீர்களானல், ஒரு பெரிய புத்தகசாலை முழுதையும் மனப்பாடம் செய்த வனை விடப் பெரிய கல்விமான்களாவீர்கள். 'சந்தனக்

கட்டை சுமக்கும் கழுதைக்கு, அக்கட்டைகளின் பாரம் தான் தெரியுமே ஒழிய, அவற்றின் வாசனையை அது உணராது' என்ற பழமொழி யொன்றுண்டு. வெறும் விஷயங்களைச் சேகரிப்பதுதான் கல்வி யென்றால், புத்தகசாலைகளன்றோ மகான்களாக விருக்கும்! அகராதிகளன்றோ மகரிஷிகளாகி விடும்! ஆத்மிக, லௌகிகக் கல்விகள் இரண்டையும் நம் கைகளில் ஏற்றுக்கொண்டு, அவைகளை இயன்ற வரை தேசீய முறையில் நிர்மாணம் செய்வதை நமது லட்சியமாகக் கொள்ள வேண்டும்.

இது மிகப் பெரிய வேலைதான். இதை நாம் முற்றிலும் செய்து முடிக்க முடியுமா வென்பதைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனால் அதற்கு ஆரம்பத்தை நாம் உடனே செய்ய வேண்டும். அதை எப்படிச் செய்வதென்பது அடுத்த கேள்வி. உதாரணமாகச் சென்னை மாகாணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். முதலில் ஒரு கோவில் அமைக்க வேண்டும். ஏனெனில் இந்துக்களிடம் மதத்திலிருந்துதான் எல்லாம் ஆரம்பமாக வேண்டும். அது காரணமாக நம் மதப் பிரிவுகளுக்குள் சண்டை உண்டாகலாமென நீங்கள் சொல்லலாம். எல்லாப் பிரிவுகளும் ஒப்புக்கொள்ளக் கூடிய 'ஓம்' என்ற சின்னத்தை வைத்துக் கொண்டால் சண்டையுண்டாகாது. 'ஓம்' ஐ ஒப்புக் கொள்ளாதவர்கள் இந்துக்களாக விருக்க முடியாது. இப்பொதுக் கோவிலில் அவரவர்கள் தங்கள் அனுஷ்டானப்படி வழிபாடு செய்ய உரிமை யிருக்க வேண்டும். இதில் எல்லாப் பிரிவுகளுக்கும் பொதுவாக விருக்கும் கொள்கைகள் கற்பிக்கப்பட வேண்டும். எல்லோரும் தங்கள் கொள்கைகளை, மற்றவர்களிடம் சண்டையிட்டுக் கொள்ளாமல் இங்கு போதிக்கலாம். இரண்டாவதாக இக்கோவிலுடன், ஆத்மிகப் பயிற்சியும் லௌகிகக் கல்வியும் ஒருங்கே அளிக்கக்கூடிய

ஆசிரியர்களை யுண்டாக்கக்கூடிய ஸ்தாபனம் ஒன்றிருக்க வேண்டும். சாதுக்கள் இப்பொழுது கிராமந்தோறும் சென்று ஆத்மிகக் கல்வியைப் பரப்பி வருவது போல், லௌகிகக் கல்வியும் வீடுகள் தோறும் சென்று பரப்பப் பட வேண்டும். இப்பணி இவ்வாசிரியர்கள் மூலமாகப் படிப்படியாகப் பரவி, இந்தியா முழுதிலும் பல இடங் களிலும் இம்மாதிரிக் கோவில்கள் அமைக்கப்பட வேண்டும்.

இதுதான் என் வேலைத் திட்டம். இது மிகப் பெரி தானதாகத் தோன்றலாம். ஆனால் இதைச் செய்ய வேண்டியது மிக அவசியமாக விருக்கிறது. இதற்கு வேண்டிய பணம் எங்கிருந்து வருமென நீங்கள் கேட்க லாம். பணம் சேகரிப்பது ஒரு பெருங்காரியமல்ல. சென்ற பன்னிரண்டு வருஷங்களாக அடுத்த வேளை சாப்பாடு எங்கிருந்து வருமென்று தெரியாமல் நான் இருந்து வந்திருக்கிறேன். ஆனால் எனக்கு வேண்டிய பணமும் மற்ற அனைத்தும் எங்கிருந்தாவது வந்து கொண்டுதா னிருந்தன. அவை வந்தாக வேண்டும்; ஏனெனில் அவை என்னுடைய அடிமைகள். அவைகளுக்கு நான் அடிமைப் பட்டவனல்ல. ஆதலால் அவை வந்தாகவேண்டும்; அவசியம் வந்தே தீரும். இப்பணியை ஆற்றக்கூடிய மனிதர்கள் எங்கே? அதுதான் முக்கியமான பிரச்னை. தமிழ் நாட்டு இளைஞர்களே! எனக்கு உங்களிடம் நம்பிக்கை இருக்கிறது. உங்கள் தாய் நாட்டின் அழைப்பை ஏற்று நீங்கள் வருவீர்களா? என்மேல் நம்பிக்கை வைத்து, என் சொற்படி கேட்கக்கூடிய தைரியம் உங்களுக்கிருந்தால், உங்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு மகத்தான எதிர்கால மிருக்கிறது. அளவற்ற தன் னம்பிக்கையை உடையவர்களாக விருங்கள். நான் இளமையில் அத்தகைய நம்பிக்கையை உடையவனாக

இருந்தேன்; அதுதான் இப்பெரிய காரியங்களைச் செய்யக் கூடிய சக்தியை எனக்களித்திருக்கிறது. அத்தகைய மகத்தான தன்னம்பிக்கையை நீங்கள் ஒவ்வொருவரும் உடையவர்களாக விருங்கள். உங்கள் ஆத்மாவில் அள வற்ற சக்தியிருக்கிறதென்றும், இந்நாடு முழுதையும் தட்டி எழுப்பக்கூடிய ஆற்றல் உங்களிடம் இருக்கிற தென்றும் நீங்கள் ஒவ்வொருவரும் திடமான நம்பிக்கை கொள்ளுங்கள். அந்நம்பிக்கை மாத்திரம் நம்மிடமிருந் தால், இப்புவி முழுதும் சென்று, நம் கருத்துக்களைப் பரப்பக்கூடிய ஆற்றலை நாம் பெற்றவர்களாவோம். உலக முழுதும் நம் லட்சியங்களை நாம் பரப்ப வேண்டும். இதற் காக நாம் இப்பொழுதிருந்து வேலை செய்ய வேண்டும். இவ்வுன்னதமான பணியை ஆற்ற, எனக்கு இளைஞர்கள் தேவை. ஆண்மையும், ஆரோக்கியமும், அறிவும், ஆற்ற லும் படைத்த இளைஞர்கள்தான் கடவுளை அடைய முடியு மென நமது சாஸ்திரங்கள் கூறுகின்றன. இளமையும், சக்தியும், நம்பிக்கையும் இருக்கும் காலத்தில்தான் உங்கள் எதிர்கால லட்சியத்தை நீங்கள் முடிவு செய்யவேண்டும். வயதாகிச் சலித்துப்போன பிறகு உங்களால் எக் காரியத்தையும் செய்யமுடியாது. இப்பொழுதிலிருந்து தாய்நாட்டின் சேவையென்ற இப்புனிதப் பணியில் ஈடு படுவீர்களாக. அதற்கு இதுதான் பருவம். ஏனெனில் அன்று மலர்ந்து, எவராலும் தொடப்படாத முகரப் படாத, தூய்மையான மலர்கள்தான் ஆண்டவனுடைய திருவடிகளுக்கு அருச்சனை செய்தற்குரியன. அவனும் அவைகளைத்தான் அன்புடன் ஏற்றுக்கொள்ளுகிருன். நமது வாழ்க்கையோ குறுகியது; ஆதலால் தாமதம் செய்யாமல் உடனே கிளம்புங்கள். கேவலம் வக்கீல்களா வதையும், ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள் வதையும், இதுபோன்ற மற்ற சிறு காரியங்களையும் விட

எவ்வளவோ மகத்தான காரியங்கள் நமக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றன. நமது நாட்டின் நன்மைக்காகவும், நமது மக்களின் முன்னேற்றத்திற்காகவும், மனித வர்க்கத் தின் சேவைக்காகவும் நம்மை அர்ப்பணம் செய்வது யாவற்றிலும் உன்னதமான பணியன்றோ? இவ்வற்ப உலக வாழ்க்கையில் என்ன விருக்கிறது? நீங்கள் இந்துக் கள். அந்த எல்லையற்ற, நித்திய ஆத்மிக வாழ்க்கையில் உங்களுக்கு இயல்பாகவே நம்பிக்கை யிருக்கும். சில சமயங்களில் சில இளைஞர்கள் வந்து என்னிடம் நாஸ் திகத்தைப்பற்றிப் பேசுகிறார்கள். இந்துவாகப் பிறந்த ஒருவன் நாஸ்திகனாக முடியுமென்று நான் நம்பவில்லை. மேல்நாட்டுப் புத்தகங்கள் சிலவற்றைப் படித்துவிட்டு, தாங்கள் உலோகாயதர்களாக ஆகிவிட்டதாக அவர்கள் நினைத்துக்கொள்ளலாம். ஆனால் அதெல்லாம் கொஞ்ச காலத்திற்குத்தான். நாஸ்திகர்களாவது உங்கள் ரத்தத் தில் இல்லை. உங்கள் இயல்பிற்கு விரோதமாக நீங்கள் ஆக முடியாது. அது முடியாத காரியம். அம்மாதிரி முயற்சி ஏதும் செய்யாதீர்கள். நானும் இளைஞனாக விருந்தபோது அவ்விதம் முயற்சி செய்தேன். ஆனால் முடியாத ஒரு விஷயம் எப்படி நிறைவேறப்போகிறது? வாழ்க்கை குறுகியது. ஆனால் ஆத்மா எல்லையற்றது, நித்தியமானது. சாவு நிச்சயம்; ஆதலால் நாம் அனைவரும் ஓர் உயர்ந்த லட்சியத்தை மேற்கொண்டு, அதற்காக நம் அனைத்தையும் தத்தம் செய்வோமாக. இதுவே நமது முடிவான தீர்மானமாக விருக்கட்டும். தன்னுடைய மக்களை உய்விப்பதற்காக் மறுபடியும் மறுபடியும் தோன்றுவேன் என்று கீதையில் திருவாய் மலர்ந்தருளி யிருக்கும் அந்த ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா நமக்கு ஆசி யளித்து, நம் லட்சியத்தை நிறைவேற்றுதற்குரிய ஆற்றலை யும் நமக்களிப்பானாக.

# கல்கத்தா வரவேற்புக்குப் பதிலுரை

[சுவாமிகள் மேல்நாட்டிலிருந்து கல்கத்தாவுக்கு முதல்தரம் திரும்பியபோது, கல்கத்தா வாசிகள் அவருக்கு ஒரு மகத்தான வரவேற்புக் கொடுத்தார்கள். அச்சமயம் அவர்கள் வாசித்துக் கொடுத்த வரவேற்புப் பத்திரத்திற்கு, சுவாமிகள் கீழ்க்கண்ட பதிலை அளித்தருளினார்கள்.]

ஒருவன் ஆத்மிக வாழ்க்கையை நாடி, சகலத்தையும் துறந்து, தனது ஊர், உறவினர் முதலியோரை விடுத்து, பழைய தொந்தங்களையும் மறந்து, சாதனையில் ஈடுபட்டுத் தன்னையும் மறந்திருக்க விரும்புகிறான். எனினும் அவன் உள்ளத்தினுள்ளே ஒரு சப்தம் மெதுவாக ஒலிக்கிறது. கிழக்கோ, மேற்கோ, எங்கு சென்றாலும், தன் ஊர், தன் இல்லத்தைவிட இன்பம் அளிக்கக் கூடியது வேறொன்றில்லை யென அச்சப்தம் உரைக்கிறது. இந்த பிரிட்டிஷ் இந்திய சாம்ராஜ்யத்தின் தலைநகரான கல்கத்தா வாசிகளே! உங்கள் முன்னிலையில் நான் ஒரு சன்யாசியாக நிற்கவில்லை; அல்லது ஆத்மிக விஷயங்களை உபதேசம் செய்யும் மத போதகனாகவும் வரவில்லை. முன் போலவே, ஒரு கல்கத்தா இளைஞனாக உங்களிடம் பேச வந்திருக்கிறேன். எனதன்பார்ந்த சகோதரர்களே! இந்நகரின் தெருப் புழுதிகளில் உட்கார்ந்துகொண்டு, குழந்தைப் பருவத்திலிருந்து பழகிய உரிமையோடு, உங்களிடம் என் மனதைத் திறந்து, என் உள்ளத்திலிருப்பவை யனைத்தையும் சொல்ல நான் விரும்புகிறேன். உங்கள் உபசாரப் பத்திரத்தில் சகோதரன் என்ற ஒப்பற்ற வார்த்தையைக் கொண்டு என்னை அழைத்ததற்காக, என் மனமார்ந்த வந்தனத்தைத் தயவுசெய்து ஏற்றுக்கொள்ளுங்கள். ஆம். உண்மையிலேயே நான் உங்கள் சகோதரன்தான்; நீங்களும் என் சகோதரர்களாகவே யிருக்கிறீர்கள். நான்

இங்கிலாந்திலிருந்து புறப்பட்டபோது, ஓர் ஆங்கில நண்பர் என்னைப் பார்த்து: 'ஐயனே! இத்தனை சுகமும், சந்தோஷமும் சக்தியும் பொருந்திய மேல் நாடுகளை நான்கு வருஷங்கள் அனுபவித்த பிறகு, தங்கள் தாய்நாட்டைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்' என்று கேட்டார். அதற்கு நான், 'மேல் நாட்டிற்கு வருவதற்குமுன் நான் என் நாட்டைச் சாதாரண அன்புடன் நேசித்திருந்தேன். ஆனால் இப்பொழுதோ இந்திய மண்ணே எனக்கு மிகப் புனிதமாகவும், இந்தியக் காற்றே மிகப் பவித்திரமாகவும், இந்திய நாடு முழுதுமே, நான் பக்தியுடன் யாத்திரை செய்ய வேண்டிய க்ஷேத்திரமாகவும் எனக்குத் தோன்றுகின்றது' என்று பதிலுரைத்தேன். கல்கத்தா வாசிகளே, எனதருமைச் சகோதரர்களே, நீங்கள் என்பால் காட்டியிருக்கும் அன்புக்காக நான் உங்களுக்குப் போதுமான அளவு நன்றி செலுத்த முடியாது. ஆனால் உங்களுக்கு நான் ஏன் வந்தனம் செலுத்தவேண்டும்? நீங்கள் என்னுடைய சகோதரர்கள்; என்னை வரவேற்பதில் ஒரு சகோதரர் - ஓர் இந்து சகோதரர் - செய்யக்கூடிய கடமையைத்தான் செய்திருக்கிறீர்கள். ஓர் இந்து சகோதரரென்று நான் ஏன் குறிப்பிட்டேனெனில், குடும்பத்திற்குள் ஒருவருக்கொருவர் இத்தகைய பரஸ்பர அன்பு, நம் நாட்டைத் தவிர வேறு எங்கும் காணமுடியாது.

சர்வமத சபை யென்பது ஒரு பெரிய விஷயம்தான். அதில் சந்தேகமில்லை. அதை ஏற்பாடு செய்த கனவான்களுக்கு இந்நாட்டின் பல நகரங்களிலிருந்தும் வந்தனம் செலுத்தப்பட்டிருக்கிறது. அவர்கள் நமக்குக் காட்டிய அன்புக்காக, இவ்வந்தன மனைத்தும் அவர்களுக்கு அளிக்க வேண்டியதுதான். ஆனால் சர்வமத சபையின் உண்மைச் சரித்திரத்தை நான் உங்களுக்கு எடுத்துரைக்க வேண்டும். இதன் மூலம் அவர்கள் தங்கள் பெருமையை உலகிற்கு

எடுத்துரைக்கவும், தங்கள் மதத்தின் பெருமையை உலக முழுதும் பிரசாரம் செய்யவும், விரும்பினார்கள். ஆனால் ஆண்டவனுடைய திருவுள்ளம் வேறு விதமாக விருந்தது.

நான் அமெரிக்காவில் பிரதானமாகச் செய்யவேண்டியிருந்த வேலை சர்வமத சபையில் இருக்கவில்லை. எனினும் என் வேலையை ஆரம்பிப்பதற்கு அது ஒரு சந்தர்ப்பம் அளித்தது. இச்சந்தர்ப்பத்தை அளித்ததற்காகச் சர்வ மத சபையை ஏற்பாடு செய்த கனவான்களுக்கு நமது நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். உண்மையில் நம் நன்றி அந்தப் பெரிய மனது படைத்த அமெரிக்கா மக்களுக்கே உரித்தாயது. அவர்கள் அன்பும், கருணையும், விருந்தினரை அன்புடன் பேணும் குணமும் நிறைந்தவர்கள். மற்றெல்லா நாடுகளைவிட அங்கு சகோதர உணர்ச்சி அதிகமாக அபிவிருத்தியாயிருக்கிறது. அமெரிக்க நாட்டினன் ஒருவன் ஐந்து நிமிஷங்கள் உங்களுடன் ரயிலில் பிரயாணம் செய்கிறான்; அதற்குள் அவன் உங்களிடம் சிநேகிதமாகிவிடுவான். அடுத்த கணமே விருந்தினராகத் தன் வீட்டிற்கு வரவேண்டுமென்று அவன் உங்களை அழைத்துச் சென்று, தன் இதய முழுதும் உங்களிடம் திறந்து காண்பிப்பான். அமெரிக்கா மக்களின் இவ்வுயர்ந்த குணத்தை நாம் மிகவும் போற்ற வேண்டும். அவர்கள் எனக்குக் காட்டிய அன்பு சொல்லும் தரதத தன்று. எவ்வளவு அதி ஆச்சரியமான அன்புடனும் உதாரகுணத்துடனும் அவர்கள் என்னை நடத்தினார்கள் என்பதைப்பற்றிச் சொல்ல ஆரம்பித்தால், அதை முடிக்க நெடுங்காலமாகும்.

இங்ஙனம் அட்லாண்டிக் மகா சமுத்திரத்திற்கு அக்கரையிலிருக்கும் இதர நாடுகளுக்கும் நம்முடைய நன்றி உரித்தாயது. நான் இங்கிலாந்தில் முதலில் கால் எடுத்து வைத்தபோது, ஆங்கில மக்கள்பால் வெறுப்பு

என் மனத்திலிருந்ததுபோல் வேறு எவர் மனத்திலும் இருந்திராது. இப்பொழுது இம்மேடைமே லிருக்கும் ஆங்கில நண்பர்களே அதற்கு சாட்சி. ஆனால் அவர்களுடன் அதிகம் இருந்து பழகி, அவர்களுடைய தேசீய வாழ்க்கையையும், அதற்கு அடிப்படையாக விருக்கும் கொள்கைகளையும் பார்க்கப் பார்க்க, அவர்கள்பால் என் மனத்தில் அன்பு வளரத் தொடங்கியது. இப்பொழுது என்னைப் போல் அவர்களை நேசிப்பவர்கள் இக்கூட்டத்தில் எவரும் இருக்கமாட்டார்கள். அவர்கள் நாட்டில் அவர்கள் எவ்விதம் தங்கள் வாழ்க்கையை நடத்துகிறார்களென்பதை நேரில் தெரிந்து, நீங்கள் அவர்களுடன் பழகவேண்டும். எல்லாக் கஷ்டங்களும் துன்பங்களும் அறியாமையென்ற ஒரு காரணத்தினாலேயே பிறக்கின்றனவென்று நம்முடைய சாஸ்திரங்கள் போதிக்கின்றன. இங்குகூட அவ்வுண்மையைக் காண்கின்றோம். ஆங்கிலேயர்களுக்கும் நமக்குமிடையே ஏற்படும் கஷ்டங்களுக்கெல்லாம் காரணம் அறியாமை என்பதை நாம் உணரவேண்டும். நமக்கு அவர்களை நன்றாகத் தெரியாது. நம்மை அவர்களுக்குத் தெரியாது. துரதிர்ஷ்ட வசமாக ஆத்மிக வாழ்வும் ஒழுக்கமும்கூட, இவ்வுலக சுகத்தைக் கொடுக்கக்கூடியதாக விருந்தால்தான், நல்லவையென்று அவர்கள் நம்புகிறார்கள். ஓர் ஆங்கிலேயன் அல்லது வேறொரு மேல் நாட்டிலிருந்து வருபவன், இந்தியாவிற்கு வந்து, நமது நாட்டிலிருக்கும் வறுமையையும் துக்கத்தையும் பார்த்ததும், இங்கு எந்தவிதமான மதமும் ஒழுக்கமும் இருக்கமுடியாதென முடிவு செய்து விடுகிறான். அவனுடைய அனுபவத்தின்படி அது உண்மையாக விருக்கிறது. ஐரோப்பாவில் சீதோஷ்ண ஸ்திதியின் கடுமையினாலும், இன்னும் மற்ற காரணங்களினாலும் வறுமையாக விருப்பவர்கள் கெட்டவர்க

ளாகவும் இருக்கிறுர்கள். ஆனுல் இந்தியாவில் நிலைமை வேறு. இந்தியாவில் நான் அனுபவத்தில் கண்டதென்ன வெனில், ஒருவன் செல்வத்தில் குறையக் குறைய ஒழுக் கத்தில் சிறந்தவனுக விருக்கிறுன். இதைப் புரிந்து கொள்ளக் கொஞ்ச காலம் வேண்டியிருக்கிறது. நம் தேசீய வாழ்க்கைக்கு அடிப்படையாக விருக்கும் இவ் வுண்மையை அறிந்துகொள்ளப் போதுமான காலம் வெளிநாட்டு மக்கள் இங்கிருப்பதில்லை. ஒரு தேசத்தை ஊன்றிக் கவனித்து, நன்ருக அர்த்தம் செய்துகொள்ளக் கூடிய சக்தியும் பொறுமையும் சிலருக்குத்தா னுண்டு. உலக முழுதிலும் இந்நாட்டில்தான், வறுமையும் ஏழ்மை வாழ்க்கையும், குற்றமாகவும் பாவமாகவும் கருதப்படுவ தல்ல. அது மாத்திரமல்ல, ஏழ்மையும் துறவும் தெய்வத் தன்மை யுடையதாகப் போற்றப்படுகின்றன. இந்நாட்டில் தான் மிக உயர்ந்தவர்களும் வறுமையைத் தாங்களே வலிய மேற்கொள்ளுகிருர்கள். இம்மாதிரியே மேல் நாட் டுச் சமூக வாழ்க்கையைப்பற்றி நாமும் அவசரப்பட்டு இழிவான முடிவுக்கு வராமல், பொறுமையுடன் அதைப் பற்றி ஆராய்ச்சி செய்து அறிந்துகொள்ள வேண்டும். மேல் நாடுகளில் இருபாலாரும் தாராளமாக ஒருவரிடம் ஒருவர் பழகுகிருர்கள். இன்னும் நம்மிடமிருந்து வேறு பட்ட இதர பழக்கவழக்கங்களும் அவர்களிடம் இருக் கின்றன. இவைகளை யெல்லாம் ஆராய்ந்து பார்த்தால், இவைகளுக்கு அடிப்படையாகப் பல உயர்ந்த கருத்துக்கள் இருப்பதைக் காணலாம். இதிலிருந்து அவர்கள் பழக்க வழக்கங்களை யெல்லாம் நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும் அல்லது நம் பழக்க வழக்கங்கள் அனைத்தையும் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று நான் உரைப்பதாக நீங்கள் நினைக்கக்கூடாது. ஒரு நாட்டின் பழக்கவழக் கங்கள் பல நூற்றுண்டுகளாக ஏற்பட்ட வளர்ச்சியின்

பயனுகை அடைகின்றன. அவைகளுக்கு ஆதாரமாக ஆழ்ந்த கருத்துக்களும் இருக்கின்றன. ஆதலால் ஒருவர் மற்றொருவருடைய பழக்கவழக்கங்களைக் கேவலமாக நினைப்பதும் பேசுவதும் தவறு என்பதைத்தான் நான் வற்புறுத்த விரும்புகிறேன்.

இன்னுமொரு விஷயத்தைப் பற்றியும், இக்கூட்டத்தின் முன்னிலையில் நான் சொல்ல விரும்புகிறேன். என் வேலை அமெரிக்காவைவிட இங்கிலாந்தில் அதிக திருப்திகரமாக நடந்திருப்பதாக நான் நம்புகிறேன். ஆங்கிலேயன் இயற்கையிலேயே தைரியமும் விடாமுயற்சியும் உடையவனுக விருக்கிருன். அவனுடைய மண்டையோடு கொஞ்சம் கனமாக விருக்கலாம். அதன் காரணமாக விஷயங்களை அவன் விரைவில் கிரகிப்பதில்லை. ஆனல் ஓர் எண்ணத்தை அவன் மூளையில் பதியும்படி செய்துவிட்டால், அது வீணுவதில்லை. கடினமான காரியங்களையும் விடா முயற்சியுடன் கொண்டு செலுத்தும் சக்தி அவனிடம் இயல்பாகவே அமைந்திருக்கிறது. அக் கருத்திற்காக அவன் ஊக்கத்துடன் உழைக்கிருன்; அதன் காரணமாக அதன் பயனைப்பெறுகிருன். ஆங்கில மக்களிடமிருக்கும் பெரு முயற்சியும் ஆற்றலும் உலகில் வேறு எந்த மக்களிடமும் காணமுடியாது. அவர்களிடம் கற்பனுசக்தி யில்லாமலிருக்கலாம். ஆனல் அவர்கள் இடைவிடாமல் உழைப்பவர்களா யிருக்கிருர்கள். அவர்கள் இதயத்தில் ஆழ்ந்த அன்பும் உணர்ச்சியும் நிறைந்திருக்கின்றன. அவர்கள் அனைவருமே உயர்ந்த வீரர்களாக விருக்கிருர்கள். அவர்கள்தான் உண்மையான க்ஷத்திரியர்கள். தங்கள் வருத்தங்களையும் துக்கங்களையும் வெளிக்குக் காட்டாமலிருப்பதே அவர்களின் பழக்கம். சிறு வயதிலிருந்து இவ்விதமான பயிற்சியை அவர்கள் ஏற்று வளருகிருர்கள். ஓர் ஆங்கிலேய மகன்

ஏன் ஓர் ஆங்கிலேயப் பெண்கூட பகிரங்கமாகத் தன் வருத்தத்தை வெளிக் காண்பிப்பதை நீங்கள் பார்க்க முடியாது. ஆங்கிலேயப் பெண்கள்கூட, நம் நாட்டில் தைரியம் வாய்ந்த ஆண்களும் செய்தற்கரிய காரியங்களைச் செய்வதை நான் பார்த்திருக்கிறேன். இத்தகைய ஆண்மை யுள்ள செயலோடு அவர்களிடம் மிக ஆழ்ந்த உணர்ச்சி யுள்ள இருதயமுமிருக்கிறது. ஆங்கிலேயன் ஒருவனிடம் நெருங்கிப் பழகி, அவன் அன்பை மாத்திரம் நீங்கள் பெறுவீர்களானால், தன் இதயத்தை முற்றிலும் அவன் திறந்து காண்பிப்பான். அதற்குமேல் அவன் என் றென்றும் உங்கள் நண்பனாகவும் சேவகனாகவும் இருப் பான். ஆதலால்தான் அமெரிக்காவைவிட இங்கிலாந்தில் என் வேலை வெற்றிகரமாக நடந்திருப்பதாக நான் நினைக் கிறேன். நான் ஒருவேளை நாளையே இறந்தாலும், இங்கி லாந்தில் ஆரம்பிக்கப்பட்டிருக்கும் வேலை அத்துடன் மறையாமல் தொடர்ந்து நடக்குமென்று உறுதியாக நம்புகிறேன்.

சகோதரர்களே! என் மனத்தில் மிகுந்த உணர்ச் சியை உண்டாக்கக்கூடிய மற்றொரு விஷயத்தையும் உங்கள் உபசாரப் பத்திரத்தில் குறிப்பிட்டிருக்கிறீர்கள். என் குருவும், என் லட்சியமும் தெய்வமுமாக இருக்கும் ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ச தேவரைப்பற்றி அதில் சொல்லியிருக்கிறீர்கள். எனக்கு ஏதாவது வெற்றி ஏற்பட்டிருந்தால், எனது எண்ணங்கள், வார்த்தைகள் அல்லது செய்கைகளால் ஏதாவது நற்பயன் ஏற்பட்டிருந் தால், என் வாயிலிருந்து வந்த வார்த்தைகளால் உலகில் எவருக்காவது நன்மையுண்டாகி யிருந்தால், அவை எனக்கு உரியனவல்ல. அவை அனைத்தும் அவருக்கே உரியன. ஆனால் என் நாவிலிருந்து ஏதாவது தீயசொற்கள் தோன்றியிருந்தால் அல்லது என் மனத்திலிருந்து

வெறுப்பு வெளித் தோன்றியிருந்தால், அவை அவரைச்-சாரா; அவையனைத்தும் என்னுடையனவேயாகும். என்னுடைய எண்ணங்கள், வார்த்தைகள் அல்லது செயல்களில் பலவீனமுள்ளவைகளிருப்பின், அவையனைத்தும் என்னுடையன. அவைகளின் உயிர்ச் சக்தியும், பலமும், தூய்மையும் கொடுக்கக்கூடிய அனைத்தும் அவருடைய வார்த்தைகளாலும் ஆசியாலும் தோன்றியனவாகும். எனது நண்பர்களே! ஆம், இம்மகா புருஷரை உலகம் தெரிந்துக்கொள்ள வேண்டியிருக்கிறது; பெரிய தீர்க்க தரிசிகளைப் பற்றியும் அவர்கள் வாழ்க்கைச் சரித்திரங்களைப் பற்றியும் நாம் சரித்திர புத்தகங்களில் படித்திருக்கிறோம். அவர்கள் தோன்றி மறைந்த பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு, அவர்களுடைய சீடர்களின் புத்தகங்கள் மூலமாகவும் சேவைகள் மூலமாகவும் நாம் அவர்களைப்பற்றி அறிகிறோம். ஆயிரக் கணக்கான வருஷங்களில் ஏற்படும் மாறுதல்களுக்குப் பிறகு அவர்கள் வாழ்க்கைச் சரித்திரங்களை நாம் பெறுகிறோம். ஆனால் எவருடைய வாழ்க்கையை நான் கண்களினாலேயே கண்டேனோ, எவருடைய நிழலால் நான் வளர்ந்தேனோ, எவருடைய திருவடிகளில் நான் அனைத்தையும் கற்றேனோ— அந்த ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய அருள் பிரகாசத்திற்கு எவரும் ஈடாகமாட்டார்கள்.

என்னுடைய அருமை நண்பர்களே! கீதையில் சொல்லப்பட்டிருக்கும் இவ்வரிய மொழிகளை நீங்கள் அனைவரும் தெரிந்திருப்பீர்கள்:

'எப்பொழுது, எப்பொழுது தர்மம் குலைந்து அதர்மம் மேம்படுகிறதோ; அப்பொழுதெல்லாம் நான் உடல்தாங்கி வருகிறேன். நல்லவர்களைக் காப்பாற்றுவதற்காகவும், துஷ்டர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை ஸ்தாபிப்பதற்காகவும் நான் ஒவ்வொரு யுகத்திலும்

தோன்றுகிறேன்.' இத்துடன் இன்னுமொரு விஷயத்தையும் நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும். இத்தகைய மகத்தான சம்பவமொன்று நம் கண்களுக்கு முன் நேர்ந்து கொண்டிருக்கிறது.

பெரிய அலையொன்று புறப்படுவதற்குமுன் பல சிறிய நீர்ச்சுழல்கள் வருவனபோல், மகத்தான அவதார புருஷர்கள் தோன்றுவதற்கு முன், அவர்களை விடக் குறைந்த சக்திபெற்ற பெரியோர்கள் பலர் நாட்டில் ஆங்காங்கு தோன்றுவதைக் காணலாம். பெரிய அலையானது ஒருவரும் பாராமல் அறியாமல் தோன்றி, எவரும் எதிர்பாராத வளவில், மிகப் பெரிதாகி, அது வரும் போக்கில் அச்சிறு நீர்ச்சுழல்கள் யாவற்றையும் தன்னுள்ளே விழுங்கி, மகத்தானதாக ஆவதுபோல, அவதார புருஷர்களும் எவரும் உணராமல், தெரியாமல் தோன்றி வளர்ந்து, எவரும் தடுக்கமுடியாத ஒரு சக்தியாக சமூகத்தில் விளங்குகிறார்கள். இத்தகைய சம்பவமொன்று நம்முன் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. உங்களுக்குக் கண்களிருந்தால் அதைப் பார்ப்பீர்கள். உங்கள் இதயம் திறந்திருந்தால், அதை உணர்வீர்கள். நீங்கள் சத்தியத்தை நாடுகிறவர்களாயிருந்தால், அதை அடைவீர்கள். இக்காலத்தில் இம்மகத்தான உண்மையைக் காணாதவர்கள் கண்களிருந்தும் குருடர்களாவார்கள். ஓர் எளிய பிராம்மண குடும்பத்திலே, உங்களில் சிலரும் கேட்டிருக்க முடியாத ஓர் உள்நாட்டுக் கிராமத்திலே பிறந்த இவர், பல நூற்றாண்டுகளாக விக்கிரக ஆராதனையை வெகு வேகமாகக் கண்டித்து வந்த நாடுகளிலும் பக்தியுடன் வழிபாடு செய்யப்பட்டுவருகிறார்.

யாருடைய சக்தியால் இவ்விதம் நேருகிறது? என்னுடைய சக்தியினாலா அல்லது உங்கள் சக்தியினாலா? ஸ்ரீராமகிருஷ்ண பரம ஹம்சர் என்று இங்கு வெளித்

தோன்றியிருக்கும் அந்த சக்தியின் காரணமாகவே இவையனைத்தும் நடைபெறுகின்றன. நீங்கள், நான், மகரிஷிகள், தீர்க்கதரிசிகள், அவதார புருஷர்கள் முதலிய அனைவரும் வெவ்வேறு அளவில் இச்சக்தியை உடைய வர்களாக விருக்கிறோம். ஸ்ரீ ராமகிருஷ்ண பரம ஹம்சர் என்று தோன்றியிருக்கும் இம்மகா புருஷரிடத்தில் எல்லை யற்ற ஒரு சக்தியின் தோற்றத்தைக் காண்கிறோம். அச் சக்தி செய்ய விருக்கும் பணியின் ஆரம்பத்தை மட்டிலுமே நாம் இப்பொழுது பார்க்கிறோம். இந்தத் தலைமுறை முடிவதற்கு முன் அச் சக்தியின் அற்புதமான வேலையை அதிகமாகக் காண்போம். இந்தியாவின் முன்னேற்றத்திற்காக இத்தகைய சக்தி அத்யாவசிய மென்பதை நாம் மறக்கலாகாது. எனவே அவ்வவசி யத்தை அனுசரித்து, இந்தியாவின் மறுமலர்ச்சிக்காக, ஏற்றகாலத்தில் அது தோன்றியிருக்கின்றது போலும்.

ஒவ்வொரு நாட்டிற்கும், அதனதன் இயல்பிற்கேற்ற வேலை முறை யிருக்கின்றது. சில நாடுகள் ராஜீயத்தின் மூலமாகவும், சில சமூக சீர்திருத்தங்களின் மூலமாகவும், சில வேறு துறைகளின் மூலமாகவும் வேலை செய்கின்றன. நாம் மதத்தின் மூலமாகத்தான் நம் பணியை ஆற்ற முடியும். ஆங்கிலேயன் ராஜீயத்தின் மூலமாகத்தான் மதத்தையும்கூட அர்த்தம் செய்து கொள்ளுகிறான். சமூகத்தை இன்னும் நன்றாக எப்படி சீர்திருத்தம் செய்ய உதவுமென்ற எண்ணத்தின் மூலமாகத்தான், அமெரிக்கா வில் மதத்தை அர்த்தம் செய்து கொள்ளுகிறார்கள். ஆனால் இந்துவாக விருப்பவன், ராஜீயம், சமூக அமைப்பு முதலிய அனைத்தையும் மதத்தின் மூலம்தான் அர்த்தம் செய்து கொள்ளுகிறான். மதம் அதாவது ஆத்மிக வாழ்க்கைதான் இந்திய வாழ்க்கையின் முக்கிய அம்சமா யிருக்கிறது. இவ்வாத்மிக வாழ்விற்கு அபாயமேற்பட்

டிருந்தது. நம் வாழ்க்கைக்கு மூலாதாரமாக, நமது முது கெலும்பு போலிருக்கும் இதை மாற்றி, இதற்குப் பதிலாக ராஜீயத்தை நமது மூலாதாரமாகக் கொள்ள யத்தனம் செய்யப்பட்டதுபோல் தோன்றிற்று. இம் முயற்சி வெற்றிபெற்றிருந்தால் நாம் இதற்குள் அழிந்திருப்போம். ஆனால் ஆண்டவனுடைய சித்தம் வேறு விதமாக விருந்தது. எனவே இம் மகா சக்தி தோன்றிற்று. இம் மகாபுருஷரை நீங்கள் எவ்விதமாகவேனும் ஏற்றுக் கொள்ளுங்கள்; அல்லது எவ்விதமாகவேனும் வணக்கம் செய்யுங்கள். அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் பல நூற்றாண்டுகளாக நம் சரித்திரத்தில் தோன்றியதாகக் கூறப்படும், அனைவரிலும், நம் கண் முன் தோன்றியிருக்கும் இச் சக்தி மிக அற்புதமாக விருக்கிறதென்பதை நீங்கள் மறுக்க முடியாது. இந்திய மக்களின் நன்மைக்காகவும், மனிதவர்க்கத்தின் நன்மைக் காகவும் இம்மகா சக்தி என்ன செய்திருக்கிறதென்று ஆராய்ந்தறிவது ஹிந்துக்களாகிய உங்கள் கடமையாகும். உலக முழுதிற்கும் ஒரு மதம் இருக்கவேண்டுமென்றும், எல்லா மதத்தினர்களுக்குள்ளும் சகோதர மனப்பான்மை நிலவ வேண்டுமென்றும் உலகில் மற்ற தேசங்களில் நினைக்கப்படுமுன், இந் நகருக்கருகிலேயே சர்வ மதத்தினர் களும் தங்கள் லட்சியமாகக் கொள்ளக்கூடிய வாழ்க்கையை ஏற்று இப்பெரியார் நடத்தி வந்தார் என்பதை நீங்கள் உணர வேண்டும். அவருடைய வாழ்க்கையே ஒரு சர்வமத சபையாக விருந்தது.

நம் சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் எல்லா வழிபாடுகளிலும் உயர்ந்தது, கடவுளை அரூபமாக வணங் குவதாகும். நாம் அனைவரும் கடவுளை அரூபமாக வணங் கக்கூடிய ஆற்றலைப் பெற்றிருந்தால் நன்றாக விருந் திருக்கும். ஆனால் அவ்வாற்றல் அனைவருக்கும் இல்லாத

காரணத்தால், மனிதவர்க்கத்தின் பெரும் பகுதியினர் கடவுளை ஏதாவதொரு வடிவில் வணங்க வேண்டியவர் களாயிருக்கின்றனர். இத்தகைய லட்சியமொன்றை ஏற்று, பக்தி சிரத்தையுடன் வழிபட்டாலன்றி, எந்த நாடு அல்லது மக்களும் முன்னேற்றமடைய முடியாது. ராஜீய லட்சியங்கள், ராஜீயத் தலைவர்கள், சமூக லட்சி யங்கள், வியாபார லட்சியங்கள் முதலியன இந்தியாவில் அதிகமாக மதிக்கப்படுவதில்லை. நாம் வேண்டுவது ஆத்மிக லட்சியங்கள். உயர்ந்த பெரியோர்களைப் பின் பற்றுவதில் நமக்கு ஊக்கமும் ஆர்வமும் இருக்கின்றன. நமது லட்சிய புருஷர்கள் ஆத்மிக உணர்ச்சி நிறையப் பெற்றவர்களாக விருக்கவேண்டும். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அத்தகைய லட்சிய புருஷர்களில் ஒருவராக விளங்குகிருர். நான் சொல்லுவதை நம்புங்கள்! இந்நாடு முன்னேற்றமடைய வேண்டுமாஞல், அவரை ஊக்கத் துடனும் உற்சாகத்துடனும் பின்பற்றுவதின் மூலம்தான் அது இயலும். அவரைப் பற்றிப் பிரசாரம் செய்வது, நீங்கள், நான் அல்லது எவராயிருப்பினும் சரி, அதைப் பற்றிக் கவலையில்லை. அவரைப் பின்பற்ற வேண்டு மென்பதுதான் கருத்து. அவரை உங்கள் முன்னிலையில் வைக்க விரும்புகிறேன். அவருடைய உண்மைத் தன்மையை நீங்கள் ஆராய்ந்து அறிந்துகொள்ள வேண்டியது அவசியம். நம்முடைய நாட்டின் நன்மைக் காகவும், நம் மக்களின் நன்மைக்காகவும் அதை இப்பொழுதே நீங்கள் உணரவேண்டும். இவ்விலட்சிய புருஷரை எங்ஙனம் பின்பற்றுவதென்பதையும் நாம் முடிவு செய்ய வேண்டும்.

இச் சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். நீங்கள் இதுவரை கண்டிருக்கக்கூடிய, அல்லது கற்ருே கேட்டோ

இருக்கக்கூடிய வாழ்க்கைகள் அனைத்திலும் இது மிகப் புனிதமானது. நீங்கள் இதுவரை படித்திருக்கக்கூடிய ஆத்மிக சக்தியின் தோற்றங்கள் அனைத்திலும் இது மிக மகத்தானதெனில், இத்தகைய அற்புத வாழ்க்கையை நீங்கள் சாதாரணமாகக் காண முடியாதென்று சொல்லவும் வேண்டுமோ ? இம்மகான் மறைந்து இப்பொழுது பத்து வருஷங்களே ஆகியிருக்கின்றன ; இதற்குள் அவர் சக்தி உலக முழுவதும் பரவியிருக்கின்றது. இவ்வுண்மைகளை நீங்கள் கவனிக்கவேண்டும். நம் நாட்டின் நன்மைக்காகவும், நம் மதத்தின் நன்மைக்காகவும் இந்த உயர்ந்த ஆத்மிக லட்சியத்தை உங்களுக்கு எடுத்துரைப்பது எனது கடமையாகும். என்னைப் பார்த்து, அவரை மதிப்பிடாதீர்கள். நான் கேவலம் பலவீனமான, அவருடைய ஒரு கருவியாக விருக்கிறேன். அவருடைய மகத்தான தன்மையை என் மூலம் உணர முயற்சி செய்யாதீர்கள். அவருடைய வாழ்க்கை மிக மிக மகத்தானது. நானோ அல்லது அவருடைய இதர சீடர்களோ நூற்றுக்கணக்கான வருஷங்கள் சாதனை செய்தாலும் அவர் உண்மைத் தன்மையில் பத்து லட்சத்தில் ஒரு பங்குகூடப் பெற முடியாது. ஆதலால் நீங்களே அவர் தன்மையை யறிய முயற்சி செய்யுங்கள். உங்கள் உள்ளத்தினுள்ளே அந்த நித்யமான பரம் பொருள் சாட்சியாக வீற்றிருக்கிறான். அவனே ஸ்ரீ ராம கிருஷ்ண பரம ஹம்சராகவும் தோன்றியிருக்கிறான். அப்பரம்பொருளே, நம் நாட்டின் நன்மைக்காகவும் உலகத்தின் நன்மைக்காகவும் உங்கள் இதயத்தைத் திறந்து, உணர்ச்சி அளித்து, நம் நாட்டின் மறுமலர்ச்சிக்காக உழைக்கக்கூடிய ஆற்றலை உங்களுக்கு அளிப்பானாக. நாம் உழைத்தாலும்—உழைக்காவிடினும் இம் மறுமலர்ச்சி உண்டாவது திண்ணம். ஆண்டவனுடைய

திருப்பணி உங்களேயும் என்னேயும் போன்றவர்களுக் காகக் காத்துக்கொண்டிராது. வெறும் மண்ணிலிருந்து அவர் ஆயிரக்கணக்கான ஊழியர்களே உண்டாக்கிக் கொள்ள முடியும். அவருடைய புதிய சேவையில் கலந்து கொள்ள அனுமதிக்கப்படுவது நம்முடைய அதிர்ஷ்டமும் பெருமையுமாகும்.

உங்கள் உபசாரப் பத்திரத்தில் நீங்கள் எடுத்துக் காட்டியிருப்பதுபோல், இவ்வுலகை நாம் ஜெயிக்க வேண்டியிருக்கிறது. ஆம், அதை நாம் செய்தாக வேண்டும். இந்தியா உலகை ஜயித்தாகவேண்டும் ; அதைவிடக் குறைந்த லட்சியத்தை நாம் கொள்ள லாகாது. இவ்விலட்சியம் மிகப் பெரிதானதுதான். சிலர் இதைக் கேட்டு ஆச்சரியப்படலாம். எனினும் அதுவே நம் லட்சியம். நாம் உலகை ஜயிப்போம், அல்லது சாவோம். இந்த இரண்டிலொன்று நேர்ந்தாகவேண்டும். முன் சொல்வதுதான் உயிர் இருப்பதன் அறிகுறி. நாம் வெளிச் சென்று, நம் லட்சியங்களேப் பரப்பி வாழ வேண்டும் ; அல்லது தாழ்ந்து, கெட்டு இறப்போம். இந்த இரண்டைத் தவிர நமக்கு வேறு மார்க்கம் ஒன்றும் இல்லே. இந்த இரண்டில் ஒன்றை நாம் மேற்கொள்ள வேண்டும், வாழ்வு அல்லது சாவு ; செய் அல்லது சா.

நம் நாட்டில் நம் மக்களிடையே இருக்கும் சிறு சிறு அற்பச் சண்டை சச்சரவுகளேப் பற்றி நாம் அனைவரும் அறிவோம். நான் சொல்வதை நம்புங்கள். உலக முழுதும் இப்படித்தானிருக்கிறது. மற்ற நாடுகளுக்குத் தங்கள் ராஜீய அமைப்பின்படி பிரதேசங்களுடன் சம்பந்தமிருக்கிறது. தங்களுக்குள் சண்டை அதிகமாகி விட்டால், வெளி நாடுகளுடன் ஒரு சண்டை யுண்டாக்கிக் கொள்ளுகிறார்கள். உடனே உள் நாட்டிலிருக்கும் சண்டை நின்றுவிடுகிறது. வெளி நாட்டாருடன் நமக்குச் சண்டை

யில்லாததால், நம் நாட்டில் சண்டை யிருந்துகொண்டே யிருக்கிறது. நமது சாஸ்திரங்களிலிருக்கும் உண்மைகளை உலகிலிருக்கும் மற்ற மக்களுக்கு எடுத்துரைப்பதே நாம் வெளிநாடுகளில் முக்கியமாகச் செய்யவேண்டிய வேலை யாக விருக்கவேண்டும். இப்பணியே நம்மை யொற்று மைப்படுத்துமென்பதில் உங்களில் யாருக்காவது சந்தேக மிருக்கிறதா? அச் சந்தேகத்தை விளக்குவதற்கு இக் கூட்டமே போதுமான சாட்சியாகும். சுய நலம் காரணமாகவே வெளிநாடுகளில் இப்பணியை நாம் ஆற்றவேண்டுமென்று இதுவரை எடுத்துக் காட்டினேன். இக்காரியத்தை மேற்கொள்ள வேண்டுமென்பதற்கு வேறு உயர்ந்த காரணங்களும் இருக்கின்றன.

இந்தியாவின் வீழ்ச்சிக்கும் தாழ்விற்கும் ஒரு முக்கிய மான காரணம், ஒரு புழு தன் வங்குக்குள் நுழைந்து கொள்வதுபோல், நம் மக்களும் குறுகிய மனப்பான்மை கொண்டு, தங்களிடமிருக்கும் அருமணிபோன்ற கருத்துக் களை, மற்ற மக்களுக்கு அளிக்காமையேயாகும். நம்மிட மிருக்கும் உயிர்ச்சக்தியளிக்கும் உண்மைகளை நாம் மற்ற வர்களுக்கு அளிக்க மறுத்தோம். நாம் வெளிநாடுகளுக் குச் செல்லவில்லை. சென்று அவர்களுடைய அனுபவத் தையும் பெருதிருந்ததுதான் நமது தற்காலத் தாழ்ந்த நிலைக்குப் பிரதானமான காரணம். நம்மை இதுகாறுட் அடிமையாக்கி வைத்திருந்த இந்தக் குறுகிய மனப்பான் மையை உடைத்தெறியுங்கள். ராஜாராம்மோகன்ராய் அவர்கள் வெளிநாடுகளுக்குச் சென்று வந்ததிலிருந்து தான், நம் நாட்டில் புதுவாழ்வு ஆரம்பித்திருக்கிறதென் பதை நீங்கள் உணருவீர்கள். அதிலிருந்துதான் இந்திய வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டு, அது நாள்தோறும் அபிவிருத்தியாகி வருகிறது. முன் சிறு ஓடையாக ஓடிக்கொண்டிருந்தது இப்பொழுது ஒரு வெள்ளமாகப்

பாய்ந்து கொண்டிருக்கிறது. அதை எவரும் தடுக்கமுடியாது. எனவே நாம் அவசியம் வெளிநாடுகளுக்குச் செல்லவேண்டும். நம்மிடம் இருப்பனவற்றை அவர்களுக்கு அளித்து, அவர்கள் அளிக்கக் கூடியனவற்றை, நாம் அவர்களிடமிருந்து பெறவேண்டும். அதுதான் இயற்கை நெறியாகும். நாம் எப்பொழுதுமே மேல் நாட்டாரின் பாதங்களில் உட்கார்ந்து கொண்டிருப்பதா? மதத்தைக்கூட அவர்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டுமா? யந்திர சாஸ்திரத்தை நாம் அவர்களிடமிருந்து கற்றுக்கொள்ளலாம். இன்னும் மற்ற பல விஷயங்களையும் நாம் அவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளலாம். இவைகளுக்குப் பதிலாக நாம் அவர்களுக்குக் கற்பிக்கவேண்டிய விஷயங்களும் இருக்கின்றன. அவைகளில் முக்கியமானது நம்முடைய மதம்; நம்முடைய ஆத்மிக உணர்ச்சி. ஒரு பூரணமான நாகரிகத்தை உலகம் எதிர்பார்த்து நிற்கிறது. அதற்குவேண்டிய அருஞ்செல்வத்தை உலக மக்கள் இந்தியாவிலிருந்து எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நமது நாடு சென்ற நூற்றுக் கணக்கான வருஷங்களில் க்ஷீணித்துப் பலவிதமான அல்லல்களில் ஆழ்ந்திருந்த போதிலும், இந்தத் துக்கத்தினிடையே நம் முன்னோர்கள் தாங்கள் சம்பாதித்து வைத்திருந்த அற்புதமான ஆத்மிக செல்வத்தைக் கைவிடாமல், தங்கள் மார்போடு அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். உலகம் அச்செல்வத்திற்காகக் காத்துக்கொண்டிருக்கிறது.

நம்முடைய முன்னோர்கள் சேகரித்து வைத்திருக்கும் இந்த விலைமதிக்கவொண்ணாத பொக்கிஷத்திற்காக வெளிநாட்டு மக்கள் எத்தகைய வேட்கை கொண்டிருக்கிறார்களென்று உங்களுக்குத் தெரியாது. இந்த அமிர்தவாரிதியில் ஒரு வாய் கிடைக்கினும் அதைப் பெறுவதற்கு அவர்கள்

ஆவலுடன் கையை நீட்டிக் கொண்டிருக்கிறார்கள். அதன் அருமையை அறியாமல் நாம் வெறும் பேச்சுக்களி லும், விவாதங்களிலும், சண்டையிட்டுக் கொண்டும், புனிதமான விஷயங்கள் அனைத்தையும் கேலிசெய்து கொண்டும் காலத்தைப் போக்கிக் கொண்டிருக்கிறோம். புனிதமான விஷயங்களைக் கேலி செய்வதே நம் தேசீயப் பழக்கமாய்ப் போய்விட்டது. இவைகளைப் பெறுவதற் காக மற்றவர்கள் படும்பாட்டை நாம் உணருகிறோமில்லை. ஆதலால் நாம் வெளிநாடுகளுக்குச் சென்று, அவர்கள் நமக்குப் புகட்டக்கூடிய அறிவைப் பெற்றுக்கொண்டு அதற்குப் பதிலாக ஆத்மிக ஞானத்தை அவர்களுக்கு அளிக்கவேண்டும். பூத உலகின் அற்புதங்களை அவர்க ளிடமிருந்து பெற்று ஆத்மிக வாழ்வின் அற்புதங்களை நாம் அவர்களுக்கு அளிப்போம். நாம் எப்பொழுதும் மாணவர்களாகவே யிருக்கலாகாது. சில விஷயங்களில் அவர்களுக்கு ஆசார்யர்களாகவும் இருப்போம். சமத்துவ மில்லாமல் சிநேகமிருக்கமுடியாது. ஒருவன் கொடுத்துக் கொண்டும், மற்றவன் பெற்றுக்கொண்டுமே யிருந்தால், அவர்களுக்குள் சமத்துவம் இருக்கமுடியாது. நீங்கள் ஆங்கிலேயர்களிடமும், அமெரிக்கர்களிடமும் சமத்துவ மாக இருக்க விரும்பினால், அவர்களிடம் நீங்கள் கற்றுக் கொள்வதுடன், அவர்களுக்குக் கற்பிக்கவும் வேண்டும். பல நூற்றாண்டுகள் கற்பித்தாலும் தீராத அவ்வளவு விஷயங்கள் நம் நாட்டிலிருக்கின்றன. இங்ஙனம் செய் தாகவேண்டும். நம் ரத்தத்தில் ஊக்கமும் உற்சாகமும், ஆண்மையும் ஆற்றலும் நிறைந்திருக்கவேண்டும். வங் காளிகளாகிய நாம் கற்பனாசக்தி நிறைந்தவர்களாகக் கரு தப்படுகிறோம். நமக்குக் கற்பனாசக்தி யிருக்கிறதென்றே நானும் நினைக்கிறேன். கற்பனையுடன், மிகுதியான உணர்ச்சியும் இளகிய இதயமும் நமக்கிருப்பதாக மற்ற

வர்கள் நம்மைக் கேலி செய்கிருர்கள். என் சிநேகிதர்களே! நான் உரைப்பதைக் கேளுங்கள். மூளை மிக நுட்பமானதுதான்; ஆனல் ஓர் அளவுக்குமேல் அது செல்லாது. ஆனல் இதயத்தின் மூலம்தான் அருளும் ஆர்வமும் பெற முடியும். ஆழ்ந்த உணர்ச்சியின் மூலம்தான் மகத்தான ஆத்மிக அனுபவங்களை அடைதல் இயலும். ஆதலால் இதய உணர்ச்சி நிறைந்த வங்காளிகள்தான் இம் மகத்தான பணியைச் செய்து முடிக்க முடியும்.

**उत्तिष्ठत जाग्रत प्राप्य वरान्निबोधत ।**

விழியுங்கள், எழுங்கள், கோரிய கருமம் கைகூடும் வரை உழையுங்கள். கல்கத்தா இளைஞர்களே! எழுங்கள், விழியுங்கள். நம் பணியை ஆரம்பிக்க இதுவே ஏற்ற காலமாகும். அச்சம் தவிர்த்து ஆண்மையுள்ளவர்களாகுங்கள். நம்முடைய சாஸ்திரங்களில் தான் 'அபீ அபீ' 'அச்சந்தவிர் அச்சந்தவிர்' என்ற வார்த்தை சொல்லப்பட்டிருக்கிறது. நாம் அச்சம் தவிர்த்து பயமற்றவர்களானல், நம் காரியம் கைகூடும். உங்கள் பாரதத் தாய்க்கு உங்கள் மகத்தான தியாகம் தேவையாக விருக்கிறது. ஆதலால் விழித்து எழுங்கள். இப்பணியை இளைஞர்கள்தான் செய்து முடிக்கமுடியும். 'ஊக்கமும் பலமும், கட்டுமாருத உடலும், உள்ளத் திட்பமும், புத்தி நுட்பமும் உடைய இளைஞர்கள் இவ்வரிய காரியங்களை ஆற்றமுடியும். இத்தகைய இளைஞர்கள் ஆயிரக்கணக்கானவர் கல்கத்தாவிலிருக்கிருர்கள். நான் ஏதோ பெரிய காரியங்கள் செய்திருப்பதாக நீங்கள் சொல்லுகிறீர்கள்! கல்கத்தாத் தெருக்களில் விளையாடிக் கொண்டிருந்த பிரயோசனமற்ற பையன் நான் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். நானே நீங்கள் உரைப்பதுபோல் அரிய காரியங்களைச் செய்திருந்தால், நீங்கள் இன்னும் எவ்வளவு அதிகமான காரியங்களைச் செய்யமாட்டீர்கள்?

எழுங்கள், விழியுங்கள்! உலகம் உங்களை எதிர்பார்த்து நிற்கிறது. இந்தியாவின் மற்ற பக்கங்களில் புத்தி நுட்பம், பணம் முதலிய விருக்கின்றன. ஆனால் உற்சாக மென்பது இங்குதானிருக்கிறது. ஆதலால் கல்கத்தா இளைஞர்களே! நிறைந்த ஊக்கத்துடன் எழுந்து சேவை செய்ய முன்வருவீர்களாக. உங்களை ஏழைகளென்று நினைக்கவேண்டாம். உங்களுக்கு உதவி செய்ய நண்பர்கள் எவருமில்லை யென்று நினைக்கவேண்டாம். பணம் எப்பொழுதும் மனிதனை யுண்டாக்கியதில்லை. மனிதன் தான் பணத்தை யுண்டாக்கியிருக்கிறான். உலகம் முழுதுமே மனிதனுடைய பெருஞ் சக்தியினாலும், ஊக்கத்தினாலும், மனத் திட்பத்தினாலும்தான் உண்டாக்கப்பட்டிருக்கிறது.

உபநிடதங்கள் யாவற்றிலும் அழகான கட உபநிஷத்தைப் படித்தவர்களுக்கு இக்கதை ஞாபகமிருக்கும். அரசன் பெரிய யாகமொன்று செய்து கொண்டிருந்தான். தானத்திற்காக நல்ல பொருட்களைக் கொடுப்பதற்குப் பதிலாக, பயனற்ற குதிரைகளையும் பசுக்களையும் அவன் தானமாக கொடுத்துக் கொண்டிருந்தான். அச்சமயம் அவன் மகன் நசிகேதன் மனதில் சிரத்தை யுண்டாயிற்று. சிரத்தையென்ற வார்த்தை அற்புதமான பொருளையுடையது. அதிலிருந்துதான் எல்லா நற்பயன்களும் விளைகின்றன. நசிகேதன் மனதில் அது எப்படி வேலை செய்கிறதென்பதைப் பார்ப்போம். அவன் தனக்குத்தானே சொல்லிக் கொண்டான்: ‘நான் எவருக்கும் குறைந்தவனல்லன்; நான் பலருக்கு மேம்பட்டவன். எக்காரியத்தையும் செய்து முடிக்கும் ஆற்றல் என்னிடம் உண்டு.’ இந்தத் தைரியம் அவன் மனதில் அதிகரித்தது. தன் மனதில் தோன்றிக் கொண்டிருந்த ‘மரணம் என்பதென்ன’ வென்ற பிரச்னையை சந்தேகமற அறிய விரும்பினான். எமலோகம் சென்று எமனைக் கண்டுதான்

இவ்விஷயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியிருந்தது. எனவே அங்கு சென்றான். இவ்வாண்மை நிறைந்த இளைஞன் எமன் வீட்டில் மூன்று நாட்கள் காத்துக் கொண்டிருந்து எமனைச் சந்தித்தான். அதற்குமேல் அவன் கோரிய ஞானத்தை எங்ஙனம் பெற்றானென்பதை நீங்கள் அறிவீர்கள். இத்தகைய சிரத்தைதான் நமக்கு வேண்டும். நம் துரதிர்ஷ்டத்தின் காரணமாக அது அநேகமாய் நம் நாட்டிலிருந்து மறைந்துவிட்டது. அதன் காரணமாகத்தான் நாம் தற்கால நிலைமையை அடைந் திருக்கிறோம்.

இச்சிரத்தைதான் நமக்கு இப்பொழுது தேவை. மனிதனுக்கும் மனிதனுக்கும் வித்தியாசம் அவர்களுக்கு இருக்கும் சிரத்தையிலுள்ள வித்தியாசம்தான். ஒரு மனிதனை உயர்ந்தவனாக்குவதும், மற்றொருவனைத் தாழ்ந்த வனாக்குவதும் அவர்களிடமிருக்கும் சிரத்தையும் சிரத்தை யின்மையும்தான். தன்னை உயர்வாக நினைப்பவன் உயர்ந்து விளங்குகிறான். தன்னைத் தாழ்வாக நினைப்பவன் தாழ்ந்து வீழ்கிறான் என்று எனது குருநாதர் சொல்லு வார். அது மிகவும் உண்மை. நமக்குத் தன்னம்பிக்கை அளிக்கக்கூடிய சிரத்தையை நாம் பெற வேண்டும். மேல் நாட்டு மக்கள் இப்பொழுது பெற்றிருக்கும் ஆதிக்கம் அனைத்திற்கும் காரணம் அவர்கள் கொண்டுள்ள சிரத்தைதான். அவர்கள் கேவலம் ஸ்தூல பலத்தில் நம்பிக்கை வைத்தே இவ்வளவு காரியங்களைச் சாதிக் திருக்கிறார்க ளென்றால், ஆத்மிக பலத்தில் நம்பிக்கை வைத்தவர்கள் இன்னும் எவ்வளவு அதிகமான காரியங் களைச் சாதிக்க முடியும்? நமது சாஸ்திரங்களும் மகான் களும் எல்லையற்ற சக்தி வாய்ந்த அப்பரம் பொருளைப் பற்றியே உபதேசித்தருளி யிருக்கிறார்கள். அந்த அளவற்ற ஆற்றல் படைத்த பரம்பொருளை நீங்களும்

நம்புவீர்களாக. ஆத்மாவை எதுவும் அழிக்கமுடியாது. அதில் எல்லையற்ற சக்தி புதைந்திருக்கிறது. அது என்றும் வெளிப்படுவதற்குத் தயாராக விருக்கிறது. உலகில் மற்ற பாகங்களில் தோன்றியிருக்கும் தத்துவ சாஸ்திரங்களுக்கும் இந்திய தத்துவ சாஸ்திரங்களுக்கும் இதுதான் பெரிய வித்தியாசம். ஆத்மாவில் சர்வ சக்தியும் நிறைந்திருக்கிறதென்ற கொள்கையை அத்வைதிகள், விசிஷ்டாத்துவைதிகள், துவைதிகள் முதலிய அனைவரும் ஏகோபித்து ஒப்புக் கொள்ளுகிறார்கள். அதை நாம் வெளிப்படுத்த வேண்டும். அதற்காக நாம் வேண்டுவதெல்லாம் சிரத்தை, தன்னம்பிக்கையும்தான். தற்காலத்தில் எனக்கும் உங்களுக்கும் மற்றெல்லோருக்கும் தேவையாக விருப்பது இம்மகத்தான தன்னம்பிக்கைதான். இத்தன்னம்பிக்கையைப் பெறுவதுதான் நாம் செய்யவேண்டிய பெரிய வேலையாகும். சகலத்தையும் இகழ்ந்து பேசுவது என்ற கேவலமான நோய் நம்மைப் பீடித்து வருகிறது. அதை விட்டுவிடுங்கள். அதை அறவே அகற்றுங்கள். அதற்குப் பதிலாக சிரத்தையும் தன்னம்பிக்கையும் கொண்டு பலம் பெறுவீர்களாக. அதிலிருந்து அனைத்தும் தானே உண்டாகும்.

நாம் செய்து முடிக்க வேண்டிய காரியமோ மகத்தானது. அதில் நான் செய்திருப்பது மிகக் குறைவு. நீங்கள்தான் அக்காரியத்தைச் செய்து முடிக்கவேண்டும். நான் நாளை இறந்து விடலாம்; ஆனல் இப்பணி அத்துடன் முடியாது. இப்பணியை மேற்கொண்டு ஆற்ற ஆயிரக் கணக்கானவர் முன் வருவார்களென்று நான் மனதார நம்புகிறேன். நான் நினைப்பதற்கு அதிகமாகவே அவர்கள் செய்து முடிப்பார்கள். என்னுடைய தேசத்திலும், என் தேசத்து இளைஞர்களிடமும் எனக்கு எல்லையற்ற நம்பிக்கை யிருக்கிறது. மற்றவர்களைக் காட்டிலும்

வங்காள இளைஞர்களுக்கு இதில் அதிகமான பொறுப் பிருக்கிறது. சென்ற பத்து வருஷங்களாக நான் இந்தியா முழுதும் சுற்றிப் பார்த்திருக்கிறேன். இந்தியாவைப் பழைய ஆத்மிக நிலைக்குக் கொண்டுவரும் சக்தி வங்காள இளைஞர்களிடமிருந்தே பிறக்குமென்ற நம்பிக்கை என் மனத்திலிருக்கிறது. வங்காள இளைஞர்காள்! உங்கள் ரத்தத்தில் உணர்ச்சியும் ஊக்கமும் நிறைந்திருக்கின்றன. இப்பெரிய தேசத்தின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் சென்று, நம் முன்னேர்கள் கண்டுபிடித்த நித்தியமான ஆத்மிக உண்மைகளை உபதேசம் செய்யக்கூடிய வீரர்கள் உங்களிடமிருந்தே தோன்றுவார்கள். இதுதான் நீங்கள் செய்து முடிக்கவேண்டிய மகத்தான பணியாகும். ஆதலால் நான் உங்களுக்கு மறுபடியும் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். 'எழுங்கள், விழியுங்கள்; கோரிய கருமம் கைகூடும் வரை உழையுங்கள்.' எதற்கும் பயப்படாதீர்கள். ஏனெனில் எல்லாவிதமான சக்தியும் சாதாரண மக்களிடமிருந்தே பிறந்திருக்கிறதென்று உலக சரித்திரம் நமக்குக் கற்பிக்கிறது. சாதாரண மக்களிட மிருந்தே உலகின் மகத்தான பெரியோர்கள் அனைவரும் தோன்றியிருக்கிருர்கள். சரித்திரம் மறுபடியும் அவ் விதமே நேரப் போகிறது. எதற்கும் அஞ்சாதீர்கள். நீங்கள் அற்புதமான காரியங்களைச் செய்வீர்கள். உங்கள் மனதில் பயம் தோன்றினுல், அக்கணமே நீங்கள் சக்தி யற்றவர்களாகி விடுவீர்கள். பயமே உலகின் துன்பங்கள் அனைத்திற்கும் காரணம். பயமே மூடக் கொள்கைகள் அனைத்திலும் கொடியது. பயமே நமது கஷ்டங்களுக்குக் காரணம். பயமின்மை ஒரு கணத்தில் சுவர்க்கத்தை நமக்களிக்கும். ஆதலால் அளவற்ற தைரியத்தை மேற் கொள்வீர்களாக. 'எழுங்கள், விழியுங்கள், கோரிய கருமம் கைகூடும் வரை, இடையருது உழையுங்கள்.'

# இந்து மதத்தின் அடிப்படையான கொள்கைகள்

(லாகூரில் பேசியது)

பஞ்சாப், இந்தியா முழுதிலும் புனிதமாகக் கருதப் பட்டுவருகிறது. பிரம்ம வர்த்தமென்று மனு குறிப்பிட் டிருக்கும் நாடு இதுவே. இந்நாட்டில்தான் ஆத்மிகத் துறையில் மகத்தான முயற்சி செய்யப்பட்டு, அதன் காரணமாக ஆத்மிகப் பெருவெள்ளம் இங்கிருந்து புறப் பட்டு உலகமெல்லாம் பாய்ந்தது. இங்குதான் ஆத்மிக வேட்கை முதலில் பிறந்து, பிறகு வலுப்பெற்று மகத் தான ஆறுகளைப்போல் பரந்துசென்று, உலகம் முழுதும் பிரவாகமாகப் பரவியிருக்கிறது. இங்குதான் அவ் வுண் மைகள் இடிபோன்ற முழக்கத்துடன் பகிரங்கமாக உலகிற் கெடுத்து உரைக்கப்பட்டன. இந்தியாவின் மேல் வந்த படையெடுப்புக்கள் அனைத்தையும் தன் மார்பு கொடுத்து எதிர்த்து தாக்கியதும் இந்நாடே. இவ்வளவு கொடுமைகளுக்கும் கஷ்டங்களுக்குப் பிறகும், இதன் மகிமையும் பலமும் அழியாமல் அப்படியே யிருக்கின்றன. இங்குதான் பிற்காலத்தில் கருணை நிறைந்த குருநானக் தம் அற்புதமான அன்பை உலகிற் களித்தார். இங்குதான் அவருடைய விசாலமான இருதயத்தைத் திறந்து, இந்துக் களை மாத்திரமல்லாமல், முகம்மதியர்களையும் சேர்த்து தம் கைகளால் தழுவி, மார்பில் அணைத்துக்கொண்டார். நம்முடைய மிக மகத்தான வீரர்களில் ஒருவரான குரு கோவிந்தசிங், தம் மதத்திற்காக, தம்முடைய ரத்தத் தையும் அத்துடன் தம் உயிருக்குயிரான தம் உறவினர் களின் ரத்தத்தையும் சிந்திய நாடும் இதுவே. அவர்

தம்மைப் பின்பற்றுவோரால் கைவிடப்பட்டபோதும், அதனால் கலங்காமல், அஞ்சாமல், தம் வாயில் வசை மொழி ஏதுமின்றி, காயம்பட்ட சிங்கம்போல் தென்னாட்டிற்குச் சென்றார்.

பஞ்ச நதிகள் பாயும் புராதன நாட்டின் குழந்தைகளே! நான் உங்கள் முன் ஆசார்யனாக வரவில்லை. உங்களுக்குச் சொல்லித் தருவதற்கு எனக்கு அதிகம் தெரியாது; இதே நாட்டின் கிழக்குப் பிரதேசத்திலுள்ள உங்களுடைய சகோதரன் என்ற முறையிலே, உங்களுடன் கலந்து பேசவே வந்திருக்கிறேன். நமக்குள்ளிருக்கும் வித்தியாசங்களை எடுத்துச் சொல்ல நான் வரவில்லை. நம் அனைவருக்கும் ஆதாரமாக விருக்கும் ஒற்றுமைகளைப் பற்றியே பேச நான் வந்திருக்கிறேன். எங்ஙனம் நாம் எப்பொழுதும் சகோதரர்களாகவே வாழ முடியும், நம் ஆத்மிக வாழ்க்கையை எங்ஙனம் பலப்படுத்த முடியும் என்ற விஷயங்களைப் பற்றி ஆராய்ச்சி செய்வதற்கு நான் உங்கள் முன்னிலையில் வந்திருக்கிறேன். ஒருவர்க்கொருவர் குறைகள் கண்டுபிடித்துக்கொண்டும், தூஷித்துக்கொண்டு மிருந்த காலம் தீர்ந்துவிட்டது. நம் சமூகத்தை திருத்தியமைக்கக்கூடிய நிர்மாண வேலை செய்யவேண்டிய காலம் இது. குறைகள் கண்டுபிடித்தலும், அவைகளுக்காகக் கடுமையாகச் சண்டை போடுதலும் உலகில் சில சமயங்களில் அவசியமாக விருக்கின்றன. அது கொஞ்சகாலத்திற்குத்தான் பொருந்தும். ஆனால் நாம் எப்பொழுதும் தொடர்ந்து செய்யவேண்டியது நிர்மாண வேலையே யொழிய, வசவு பேசலும் அழிவு வேலை செய்தலுமல்ல. சென்ற நூறு வருஷங்களாகப் போதுமான வசவும் தூஷணைகளும் பேசியாகிவிட்டன. விஞ்ஞான சாஸ்திரப் பயிற்சியின் காரணமாக, நம் மதத்திலும் சமூகத்திலும் இருக்கும் குறைபாடுகள்

அனைத்தும் நன்றாக வெளிப்பட்டுவிட்டன. எனவே இக் குறைகளை நீக்குவதற்காக அறிவும் ஆற்றலும் படைத்த அறிவாளிகள் பலர் யத்தனம் செய்தார்கள். அவர்கள் மனத்தில் சத்தியமும், நியாய உணர்ச்சியும், தேசபக்தியும் நிறையக் குடிகொண்டிருந்தன. தமது மதத்தின்பாலும் தெய்வத்தின்பாலும் அவர்களுக்கு நிறைந்த அன்பிருந்தது. நம் சமூகத்திலிருக்கும் கொடுமைகளையும், நமது மத அனுஷ்டானங்களிலிருக்கும் தவறுகளையும் கண்டு, அவர்களால் சகிக்க முடியவில்லை. அதன் காரணமாகத் தாங்கள் தவறு என்று நினைத்த அனைத்தையும் தாட்சண்யமின்றி மிகக் கடுமையாகத் தாக்கினார்கள். இவ்வரிய ஆத்மாக்கள் போற்றுதற்குரியவர்கள் ஆவார்கள். அவர்கள் மிகுந்த நன்மை செய்திருக்கிறார்கள். ஆனால் கண்டனங்கள், வசவுகள், தூஷணைகள் —இவை போதுமான அளவு நடந்துவிட்டன. இனி நாம் நிர்மாண வேலையில் இறங்கவேண்டிய காலம் வந்துவிட்டது. சிதறுண்டு கிடக்கும் நம் சக்தியனைத்தையும் ஒன்று சேர்த்து, இப் பணியில் செலுத்தி, நம் தேசத்தை முன்னேற்றப் பாதையில் அழைத்துச் செல்லவேண்டிய தருணம் இது. வீட்டை சுத்தம் செய்தாகிவிட்டது. இனி அதில் குடிபுக வேண்டும். பாதை சரிபடுத்தப்பட்டிருக்கிறது ; இனி அதில் முன் செல்லுவோமாக.

இதற்காகத்தான் நான் உங்கள் முன்னிலையில் வந்திருக்கிறேன். நான் எந்தப் பிரிவையும் கட்சியையும் சேர்ந்தவனல்லவென்பதை முதலில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். எல்லாப் பிரிவுகளும் எனக்கு மகிமை பொருந்தியனவாகவே தோன்றுகின்றன. அவை யனைத்தையும் நான் நேசிக்கிறேன். அவை யனைத்திலுமிருக்கும் உண்மைகளையும் நன்மைகளையும் அறிய என் வாழ்நாள் முழுதும் முயற்சிசெய்து கொண்டிருக்கிறேன். ஆதலால்

எல்லாப் பிரிவுகளுக்கும் பொதுவாக இருக்கக்கூடிய கொள்கைகளைப்பற்றி இன்றிரவு ஆராய்ச்சி செய்வோமாக. ஆண்டவனுடைய திருவருளால் அனைவருக்கும் பொதுவான கொள்கைகளைக் கண்டுபிடிப்போம். அத்துடன் நிற்காமல், அவைகளை வாழ்க்கையில் அனுஷ்டிப்போமாக. நாம் அனைவரும் இந்துக்கள், பழங்காலத்தில் இந்துவென்றால் சிந்து நதிக்கரைக்கு இக்கரையிலிருப்பவர்கள் என்று பொருள். நம்மை வெறுப்பவர்கள் பலர் அவ்வார்த்தைக்குக் கெட்ட பொருளைக் கொடுக்கலாம். ஆனால் பெயரைப்பற்றி நாம் கவலைப்படவேண்டிய அவசியமில்லை. 'இந்து' வென்ற பெயர் உயர்ந்த லட்சியத்தையும் ஆத்மிக வாழ்க்கையையும் குறிக்கக்கூடிய ஒரு வார்த்தையாக விருக்குமா அல்லது கேவலமான அடிமை வாழ்வைக் குறிக்கும் பதமாகவிருக்குமா வென்பது நம்மைப் பொறுத்திருக்கிறது. தற்காலத்தில் இந்துவென்ற வார்த்தை ஒரு வசவு மொழியாக விருந்தால் அதைப்பற்றிக் கவலைப்படவேண்டாம். எல்லா பாஷைகளிலும் இருக்கக்கூடிய எந்த வார்த்தையைக் காட்டிலும் இதை உயர்ந்த பொருளுடையதாகச் செய்யக்கூடிய சக்தி நம்மிடத்திலிருக்கிறது. அதற்கேற்ற வாழ்க்கையை நாம் கடைப் பிடிப்போமாக. என்னுடைய முன்னோர்களைப் பற்றி நான் என்றும் அவமானப்பட்டதில்லை. அதை நான் ஒரு கொள்கையாகக் கொண்டிருக்கிறேன். நான் மற்றெல்லா மனிதர்களைக் காட்டிலும் பெருமை வாய்ந்தவன் எனக் கருதுகிறேன். என் காரணமாக நான் அவ்விதம் நினைப்பதில்லை. என் மூதாதைகளின் காரணமாகவே நான் அவ்விதம் நினைக்கிறேன். நம்முடைய முன்னோர்களின் சரித்திரத்தைப் படிக்கப் படிக்க, என் மனத்திலிருக்கும் பெருமையுணர்ச்சி வளருகிறது. அது மனதுக்கு நிறைந்த சக்தியையும், மனத்திட்பத்தையும்

அளித்து, என்னைக் கேவலம் புழுதியிலிருந்து உயர்த்தி, நம் முன்னோர்கள் உபதேசம் செய்திருக்கும் மகத்தான காரியங்களைச் செய்து முடிக்கும்படி தூண்டுகிறது. நமது பூர்விக ஆரியர்களின் அருமைக் குழந்தைகளே! ஆண்டவனுடைய திருவருளால் நீங்களும் இத்தகைய செருக்கையுடையவர்களாகி, உங்கள் முன்னோர்களிடம் நிறைந்த நம்பிக்கை யுடையவர்களாவீர்களாக. அந்த நம்பிக்கை, உங்கள் ரத்தத்தில் கலந்து உங்கள் ஜீவியத்திற்கே ஆதாரமாக விருந்து, உலகின் முன்னேற்றத்திற்காக, உழைக்கும்படி உங்களைத் தூண்டட்டும்.

நம் தேசீய வாழ்க்கைக்கு ஆதாரமானதும், நாம் அனைவரும் ஒப்புக்கொள்ளக் கூடியதுமான கொள்கைகளை ஆராயுமுன் ஒரு விஷயத்தை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஒவ்வொரு மனிதனுக்கும் தனி இயல்பு இருப்பது போல், ஒவ்வொரு தேசத்திற்கும் ஒரு தனி இயல்பு இருக்கிறது. ஒரு மனிதன் மற்றவர்களிடமிருந்து சில விஷயங்களில் வேறுபட்டிருப்பதுபோல், ஒரு தேசமக்கள் மற்ற நாட்டு மக்களிடமிருந்து சில விஷயங்களில் வேறுபட்டிருக்கிறார்கள். இயற்கையின் ஏற்பாட்டில் ஒவ்வொரு மனிதனுக்கும் தான் குறிப்பாகச் செய்ய வேண்டிய கடமை யொன்றிருக்கிறது. அவனுடைய பழைய வாழ்க்கை, அவனுடைய கர்மம், அவனை அக் கடமையை ஆற்றுவதற்கு அருகனுக்கியிருக்கிறது. தேசங்களும் அங்ஙனமே யிருக்கின்றன. ஒவ்வொரு நாட்டிற்கும் அது செய்யவேண்டிய கடமை யொன்றிருக்கிறது; ஒவ்வொரு தேசமக்களுக்கும் தாங்கள் உலகிற்களிக்க வேண்டிய செய்தி யொன்றிருக்கிறது; ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும் தாங்கள் ஆற்ற வேண்டிய அரும்பணி யொன்றிருக்கிறது. ஆதலால் நாம் செய்யவேண்டிய கடமையையும், நாம் ஆற்றவேண்டிய பணியையும், உலக

மக்களிடையே நமக்கிருக்கும் ஸ்தானத்தையும், நாம் முத லில் நன்ருக அறிந்துகொள்ள வேண்டும்.

நம் தேசத்தில் குழந்தைகளுக்குச் சொல்லப்படும் கதை யொன்றுண்டு. சில பாம்புகளின் தலையில் மாணிக் கம் இருந்தனவாம். மாணிக்கம் தலையிலிருக்கும் வரை, அவை, என்ன செய்யப்பட்டாலும் இறக்காவாம். சில ராட்சசர்கள் தங்கள் உயிரைச் சில பறவைகளில் வைத் திருந்தார்களாம். அப்பறவைகள் சௌக்கியமாயிருக்கும் வரை, உலகில் எவரும் இவர்களைக் கொல்ல முடியாது. அவர்கள் உடலைப் பல கூறுகளாக வெட்டி எறிந்தாலும், அவர்களைக் கொல்ல முடியாதாம். இங்ஙனமே மக்க ளுடைய வாழ்க்கையுமிருக்கிறது. ஒவ்வொரு தேசமக்க ளுக்கும் அவர்கள் உயிர்சக்தி ஓரிடத்திலிருக்கிறது. அது பாதிக்கப்படாமலிருக்கும் வரை அந்த மக்களை எவரும் கொல்லமுடியாது. இதிலிருந்து உலக சரித்திரத்திலேயே மிக அற்புதமாகக் கருதப்படும் விஷயமொன்றை நீங்கள் தெரிந்துகொள்ளலாம். நம்முடைய இப்புனித நாட்டின் பேரில் அநாகரிகக் கூட்டங்களின் படையெடுப்புக்கள் அலைகள்போல் ஒன்றன் பின் ஒன்ருக வந்தன. ‘அல்லா ஹோ அக்பர்’ என்ற சப்தம் பல நூற்றுண்டுகளாக வானத்தைப் பிளந்து கொண்டிருந்தது. இந்துக்கள் தங்கள் இறுதிக் காலம் என்று வருமோ என்று பயந் திருந்தார்கள். உலகிலுள்ள எல்லா நாடுகளைக் காட்டி லும் இந்நாடு மிகுத்த துன்பங்களையும் கஷ்டங்களையும் அனுபவித்து வந்திருக்கிறது. எனினும் நாம் முன் போலவே யிருந்து கொண்டிருக்கிறோம், இனிமேலும் அவ்வித கஷ்டங்கள் வரினும் அவைகளை எதிர்த்து நிற்கத் தயாராக விருக்கிறோம். அது மாத்திரமல்ல நாம் பலத் துடன் வாழ்கிறோம் என்பதற்கு அறிகுறியாக, வெளி

நாடுகளுக்குச் சென்று நமது செய்திகளைப் பரப்பவும் ஆயத்தமாயிருக்கிறோம்.

நம்முடைய உயர்ந்த எண்ணங்களும் கருத்துக்களும் இப்பொழுது நம் நாட்டிற்குள்ளேயே அடைத்துவைக்கப் பட்டிராமல், நாம் விரும்பியோ விரும்பாமலோ, வெளி நாடுகளுக்குப் பரவுவதைக் காண்கிறோம். அவை, அன்னிய நாட்டு இலக்கியங்களில் வியாபித்து, சில மக்கள் மனதில் சிறப்பான இடத்தைப் பெற்று வருவதையும் பார்க்கிறோம். இவற்றிற்கெல்லாம் ஒரு காரணம் தான் உண்டு. உலகத்தின் முன்னேற்றத்திற்கு, மற் றெல்லா நாடுகளைக் காட்டிலும் இந்தியாதான் மிக அரிய செல்வத்தை அளித்திருக்கிறது. தத்துவ ஞானமும் ஆத்மிக உணர்ச்சியும்தான் அவ்வுயர்ந்த செல்வங்களாக விருக்கின்றன. நம்முன்னோர்கள் மற்ற பல துறைகளிலும் முயற்சி செய்தார்கள், மற்ற மக்களைப்போல் இவர்களும், வெளி இயற்கையின் ரகசியங்களை அறிவதில் தங்கள் புத்தியைச் செலுத்தினார்கள். அவர்கள் இத்துறையில் தொடர்ந்து முயற்சி செய்திருந்தால், தங்கள் மகத்தான புத்தி நுட்பத்தின் காரணமாக மிக அரிய அற்புதங்களைக் கண்டுபிடித்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. ஆனால் இதைவிட ஓர் உயர்ந்த லட்சியத்தை நாடி, இத்துறையை அவர்கள் கைவிட்டார்கள். 'என்றும் மாறுதலில்லா அப்பரம்பொருளை அறியும் ஞானமே அனைவற்றிலும் உயர்ந்தது' என்று வேதங்களில் சொல்லப்பட்டிருக் கிறது. நிமிடத்திற்கு நிமிடம் மாறிக்கொண்டிருக்கும் இவ்வுலகம் அதில் தோன்றும் மரணம், துக்கம்-முதலிய இவைகளைப்பற்றிய ஆராய்ச்சியும் அறிவும் மிகப் பெரிய தாகவே யிருக்கலாம். ஆனால் சாந்தத்திற்கும், நித்திய வாழ்க்கைக்கும், பூரணத்திற்கும் பேரின்பத்திற்கும் உறை விடமாய், என்றும் மாருத அந்த ஆனந்த சொரூபமான

அப்பரம்பொருளைப்பற்றிய ஞானத்தையே எல்லாவற்றி லும் உயர்ந்ததாக நம் மக்கள் கருதினார்கள். நன்றாக யோசிக்குமிடத்து, விஞ்ஞான சாஸ்திரம் நமக்குக் கேவலம் உணவும், உடையும், நம்முடைய சகோதர மனிதர்கள்பேரில் அதிகாரமும், அவர்களை அடக்கியாளும் சக்தியும் - இவைகளைத்தான் அளிக்கமுடியும். நம் முன் னோர்கள் விரும்பியிருந்தால் இவைகளைப் பெற்றிருப் பார்கள். இவைகளை அவர்கள் நாடவில்லையென்பது அவர் கள் பெருமையைக் காட்டுகிறது. இவற்றிற்குப் பதிலாக இவைகளைவிட மிக உன்னதமான, பேரின்பத்தை அளிக் கக்கூடிய, ஆத்மீக லட்சியத்தை அவர்கள் பின்பற்றி னார்கள். பல ஆயிரக்கணக்கான வருஷங்களாக இவ் விலட்சியம் பின்பற்றப்பட்டு வந்ததன்றி இப்பொழுதும் அதுவே நம்முடைய தேசீய லட்சியமாக விளங்குகிறது. அது நம் ரத்தக் குழாய்களில் ஓடும் ரத்தத்துடன் கலந்து, நம் இயல்புடன் சேர்ந்து, இரண்டாவது இயற்கையாக விருக்கிறது. அதன் காரணமாக இந்து வென்ற பதத் திற்கே ஆத்மிக வாழ்வென்ற பொருள் உண்டாயிருக் கின்றது. இது நம் தேசீய இயல்பாயிருக்கிறது. இதை நாம் மாற்றமுடியாது. நம் நாட்டின்மேல் படையெடுத்து வந்த அநாகரிகக் கூட்டங்கள், நம் மக்களுக்கு ஜீவாதார மாக விருக்கக்கூடிய இம் ‘மாணிக்கத்தை’ அல்லது இப் ‘பறவை’யைக் கொல்லமுடியவில்லை. நம் மக்களுக்கு ஆத்மிக வாழ்வுதான் மூலாதாரமாக விருந்து வருகிறது. அது சரியாக விருக்கும்வரை உலகில் எந்த சக்தியும் நம்மைக் கொல்லமுடியாது. இம்மிக உன்னதமான ஆத் மிகப் பெருஞ் செல்வத்தை மாத்திரம் நாம் காப்பாற்றி வருவோமானால், பிரகலாதன் மிகக் கொடிய சோதனை களாலும் பாதிக்கப்படாமல் வெளி வந்ததுபோல், நாமும் எந்தவிதமான துன்பங்களாலும் கஷ்டங்களாலும் பாதிக்

கப்படாமல் வெளி வருவோம். ஓர் இந்து ஆத்மிக உணர்ச்சியின்றி இருப்பானுனல், அவனை ஓர் இந்து வென்று நான் கூறமாட்டேன். மற்ற நாடுகளில் ஒருவன் ராஜீயவாதியாக விருக்கலாம்; அத்துடன் கொஞ்சம் மத உணர்ச்சியையும் உடையவனுக இருக்கலாம். ஆனல் இந்தியாவில் ஆத்மிக உணர்ச்சியே நம் வாழ்க்கையில் பிரதானமானது. அதற்கு அடுத்துத்தான் மற்ற விஷயங்கள் வருகின்றன. இதை நாம் அறிந்துகொண்டால், நமது தேசத்தின் முன்னேற்றத்திற்காக நமது மக்களின் ஆத்மிக சக்தியனைத்தையும் ஒன்று திரட்ட வேண்டியதன் அவசியம் நமக்குப் புலப்படும். இங்ஙனமே இதற்குமுன் நடந்திருக்கிறது. இனிமேலும் இவ்விதம் நேரும். சிதறிப் போயிருக்கும் நம்முடைய ஆத்மிக சக்தியனைத்தையும் சேகரம் செய்வதே நமது முதல் தேசீயப் பணியாகும்.

நம் மதத்தில் பல பிரிவுகள் இருக்கின்றன. எதிர் காலத்தில் அவை இன்னும் அதிகமாகும். இது மதத்தின் தனி விசேடமாகும். நமது மதத்திற்கு அடிப்படையாக விருக்கும் கொள்கைகள், நம் தலைக்குமேலிருக்கும் வானம்போல் பரந்த தன்மையை உடையனவாகவும், இயற்கையைப்போல் நித்தியமானதாகவும் இருக்கின்றன. இவைகளை மூலாதாரமாகக் கொண்டு, அவரவர்கள் தங்கள் இயல்பிற்கேற்றவாறு மற்ற அனுஷ்டானங்களை அமைத்துக்கொள்ள நம் மதத்தில் உரிமை கொடுக்கப்பட்டிருக்கிறது. மனித சமூகத்தில் பல இயல்புடையவர்கள் இருத்தலால், பல மதப்பிரிவுகள் இருப்பது இயற்கை. ஆனல் அதன் காரணமாக இப்பிரிவுகளுக்குள் சண்டைகள் இருக்கவேண்டிய அவசியமில்லை. மதப் பிரிவுகளிருப்பது நல்லது; ஆனல் மதச் சண்டைகளிருப்பது கெட்டது. மனிதன் முன்னேற்றத்திற்குப் பல மதப் பிரிவுகள் அவசியம். ஆனல் மதத்தின்பேரில் நடை

பெறும் சண்டைகள் பெருங் கேட்டை விளைவிக்கின்றன. ஒரு சில மனிதர் எல்லாக் காரியங்களையும் செய்யமுடியாது. உலகிலிருக்கும் எல்லையற்ற சக்தியனைத்தையும் அவர்களே சமாளிக்க முடியாது. எனவே அவரவர்கள் இயல்பிற்கேற்ற பணியை மேற்கொள்ளுமாறு இயற்கை வற்புறுத்துகிறது. இதன் காரணமாக மதப் பிரிவுகள் ஏற்பட்டிருக்கின்றன. எல்லோர் மனத்திலும் ஆத்மிக உணர்ச்சியை வெளிப்படுத்துவதற்காக இவை இருக்க வேண்டும். ஆனல் இவைகளுக்காக நாம் சண்டையிட்டுக் கொள்ள வேண்டுமா? இப்பிரிவுகளுக்குள்ளிருக்கும் வித்தியாசங்கள் மேற்போக்கானவை. இவை யனைத்திற்கும் அடிப்படையாக ஒற்றுமையிருக்கிறது. 'பரம் பொருள் ஒன்றே. அறிஞர்கள் அதைப் பலவாருகக் கூறுகிருர்கள்' என்று நம்முடைய சாஸ்திரங்கள் உரைக்கின்றன. எல்லா மதப் பிரிவுகளும் சமமாக ஆதரிக்கப் பட்ட இந்நாட்டில், இன்று அவைகளுக்குள் சண்டை சச்சரவுகளிருப்பது, நம் முன்னேர்கள் வழி முறையில் வந்தவர்களென்று சொல்லிக்கொள்ளும் நமக்கு, மிகுந்த அவமானத்தை உண்டாக்கவில்லையா?

நம் அனைவருக்கும் பொதுவான தத்துவங்கள் சில இருக்கின்றன. வைஷ்ணவர்கள், சைவர்கள், சாக்தர்கள், காணபத்யர்கள் முதலிய அனைவரும் அதாவது இந்துக் களென்று தங்களை அழைத்துக்கொள்ளும் அனைவரும்—இத்தத்துவங்களை ஏற்றுக்கொள்ளுவார்கள். அவரவர்கள் இயல்பிற்கேற்றவாறு அவைகளைப் பொருள் செய்து கொள்ள அவர்களுக்கு உரிமை யுண்டு. அனைவரும் நம் எண்ணப்படியே நடக்கவேண்டுமென்பது நம் கட்சியல்ல. எனவே அவரவர்கள் தங்கள் இயல்பின்படி இவைகளைப் பின்பற்றலாம். இவைகளில் முதலாவது, வேதங்கள் ஆத்ம வாழ்க்கைக்கு அடிப்படையான நித்திய தத்து

வங்களை உபதேசிக்கின்றன வென்பது. இப்புனித நூல்கள் பிரகிருதியைப் போல் ஆரம்பமும் முடிவு மற்றவையென நாம் நம்புகிறோம். வேதங்களின் முன்னிலையில் நம் சண்டைகள் அனைத்தும் தீரவேண்டும். அவைதான் ஆத்மிகத் துறையில் நமக்கு முடிவைக் கூறும் உயர்ந்த அதிகாரம் பெற்று விளங்குகின்றன. வேதங்களுக்குப் பலர் பலவாறுகப் பொருள் செய்யலாம். சிலர் அவற்றில் சில பகுதிகளை அதிக விசேஷமாகக் கொள்ளலாம். ஆனால் நாம் அனைவரும் அவற்றைப் பின்பற்றுகிறோமென்ற முறையில் சகோதரர்களாக விருக்கிறோம். வேதங்களில் கூறப்பட்டிருக்கும் அற்புதமான, மகத்தான உண்மைகளிலிருந்துதான் நமது புனிதமான கொள்கைகள் அனைத்தும் தோன்றியிருக்கின்றன. வேதங்கள் யாவற்றினும் உயர்ந்தவையென நாம் நம்புவது உண்மையாகவிருந்தால், அவைகளை முதலில் நாடு முழுவதும் பிரசாரம் செய்து, அனைவரிடத்திலும் பரப்புவோமாக :

இரண்டாவதாக, கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று நாம் நம்புகிறோம். அவர் உலகை சிருஷ்டிக்கிறார். அவரே அதைக் காப்பாற்றுகிறார். அவரிடமே அது இறுதிக் காலத்தில் அடங்குகிறது. மறுபடியும் உலகம் தோன்ற வேண்டிய காலம் வரை அங்ஙனமேயிருந்து, பிறகு வெளித் தோன்றுகிறது. கடவுளின் தன்மையைப் பற்றி நமக்குள் பேதமிருக்கலாம். ஒருவன் ரூபக்கடவுளில் நம்பிக்கை கொள்ளலாம். மற்றொருவன் மனித வடிவத்தி லல்லாமல் வேறு ஒரு ரூபத்தில் கடவுள் இருப்பதாக நினைக்கலாம். வேறு ஒருவன் ரூபமில்லாத அரூபக் கடவுளை நம்பலாம். இவர்கள் அனைவரும் தங்கள் அபிப்பிராயத்திற்கு வேதங்களையே ஆதாரமாகக் கொள்ளலாம். இவ்விதமான அபிப்பிராய பேதமிருந்தாலும், நாம்

அனைவரும் கடவுளில் நம்பிக்கை கொண்டவர்களாக விருக்கிறோம். அதாவது ஓர் எல்லையற்ற சக்தியிலிருந்து அனைத்தும் தோன்றியிருக்கின்றன ; அனைத்தும் அச் சக்தியால் வாழ்கின்றன ; அனைத்தும் கடைசியில் அச் சக்தியில் அடங்குகின்றன வென்று நாம் அனைவரும் நம்புகிறோம். இந்த நம்பிக்கை யில்லாதவன் இந்துவாக விருக்க முடியாது. இக் கருத்து, நம் அனைவராலும் ஒப்புக்கொள்ளப்படுவதாக விருந்தால், இதுவும் நாடு முழுதும் உபதேசம் செய்யப்படவேண்டும். கடவுளைப் பற்றி உங்களுக்கிருக்கும் கருத்துக்களை எடுத்துரை யுங்கள். அதில் சண்டையிட்டுக் கொள்ளவேண்டிய அவசியமில்லை. ஒரு கருத்து மற்ற கருத்துகளைவிட உயர்ந்ததாக விருக்கலாம். ஆனால் எல்லாக் கருத்துக் களும் உண்மையானவைதான் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். ஒரு கருத்து நல்லதாக விருக் கலாம்; மற்றொன்று அதைவிட நல்லதாக விருக்கலாம்; வேறொன்று அனைத்தினும் உயர்ந்ததாக விருக்கலாம்; ஆனால் நம் மதத்தில் எந்தக் கருத்தும் கெட்டதல்ல. ஆதலால் எந்த விதத்திலேனும் கடவுளைப் பற்றிப் போதனை செய்கிறவர்களை ஆண்டவன் ஆசீர்வதிக்கட்டும். கடவுளைப் பற்றி அதிகம் போதிக்கப் போதிக்க, அது நம் நாட்டிற்கு நன்மையை உண்டாக்கும். கடவுளைப் பற்றிய உன்னதமான கருத்துக்கள் நம் தேசத்தில், மிகத் தாழ்ந்த வர்களிலிருந்து மிக உயர்ந்தவர்கள் வரை, எல்லா வீடுகளிலும் நுழையட்டும். நம் குழந்தைகள் இக் கருத் துக்களுடன் வளர்வார்களாக.

மூன்றாவதாக, மற்ற சில மக்களைப் போல், உலகம் சில ஆயிரம் வருஷங்களுக்கு முன் உண்டாக்கப்பட்ட தென்றும், கொஞ்ச காலத்திற்குப் பிறகு ஒரு குறிப்பிட்ட தினத்தில் முற்றிலும் அழிக்கப்படுமென்றும் நாம் நம்புவ

தில்லை. உலகத்துடன் மனித ஆத்மாவும் ஒன்றுமில்லாச் சூனியத்திலிருந்து உண்டாக்கப்பட்டதென்றும் நாம் ஒப்புக்கொள்ளுவதில்லை. இயற்கைப் பிரகிருதி ஆதியந்த மற்றதென்றும், சில சமயங்களில் அது ஸ்தூலமாகி வெளிப்படுகின்றதென்றும், சில சமயங்களில் சூட்சுமமாகி அடங்குகிறதென்றும், இங்ஙனம் வெளிப்படுதலும் அடங்குதலும் சமுத்திரத்தில் தோன்றி யடங்குவது போல் எண்ணிறந்த காலத்தில் மாறி மாறி நிகழ்கின்றன வென்றும் நாம் நம்புகிறோம்.

அடுத்தபடியாக, மனிதன் கேவலம் ஸ்தூல உடல் மாத்திரமாயில்லையென நாம் நம்புகிறோம். இந்த ஸ்தூல உடலிற்குள் சூட்சும உடலாக மனதிருக்கிறது. உடலும் மனதும் மாறும் தன்மையன. இவைகளுக்கு மேம்பட்ட தாய், இவையிரண்டிற்கும் அப்பால், ஆதியந்தமற்ற, என்றும் நித்தியமான ஆத்மா விருக்கிறது. இந்த ஆத்மா ஒன்றன்பின் ஒன்றாகப் பல உடல்கள் தாங்கி, உடலின் பேரிலிருக்கும் இச்சை யொழியும் வரை அதிலிருந்து, அப்பற்று அற்றவுடன் சுதந்தரம் பெற்று, பிறவாத் தன்மையை அடைகிறதென நாம் நம்புகிறோம். இந்த நம்பிக்கை நம் மதத்திற்கு மாத்திரமே உரியது. சம்சார சாகரத்தைக் கடப்பதற்காக, என்றும் அழிவில்லாத அந்த நித்திய ஆத்மா பல சரீரங்களில் எண்ணரிய பிறவி யெடுத்து, பின் முத்தியடைகின்றதென நம் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இக்கொள்கையையும் நம் மதப் பிரிவுகள் அனைத்தும் ஒப்புக்கொள்ளுகின்றன. கடவுளுக்கும் ஆத்மாவிற்கு மிருக்கும் சம்பந்தா சம்பந்தங்களைப் பற்றி பல கொள்கைகளுக்குள் அபிப்பிராய பேதமிருக்கலாம். ஒரு கொள்கைப்படி கடவுளும் ஆத்மாவும் என்றும் வேறு பட்டனவென்று கருதப்படலாம். மற்றொரு கொள்கை கடவுளை எல்லையற்ற நெருப்பாகவும், மனித ஆத்மாவை

அதினின்று தோன்றிய பொறியாகவும் நினைக்கலாம். மூன்றாவது கொள்கை ஆத்மா கடவுளுடன் ஐக்கியமான தெனக் கொள்ளலாம். இந்த அபிப்பிராய பேதங்களைப் பற்றி நாம் கவலைப்படவேண்டியதில்லை. ஆத்மா எல்லை யற்றது; பிறப்பு இறப்பு அற்றது; அது என்றும் உண்டாக்கப்பட்டதல்ல, ஆதலால் என்றும் அழிவில் லாதது; அது மனித சரீரத்தை ஏற்று, பூரணத்துவம் அடையும் வரை, பல உடல்களைத் தாங்கிச் செல்லுகின்றது என்ற இம் மூலக்கொள்கையை நாம் ஒப்புக்கொண்டால் போதுமானது.

இதற்குமேல், ஆத்மிக வாழ்க்கையில் இதுவரை உலகில் கண்டுபிடிக்கப்பட்ட எல்லா உண்மைகளிலும் அதி அற்புதமானது வருகிறது. மேல்நாட்டுத் தத்துவ முறைகளைக் கற்றவர்கள், மேல்நாட்டு மக்களுடைய கருத்துக்களுக்கும் நம் மக்களுடைய எண்ணங்களுக்கு முள்ள ஒரு முக்கியமான வித்தியாசத்தை உணர்ந்திருப் பார்கள். வைஷ்ணவர்கள், சைவர்கள், சாக்தர்கள் முதலிய அனைவரும் ஏன் பௌத்தர்களும் ஜைனர்களும் கூட ஆத்மா பூரணமும், பரிசுத்தமும், எல்லையற்ற சக்தியும் உடைத்தாயதென்று ஒப்புக்கொள்ளுகின்றனர். துவைதிகளின் சித்தாந்தப்படி இப்பூரணத்துவம் பழைய கெட்ட செயல்களின் காரணமாக மறைந்திருக்கிறது. பகவானுடைய திருவருளால் இம்மாசு அகன்று, ஆத்மாவின் பூரணத்துவம் மறுபடியும் பிரகாசிக்கும். அத்வைத சித்தாந்தப்படி மாயையின் காரணமாக, ஆத்மா இச் சக்தியை இழந்ததாகத் தோன்றுகிறது; எனினும் அச்சக்தி அதனுள் எப்பொழுதும் இருக்கிறது. இவ் வித்தியாசங்கள் எப்படியிருப்பினும் இந்திய சித்தாந் தங்கள் அனைத்தும் ஆத்மா எல்லையற்ற சக்தியையும் பூரணத்துவத்தையும் உடையதென ஒப்புக்கொள்ளு

கின்றன. மேல் நாட்டுச் சாஸ்திரங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இதுதான் இந்திய தத்துவ சாஸ்திரத்தின் தனிச் சிறப்பென விளங்கும். இந்தியன் தெய்விக சக்தியைத் தன்னுள்ளத்திலேயே நாடுகிறான். நாம் கடவுளை வழிபடும்போது, நம் கண்களை மூடிக்கொண்டு, அவனை நம் உள்ளத்திலே காண முயற்சி செய்கிறோம். மேல் நாட்டார்கள் மேல் நோக்கிப் பார்த்துக் கடவுளை வெளி உலகிலே நாடுகிறார்கள். மனித உள்ளத்திற்குப் புறம்பான ஒரு சக்தியின் அருள் காரணமாக அவர்கள் சாஸ்திரங்கள் உண்டாக்கப்பட்டதாக மேல் நாட்டார் கருதுகிறார்கள். நமது உள்ளத்திலிருக்கும் தெய்விக சக்தியின் காரணமாக நம் சாஸ்திரங்கள் தோன்றியிருக் கின்றனதென்று நாம் நம்புகிறோம்; உயர்ந்த ஆத்மிக உண்மைகளைக் காணக்கூடிய ரிஷிகளின் இதயங்களி லிருந்து அவை வெளிப்பட்டிருப்பதாக நாம் நினைக் கிறோம்.

எனது நண்பர்களே! எனது சகோதரர்களே! இந்த முக்கியமான விஷயத்தை நீங்கள் நன்றாகத் தெரிந்துகொள்ளவேண்டும். இதை நாம் அனைவருக்கும் எடுத்துரைக்க வேண்டியது அவசியம். நான் பலமற்றவன், நான் சக்தியற்றவன் என்று ஒருவன் நினைப்பதிலிருந்து ஒரு நன்மையும் உண்டாகா தென்பதை நீங்கள் நன்றாக உணரவேண்டும். ஒருவன் அல்லும் பகலும் தான் தாழ்ந் தவன், சக்தியற்றவன், துக்கம் நிறைந்தவன் என்று நினைப் பானானால், அவன் எந்த விதமான சக்தியும் அற்றே போவான். ஒருவன் சதா 'நான் சர்வ சக்தி வாய்ந்தவன், சர்வ வல்லமை யுடையவன்' என்று நினைப்பானானால், அவன் அவ்விதமே யாவான். அதற்கு மாறாக அவன் தன்னைப் பலவீனனென்று சதா நினைப்பானானால், அவன் அவ்விதமே ஆவது நிச்சயம். இந்த மகத்தான உண்மையை

நீங்கள் என்றும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். நாம் சர்வ சக்தி வாய்ந்த அப் பரம்பொருளின் குழந்தைகள்; அந்த ஆதியந்தமற்ற மாபெருஞ் சோதியின் பொறிகள். இத்தகையராகிய நாம் எங்ஙனம் சக்தியற்றவர்களாக விருக்க முடியும்? நாம் சர்வ சக்தி வாய்ந்தவர்கள்; எதையும் சாதிக்க வல்லவர்கள்; மனிதனுக்குச் செயற்கரியது ஒன்றுமில்லை என்று நினையுங்கள். நம் முன்னோர்கள் இத்தகைய நம்பிக்கையைப் பெற்றிருந்தார்கள். இத் தன்னம்பிக்கைதான் உயர்ந்ததொரு நாகரிகத்திற்கு அடிகோலக் கூடிய பெருஞ் சக்தியை அவர்களுக்கு அளித்தது. நான் சொல்வதைக் கவனித்துக் கேட்பீர்களாக. இப்பொழுது நம் சமூகத்தில் வீழ்ச்சியும் பல குறைகளும் ஏற்பட்டிருக்கின்றனவெனில், அதற்குக்கூட நாம் இத் தன்னம்பிக்கையை இழந்ததே காரணமாகும். நாம் தன்னம்பிக்கையை இழந்த தினத்திலிருந்தே நம் வீழ்ச்சியும் ஆரம்பமாயிருக்கிறதெனச் சொல்லலாம்

ஒருவன் தன்னம்பிக்கையை இழத்தல் கடவுள் பாலிருக்கும் நம்பிக்கையை இழத்தலுக்குச் சமானமாகும். ஓர் எல்லையற்ற கடவுட் சக்தி, எல்லா உயிர்களிலும் அந்தர்யாமியாய் நின்று இலங்குகிறதென்று நீங்கள் நம்புகிறீர்களா? அது அணுவுக் கணுவாய், உயிர்க் குயிராய் உங்கள் உடம்பு, மனது, ஆத்மா முதலிய அனைத்திலும் வியாபித்து, விளங்குகிறதென்பதை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்களா? இதை ஒப்புக்கொள்ளுகிறீர்களானால் நீங்கள் எப்படி நம்பிக்கையை இழந்து, உங்களைப் பலமற்றவர்களென்று நினைக்க முடியும்? நான் ஒரு நீர்க் குமிழியாக விருக்கலாம்; நீங்கள் மலையத்தனை அலையாக விருக்கலாம். ஆனால் அதனாலென்ன? அந்த எல்லையற்ற சமுத்திரம் நம் இருவருக்கும் அடிப்படையாக

விருக்கிறது. அங்ஙனமே அந்த எல்லையற்ற சக்திவாய்ந்த ஆத்மிகப் பெருங் கடல் நம் இருவருக்கும் அடிப்படையாக விருக்கிறது. அந்த எல்லையற்ற சக்திக் களஞ்சியம் எனக்கும் உரியதாக விருக்கிறது. பிறவியிலிருந்தே கங்குகரையற்ற அம் மகா சக்தியுடன் நான் இடைவிடாமல் இணைக்கப்பட்டிருக்கிறேன். ஆதலால், என்னுடைய சகோதரர்களே! இவ்வுயர்ந்த தத்துவத்தை உங்கள் குழந்தைகளுக்கு அவர்கள் பிறவியிலிருந்தே கற்பியுங்கள். அத்வைத சித்தாந்தத்தை அவர்களுக்குப் புகட்டவேண்டுமென்று நான் சொல்லவில்லை. எந்த சித்தாந்தத்தை வேண்டுமானாலும் நீங்கள் அவர்களுக்கு கற்பியுங்கள். ஆனால் நம் நாட்டிலுள்ள எல்லா சித்தாந்தங்களுக்கும் பொதுவான – ஆத்மா தன்னியல்பிலேயே பூரணத்துவத்தை யுடையது என்ற - இந்த அற்புதமான கொள்கையை மாத்திரம் எப்பொழுதும் நினைவில் வைத்துக்கொள்வீர்களாக.

நமது மாபெரும் தத்துவ ஞானியாகிய கபிலர் உரைப்பதுபோல், தூய்மை நமது ஆத்மாவின் இயல்பிற்கு மாறுபட்டதாக விருந்தால், அது என்றும் தூய்மையடைய முடியாது; அங்ஙனமே பூரணத்துவம் ஆத்மாவின் இயல்பிற்கு வேறுபட்டதாக விருந்தால், அது என்றும் பூரணத்துவம் அடைய முடியாது. பரிசுத்தமின்மையே மனிதன் இயல்பாக விருக்குமானால் அவன் மத்தியில் ஓர் ஐந்து நிமிடங்கள் பரிசுத்தமாக விருக்கலாம். ஆனால் அவன் சாதாரணமாக எப்பொழுதும் பரிசுத்தமில்லாமல்தானிருக்க வேண்டும். நம் இயல்பு பரிசுத்தமற்றது என்ற கொள்கையை நாம் ஒப்புக்கொண்டால், நாம் பரிசுத்த வாழ்க்கைக்காக முயற்சி செய்வதே பயனற்றதாகப் போய்விடுகிறது. ஆதலால் தான் நம்முடைய தத்துவ ஞானிகள், தூய்மையும், உயர்

வாழ்க்கையும், பூரணத்துவமும்தான் நம்முடைய இயல் பென்று உரைக்கிருர்கள். இதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். ஒரு முனிவர் இறக்கும் போது தம் மனதைப் பார்த்து, 'ஏ மனமே, என்னுடைய உயர்ந்த காரியங்களையும், உயர்ந்த செய்கைகளையுமே ஞாபகத்தில் வைத்துக் கொள்' என்று உரைத்தாராம். நம்முடைய குறைகளையும் குற்றங்களையும் நினைத்துக் கொண்டிருக்கும்படி அவர் கூறவில்லை. நம்மிடம் பல குறைகளிருக்கலாம், பல குற்றங்களை நாம் செய்யலாம்; ஆனல் எப்பொழுதும் உங்கள் சொந்த இயல்பை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். குற்றங்களை நீக்கிக் கொள்ள அதுதான் சிறந்த மார்க்கமாகும்.

நாம் மேற்சொல்லியிருக்கும் இக்கொள்கைகள் இந்திய மதப் பிரிவுகள் அனைத்திற்கும் பொதுவானவை. நம் மதத்தைச் சீர்திருத்தம் செய்ய விரும்புகிற வர்களும், மற்றவர்களும், இவைகளைப் பொதுவாக ஏற்று, ஒன்றுசேர முடியுமென்று நம்புகிறேன். இவை யனைத்திற்கும் மேலாக நாம் மனதில் வைக்கவேண்டிய இன்னுமொரு முக்கியமான விஷயமிருக்கிறது. அதை நாம் அடிக்கடி மறந்துவிடுகிறோம். 'இந்தியாவில் மதம் என்றுல் ஆத்மிக அனுபூதியைத்தான் குறிக்கும். அனு பூதியில்லாதவர்கள் மதத்தைப் பின்பற்றுவதாகச் சொல்ல முடியாது. இந்தக் கொள்கையை நம்பினுல் மோட்ச மடைவீர்கள்' என்று நம்மிடம் எவரும் வந்து சொல்ல முடியாது. அத்தகைய வார்த்தைகளில் நமக்கு நம்பிக்கை யில்லை. நம்மை நாமே ஆக்கிக்கொள்ளுகிறோம். ஆண்டவ னருளால், உங்கள் முயற்சியின் காரணமாக நீங்கள் இப் பொழுதைய நிலைமையை அடைந்திருக்கிறீர்கள். சில கொள்கைகளை நம்புவது மாத்திரம் உங்களுக்கு உதவி யளிக்காது. அனுபூதி, அதாவது அக்கொள்கைகளை

வாழ்க்கையில் பின்பற்றி, அனுபவத்தில் அறிதல்தான் இந்திய ஆத்மிக வாழ்க்கையின் சிறப்பான அம்சமாகும். 'கடவுளைக் கண்டு, அனுபவிக்கவேண்டு' மென்று நம் சாஸ்திரங்கள்தான் மீண்டும் மீண்டும் உரைக்கின்றன. இவை மிகத் தைரியமான வார்த்தைகள். ஆனால் முற்றி லும் உண்மையானவை. அதில் ஒவ்வொரு எழுத்தும் உண்மையானது. மதம் என்பது கேவலம் வெறும் கேள்வி மாத்திரமல்ல ; கிளி மாதிரி சில கொள்கைகளை அல்லது வார்த்தைகளை மனப்பாடம் செய்வதும் அல்ல. அது வாழ்க் கையில் பின்பற்றி, அனுபூதியாகப் பெறவேண்டியதொரு விஷயமாகும். அது வெறும் புத்தி நுட்பத்தினால் வாதித் துத் தெரிந்துகொள்ளக் கூடியதுமல்ல. அது நம் தினசரி வாழ்க்கையில் நுழைந்து, நம் வாழ்க்கையோடு ஒன்றாகப் பொருந்தவேண்டும். ஆதலால் கடவுள் ஒருவர் உண்டென் பதற்குச் சாட்சி நமது புத்தியின்மூலம் அனுமானிப்ப தல்ல. முற்காலத்திலும் தற்காலத்திலும் பல அறிஞர் களால் கடவுள் கண்டு, அனுபவிக்கப்பட்டார் என்பதே யாகும். ஆத்மா என்ற ஒன்று உண்டென்று நாம் நம்பு வதற்குக் காரணம், புத்தி பூர்வமாக அது உண்டென்று ஸ்தாபிக்கப்படுவதாலல்ல ; ஆயிரக்கணக்கானவர்கள் அதை அனுபவித்து அறிந்திருக்கிறார்கள் ; இன்றும் அதை உணர்ந்தவர்களிருக்கிறார்கள் ; நாளையும் இருப்பார்கள் என்பதே நம் நம்பிக்கைக்கு காரணமாகும். மனிதன் நேருக்குநேர் கடவுளைக் காணும் வரை, அவனுக்கு கதி மோட்சமில்லை. மதமென்பது அனுபூதி, அதாவது கடவுளை நேருக்குநேர் கண்டு அனுபவித்தல் என்பதை நாம் தெளி வாகத் தெரிந்துகொள்ளுவோமாக. அதைத் தெரிந்து கொள்வோமானால், மதப் பூசல்கள் தாமே மறையும். கடவுளைக்கண்டு அனுபவித்தவன்தான் உண்மையான மத வுணர்ச்சி பெற்றவனாக விருக்கிறான். அவன் மனதில்

குறைகள் அனைத்தும் நீங்கி, அவன் சந்தேகங்கள் அனைத்தும் ஒழிகின்றன. ஈசுவரனைத் தன் உள்ளத்தி னுள்ளேயும், எல்லா உயிர்களிலும் காண்பவனைக் கர்மத் தளைகள் கட்டுப்படுத்தா. நாம் பல சமயங்களில் வெறும் பேச்சையும் தர்க்கத்தையும் ஆத்மிக வாழ்வெனத் தப்பாக நினைத்துக்கொள்ளுகிறோம். இதன் காரணமாக மதத் துவேஷமும் சண்டைகளும் உண்டாகின்றன. ஆத்மிக அனுபூதியே மதம் என்று அறிந்தவர்கள், தங்கள் உள்ளத்தைப் பார்த்து, ஆத்மிக வாழ்வில் தாங்கள் அடைந்திருக்கும் முன்னேற்றத்தை உணர்ந்துகொள் வார்கள். நாமே இருட்டிலிருந்துகொண்டு மற்றவர் களுக்கு வழிகாட்டப் பிரயத்தனம் செய்கிறோமென்பது அப்பொழுது நமக்குப் புலப்படும். இதை நாம் தெரிந்து கொண்டால் எல்லாச் சமயப் பூசல்களும் ஒழிந்துவிடும். சமய வாதத்தில் ஈடுபட்டிருக்கும் ஒருவனைக் கண்டால், அவனை இவ்விதம் கேளுங்கள்: ‘ நீ கடவுளைக் கண்டிருக் கிறாயா? நீ ஆத்மாவை உணர்ந்திருக்கிறாயா? இல்லை யெனில், அவரைப்பற்றி உபதேசம்செய்ய உனக்கு என்ன அதிகாரமிருக்கிறது? இருட்டில் உழலும் நீ மற்றவர் களுக்கு எங்ஙனம் வெளிச்சம் காண்பிப்பாய்? நீ மற்றவர் களுக்கு வழிகாட்டியாக விருப்பது, குருடனுக்குக் குருடன் வழிகாட்டி, இருவரும் விழுந்ததை யல்லவா ஒக்கும்.’

ஆதலால் மற்றவர்களிடம் குறை கண்டுபிடிக்க யத்த னிக்குமுன், கொஞ்சம் நின்று நினைத்துப் பாருங்கள். எல்லோரும் தங்கள் தங்களுக்கேற்ற சாதனை மார்க்கத் தைப் பின்பற்றட்டும். அவரவர்கள் சிரத்தையுடன் தங்கள் உள்ளத்தில் உண்மையைக் காண முயற்சி செய்தால் போதுமானது. உண்மையை காண்பார்க ளானால், உண்மையைக் கண்ட மகான்கள் அனைவரும்

அனுபவித்த அற்புதமான அப்பேரின்ப வெள்ளத்தை இவர்களும் உணர்வார்கள். அப்போது அன்பு வார்த்தைகள் மாத்திரமே அவர்கள் நாவில் தோன்றும். ஏனெனில் அன்பின் உருவான அப்பரம்பொருளால் அவர்கள் தீண்டப் பெற்றிருக்கிறுர்கள். இவ்வனுபூதியைப் பெற்ருல்தான் எல்லாச் சமயச் சண்டைகளும் மறைந்து, நமது இதயம், எல்லா சம்பிரதாயங்களையும் அன்புடன் ஆலிங்கனம் செய்துகொள்ளக்கூடிய தன்மையைப் பெறும். எப்பொழுது 'இந்து' வென்ற வார்த்தையைக் கேட்ட அளவிலேயே நீங்கள் அளவற்ற உணர்ச்சியைப் பெறுவீர்களோ, அப்பொழுதுதான் நீங்கள் உண்மையான இந்துக்களாவீர்கள். எந்த தேசத்தைச் சேர்ந்தவர்களாக விருப்பினும், எந்த பாஷையைப் பேசுபவர்களாக விருப்பினும், அவர்கள் இந்துமதத்தைச் சேர்ந்தவர்களென்ற அளவிலே, அவர்கள் மிக நெருங்கிய உறவினர்களாக உங்களுக்கு என்று தோன்றுகிறதோ, அன்றுதான் நீங்கள் உண்மையான இந்துக்களாவீர்கள். இந்துவென்று பெயர்பெற்றவர்கள் எவராயிருப்பினும், துன்பப்படும்போது, அவர்களை என்று உங்கள் அன்புடன் பேணி, உங்கள் புத்திரர்கள்போல் நேசிப்பீர்களோ, அன்றுதான் நீங்கள் உண்மையான இந்துக்களாவீர்கள். உங்களுடைய மகத்தான ஆசாரியரான குரு கோவிந்த சிங் அவர்களைப்போல், நீங்கள் என்று அவர்களுக்காக எத்தகைய கஷ்டங்களையும் சகிக்கத் தயாராவீர்களோ அன்றுதான் நீங்கள் உண்மையான இந்துக்களாவீர்கள்.

குரு கோவிந்த சிம்மர் அன்னியர்களால் மிகக் கொடுமையாக நடத்தப்பட்டார். இந்து மதத்திற்காகத் தம் இரத்தத்தைச் சிந்திஞர். தம் குழந்தைகளையும் இதற்காக யுத்தகளத்தில் பலிகொடுத்தார். யாருக்காகத் தம் ரத்தத்

தையும், தம் உறவினர் ரத்தத்தையும் சிந்திஞரோ, அவர் களால் கடைசியாகக் கைவிடப்பட்டு, தம் நாட்டை விட்டுத் தெற்கே செல்லவேண்டிய நிலைமை ஏற்பட்ட போதும், அவர் ஓர் ஆண் சிங்கம்போல் கம்பீரமாகவே தம் கஷ்டங்கள் அனைத்தையும் சகித்தார். இவ்வல்லல் களின் மத்தியில்கூட தம்மைக் கைவிட்ட மக்களின் மேல் ஒரு வசவு வார்த்தைகூட அவர் நாவிலிருந்து வரவில்லை. நீங்களும் உங்கள் நாட்டிற்குச் சேவைசெய்ய விரும்பினுல், ஒவ்வொருவரும் குரு கோவிந்தசிம்மர்களாக வேண்டும். உங்கள் நாட்டு மக்களிடம் நீங்கள் ஆயிரக்கணக்கான குறைகளைக் காணலாம். ஆனுல் அவர்கள் இந்துக்க ளென்பது உங்கள் நினைவிலிருக்கட்டும். அவர்கள் உங்க ளுக்குத் தீங்கிழைத்தாலும், உங்களை வைதாலும், நிந்தித் தாலும், அவர்களை நீங்கள் நேசிக்கவேண்டும்; அவர்களே உங்கள் முதல் வழிபாட்டிற்குரிய தெய்வங்கள் என்பதை நீங்கள் உணரவேண்டும். அவர்கள் உங்களை நாட்டை விட்டுக் கடத்திஞலும், அவ்வொப்பற்ற குரு கோவிந்த சிம்மரைப்போல், யாதொரு வசைமொழியுமின்றி அவர் கள்பால் அன்புடனேயே உயிர்விடக்கூடிய ஆற்றலைப் பெறுவீர்களாக. அத்தகைய ஒருவன்தான் இந்துவென்று தன்னை அழைத்துக்கொள்ளத் தகுதியுடையவனுவான். அத்தகைய லட்சியத்தையே நாம் எப்பொழுதும் நம்முன் வைத்திருப்போமாக. சண்டை சச்சரவுகளை யொழித்து, இத்தகைய மகத்தான அன்புணர்ச்சியை நாடு முழுதும் நாம் பரப்புவோமாக.

இந்தியாவின் புனருத்தாரணத்தைப் பற்றி வாயால் மட்டும் பேசிக் கொண்டிருப்பவர்கள், எதை வேண்டு மானுலும் சொல்லிக்கொண்டிருக்கட்டும். இந்நாட்டின் முன்னேற்றத்திற்காகவே உழைத்து வரும் ஒருவன் என்ற முறையில் நான் உங்களுக்குச் சொல்ல விரும்புவது இது

தான். நாம் மீண்டும் ஆத்மிக உணர்ச்சியைப் பெறும் வரை நம் நாடு முன்னேற்றமடைய முடியாது. நம் நாட்டின் முன்னேற்றம் மாத்திரமல்ல, உலகின் முன்னேற்றமே இதைப் பொறுத்திருக்கிறது. இப்பொழுது மேல் நாட்டு நாகரிகம் அதன் அஸ்திவாரத்துடன் ஆடிக்கொண்டிருக்கிறது. உலோகாயதமென்ற மணல் தரையை அஸ்திவாரமாகக்கொண்ட கட்டிடங்கள் எவ்வளவு மகத்தானதாகவிருப்பினும் ஒரு காலத்தில் விழுந்தே தீரும். இதற்கு உலக சரித்திரமே சாட்சியாகவிருக்கிறது. மக்களுக்குப் பின் மக்கள் தோன்றி, உலோகாயதத்தை அடிப்படையாகக்கொண்டு தங்கள் நாகரிகத்தைக் கட்டினுர்கள். ஸ்தூல வாழ்க்கையே உண்மையானதென அவர்கள் நினேத்தார்கள். மேல் நாட்டுப் பாஷைகளில், ஒருவன் இறக்கும்போது அவன் உயிரை விட்டுவிடுவதாகச் சொல்லுகிருர்கள். † ஆனுல் நம் பாஷையில் அவன் உடலே விட்டுவிடுவதாக நாம் சொல்லுகிரும். மேல் நாட்டில் மனிதன் உடம்பென்றும், அது உயிரைப் பெறுவதாகவும் நம்புகிருர்கள்! ஆனுல் நாம் மனிதன் உண்மையில் ஆத்மாவென்றும், அது உடலேத் தாங்கித் தோன்றுகிறதென்றும் நினேக்கிருேம். இதில் மகத்தான வித்தியாசமிருக்கிறது. சரீர சுகம் முதலிய கருத்துக்களே அடிப்படையாகக் கொண்டு உண்டாக்கப்பெற்ற நாகரிகங்கள் எல்லாம், கொஞ்சகாலம் நிலேபெற்றிருந்து, பின் ஒன்றன்பின் ஒன்ருக உலகிலிருந்து மறைந்திருக்கின்றன. ஆனுல் இந்தியாவின் நாகரிகமும், இந்தியாவிலிருந்து பெற்ற சீனு, ஜப்பான் தேசங்களின் நாகரிகமும் இன்னும் வாழ்ந்து வருகின்றன. அவைகளில் தற்காலத்தில் புதியதொரு மறுமலர்ச்சியும் காணப்படுகின்றன. அவை பல தடவை

---

† A man gives up his ghost.

கள் அழிக்கப்பட்டாலும் **போனிக்ஸைப்**† போல் இன்னும் அதிக சிறப்புடன் அவை கிளம்புவதைக் காண்கிறோம். உலோகாயத நாகரிகங்கள் ஒரு தரம் அழிந்தால், மறுபடியும் அவை உயிர் பெறுவதில்லை. ஆதலால் பொறுமையுடன் இருப்பீர்களாக. எதிர்காலம் நம்மிடம்தானிருக்கிறது.

அவசரப்படாதீர்கள். மற்றவர்களைப் போலவே செய்ய முயற்சி செய்யாதீர்கள். இது நாம் படிக்க வேண்டிய மற்றொரு பெரிய பாடம். மற்றவர்களைப்போல் நடித்து நாம் மனப்பண்பும் நாகரிகமும் பெற முடியாது. நான் ஓர் அரசனைப்போன்ற உடை யுடுத்தி என்னை அழகுபடுத்திக் கொள்ளலாம். ஆனால் அது என்னை ஓர் அரசனாக்குமா ? ஒரு கழுதை சிங்கத்தின் தோல் போர்த்து வந்ததென்ற கதையொன்றுண்டு. அங்ஙனம் தான் என் வேஷமும் இருக்கும். வெறும் தோற்றத்தில் மாத்திரம் ஒருவனைப் போலிருக்கப் பிரயத்தனம் செய்தல், எந்த விதமான முன்னேற்றத்தையும் உண்டாக்காது. அது மனிதனுடைய தாழ்ந்த நிலைமையின் அறிகுறியாகும். ஒருவன் தன்னைத்தானே கேவலமாக நினைக்க ஆரம்பித்து விட்டானானல், அவன் மிகத் தாழ்ந்த நிலைமையை அடைந்துவிட்டான் என்பதை உணருங்கள். ஒருவன் தன் முன்னோர்களைப்பற்றி அவமானப்படுவானானல், அவனும் மிக இழிந்த நிலையை அடைந்தவனாவான். இந்து சமூகத்தில் மிகச் சாதாரண மனிதர்களில் நான் ஒருவன். எனினும் என்னுடைய முன்னோர்களையும், என் சமூகத்தையும், இதோ நான் மிகப் பெருமையுடன் பாராட்டுகிறேன். என்னை ஓர் இந்துவென்று அழைத்துக்கொள்வதில் நான்

---

†ஒரு பறவை அது தன்னைத்தானேஎரித்துக்கொண்டு, அந்த சாம்பலிலிருந்து மறுபடியும் புதிதாகத் தோன்றுவதாகச் சொல்லப்படுகிறது.

பெருமை கொள்ளுகிறேன். உங்களுடைய மிகத் தாழ்ந்த சேவகர்களில் நான் ஒருவன் என்று பெருமை பாராட்டிக் கொள்ளுகிறேன் ; மிகக் கீர்த்திவாய்ந்த உயர்ந்த ரிஷி களின் சந்ததியார்களான உங்களுடன் சேர்ந்து, இந் நாட்டில் பிறந்திருக்கிறேன் என்ற செருக்கு என் மனதி லிருக்கிறது. இத்தகைய நம்பிக்கை உங்களிடமும் இருக் கட்டும். ஆதலால் உங்கள் மூதாதைகளைப்பற்றிப் பெருமை கொள்வீர்களாக. எக்காரணத்தைக்கொண்டும் மற்றவர்களைப்போல் நடிக்கப் பிரயத்தனம் செய்யாதீர் கள். நாம் எப்பொழுது எப்பொழுது மற்றவர்கள் ஆதிக் கத்தின்கீழ் இருக்கிறோமோ, அப்பொழுதெல்லாம் நம் சுயேச்சையை இழந்துவிடுகிறோம். ஆத்மிக விஷயங்களில் கூட மற்றவர்கள் உத்தரவை எதிர்பார்த்து, அதற்குக் கீழ்ப்பட்டு வாழ்பவர்கள், தங்களுக்குத் தாங்களே சுயமாக யோசனை செய்து முடிவுக்குவரும் சக்தியை இழந்துவிடுகிறார்கள். எதையும் உங்கள் யத்தனத்தின லேயே சாதிக்க முயற்சி செய்யுங்கள். மற்றவர்களைப் போலவே செய்யப் பிரயத்தனம் செய்யவேண்டாம் ; ஆனால் மற்றவர்களிடமிருக்கும் நல்ல அம்சங்களை அவசியம் ஏற்றுக்கொள்ளுங்கள். மற்றவர்களிடம் நாம் கற்றுக்கொள்ள வேண்டிய விஷயங்கள் பல இருக்கின் றன. ஒரு விதையை நிலத்தில் போடுகிறோம் ; அதன் வளர்ச்சிக்கு அவசியமான எரு, காற்று, தண்ணீர் முதலி யனவும் அளிக்கிறோம். அது செடியாகி, மரமாகிறது. ஆனால் அது மண்ணாகிறதா, காற்றாகிறதா அல்லது நீராகிறதா ? அது இவை யொன்றுமாய் ஆவதில்லை. ஆனால் அது தன்னுடைய இயல்பிலேயே வளர்ந்து தனக்கு வேண்டிய அனைத்தையும் ஏற்று, ஒரு பிரம் மாண்டமான மரமாகிறது. அங்ஙனமே நீங்களும் ஆகுங்கள். நாம் அவசியம் மற்றவர்களிடம் பல விஷயங்

களைக் கற்றுக்கொள்ள வேண்டும். கற்றுக்கொள்ள வேண்டியதைக் கற்றுக்கொள்ள மறுக்கும் மனிதன் செத்தவனுக்கு ஒப்பாவான்.

"ஓர் உயர்ந்த பெண் தாழ்ந்த ஜாதியில் தோன்றியிருப்பினும், அவளை உன் மனைவியாக கொள்வாயாக. ஒரு ஞானி தாழ்ந்த குலத்தில் பிறந்தவனாயிருப்பினும், அவனைப் பணிந்து ஞானத்தைப் பெறுவாயாக. மோட்சத்தை அளிக்கக்கூடிய உயர்ந்த ஞானம், சண்டாளனிடத்திலிருப்பினும், அவன் திருவடிகளில் சேவைசெய்து மோட்ச சாதனத்தை அறிவாயாக" என்று மனு உரைத்திருக்கிறார். மற்றவர்களிடமிருந்து பெறக்கூடிய நல்ல விஷயங்கள் அனைத்தையும் கற்றுக்கொள்ளுங்கள். அவைகளைக் கற்று, உங்கள் இயல்பிற்கேற்றவாறு அவைகளைக் கிரகியுங்கள். ஆனால் மற்றவர்களாய் விடாதீர்கள். இந்திய வாழ்க்கையின் இயல்பினின்று வெளியே இழுக்கப்படாமலிருங்கள். இந்தியர்கள் அனைவரும் வேறு ஒரு மக்களைப்போல் உண்டு, உடுத்து, நடந்தால் அது இந்திய நாட்டிற்கு நன்மை செய்யுமென்று ஒரு கணம்கூட நினையாதீர்கள். சொற்ப காலத்தில் பழகிய பழக்கங்களை விட்டுவிடுவதுகூட எவ்வளவு கடினமென்பது உங்களுக்குத் தெரியும். உங்கள் ரத்தத்தில் எத்தனை ஆயிரக் கணக்கான வருஷங்களாக, இத்தேசீயப் பழக்கங்கள் ஓடிக்கொண்டிருக்கின்றனவென்பதைப் பகவான் தான் அறிவார். பல்லாயிரக்கணக்கான வருஷங்களாக நம்முடைய தேசீய வாழ்க்கை ஒரு முறையில் போய்க் கொண்டிருக்கிறது. இம்மகத்தான நதியானது சமுத்திரத்தில் சங்கமம் ஆகும் இடத்திற்கு அருகிலிருக்கிறது. இப்பெரிய ஆறு, அதன் உற்பத்திஸ்தானமாகிய இமயத்தின் பனிமூடிய சிகரங்களுக்குத் திரும்பிச் செல்லவேண்டுமென்று நீங்கள் நினைக்கிறீர்களா? அது அசாத்தியமான

காரியமாகும். இவ்விதமான முயற்சி அதைக் குலைக்குமே யொழிய, வேறு ஒரு பயனையும் விளைவிக்காது. ஆதலால் நம் தேசம் அதன் இயல்பிலேயே செல்வதற்கு வழி விடுங் கள். இம்மகத்தான ஆற்றின் ஓட்டத்திற்கு இடையூருக விருக்கும் வேலிகளை எடுத்தெறியுங்கள். அதன் படுகை யையும் வாய்க்கால்களையும் அடைத்துக்கொண்டிருக்கும் அசுத்தங்களை நீக்கிச் சுத்தம் செய்யுங்கள். அதற்குமேல் அந்த ஆறு தன் இயல்பான சக்தியிலேயே செல்லும். இதன்மூலம் நம் தேசத்தில் எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் ஏற்படும்.

ஆத்மிகத் துறையில் நீங்கள் வேலை செய்ய வேண்டிய முறை இதுதான் என்பதைப் பணிவுடன் நான் தெரிவித் துக் கொள்ளுகிறேன். நாம் செய்யவேண்டிய காரியங்கள் இன்னும் பல இருக்கின்றன. ஆனல் காலம் இல்லாததால் அவைகளைப்பற்றி இன்றைய தினம் உங்களுக்கு உரைக்க முடியாது. உதாரணமாக ஜாதிப்பிரச்னை யிருக்கிறது. இதன் எல்லா அம்சங்களையும் இந்தியாவிலுள்ள எல்லா மாகாணங்களிலும் நான் ஆராய்ச்சி செய்திருக்கிறேன். நம் தேசத்தின் எல்லாப் பாகங்களிலும், எல்லா ஜாதிகளும், சேர்ந்த மக்களிடமும் நான் பழகியிருக்கிறேன். இவ் விஷயத்தைப்பற்றி நினைக்க நினைக்க மனதில் அதிகக் குழப்ப முண்டாகிறது. கடைசியாக அதன் பொருள் இப்பொழுது தோன்ற ஆரம்பித்திருக்கிறது. அடுத்தபடி யாக சமபந்தி போஜனம் என்ற பெரிய பிரச்னை யிருக் கிறது. அதுவும் ஒரு பெரிய விஷயம்தான் போலும்! ஆனல் நாம் பொதுவாக நினைப்பதுபோல் அது அவ்வளவு பயனற்றதுமல்ல. ஆனல் இதைக் கட்டாயப்படுத்துவதன் மூலம் நாம் உண்ணும் உணவின் பரிசுத்தம் குறையக் கூடாது. வேறு சில பிரச்னைகளைப்பற்றியும் உங்களிடம் பேச விரும்புகிறேன். ஆனல் இப்பொழுது அதிக கால

தாமதமாகிவிட்டதால், அவைகளை வேறு ஒரு தினத்திற்கு வைத்துக்கொள்வோம்.

நான் முடிப்பதற்கு முன் இன்னுமொரு வார்த்தை. நெடுங்காலமாக நம் நாட்டில் மதம் முன்னேற்றமில்லாத ஒரு நிலைமையிலிருந்து வருகிறது. அதை நிறைந்த சக்தியுடையதாகச் செய்ய வேண்டும். எல்லோருடைய வாழ்க்கையிலும் மத உணர்ச்சி புகுந்து வேலை செய்ய வேண்டும். முற்காலத்திலிருந்தது போல் இப்பொழுதும் அது அரசர்கள் அரண்மனையிலும் கிராமங்களிலிருக்கும் மிக எளிய குடியானவர்கள் குடிசையிலும் நுழைந்து பரவவேண்டும். ஆத்மிகச் செல்வம் நம் மக்கள் அனைவருக்கும் உரிய பொக்கிஷமாகும். எனவே இதை எல்லோரும் எளிதில் பெறும்படி செய்யவேண்டும். கடவுள் அளித்திருக்கும் காற்றைப்போல் இதையும் அனைவரும் அடையும்படி செய்யவேண்டும். நாம் இப்பொழுது ஆற்றவேண்டியது இவ்வரும் பணியே யாகும். நமது மதப் பிரிவுகளுக்குள்ளிருக்கும் வித்தியாசங்களை எடுத்துக் காட்டுவதன் மூலம் இதைச் செய்யமுடியாது. நம் அனைவருக்கும் பொதுவாக விருக்கும் கொள்கைகளை நாம் எடுத்துரைப்போமாக. அதற்குமேல் நமது வித்தியாசங்கள் தாமே மறைந்துவிடும். நான் இதற்கு முன் பல தடவைகளில் நம் மக்களுக்குச் சொல்லியிருப்பது போல், பல நூற்றாண்டுகளாக இருள் அடைந்த ஓர் அறைக்குள் சென்று, 'இருட்டாக விருக்கிறது' என்று எவ்வளவு அழுதாலும், அவ்விருள் நீங்குமா? ஒரு விளக்கைக் கொண்டு வாருங்கள், இருள் உடனே நீங்கும். இதுதான் மக்களை முன்னேற்றமடையச் செய்யும் ரகசியம். உயர்ந்த விஷயங்களை அவர்களுக்கு எடுத்துரையுங்கள். அவர்கள் நிச்சயமாக மேன்மையடைவார்கள் என்று முதலில் நம்புங்கள். மனிதன் தாழ்ந்த சுபாவமுள்ளவன் என்ற

நினைவுடனேயே ஆரம்பிப்பானேன்? மிகத் தாழ்ந்தவர்கள் என்று மற்றவர்களால் கருதப்பட்டவர்களைக்கூட நான் நம்பி, மோசம் போனதில்லை. எங்கெங்கு நான் மனிதர் களிடத்தில் நம்பிக்கை வைத்திருக்கிறேனோ, அங்கெல்லாம் முதலில் கொஞ்சம் கடினமாகத் தோன்றினாலும், பின்னால் நாளடைவில் வெற்றிகரமான பலனே எப்பொழுதும் கிடைத்திருக்கிறது. ஆதலால் மனிதர்களுடைய நல்ல சுபாவத்தில் நம்பிக்கை வையுங்கள். அவர்கள் கற்றவர் களாயிருப்பினும் சரி; கல்லாதவர்களாயிருப்பினும் சரி; மிக உயர்ந்தவர்களாயிருப்பினும் சரி; அல்லது மிகத் தாழ்ந்தவர்களாகத் தோன்றினாலும் சரி; அவர்களை நம்புங்கள். மனிதனிடம் நிறைந்த நம்பிக்கை கொள்வது தான் நமது முதல் அவசியம். அவனிடம் குற்றம் குறை களிருந்தால், அல்லது அவன் தாழ்ந்த கொள்கைகளைப் பின்பற்றினால், அதற்குக் காரணம் அவன் இயல்பே தாழ்ந்ததென்பதல்ல. உயர்ந்த லட்சியங்களை அறி யாமையே அதற்கு உண்மையான காரணம். ஒருவன் தவறு செய்வதும், உண்மையை அறியாத காரணத்தால் தான். எனவே எது நல்லதென்று புகட்டுவதே அவனைத் திருத்தக்கூடிய ஒரே வழியாகும். நல்லறிவைப் புகட்டி னால், அவனே யோசனை செய்து பார்ப்பான். உண்மையை யும் உயர்ந்த லட்சியங்களையும் அவனுக்குப் புகட்டுங்கள். அத்துடன் உங்களுக்கு வேலை தீர்ந்துவிட்டது. அவற்றை அவன் தன் மனதிலேயே தன் பகுத்தறிவால் விசாரணை செய்து பார்க்கட்டும். நீங்கள் நிஜமாகவே அவனுக்கு உண்மையை அளித்திருந்தீர்களானால், அவனுடைய தவறுகள் நீங்கியே தீரும். வெளிச்சம் இருளை நீக்குவது நிச்சயம். அதுபோல் உண்மை நன்மையைச் செய்வதும் நிச்சயம். ஆத்மிகத் துறையில் நீங்கள் நாட்டைச் சீர்திருத்தம் செய்ய விரும்பினால், அதற்கு இதுதான்

சிறந்த மார்க்கமாகும். சண்டைகள் இப்பிரச்னையைத் தீர்க்கா. நமது மக்களைக் கெட்டவர்களென்று தூஷிப்பதும் அவர்களை உயர்த்தாது. உயர்ந்த லட்சியங்களை அவர்களுக்குப் புகட்டுங்கள். எவ்வளவு ஆர்வத்துடன் அவர்கள் அவைகளை ஏற்றுக்கொள்கிருர்கள் என்பதைக் காண்பீர்கள். மனித உள்ளத்திலிருக்கும் என்று மழியாத அத்தெய்விக சக்தி விழிப்பெய்தி, தன் கைகளை நீட்டி, உயர்ந்தன அனைத்தையும் பெற்றுக்கொள்ள முன் வருவதைப் பார்ப்பீர்கள்.

உலகை ஆக்கிக் காத்து அழிக்கும் பரம் பொருளாக விருப்பவரும், விஷ்ணு, சிவன், சக்தி யென்று பலவாருக நம் முன்னேர்களால் தொழப்பெற்றவரும், சகுணமாகவும் நிர்க்குணமாகவும், ரூபமாகவும் அரூபமாகவும் வழிபாடு செய்யப்பட்டவரும், ‘நீ ஒருவனே; ஆனல் அறிஞர்கள் உன்னைப் பலவாருக அழைக்கிருர்கள்’ என்று நம் பெரியோர்களால் கூறப்பெற்றவருமான அப்பரம் பொருள் தம் எல்லையற்ற கருணையுடன், நம் உள்ளத்தில் புகுந்து தம்முடைய கருணையைப் பாலிக்கட்டும். நாம் ஒருவரை யொருவர் செவ்வனே தெரிந்துகொள்ளவும், ஒருவருக்கொருவர் உதவியாக உழைக்கவும் அவர் அருள் செய்வாராக. அதற்கு வேண்டிய உண்மையன்பும், சத்தியத்தில் ஆர்வமும் அவர் நமக்கு அளிப்பாராக. புகழ், பெருமை, லாபம் முதலிய சுயநல நினைவுகள் அனைத்தும் நம் மனத்திலிருந்து அகன்று, நம் நாட்டின் ஆத்மிக மறு மலர்ச்சிக்காக இடைவிடாது உழைக்கக்கூடிய புனிதத் தன்மையையும் ஆற்றலையும் அவர் நமக்குக் கொடுத்தருளுவாராக.

---

# வேதாந்தம்

(லாகூரில் பேசியது)

அகம் புறமென இரண்டு உலகங்களில் நாம் வாழ்ந்து வருகிறோம். மிகப் பழங்காலத்திலிருந்து, இவ் விரண்டு உலகங்களிலும் மனித சமூகம் முன்னேற்றம் அடைந்து வருகிறது. மனிதனுடைய ஆராய்ச்சி முதலில் புற உலகில் ஆரம்பித்தது. புற உலகின் ஆராய்ச்சியின் மூலம் நமது வாழ்க்கையின் பெரிய பிரச்னைகளை அவன் தீர்க்க முயன்றான். அவன் மனதில் உயர்ந்த விஷயங்களை அறியவும், அளவற்ற இன்பத்தைப் பருகவும் வேட்கை யிருந்தது. அவ்வேட்கையைப் புற இயற்கையிலிருந்து திருப்தி செய்ய அவன் யத்தனம் செய்தான். தன் உள்ளத்தையும் உள்ளக் கருத்துக்களையும், அவன் ஸ்தூல பாஷையில் வெளிப்படுத்த முயற்சி செய்தான். வெளி உலகிலிருந்து அவனுக்குக் கிடைத்த பதில் மிக கம்பீர மாகவே யிருந்தது. கடவுளைப் பற்றி அற்புதமான கருத்துக் களையும், உயர்ந்த இயற்கை அழகின் நுகர்ச்சியையும் அவன் பெற்றான். புற உலகின் ஆராய்ச்சி மனிதனுக்கு மிக உன்னதமான கருத்துக்களைக் கொடுத்தது. ஆனால் அவனுடைய அகத்தில் அமைந்திருந்த உள் உலகில் ஆராய்ச்சி இன்னும் அதி அழகான, அதி உன்னதமான, மகத்தான கருத்துக்களை மனிதவர்க்கத்திற்கு அளித்திருக் கின்றது.

வேதங்களின் கர்மகாண்டப் பகுதியில் மதத்தைப் பற்றியும் கடவுளைப் பற்றியும் அற்புதமான கருத்துக்கள் இருக்கின்றன. சர்வ ஜீவராசிகளுக்கும் மேலாக விருந்து, அனைத்தையும் ஆக்கி, காத்து, அழிக்கும் கடவுளைப் பற்றி வெகு உருக்கமான பாஷையில் சொல்லப்பட்டிருக்கிறது. சிருஷ்டிக்குமுன் இயற்கையிருந்த நிலையைப் பற்றி

ரிக்வேத சம்மிதையில் சொல்லப்பட்டிருக்கும் மிக அழகான வர்ணனைகள் உங்களில் பலருக்கு ஞாபகமிருக்கலாம். அவ்வர்ணனைகள் மிக அற்புதமாக விருக்கின்றன. ஆனால் அது ஸ்தூல பாஷையில்தான் எழுதப்பட்டிருக்கிறது. எல்லையற்ற பரம்பொருளை எல்லைக்குட்பட்ட ஸ்தூல பாஷையின் மூலம் தெரிவிக்க அதில் முயற்சி செய்யப்பட்டிருக்கிறது. எல்லையற்ற அச்சக்தியை இடம் காலம் என்ற வரம்புக்குட்பட்ட புலன்களால் நுகரப்பட்டதன் அனுபவம், அதில் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் ஞானகாண்டத்தில் இவ்வுண்மை வேறு விதமாகச் சொல்லப்பட்டிருப்பதைக் காண்கிறோம். முதலில் மக்கள் வெளி இயற்கையின் தத்துவங்களை நாடி அவைகளின் மூலம் இவ்வுலக வாழ்க்கையின் இரகசியங்களை அறிய முயன்றார்கள். சமயம்போன்ற அரிய பெரிய பொருட்களை உடைத்தாயிருக்கும் புற உலகின் மூலம் நம் அடிப்படையான பிரச்னைகளைப்பற்றிய ஞானத்தைப் பெற இங்ஙனம் முயற்சி செய்யப்பட்டது. புற உலகின் ஆராய்ச்சி உயர்ந்த உண்மைகள் பலவற்றை அளித்தது. ஆனால் இவை நம் இந்திய நாட்டின் பெருமைக்கு ஏற்றனவாக இருக்கவில்லை. எனவே இந்தியர்களின் மனது புற உலகத்தினின்று பின்னே சென்று, உள் உலகை நாடிற்று. ஸ்தூல உலகமாகிய ஜடவஸ்துக்களை விடுத்து, சூட்சும உலகமாகிய மனோஉலகில் புகுந்தது. 'ஒரு மனிதன் இறந்தால் அவன் என்னவாகிறானெ'ன்ற கேள்வி பிறந்தது. 'சிலர் அவன் இருக்கிறான் என்றார்கள். சிலர் அவன் மாய்ந்து விட்டானென்கிறார்கள். ஏ! எம தர்ம ராஜனே, இதில் எது உண்மை யென்பதை உரைப்பாய்' என்ற கேள்வி கேட்கப்படுகிறது. இவ்வாரய்ச்சியில் முற்றிலும் வேறான ஒரு முறை கையாளப்பட்டது. வெளி உலக ஆராய்ச்சியால் பெற்றபலன், இந்தியர்களின்

மனதிற்குத் திருப்தி யளிக்கவில்லை. எனவே தங்கள் உள்ளத்தினுள்ளே சென்று மூழ்கி, ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள். அவ்வாராய்ச்சி கோரிய பயனை அளித்தது.

வேதங்களில் உபநிடதங்கள் அல்லது ஆரண்யகங்கள் என்று சொல்லப்படும் பாகங்களில் இவ்வாராய்ச்சிகளைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கின்றது. இங்கு மதமானது எல்லாவிதமான வெளிச் சடங்குகளிலிருந்தும் விடுபட்டிருப்பதைக் காணலாம். இங்கு ஆத்மிக விஷயங்கள் ஸ்தூல பாஷையில் சொல்லப்படாமல் ஆத்மிக பாஷையிலேயே சொல்லப்பட்டிருக்கின்றன. உலக வாசனையே இல்லாமல், மிகப் புனிதமான வார்த்தைகளில் இவை விவரிக்கப்பட்டிருக்கின்றன. இற்றைநாள் கருத்துக்களுக்கு மிகஉயர்ந்தனவாய், மிகுந்த ஆண்மை வாய்ந்தனவாய், லௌகிக வாழ்க்கையைப்பற்றிய கருத்துக்களால் உண்டாகும் தயவு தாட்சண்யம் எதுவுமில்லாதனவான உண்மைகளை உபநிடதங்களை உண்டாக்கிய மகா புருஷர்கள் நமக்கு நேருக்குநேர் எடுத்துரைக்கிறார்கள். என்னுடைய நாட்டு அருமைச் சகோதரர்களே! இவைகளைத்தான் நான் உங்களுக்கெடுத்துச் சொல்ல விரும்புகிறேன். வேதங்களின் ஒரு பகுதியாகவிருக்கும் ஞானகாண்டம் மாத்திரமே ஒரு சமுத்திரம்போல் பரநததாக விருக்கிறது. அதில் ஒரு சிறிய பாகத்தை நன்றாகத் தெரிந்து கொள்வதற்கும் பல வாழ்க்கைகள் வேண்டியிருக்கின்றன. உபநிடதங்கள் வேதங்களின் சிரசாக விளங்குகின்றனவென்று ஸ்ரீராமானுஜர் உரைத்தது மிகுந்த உண்மையேயாகும். அவையே தற்கால இந்தியாவின் வேதங்களாக விளங்குகின்றன. வேதங்களிலுள்ள கர்மகாண்டப் பகுதியை இந்துக்கள் போற்றுகிறார்கள். ஆனால் அது தற்காலத்தில் பயனற்றதாக

விருக்கிறது. பல ஆயிரக்கணக்கான வருஷங்களாக சுருதி யென்ருல் உபநிடதங்களை மாத்திரமே குறிக்கும். வியாசர், பதஞ்சலி முதலிய நம் பெரிய தத்துவஞானி களும், உலகில் தத்துவ ஞானத்திற்கே ஆரம்ப கர்த்தா வாக விருக்கும் கபிலரும், தங்கள் சித்தாந்தங்களை ரூபிப் பதற்கு உபநிடதங்களை அதிகாரமாகக் கொண்டு, அவை களை எடுத்து ஆண்டிருக்கிருர்கள். உபநிடதங்கள் என் றும் அழியாத சாசுவதமான உண்மைகளுக்கு இருப்பிட மாகத் தொன்று தொட்டு இருந்து வந்திருக்கின்றன.

சில உண்மைகள், சில துறைகளில், சில சந்தர்ப்பங் களில், சில காலங்களில்தான் உண்மையாக விருக்கின் றன. அவை அக்காலத்திய ஆசாரங்களையும் பழக்க வழக்கங்களையும் பொறுத்தனவாக இருக்கும். வேறு சில உண்மைகள் மனிதனுடைய அடிப்படையான இயல்பைப் பொறுத்தனவாக விருக்கும். அவை மனிதனிருக்கும் வரையும் என்றும் மாறுபடா. இவ்வுண்மைகள் மாத் திரமே அனைவர்பாலும் எல்லாக் காலங்களிலும் நிரந் தரமாயுள்ளவைகை விருக்கும். நம்முடைய சுற்றுப்புறங் கள், சமூக அமைப்புகள், உடை, உணவு, வழிபாட்டு முறைகள் முதலிய அனைத்தும் மாறிய பின்னும், நமது சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கும் மகத்தான உண்மை கள் என்றும் மாருமல், அழியாமல், அன்றுபோல் இன் றும் மிக உன்னதமாக விளங்குகின்றன. உபநிடதங் களில் விவரிக்கப்பட்டிருக்கும் இக்கருத்துக்களின் ஆரம் பங்கள் கர்மகாண்டங்களில், அதற்கு முன்னமேயே சொல்லப்பட்டிருந்தன. வேதாந்தத்தைப் பின்பற்றும் அனைவரும் ஒப்புக்கொள்ளும், உலகின் ஆரம்பத்தைப் பற்றிய கொள்கைகளும், இந்திய தத்துவ சாஸ்திரங்கள் அனைத்திற்கும் ஆதாரமாக விருக்கும் மனோதத்துவ சாஸ் திரமும் அக்காலத்திலேயே கண்டு பிடிக்கப்பட்டாய் விட்

டன. எனவே வேதங்களின் ஞானகாண்டத்தைப் பற்றிச் சொல்லுமுன், அதன் கர்மகாண்டத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்லவேண்டும். அதற்குமுன் வேதாந்தம் என்ற வார்த்தையை எப்பொருளில் நான் உபயோகப்படுத்துகிறேன் என்று தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

வேதாந்தமென்பது அத்வைத சம்பிரதாயத்தையே குறிக்குமென்று பொதுவாகக் கருதப்படுகிறது. இது முற்றிலும் தவறான கருத்தாகும். பிரஸ்தானத் திரயங்கள்தான் எல்லா சம்பிரதாயங்களுக்கும் தற்காலத்தில் ஆதாரமாகவிருந்து வருகின்றன வென்பது உங்களுக்குத் தெரியும். முதலில் சுருதிகளிருக்கின்றன. அவை ஆண்டவனுடைய அருட்சக்தியால் தோன்றியவை யென்று நாம் கருதுகிறோம். சுருதிகளென்றால் உபநிடதங்களையே குறிக்கும். இரண்டாவதாக வியாச சூத்திரங்கள் தத்துவ விசாரணைகளின் சிகரமாக மதிக்கப்படுகின்றன. நம்முடைய சம்பிரதாயங்கள் ஒன்றுக்கொன்று முரணானவையல்ல; அவை ஒன்றுக்கொன்று ஆதாரமாயிருக்கின்றன. அவை வியாச சூத்திரங்களில் தங்கள் உச்சஸ்தானத்தை அடைகின்றன. உபநிடதங்களுக்கும், வியாச சூத்திரங்களுக்கும் மத்தியில், வேதாந்தத்திற்கு பாஷ்யமாக விருக்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அருளிய கீதை வருகிறது. உபநிடதங்கள், வியாச சூத்திரங்கள், கீதை—இவைகளை, இந்து சம்பிரதாயங்கள்—அத்வைதம், விசிஷ்டாத்துவைதம், துவைதம் முதலிய—அனைத்தும் தங்களுக்கு ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. இவைகள் அனைத்தும் இப்பிரஸ்தானத் திரயங்களைத் தங்கள் அதிகாரமாக ஏற்றுக் கொண்டிருக்கின்றன. புதிய சித்தாந்தங்களை ஸ்தாபிக்க வந்த சங்கராச்சாரியார், ராமானுஜாச்சாரியார், மத்துவாச்சாரியார், வல்லபாச்சாரியார், சைதன்யர் முதலிய அனே

வரும், இம்மூன்று நூல்களையும் அடிப்படையாகக் கொண்டு, அவைகளுக்குப் புதிய பாஷ்யம் எழுதவேண்டி யிருந்தது. எனவே 'வேதாந்தமென்ற வார்த்தையின் மூலம், உபநிடதங்களிலிருந்து தோன்றிய பல சித்தாந்தங் களில் ஒன்றை மாத்திரம் குறிப்பிடுவது தவறு. வேதாந்த மென்பது எல்லா சம்பிரதாயங்களையும்தான் குறிக்கும். விசிஷ்டாத்துவைதிகளுக்கும், துவைதிகளுக்கும், தங்களை வேதாந்திகள் என்றழைத்துக்கொள்ளும் உரிமையுண்டு. உண்மையில் எல்லா இந்துக்களும் வேதாந்திகளாவார் கள்.

இம்மூன்று சித்தாந்தங்களும் மிகப் பழங் காலத்தி லிருந்து இந்தியாவில் இருந்து வந்திருக்கின்றன வென் பதை நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும். சங்கரர் அத்வைத சித்தாந்தத்தைப் புதிதாக உண்டாக்கினு ரென்று நீங்கள் நினைக்கலாகாது. அவர் தோன்றுவதற்குப் பல நூறு வருஷங்களுக்கு முன்னரே அது இருந்தது. சங்கரர் அதன் கடைசிப் பிரதிநிதியாக, அதாவது அதைக் கடைசியாக உலகிற்கெடுத்துரைத்த - ஆசார்யர்களில் ஒரு வராகவிருக்கிறுர். அம்மாதிரியே விசிஷ்டாத்துவைதமும், ஸ்ரீ ராமாநுஜர் தோன்றுவதற்குப் பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே இருந்தது. ஸ்ரீ ராமாநுஜர் எழுதிய பாஷ்யங் களிலிருந்தே இவ்விஷயம் நமக்குத் தெளிவாகத் தென்படு கிறது. இங்ஙனமே துவைத சித்தாந்தமும் மற்றவை களுடன் சேர்ந்து இருந்து வந்திருக்கின்றது. என் சிற்றறிவைக் கொண்டு, அவை ஒன்றுக்கொன்று முரணல்ல வென்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். எங்ஙனம் நம்முடைய ஆறு தர்சனங்கள் ஒன்றுக்கொன்று விரோத மாக விராமல், மகத்தான தத்துவங்களை அடியிலிருந்து கடைசியில் அத்வைதம் வரை விளக்குகின்றனவோ, அங்ஙனமே இம்மூன்று சித்தாந்தங்களும் மனித

வுள்ளத்தைப் படிப்படியாக உயர்த்திக் கடைசியாக அந்த அதி அற்புதமான அத்வைதமென்ற ஐக்கிய பாவத்திற்கு அழைத்துச் செல்வதை நாம் காண்கிறோம். எனவே இவை ஒன்றுக்கொன்று விரோதமானவையல்ல. இவ் விஷயத்தில் பலர் தவறு செய்திருக்கிறார்கள் என்பதை நான் உங்களுக்குச் சொல்லாமலிருக்கமுடியாது. அத்வைத ஆசார்யர்கள் அத்வைதப் பொருள் கொடுக்கும் சுலோகங்களை அப்படியே வைத்துக்கொண்டு, துவைத அல்லது விசிஷ்டாத்துவைதப் பொருள் கொடுக்கும் சுலோகங்களின் உண்மைப் பொருளை மாற்றி, அத்வைதப் பொருள் செய்ய முயற்சி செய்திருக்கிறார்கள். இவ்விதமே துவைத ஆசார்யர்கள் அத்வைதப் பொருள் கொடுக்கும் சுலோகங்களுக்கு துவைதப்பொருள் செய்ய முயற்சி செய்திருக்கிறார்கள். நம்முடைய ஆசார்யர்கள் அனைவரும் மிகப் பெரிய மகான்கள். எனினும், 'குருவிடம் காணும் குறைகளையும் நாம் ஒப்புக்கொள்ள வேண்டும்', என்ற பழமொழியொன்றுண்டு. இவ்விஷயத்தில் மாத்திரம் அவர்கள் தவறு செய்திருக்கிறார்களென்று நான் நினைக்கிறேன். சுலோகங்களின் பொருளை மாற்றிப் பொருள் செய்ய வேண்டிய அவசியமே யில்லை. அவைகளின் அர்த்தங்களைத் திருத்திச் சொல்ல வேண்டிய தேவையே யில்லை. அதற்காக வீண் தர்க்க வியாகரணங்களைக் கிளப்பி அச்சுலோகங்களுக்கில்லாத பொருளை அவற்றின்மேல் சுமத்தவேண்டிய அவசியமும் இல்லை. அதிகார வாதமென்ற கொள்கையை, அதாவது சாதகனுடைய தன்மைக்கும் நிலைமைக்கும் ஏற்றவாறு அவனுக்கு உண்மை புகட்டப்பட வேண்டுமென்ற உயர்ந்த தத்துவத்தை அவர்கள் உணர்வார்களானால், இச் சுலோகங்கள் அனைத்தையும் சரியாகப் பொருள் செய்து கொள்வது எளிதாகிறது.

'कस्मिन्नु भगवो विज्ञाते सर्वमिदं विज्ञातं भवति'

'எந்த ஞானத்தைப் பெற்ருல் அதன் மூலம் மற்ற அனைத்தைப் பற்றிய ஞானமும் பெற முடியும்?' இந்த விசாரணையையே உபநிடதங்கள் தங்கள் முக்கிய விஷயமாகக் கொண்டிருக்கின்றன. அதாவது தற்கால தத்துவ சாஸ்திர பாஷையில் சொல்லுமிடத்து, உலகில் அனைத்திற்கும் அடிப்படையாக விருக்கும் கொள்கையை ஆராய்தலே உபநிடதங்களின் நோக்கமாக விருக்கின்றது. வேறுபாடுகளுக்குள்ளிருக்கும் ஒற்றுமையைக் காண்பதே ஞானமெனப்படும். விஞ்ஞான சாஸ்திரங்களும் இக்கருத்தையே அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. வேறுபாடுகளின் மத்தியில் ஐக்கியத்தைக் காண்பதே அறிவுடைமைக்கு அறிகுறி. விஞ்ஞான சாஸ்திரங்கள் அனைத்தும் சேர்ந்து புற இயற்கையின் ஒரு சிறு பகுதிக்கு அடிப்படையான கருத்துக்களைக் கண்டுபிடிப்பதில் ஈடுபட்டிருக்கின்றன. இதை யோசனை செய்து பார்த்தால், இம்மகத்தான பிரபஞ்சமனைத்திலும், பல்வேறு விதங்களில் இருக்கும் நாம ரூபங்களுக்கு அடிப்படையாகவும், உயிர்ப் பொருட்களுக்கும் ஜடப் பொருட்களுக்கும் அடிப்படையாகவும் இருக்கும் தத்துவங்களைக் கண்டுபிடிப்பது இன்னும் எவ்வளவு கடினமாக விருக்கவேண்டும்? உலகிலிருக்கும் கருத்துக்களும், உருவங்களும் ஒன்றுக்கொன்று வேறுபட்டிருக்கின்றன; எனினும் அடிப்படையான ஒற்றுமைத் தன்மையையும் உடையனவாக விருக்கின்றன. இந்த எல்லையற்ற வேறுபாடுகளிடையே இருக்கக்கூடிய ஒற்றுமைத் தன்மையைக் கண்டுபிடிக்கும் மகத்தான பணியையே உபநிடதங்கள் மேற்கொண்டிருக்கின்றன.

அருந்ததி நியாயமென்று கல்வி புகட்டும் முறையொன்றிருக்கிறது. ஒருவனுக்கு அருந்ததி யென்ற சூட்சுமமான நட்சத்திரமொன்றைக் காட்டவேண்டு

மானல், அதற்கருகிலிருக்கும் பெரிய பிரகாசமான நட்சத்திரமொன்றைக் காட்டி, அதன்மேல் அவன் மனதைச் செலுத்தும்படி செய்தால், பிறகு அச்சிறிய நட்சத்திரமான அருந்ததியைக் காண்பிப்பது எளிதாகின்றது. நமது உபநிடதங்களில் இம்முறை பின்பற்றப்பட்டிருக்கிறதென்பதை உங்களுக்குக் காண்பிக்க விரும்புகிறேன். சாதாரணமாக எல்லா உபநிடதங்களிலும் முதல் அதிகாரம் துவைத வழிப்பாட்டுடன் ஆரம்பமாகிறது. கடவுள் இப்பிரபஞ்சத்தை ஆக்கிக் காத்து, பிறகு தன்னுள்ளே அடக்கிக் கொள்ளுபவர் என்று கற்பிக்கப்படுகிறது. அவரே அனைத்தையும் ஆள்பவர், உள் இயற்கையையும் புற இயற்கையையும் அறிவதற்கு வழி காட்டியாகவிருப்பவர், அனைவற்றுக்கும் ஆதாரமாகவிருப்பவர்; எனினும் அதற்குப் புறத்தே யிருப்பவர் போல் தோற்றுகிருர். எனவே அவரை வணங்க வேண்டுமென்று கற்பிக்கப்படுகிறது. அடுத்தபடியாக அவர் இயற்கைக்குப் புறத்தேயில்லை, ஆனல் அதற்கடிப்படையாகவிருக்கிருர் என்ற கருத்து வருகிறது. கடைசியாக இவ்விரண்டு கருத்துக்களும் விடப்பட்டு 'அவனே அனைத்துமாயிருக்கிருன். அவன் ஒருவனே உண்மை' என்ற கருத்துத்தோன்றுகிறது. 'तत्त्वमसि श्वेतकेतो' 'ஏ சுவேதகேது, நீயே அது' என்று சொல்லப்படுகிறது. சகலத்திறகும் ஜீவாதாரமாக விருக்கும் அவ்வஸ்துவே மனித ஆத்மாவிற்கும் ஆத்மாவாகவிருக்கிறதெனத் தெளிவுபடுத்தப்படுகிறது. இந்த நிலையில் சந்தேகம் ஒன்றுமின்றி, மிகத் தெளிவான, தைரியமான பாஷையில் இஞ்ஞானம் அறிவுறுத்தப்படுகிறது. இம்மகத்தான உண்மையை உபநிடதங்கள் எந்தவிதமான அச்சமும் பயமும் இன்றி உலகிற்கு எடுத்துரைக்கின்றன. அதே பாஷையில், மீண்டும் அவ்வுண்மையை உபதேசிப்பதற்கு நாம் தயங்கவேண்டிய

அவசியமில்லை. ஆண்டவனருளால் இம்மகத்தான அத்வைத உண்மைகளை அச்சமின்றி, தயவுதாட்சண்யமின்றி உபதேசம் செய்ய நான் முன் வந்திருக்கிறேன்.

முதலில் இரண்டு விஷயங்களைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும். முதலாவதாக வேதாந்தத்திலிருந்து பிறந்திருக்கும் சம்பிரதாயங்கள் அனைத்திற்கும் பொதுவாக விருக்கும் மனோதத்துவ சாஸ்திரக் கொள்கைகள் சிலவற்றை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். இரண்டாவது உலக சிருஷ்டியைப் பற்றிய சில விஷயங்களும் தெரிந்து கொள்ளவேண்டுவது அவசியம். இரண்டாவது விஷயத்தை நாம் முதலில் எடுத்துக் கொள்வோம். தற்கால விஞ்ஞான சாஸ்திரங்கள் பல புதிய அதி ஆச்சரியமான உண்மைகளைக் கண்டு பிடித்திருக்கின்றன. அவை திடீர் திடீரென்று புதிய புதிய அற்புதங்களை நமது கண்களுக்குத் திறந்து காட்டியிருக்கின்றன. ஆனல் இவைகள் பலவும் நம் பெரியோர்களால் பல யுகங்களுக்கு முன்னமேயே கண்டுபிடிக்கப்பட்டவைதாம். பல்வேறுபட்ட சக்திகளினிடையே ஓர் ஒற்றுமை யிருக்கிறதென்று விஞ்ஞான சாஸ்திரம் கொஞ்ச காலத்திற்கு முன்புதான் கண்டு பிடித்தது. உஷ்ணம், காந்தம், மின்சாரம் முதலிய பலவகைப்பட்ட சக்திகளும் அடிப்படையில் ஒரே விதமானவை யென்றும், ஒரு பெயரால் அவைகளைக் குறிக்க முடியுமென்றும், அவர்கள் இப்பொழுதுதான் கண்டு பிடித்திருக்கிறர்கள். ஆனல் இக்கருத்து நமது மிகப் பழமையான சம்ஹிதைகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது. பூமியின் ஆகர்ஷண சக்தி, கிரகங்களின் இழுக்கும் சக்தி, அல்லது அதற்கு எதிரிடையான விலக்கும் சக்தி, உஷ்ணம், மின்சாரம் அல்லது காந்தம் என்று பலவாறுகச் சொல்லப்படும் சக்திகள் அனைத்தும் அந்த அடிப்படையான சக்தியின் வேறுபாடுகளே யொழிய வேறல்ல.

அவை மக்களின் அந்தக்கரணங்களினின்று தோன்றும் எண்ணங்களாக விருப்பினும் சரி, அல்லது புறக் கருவி களிலிருந்து தோன்றும் செய்கைகளாக விருப்பினும் சரி, 'பிராணன்' என்ற அடிப்படையான சக்தியினின்றுதான் பிறக்கின்றன. பிராணன் என்பது என்ன? பிராணன் என்பது ஸ்பந்தனம், ஒரு வித வேகம் † பிரபஞ்சமனைத்தும் அடங்கி முன்னிருந்த நிலையை அடையும்போது, இந்த அளவற்ற சக்தி என்னவாகிறது? அது மறைந்து அல்லது தீர்ந்து விடுகிறதென்று நம் சாஸ்திரங்கள் உரைக்கின் றனவா? அவை அங்ஙனம் உரைப்பதில்லை; ஏனெனில் அவை தீர்ந்து விட்டால், இப்பிரபஞ்சம் மறுபடியும் தோன்றுவது எங்ஙனம் சாத்தியமாகும்? சிருஷ்டி யென் பது சமுத்திரத்தில் அலைகள் தோன்றி மறைதல் போல், தோன்றி மறைந்து கொண்டே யிருக்கிறது. ஒரு கற்பத் திற்குப் பிறகு பிரபஞ்சம் அனைத்தும் சூட்சுமமாகி சிருஷ்டிக்கு முன்னிருந்த நிலைமையை அடைகின்றன. மறுபடியும் சிருஷ்டி ஆரம்பமாகும் வரை அவை அவ்விதமே யிருக்கின்றன. இந்நிலையில் உலகில் காணப் படும் சக்திகளும், இச்சக்திகள் அனைத்திற்கும் அடிப் படையாக விருக்கும் பிராணன் என்ற மகத்தான சக்தியும் என்னவாகின்றன? பிராணன் ஆதிப்பிராணனுடன் ஐக்கியமாகி விடுகிறது. இந்நிலையில் அதன் வேகம் குறைந்து அசைவற்றிருக்கிறது. இதைத்தான் வேதத்தில் 'அது அசைவற்றிருந்தது; ஆனாலும் தன்னுள்ளே மகத் தான சக்தியை உடைத்தாயிருந்தது' என்று சொல்லப் பட்டிருக்கிறது. உபநிடதங்களில் பலவிடங்களில் பரி பாஷைகள் உபயோகப்படுத்தப்படுகின்றன. இவைகளைப் புரிந்து கொள்வது மிகவும் கடினமாக விருக்கிறது.

---

† Vibration

உதாரணமாக ‘வாதம்’† என்ற வார்த்தையை எடுத்துக் கொள்ளுங்கள். பல சமயங்களில் அதே வார்த்தை வாயு வென்ற பொருளிலும், வேகமென்ற பொருளிலும் உபயோகப்படுத்தப்படுகிறது. இவைகளைப் பலர் ஒன்றுக் கொன்று மாறுகப் பொருள் செய்துகொண்டு மனதைக் குழப்பிக் கொள்ளுகிறுர்கள். இவ்விதம் நேராமல் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும். ஸ்தூலப் பொருட்கள் அனைத்தும் என்னவாகின்றன ? அவை ஆதி வஸ்துவான ஆகாசத்தில் ஒன்ருகி விடுகின்றன. ஆகாசத்தைத் தற்கால விஞ்ஞான பாஷையில் ஈதர்‡ என்று சொல்லலாம். அதைத் தற்கால பாஷையில் என்ன பெயர் கொடுத்தழைத்தாலும் ஆகாசமென்பது ஆதி வஸ்துவைக் குறிக்கிறதென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆகாசத்துடன் பிராணன் சேர்ந்தால் சக்தி பெறுகிறது. அடுத்த சிருஷ்டி ஆரம்பிக்கும் போது பிராணன் ஆகாசத்துடன் சேருவதால் உண்டாகும் சக்தியின் காரணமாய் ஆகாசம், அதாவது அதிஸ்தூல வஸ்து அலையாகக் கிளம்பி, சந்திர சூரியர்கள் முதலிய ரூபங்கள் வெளிப்படுகின்றன.

**यदिदं किंच जगत सर्वं प्राण एजति निःसृतम् ।**

‘இப்பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் பிராணனுடைய வேகத்தால் தோற்ற மெய்துகின்றன’ வென்று சொல்லப் பட்டிருக்கிறது. ‘ஏஜதி’ யென்ற வார்த்தையை நீங்கள் கவனிக்கவேண்டும். அது ‘ஏஜ்’ என்ற தாதுவிலிருந்து வருகிறது. அதன் பொருள் வேகம் உண்டாக்குதல் என்பது. நிஸ்ருதமென்ருல் தோற்ற மெய்துதல். ‘யதிதம் கிஞ்ச’ என்ருல், இப்பிரபஞ்சமனைத்தும் என்று பொருள்.

இதுவரை சிருஷ்டியின் சில அம்சங்களைப் பற்றிச்

† Matter ‡ Ether.

சொன்னேம். இதில் இன்னும் பல விவரங்களிருக்கின்றன; அதாவது சிருஷ்டி எப்படி உண்டாகிறது, முதலில் எங்ஙனம் ஈதர் உண்டாகி அதிலிருந்து மற்ற பொருட்கள் உண்டாகின்றன, முதலிய பல விவரங்கள். ஈதர் வேகம் பெற்று அதிலிருந்து வாயு உண்டாகிறது. இதில் நாம் முக்கியமாக மனதில் வைக்க வேண்டிய கருத்தொன்றுண்டு. அதாவது சூட்சமத்திலிருந்து ஸ்தூலம் பிறக்கிறது. ஸ்தூல வஸ்துதான் சிருஷ்டியில் கடைசியாகத் தோன்றுகிறது. இவ்விதமாக பிரபஞ்ச முழுதும் இரண்டு பொருட்களாகப் பாகுபாடு படுத்தப்பட்டிருப்பதைக் காண்கிறேம். இவ்விரண்டிற்கும் பொதுவாக விருக்கும் பொருளை இன்னும் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. சக்தி யனைத்தும் பிராணனின் அம்சங்கள் என்றும் ஸ்தூல வஸ்துக்கள் ஆகாசத்தின் வேறுபாடுகளென்றும் கண்டுபிடித்தாய் விட்டது. இதற்குமேல் இவ்விரண்டிற்கும் அடிப்படையாக ஏதாவது பொருள் இருக்கின்றதா வென்ற கேள்வி பிறக்கிறது. தற்கால விஞ்ஞான சாஸ்திரங்களில் இக்கேள்விக்கு யாதொரு பதிலும் கொடுக்க முடியாது. அவை இப்பிரச்னையைத் தீர்க்கக் கூடிய ஞானத்தைப் பெறவில்லை. அவை இரண்டிற்கும் அடிப்படையாக சர்வ சக்தி வாய்ந்த பரம்பொருள் (அரூபக் கடவுள்) இருக்கிருர் என்ற கருத்தில் அவை இரண்டும் ஐக்கியமடைகின்றன. இக்கருத்துத் தான் புராணங்களில் பிரம்மா (சிருஷ்டிக் கர்த்தா) வென்றும், மனோதத்துவ சாஸ்திரப்படி 'மகத்' என்றும் சொல்லப் படுகிறது. இக்கருத்தில் தான் அவை இரண்டும் ஒற்றுமைப்படுகின்றன. நம் மூளையில் அடைப்பட்டிருக்கும் 'மகத்' தின் சிறிய கூறுபாட்டை நாம் மனதென்று சொல்லுகிறேம். உலகிலுள்ள அனைவருடைய மனதும் சேர்ந்து சமஷ்டியாகிறது. இதற்கு மேலும் ஆராய்ச்சி

செல்லுகிறது. நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பிண்டமா யிருக்கிறேம்; உலகத்திலுள்ள அனைவரும் சேர்ந்தால் அது அண்டமாகிறது. பிண்டத்தைப் போலவே அண்ட மும் இருக்கிறதென்று நாம் ஊகித்தால் அது தவறாகாது. அதாவது நம்முடைய மனத்தை நாம் நன்ருக ஆராய்ந்து அறிவோமாஞல், அதன் மூலம் 'மகத்'தின் தன்மையை நாம் உணர்ந்துகொள்ளலாம்.

மனதென்ருல் என்ன? தற்காலத்தில் விஞ்ஞான சாஸ்திரமும் உடலமைப்பைப் பற்றிய சாஸ்திரமும்† ஆராய்ச்சியின் காரணமாகப் படிப்படியாக முன்னேறிக் கொண்டு வருகின்றன. அதன் காரணத்தாலேயே மேல் நாடுகளில் இருந்துவரும் பழைய மதங்களின் மேல் மக்களுக் கிருந்த நம்பிக்கை குலைந்துவருகிறது. தற்கால ஆராய்ச்சி களில், மனதும் மூளையிலிருக்கக் கூடியதென்றும், அதுவும் ஒருவகை ஸ்தூல வஸ்துவென்றும் கண்டுபிடித்திருக் கின்றனர். இது மேல்நாட்டு மக்களிடையே மிகுந்த மனக் குழப்பத்தை உண்டுபண்ணியிருக்கிறது; ஆனல் இந்தியாவில் இவ்விஷயம் தொன்று தொட்டுத் தெரிந்து வந்ததாகும். மனம் ஒருவிதமான சூட்சும வஸ்துவென் பதை ஒவ்வொரு இந்து இளைஞனும் தன் முதல் பாட மாகக் கற்கிறன். இச்சரீரம் ஸ்தூலமானது; இதற்குப் பின்னல் அதன் சூட்சும சரீரமாகிய அதன் மனதிருக் கிறது. மனதும் ஒருவிதமான ஸ்தூல வஸ்து‡ தான். ஆனல் மிகச் சூட்சுமமானது. மனது ஆத்மாவல்ல. ஆத்மாவென்னும் வார்த்தையை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க முடியாது, அதற்குக் காரணம் ஆங்கிலத்தில் அக்கருத்தில்லை. தற்கால ஜெர்மன் நாட்டு தத்துவ ஆராய்ச்சிக்காரர்கள் அதை மொழிபெயர்க்க முயற்சி செய்திருக்கிறர்கள். இவ்வாத்மா தான் உண்மையில்

† Physiology ‡ Matter

மனிதனுக்கு அடிப்படையாக விருப்பது. மனத்திற்கு இந்திய மஹோ தத்துவ சாஸ்திரப்படி அந்தக்கரணமென்று பெயர். ஆத்மா சூட்சும வஸ்துவாக விருக்கக்கூடிய மனதை அதாவது அந்தக்கர்ணத்தைத் தன்னுடைய கருவியாக உபயோகப்படுத்துகிறது. மனது மூளைக்குள் ளிருக்கும் பல கருவிகள் மூலம் சரீரத்திலிருக்கும் புறக் கரணங்களை வேலை செய்யச் செய்கின்றது. கண், மூக்கு, காது முதலிய புறக்கரணங்கள் பார்ப்பது, முகர்வது, கேட்பது முதலிய காரியங்களை உண்மையில் செய்வ தில்லை ; இவைகளுக்குப் பின்னுல் மூளையிலே இருக்கும் இந்திரியங்களின் உதவியால்தான் இக்காரியங்கள் நடை பெறுகின்றன. அவை கெட்டுவிட்டால், ஒருவனுக்கு இந்திரனைப் போல் ஆயிரம் கண்களிருந்தாலும் அவனுல் ஒன்றையும் பார்க்க முடியாது. தற்கால ஆராய்ச்சிகள் சமீபத்தில்தான் இவ்விஷயங்களைக் கண்டுபிடித்திருக் கின்றன. ஆனல் நம் தத்துவ சாஸ்திரங்கள் நெடுங் காலத்திற்கு முன்னமேயே இவைகளை அறிந்திருந்ததால், இவைகளை அடிப்படையாகக் கொண்டுதான் நம் சாஸ்திர ஆராய்ச்சிகள் ஆரம்பமாகின்றன. நம் சாஸ்திரங்களின் படி, பார்வையென்ருல் அதன் பொருள் வெளிப்பார்வை யல்ல. மூளையிலிருக்கும் ஞானேந்திரியங்களுக்குத்தான் உண்மையில் நுகரும் சக்தி யிருக்கிறது. இவ்வெல்லா இந்திரியங்களும், மனது, புத்தி, சித்தம், அஹங்காரம்— இவையனைத்தும் சேர்ந்து மனதாகிறது. தற்காலத்தில் சரீர சாஸ்திர ஆராய்ச்சிக்காரர்கள், மனதென்பது மூளையிலிருக்கிறதென்றும், அதில் பல கருவிகளிருக்கின் றனவென்றும் உரைத்தால், அதைக் கேட்டு நீங்கள் கலங்கவேண்டிய அவசியமில்லை. உங்கள் தத்துவ சாஸ் திரிகளுக்குப் பழங் காலத்திலிருந்து இவ்விஷயம் தெரியு மென்று நீங்கள் அவர்களுக்குப் பதில் சொல்லுங்கள்.

இனி, மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்று லென்ன வென்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். முதலில் சித்தத்தை எடுத்துக்கொள்வோம். எவ்வஸ்து வால் மனது உண்டாக்கப்பட்டிருக்கிறதோ, அதற்குச் சித்தமென்று பெயர். உலகிலிருக்கும் மனங்கள் அனைத்தும் சேர்ந்தது 'மகத்'; சித்தம் மகத்தின் ஒரு சிறு கூறு. அதாவது மனத்தினுடைய எல்லா நிலைகளும் சேர்ந்து, அதற்குக் கொடுக்கப்படும் மற்றொரு பெயர் சித்தமாகும். ஒரு குளமிருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். அது சலனமின்றி, அசையாமலிருக்கிறது. ஒருவன் அதற்குள் ஒரு கல்லை யெறிந்தால் என்னவா கிறது? முதலில் அந்நீர்ப் பரப்பில் அக் கல் தாக்கிய தனால் ஓர் அடி உண்டாகிறது. இரண்டாவதாக அதன் காரணமாகத் தண்ணீரில் ஒரு வேகம் உண்டாகிக் கிளம்பி அலை அலையாகப் புறப்படுகிறது. சித்தம் சலனமில்லாம லிருக்கும் குளத்திற்குச் சமானம். நம்முடைய புற இந்திரி யங்களால் ஏற்படும் உணர்ச்சிகள் அதற்குள் எறியப் படும் கற்களுக்குச் சமானமாக விருக்கின்றன. புலன் களால் நுகர்ச்சி ஏற்பட்ட உடனே, அது இந்திரியங் களின் மூலம் மனதை யடைந்து ஒரு வேகத்தை யுண்டாக்குகிறது. இவ்வேகத்தினால் மனத்தில் விருத்தி யுண்டாகிறது. இவ்விருத்திகளே மனதெனப்படும். அதற்குமேல் இவையென்ன வென்று ஆலோசித்து முடிவு செய்யும் சக்தி புத்தியெனப்படும். புத்தியுடன் தோன்றி இந்நுகர்ச்சிகளை அனுபவிக்கும் 'தான்' என்று உணரும் உணர்ச்சி அஹங்காரமென்று சொல்லப்படுகிறது. ஒரு கொசு என் கையின்மேல் உட்காருகிறதென்று வைத்துக் கொள்ளுங்கள். அந்த நுகர்ச்சி என் சித்தத்திற்குக் கொண்டு போகப்பட்டு, அதில் ஒரு விருத்தி ஏற்படு கிறது. இதைத்தான் மனோதத்துவ சாஸ்திரப்படி மன

தென்று சொல்லுகிறார்கள். இதன் பயனாக என் கையின் மேல் ஒரு கொசு உட்கார்ந்திருக்கிற தென்றும், அதை நான் துரத்த வேண்டுமென்றும் எண்ணம் தோன்று கிறது. இவ்வெண்ணங்களாகிய கற்கள் மனமாகிய குளத்தில் எறியப்படுகின்றன. ஒரு குளத்தில் எறியப் படும் கற்கள் அதற்கு வெளியிலிருந்தே வருகின்றன. ஆனால் இச்சித்தமாகிய குளத்தில் விழக் கூடியவை வெளி உலகத்திலிருந்து வரலாம், அல்லது தன்னுள்ளிருந்தும் வரலாம். இவையனைத்தும் சேர்ந்து அந்தக்கரணங்க ளென்று பெயர் பெறுகின்றன.

இவற்றுடன் சேர்ந்து இன்னுமொரு விஷயத்தையும் நீங்கள் தெரிந்து கொள்ளவேண்டும். அத்வைத சித்தாந் தத்தைப் புரிந்துகொள்வதற்கு அது உதவியாக விருக்கும். நீங்கள் எல்லோரும் முத்துச் சிப்பிகளைப் பார்த்திருப் பீர்கள். முத்து எப்படி உண்டாகின்ற தென்பதைப் பற்றியும் நீங்கள் தெரிந்து கொண்டிருக்கலாம். ஒரு மணல் அம்முத்துச் சிப்பிக்குள் எப்படியோ போய் விடுகிறது. அது உறுத்திக்கொண்டே யிருக்கிறது. சிப்பி தன் வருத்தத்தைத் தணித்துக் கொள்வதற்காகத் தன் உடலிலிருந்து உண்டாகும் ஒருவித ரசத்தைக் கொண்டு அம்மணலை மூடுகிறது. அது பல வருஷங்களில் கெட்டியாகி முத்தாக மாறுகிறது. உலக முழுதும் இங்ஙனமே இருக்கிறன்து. வெளி உலகிலிருந்து வரும் உணர்ச்சிகள் நம்மைப் பாதிக்கின்றன. அதை உணரும் போதே நாம் நம்முடைய மனதை அதன் பேரில் செலுத்துகிறோம். அதனால் உண்டாகும் பலாபலன் உண்மையில் நம் மனதையே பொறுத்திருக்கிறது. அச் சிப்பிக்குள் வரும் மணல் கேவலம் ஒரு தூண்டுதலாக விருக்க, எங்ஙனம் முத்து அனைத்தும் அச்சிப்பியினாலேயே உண்டாக்கப்பட்டதோ, அங்ஙனமே புற உணர்ச்சிகள்

மனிதனுக்கு வெறும் தூண்டுதல்களாகவே இருக்கின்றன. மனித வாழ்க்கை யனைத்தும் மனத்தின் செய்கையால் உண்டாக்கப்படுகின்றது. எனவே, வெளி உலகே உண்மை, அதுவே அனைத்தையும் உண்டாக்குகிற தென்று நம்புகிறவர்கள் இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளட்டும். வெளி உலகை நாம் தனியாக உணர்வதேயில்லை. அதை நம் மனது எங்ஙனம் நுகருகின்றதோ அங்ஙனமே நாம் அதை உணருகிறோம். நம்முடைய மனத்தின் தன்மைக்கேற்ப அது மாறித் திரிந்து தென்படுகிறது. நம் உள் உலகின் நுகர்ச்சியும் இவ்வாறே நமது மனதைப் பொறுத்ததாக விருக்கிறது. நம் ஆத்மாவைக் காணும் விஷயத்திற்கும் இவ்விதி பொருந்தும். ஆத்மாவையும் நம் மனத்தின் மூலம்தான் நாம் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. எனவே மனதென்ற கண்ணுடியின் மூலம்தான் நாம் ஆத்மாவைக் காண்கிறோம். அதாவது மனதின் இயல்பிற்கேற்றவாறு மாற்றித் திருந்தியமைக்கப்பெற்ற ஆத்மாவை நாம் காணப்பெறுகிறோம். இவ்விஷயத்தை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். சிறிது நேரத்திற்குப் பிறகு மறுபடியும் இவ்விஷயத்திற்குத் திரும்பி வருவோம்.

அடுத்தபடியாக நாம் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் இது. நம் உடல் பல ஸ்தூல அணுக்கள் சேர்ந்து உண்டாகி யிருக்கிறது. அவ்வணுக்கள் தொடர்ந்து மாறிக்கொண்டே யிருக்கின்றன. ஒவ்வொரு நிமிடமும் நம் உடலில் வஸ்துக்கள் சேர்ந்துகொண்டே யிருக்கின்றன. மற்றொரு பக்கத்தில் ஒவ்வொரு நிமிடமும் வேறு சில வஸ்துக்கள் உடலைவிட்டு வெளிச் சென்று கொண்டிருக்கின்றன. இவ்விதம் சதா மாறிக்கொண்டே யிருக்கும் ஒரு பொருளை நாம் நம் உடம்பென்று அழைக்கிறோம். இது ஓர் ஆற்றைப் போலிருக்கிறது. ஆற்றி

லிருக்கும் நீர் ஓடிக்கொண்டே யிருக்கிறது. நேற்றிருந்த நீர் அதே இடத்தில் நின்றிருப்பதில்லை. எனினும் இங்ஙனம் மாறிக் கொண்டிருக்கும் நீர் நிலையை நாம் நம் மனத்தில் கிரகித்துக்கொண்டு, அதை ஆறு என்ற பெயர்கொண்டு அழைக்கிறோம். ஒவ்வொரு கணமும் அதன் தண்ணீர் மாறிக் கொண்டிருக்கிறது. அதன் கரையும் சுற்றுப் புறமும் மாறிக்கொண்டிருக்கின்றன. இவையெல்லாம் மாறிக்கொண்டிருந்தால் ஆறு என்பதென்ன? இந்த மாறுதல்களின் பெயர்தான் ஆறு என்பது. இதைத்தான் க்ஷணிக விஞ்ஞான வாதமென்று உரைக்கிறார்கள். இதைப் புரிந்துகொள்வது மிகக் கடினம். இதைப் பௌத்த தத்துவ ஞானிகள் தர்க்க ரீதியில் வெகுவாக ஆராய்ச்சி செய்திருக்கிறார்கள். வேதாந்தத்தின் ஒரு பகுதியை எதிர்ப்பதற்காக இவ்வாதம் கிளம்பிற்று. இதற்குப் பதில் சொல்ல வேண்டியிருந்தது. இதற்குச் சரியான மறுப்பு அத்வைதம்தான் கொடுக்க முடியுமென்பதைப் பின்னால் காண்போம். அத்வைதத்தைப்பற்றிப் பல தப்பு அபிப்பிராயங்கள் இருந்து வருகின்றன. பலர் அத்வைதத்தைக் கண்டு மிரளுகிறார்கள். ஆனால் அதுதான் மக்களுக்குக் கதிமோட்சம் அளிக்கக்கூடியதென்பதை நாம் பின்னால் அறிவோம். ஏனெனில் அதுதான் முற்றிலும் புத்தி பூர்வமாகவிருக்கிறது. துவைதம் முதலிய சித்தாந்தங்கள் நித்திய வழிபாட்டிற்கு நல்லவையாயும், நம் மனதின் நிலைமைக்கு ஏற்றவையாயும், மனிதனுடைய முன்னேற்றத்திற்கு உதவி செய்பவையாயும் இருக்கின்றனவென்பது உண்மைதான். ஆனால் ஒருவன் முற்றிலும் புத்திபூர்வமாக ஆத்மிக வாழ்க்கையைப் பின்பற்ற வேண்டுமென்று விரும்பினால், அத்வைதம் ஒன்றே அவனுக்குத் திருப்தியளிக்க முடியும்.

நாம் எடுத்துக்கொண்ட விஷயத்தை இப்பொழுது ஆராய்வோம். மனது ஓர் ஆறுபோல் ஒரு பக்கம் நிறைந்துகொண்டும் மற்ருெரு பக்கம் வடிந்துகொண்டும் இருக்கிறதென்று வைத்துக்கொள்வோம். அங்ஙனமாயின் ஆத்மா என்ற அழியாப் பொருள் எங்கிருக்கிறது? உடம்பு இடைவிடாமல் மாறுதலடைந்து கொண்டிருக் கிறது. மனதும் இடைவிடாது மாறிக்கொண்டே யிருக் கிறது. எனினும் நாம் மாருமற் தொடர்ந்து இருக்கிருே மென்ற உணர்ச்சி நம்மிடமிருக்கிறது. மாருத ஒரு வஸ்து நம்முள் ளிருந்துகொண்டு நமக்கு அவ்வுணர்ச்சியைக் கொடுக்கிறது. வெளிச்சத்தின் கிரணங்கள் பல திக்கு களிலிருந்து வந்து, ஒரு திரை அல்லது சுவர் அல்லது மாருத வேறு ஒரு வஸ்துவின்மேல் விழும்போதுதான், அவை ஒன்று சேர்ந்து ஓர் உருவத்தை உண்டாக்கு கின்றன. மனிதனிடத்திலே, இம்மாறுதல்களின் மத்தியில், இவைகளை ஒன்று சேர்க்கக்கூடிய வஸ்து எது? அந்த ஸ்திரமான வஸ்து மனதாக விருக்கமுடியாது. ஏனெனில் அது மாறுதலடைந்து கொண்டே யிருப்பதை நாம் பார்க் கிருேம். ஆதலால் உடலையும் மனதையும் தவிர வேறு ஒரு வஸ்து என்றும் மாருததாய், நித்தியமானதாய் இவ் வுணர்ச்சிகளை ஒற்றுமைப்படுத்திக்கொண் டிருக்கவேண்டு மென்று ஏற்படுகிறது. அதைத்தான் மனிதனுடைய ஆத்மாவென்று சொல்லுகிருேம். மேலும் புற உலகத்தி லிருக்கும் ஸ்தூல வஸ்துவும் சூட்சும வஸ்துவாக விருக்கக் கூடிய மனதும் மாறும் தகைமைத்து என்பது தெளி வாகப் புலப்படுகிறது. எனவே, இவைகளுக்கு அடிப் படையாக என்றும் அழியாத, மாருத பொருள் இருக்கிற தெனில் அது ஸ்தூலமா யில்லாமல் ஆத்மிகத் தன்மையை உடையதாகத்தான் இருக்க வேண்டும்.

இனி வேருெரு கேள்வி பிறக்கிறது. ஒவ்வொரு மனித

னிடமும் அவன் உடலுக்கும் மனதிற்கும் அப்பால் நித்திய மான ஆத்மா ஒன்று இருக்கிறதென்று வைத்துக்கொள் வோம். இந்த ஆத்மாக்கள் அனைத்திற்குள்ளும் ஒரு விதமான ஒற்றுமை யுணர்ச்சியும் அன்பும் கருணையும் இருப்பதைக் காண்கிறோம். என்னுடைய ஆத்மா உங்கள் ஆத்மாவின்பேரில் ஏன் அன்பு கொள்ளுகிறது? அதன் மூலம் ஒன்றின் அன்பு மற்றொன்றுக்குப் புலனாகிறது. எதன்மூலம் அந்த அன்பு வேலை செய்கிறது? நான் உங்கள் ஆத்மாவை எங்ஙனம் உணர முடிகிறது? நம் இருவருடைய ஆத்மாவையும் ஒன்று சேர்த்து வைப்பது எது? எனவே இந்த ஆத்மாக்கள் அனைத்தையும் ஒன்று படுத்தக்கூடிய ஓர் ஆத்மாவின் அவசியம் ஏற்படுகிறது. ஓர் ஆத்மா இந்தக் கணக்கற்ற ஆத்மாக்களில் ஊடுருவி யிருந்துகொண்டிருக்கும் காரணமாக, இத்தகைய கருணை யும் அன்பும் ஒன்றுக்கொன்று ஏற்படுகிறதென்று முடிகிறது. எல்லா ஜீவாத்மாக்களுக்குமிடையே பரவி நிற்கும் ஆத்மாவை பரமாத்மாவென்றும் கடவுள் என்றும் சொல்லுகிறார்கள். ஆத்மா ஸ்தூல வஸ்துவல்ல; அது ஆத்மிகத் தன்மையை உடையது எனவே ஸ்தூல வஸ்துக்களைக் கட்டுப்படுத்தும். விதிகள் ஆத்மாவைக் கட்டுப்படுத்தா. ஸ்தூல விதிகள் மூலம் அதை நிர்ணயம் செய்யவும் முடியாது. எனவே அது பிறப்பும் இறப்பு மற்று என்றும் மாறுதலில்லாததாய் விளங்குகிறதென்று ஏற்படுகிறது.

> नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।
> न चैनं क्लेदयन्ति आपो न शोषयति मारुतः ।
> नित्यः सर्वगतः स्थाणुः अचलोऽयं सनातनः ॥

'இதை ஆயுதங்கள் துளைக்கமாட்டா; நெருப்பு எரிக்காது: தண்ணீர் நனைக்காது, காற்று உலர்த்தாது;

என்றும் மாருமல், சர்வ வியாபியாய் அசையாமல், அசைக்க முடியாததாய், மனித ஆத்மா நித்தியமானதா யிருக்கிறது.' இவ்வாத்மா விபுவாய் எங்கும் பரவியிருக் கிறதென்று வேதாந்தமும் பகவத்கீதையும் உரைக் கின்றன. அது எங்கும் பரந்திருக்கிறதென கபிலரும் உரைத்திருக்கிருர். இந்தியாவில் சில பிரிவினர் ஆத்மா அணுப்பிரமாணமா யிருக்கிறதெனச் செப்புகின்றனர். அதாவது அது ஸ்தூலமாகத் தோன்றும்போது அணுப் பிரமாணமாகத் தோன்றுகிறதென்று அவர்கள் சொல்லு கிருர்கள். அதன் உண்மை இயல்பு விபுவென்பதை அவர் களும் ஒப்புக்கொள்ளுகிருர்கள்.

இப்பொழுது வேறு ஒரு கருத்துக்கு வருகிருேம். இது பலர் மனத்தில் ஆச்சரியத்தை உண்டுபண்ணலாம். ஆனல் ஏதாவதொரு கருத்து நம் எல்லா சம்பிரதாயங் களுக்கும் பொதுவாக இருக்கிறதெனில் அது இதுதான். ஆதலால் இதை நீங்கள் கவனித்துக் கேட்டு மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். மேல் நாட்டில் ஜெர்மன் ஆங்கில ஆராய்ச்சிக்காரர்கள் பரிணமத்தைப்பற்றிச் சொல்வதை நீங்கள் கேட்டிருப்பீர்கள். எல்லா மிருகங் களின் தன்மையும் ஒரு தகைமைத்தென்றும், அவைகளி னிடையே உள்ள வித்தியாசம் அவை தம் ஆற்றலை வெளிப்படுத்தும் தன்மையில்தா னிருக்கிறதென்றும் அவர்கள் உரைக்கிருர்கள். அதாவது மிகத் தாழ்ந்த புழுவிலிருந்து மிக உயர்ந்த மனிதன் வரை அனைத்தும் ஒன்றிலிருந்து மற்ருென்ருகப் பிறந்திருக்கின்றனவென் றும், அங்ஙனமே படிப்படியாக அவை உயர்ந்த நிலையை அடைந்து பூரணத்தைப் பெறுகின்றனவென்றும் அவர் கள் கருதுகிருர்கள். இக்கருத்து நம்மிடத்திலும் இருந்தது '**जात्यन्तरपरिणामः प्रकृत्या पूरात्**' என்று பதஞ்சலி சொல்லியிருக்கிருர். ஒரு ஜாதி உயிர் மற்ருெரு ஜாதி உயி

ராகமாறுகிறது. அதற்குப் பரிணமம் என்று பெயர். ஒன்று மற்றென்றாக மாறுதல் பரிணமம் என்று சொல்லப்படு கிறது. நாமும் ஐரோப்பிய ஆராய்ச்சிக்காரர்களும் எந்த இடத்தில் வேறுபடுகிறோம்? 'பிரக்கிருத்யாபூராத்' என்று பதஞ்சலி சொல்லி யிருக்கிறார். அதாவது இயற் கையின் நிறைவு மூலம் பரிணமம் ஏற்படுகிறதென்று அவர் உறைக்கிறார். உயிர்களுக்குள்ளிருக்கும் போட்டி யின் காரணமாயும், அவைகள் ஜோடி சேர்வதின் காரண மாயும் ஓர் உடல் மற்றொரு உடலாக மாறவேண்டிய அவசியம் ஏற்படுகிறதென மேல் நாட்டு சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். பதஞ்சலி முனிவர் உரைத்திருக்கும் கருத்து மேல் நாட்டு சாஸ்த்திரிகளின் ஆராய்ச்சி முடிவு களைக் காட்டிலும் ஆழமாயும் பொருத்தமாயும் இருப் பதைக் காணலாம் 'இயற்கையின் நிறைவு மூலம்' என்று அவர் உரைத்திருக்கிறார். 'இயற்கையின் நிறைவு மூலம்' என்றாலென்ன? மிகத் தாழ்ந்த ஒரு புழுவும் மேல் நிலைகளைப் படிப்படியாக அடைந்து கடைசியாக புத்தர் நிலையை அடைகிறதென்பதை நாம் ஒப்புக்கொள்ளு கிறோம். இத்துடன் இன்னுமொரு விஷயத்தையும் நாம் ஒப்புக்கொண்டுதா னாகவேண்டும். ஒரு யந்திரத்திற்கு எவ்வளவு சக்தி கொடுக்கிறோமோ, அவ்வளவுதான் அது வேலை செய்யும். நாம் கொடுக்கும் சக்தி எந்த ரூபத்தில் வேண்டுமானாலும் இருக்கலாம்; ஆனால் கொடுக்கும் சக்தியின் அளவுக்கேற்பத்தான் அது வேலை செய்யும் என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். அதாவது அதனுள் சக்தியின் அளவும் அதிலிருந்து வெளிவரும் சக்தியின் அளவும் ஒன்றாக விருக்கும். ஒரு பயன் உங்க ளுக்கு வேண்டுமானால், அதற்கு வேண்டிய சக்தி யனைத் தையும் ஏதாவதொரு ரூபத்தில் நீங்கள் அளித்தா லொழிய, அவ் வியந்திரம் உங்களுக்கு அப்பலனை

யளிக்காது. இக்கொள்கையை அனுசரித்து யோசனே செய்து பார்த்தால், ஒரு புழு நெடுங் காலத்திற்குப்பின் ஒரு புத்தராக ஆவதாகவிருந்தால், புத்தராகும் தன்மை யும் சக்தியும் அப்புழுவிலிருந்திருக்க வேண்டுமென்று ஏற்படுகின்றதன்றோ? தன் சக்தியை வெளிப்படுத்திய புழு புத்தராகத் தோன்றுகிறது. அங்ஙனமே ஒவ்வொரு புழுவும் தன் சக்தியை வெளிப்படுத்தாத புத்தராக விருக் கிறதென்றும் சொல்லலாம். எனவே ஒவ்வொரு ஆத்மா வுக்கும் எல்லேயற்ற சக்தி யிருக்கிறதென ஏற்படுகிறது. நம் காலடியில் ஊர்ந்துசெல்லும் மிகத் தாழ்ந்த புழுவி லிருந்து மிக உயர்ந்த தீர்க்கதரிசி வரை எல்லா உயிர் களிலும் அளவற்ற சக்தியும் தூய்மையும் பலமும் நிறைந் திருக்கின்றன. இவைகளில் ஒன்றுக்கொன்றுள்ள வித்தி யாசம் அவைகள் தம் சக்தியை வெளிப்படுத்துவதில் தானிருக்கின்றது. புழு இச்சக்தியில் மிகச் சிறிய அளவை வெளிப்படுத்துகிறது. நீங்கள் அதைவிட அதிகமாக வெளிப்படுத்தலாம்; கடவுட்டன்மைபெற்ற மகான்கள் இன்னும் அதிகமாக வெளிப்படுத்தி யிருக்கிருர்கள். இதுதான் இவர்களுக்குள்ள வித்தியாசம். ஆனல் இந்த அளவற்ற சக்தி அனைவரிடமும் இருந்துகொண்டிருக் கிறது. 'ततः क्षेत्रिकवत्' 'உழவன் தன் பூமிக்கு நீர்பாய்ச்சு வதுபோல்' என்று பதஞ்சலி சொல்லி யிருக்கிருர். தன்னுடைய பூமியில் ஓர் ஓரத்திலிருந்து அவன் நீர் பாய்ச்சிக்கொண்டு வருகிருன். தண்ணீர் தொட்டியி லிருந்து வந்துகொண்டிருக்கிறது. சிறு சிறு அடைப்புகள் தண்ணீரைப் பாயவிடாமல் தடுக்கின்றன. அவன் தண்ணீர் பாய்ச்ச விரும்பும்போது அந்த அடைப்புகளே எடுத்து விடுகிருன். உடனே தண்ணீர் தன்னியல்பினு லேயே மளமளவென்று பூமியில் பாய்கிறது. அத்தண்ணீ ருக்குப் பாயும் சக்தி யளிக்கவேண்டிய அவசியமில்லே.

அச் சக்தி தண்ணீர்த் தொட்டியில் முன்னமேயே இருக்கிறது. நாம் அனைவரும் அந்நிலையில்தானிருக்கிறோம். நம் ஒவ்வொருவருக்கும் அடிப்படையாக அளவற்ற சக்தி, பரிசுத்தம், பலம், ஆனந்தம் இருக்கின்றன. நம்முடைய சரீரமும் அதைச் சார்ந்த பாசங்களும் தடையாக விருந்து, அச்சக்தியை நாம் வெளிப்படுத்தாமல் தடுத்துக்கொண்டிருக்கின்றன.

நமது சரீரம் அதிக சூட்சுமமானதாக ஆக, தமோ குணம் ரஜோகுணமாக மாறி, ரஜோகுணம் சத்துவ குணமாக மாற மாற, ஆத்மிக குணங்களாகிய தூய்மையும் சக்தியும் அதிகமாக வெளிப்படும். இது காரணமாகத் தான் நமது முன்னோர்கள் உணவு விஷயங்களைப்பற்றி மிக ஜாக்கிரதையாக விருந்திருக்கிறார்கள். விவாக சம்பந்தமான விஷயங்களில் எங்ஙனம் நமது பழைய உயர்ந்த கருத்துக்கள் முற்றிலும் மறைந்து விட்டனவோ, அங்ஙனமே நம் உணவு சம்பந்தமான பழக்க வழக்கங்களிலும் முன்னிருந்த உயர்ந்த கருத்துக்கள் மறைந்து விட்டதாகச் சொல்லலாம். வேறு சந்தர்ப்பம் கிடைத்தால் இதைப்பற்றி விவரமாகப் பேசுகிறேன். ஆனால் விவாகத்தைப்பற்றி நாம் கொண்டிருக்கும் கருத்துக்கள்தாம் மனிதவர்க்கத்திற்கு உண்மையாக நாகரிகம் அளிக்கக் கூடியவை யென்பதை மாத்திரம் இப்பொழுது சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தன் மிருக விச்சையை அனுசரித்து தான் விரும்பும் நபரை மனைவி அல்லது கணவனாக ஏற்றுக்கொள்ளலாமெனில், அத்தகைய மணத்தின் பயனாகப் பிறக்கும் குழந்தைகள் வெறும் காம விகாரங்களாகத்தானிருக்கும். ஒவ்வொரு தேசத்திலும் மனிதன் ஒரு பக்கத்தில் இத்தகைய மிருகத்தனமான குழந்தைகளை உண்டாக்கிக் கொண்டிருக்கிறான்; மற்றொரு பக்கத்தில் இவைகளை

அடக்கி ஆள போலீஸ் படையை அதிகம் செய்துகொண் டிருக்கிறான். இங்ஙனம் நாமே ஒரு பிரச்சினையை உண்டாக்கிக்கொண்டு, பின் அதைத் தீர்ப்பதற்கு வழி தேடுவது புத்திசாலித்தனத்திற்கு அழகல்ல. இவ்விதமான கெடுதல்கள் உண்டாகாமல் பார்த்துக் கொள்வதே மனிதன் அறிவுக்கேற்ற செயலாகும். நீங்கள் சமூகத்தில் இருக்கும் வரை, உங்கள் மணம் சமூகத்திலிருப்பவர்கள் அனைவரையும் பாதிக்காமலிராது. எனவே நீங்கள் யாரை மணம் செய்துகொள்ளலாமென்று சட்டம் செய்ய சமூகத் திற்கு அதிகாரமிருக்கிறது. இதுபோன்ற உயர்ந்த கருத் துக்கள் நமது மண விதிகளுக்கு அடிப்படையாக விருக் கின்றன. காம போகத்தின் காரணமாகப் பிறக்கும் குழந் தையை ஓர் ஆரியனாகக் கருதக்கூடாதென மனு உரைத் திருக்கிறார் என்பதையும் உங்களுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். வேத முறைகளின்படி பிறந்து, வாழ்ந்து, இறப்பவனே ஆரியனாவான். ஒவ்வொரு நாட்டிலும் காலம் செல்லச் செல்ல இம்மாதிரி குழந்தைகள் மிகக் குறைவாகவே பிறக்கிறார்கள். அதன் பயனாக நாம் கலி காலம் என்று உரைக்கிற இவ்வளவு கெடுதல்கள் உலகில் நிலவி வருகின்றன. இந்த உயர்ந்த லட்சியங்கள் அனைத் தையும் நாம் இழந்துவிட்டோம். இக்கருத்துக்களை இக்காலத்தில் முற்றும் பின்பற்றுவது அசாத்தியமாக விருக்கலாம். தற்காலத்தில் அவர்களுடைய உண்மைத் தத்துவங்கள் பெரும்பாலும் மறைந்துபோயிருக்கலாம். தற்காலத் தாய் தந்தையர்களும் முன்போல் கல்வி யறிவு பெற்றவர்களாகவில்லையென்பது வருந்தத் தக்க விஷயம். மக்களும் முன்போல் ஒருவருக்கொருவர் அன்புடையவர் களாக இல்லை. இக்கருத்துக்கள் தற்காலத்தில் தவறுத லான முறைகளில் அனுஷ்டானம் செய்யப்படலாம்; ஆனால் அக்கொள்கைகள் சரியானவையென்பதை நாம்

ஒப்புக்கொள்ள வேண்டும். நாம் அனுஷ்டானம் செய்த முறைகளில் தவறுதலிருந்தால் அதற்காக அக்கொள்கையை விட்டுவிடுவது நியாயமாகுமா? அவைகளை இன்னும் நல்ல முறையில் அனுஷ்டானம் செய்ய நாம் பிரயத்தனம் செய்யவேண்டும். இம்மாதிரியே உணவைப் பற்றிய விஷயமும்; அது சம்பந்தமாக இப்பொழுது அனுஷ்டித்து வரும் முறை மிக மிக மோசமானது. ஆனால் நாம் உண்ணும் உணவு பரிசுத்தமானதாகவிருக்க வேண்டுமென்ற உயர்ந்த கொள்கையை அது பாதிப்பதில்லை. அக்கொள்கை நிரந்தரமாகப் பின்பற்ற வேண்டியதொன்றாகும். அதைச் சரியான முறையில் அனுஷ்டிக்க முயற்சி செய்வீர்களாக.

ஆத்மா அளவற்ற சக்தியுடையதென்ற தத்துவத்தை நமது நாட்டிலுள்ள எல்லா சம்பிரதாயங்களும் ஏற்றுக்கொண்டாக வேண்டும். ஆனால் துவைத வாதிகள் ஆத்மா கெட்ட கர்மங்களின் காரணமாக சங்குசிதமாய் விட்டதாக, அதாவது அதனுடைய சக்தியனைத்தும் கூம்பிவிட்டதாகவும், நற்கருமங்களின் பயனாக அது மறுபடியும் மலருமென்றும் சொல்லுகிறார்கள். ஆத்மா கூம்புவதாகவும் மலர்வதாகவும் தோன்றுகிறதே யொழிய, அது உண்மையில் இம்மாறுதல்களை அடைவதில்லை யென்று அத்வைதிகள் கூறுகிறார்கள். இதுதான் அவ்விரு சம்பிரதாயங்களுக்குள்ளிருக்கும் வித்தியாசம். ஆத்மா தன்னியல்பிலேயே சர்வ சக்தி வாய்ந்ததாக விருக்கிறதென்பதை அனைவரும் ஒப்புக் கொள்ளுகிறார்கள். புறத்தே யிருந்து எந்த விதமான சக்தியும் பெறுவதாக நாம் நம்புவதில்லை. நம்முடைய வேதங்கள்கூட நமக்குப் புறத்தே யிருக்கும் ஒரு சக்தியால் உண்டானவையென்று நாம் கருதுவதில்லை. நம் உள்ளத்திலிருக்கும் எல்லையற்ற சக்தியிலிருந்தே அவை தோன்றியிருக்கின்றன. ஒவ்வொரு ஆத்மாவிலும்

குடிகொண்டிருக்கும் உண்மைகளே வேதங்கள் எனப்படுவன. எறும்பிலிருந்து கடவுள் வரை, அனைவர் ஆத்மாவிலும் வேதங்கள் இருக்கின்றன. எறும்பு மேற்சென்று, கடவுள் தன்மையை அடையும்போது, அதனுள்ளத்திலிருக்கும் வேதங்கள் வெளிப்படும். இம்மகத்தான கருத்தை நாம் அனைவரும் உணர்ந்து கொள்ளவேண்டும். சர்வ சக்திகளும் நம் முன்னே யிருக்கின்றன. நம்முடைய கதி மோட்சம் நம் கைகளிலேயே இருக்கின்றது. நம்முடைய ஆத்மா சுருங்கி விட்டது, அல்லது மாயையாகிய திரையால் மறைப்பட்டிருக்கிறது என்று என்ன வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளுங்கள். ஆனல் மக்களில் கடையானவர்கள் உள்ளத்திலும் அம்மகத்தான சக்தியிருக்கிறது; அவர்களும் அந்த உன்னதமான புத்தர் நிலையை அடைய முடியுமென்பதை மாத்திரம் எந்தவிதமான சந்தேகமும் இன்றி நம்புங்கள். இதுதான் ஆத்மாவைப்பற்றிய மகத்தான தத்துவமாகும்.

இதற்குமேல் ஒரு பெரிய சண்டை வருகிறது. உடலும் மனதும் ஆறு போல் மாறிக்கொண்டிருக்கும் வஸ்துக்களாக விருக்கின்றனவென்பதை பௌத்தர்களும் ஒப்புக்கொள்கிருர்கள். ஆனல் அதன் காரணமாக ஆத்மா வொன்று இருக்கிறதென்ற முடிவுக்கு வரவேண்டிய அவசியமில்லை யென்று அவர்கள் கூறுகிருர்கள். என்றும் மாறி ஓடிக்கொண்டிருக்கும் தண்ணீர் ஓட்டம் போலுள்ள உடலும் மனதும் தம் சேர்க்கையின் காரணமாகவே ஒற்றுமை யுணர்ச்சி உண்டாகலாமென்றும், இதுவே போதுமான சமாதானமாக விருக்க, இதற்காக ஆத்மாவொன்று உண்டென்று ஒப்புக்கொள்ள வேண்டிய அவசியமில்லையென்றும் அவர்கள் சொல்லுகிருர்கள். ஆத்மாவும் பரமாத்மாவும்தான் உண்மையான வஸ்துக்கள், உடலும் மனதும் அவைகளைச் சார்ந்திருப்பவை

யென்று சொன்னுல், எவரும் கண்டிராத இவ்வஸ்து இருக்கிறதென்று சொல்வதற்கு வேறு என்ன சாட்சியம் இருக்கிறதென அவர்கள் கேட்கிருர்கள். எனவே வாழ்க்கை யென்பது சமுத்திரத்தில் ஒன்றன்பின் ஒன்ருகத் தோன்றிக் கொண்டிருக்கும் அலைகள் போலிருக் கிறது. ஓர் அலை மறைந்தால் மற்ருேர் அலை கிளம்பு கிறது. இங்ஙனம் மனித வாழ்க்கை தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. இந்த அலைகள் ஓய்வது தான் நிர்வாண மெனப்படுமென்று பௌத்தர்கள் வாதிக்கிருர் கள். இவ்வாதத்தைத் துவைதிகள் எதிர்க்க முடியாது. ஒரு கடவுள் எங்கும் பரவி அந்தர்யாமியாக விருப்ப துடன், கைகால்களுடன் ஒரு ரூபத்திலும் இருந்து கொண்டு குயவன் பானையை உண்டாக்குவதுபோல் உலகை சிருஷ்டி செய்கிருரென்பதை புத்தி பூர்வமாக ஒப்புக்கொள்ளக் கூடியதாக வில்லை யென்று பௌத்தர் கள் கூறுகிருர்கள். இந்தத் துக்கம் நிறைந்த உலகம் கடவுளால் உண்டாக்கப்பட்டதெனில், அத்தகைய கடவுளைத் தாங்கள் ஏற்றுக்கொள்ள முடியாதென்கிருர் கள். கடவுளைப்பற்றித் துவைதிகள் கொண்டிருக்கும் கருத்தை புத்தி பூர்வமாக ஏற்றுக்கொள்ள முடியாதென் பதை நீங்கள் அறிவீர்கள். எனவே கடவுள் ஒரு ரூபத் துடன் இருக்கிருர் என்ற கொள்கை வாதத்தில் தோற்கடிக்கப்பட்டது.

உண்மை, உண்மையை மாத்திரமே பின்பற்ற வேண்டுமென்று, அத்வைதி சொல்லுகிருன்.

सत्यमेव जयते नानृतम् ।
सत्येनैव पन्था विततो देवयानः ॥

சத்தியமே ஜயம் பெறும். சத்தியத்தின் மூலமே பரம்பொருளையடையும் மார்க்கம் இருக்கிறது என்று

அவன் உரைக்கிருன். எல்லோரும் உண்மையைப் பின் பற்றுவதாகவே சொல்லிக்கொள்ளுகிருர்கள். ஆனல் தன்னிலும் பலவீனமாக விருப்பவர்களை அடக்குவதற் காகவே இது பெரும்பாலும் உபயோகப் படுத்தப்படு கிறது. நீங்கள் ரூபக்கடவுளை வழிபடும் துவைதியாக விருக்கலாம். ஆனல் ஒரு விக்ரகத்தை வைத்து வழிபடும் ஓர் அப்பாவி மனிதனைக் கண்டால், நீங்கள் மிக புத்தி பூர்வமாக விருப்பதாக நினைத்துக் கொண்டு, அவனிடம் வாதித்து, அவன் மனதில் குழப்பத்தை யுண்டாக்குவீர் கள். ஆனல் அவன் திரும்பி நீங்கள் ஆராதனை செய்யும் ரூபக்கடவுள் என்ற கருத்தைத் தவறென்று ரூபித்தால் உங்கள் கதி யென்னவாகும்? நீங்கள் புத்தி பூர்வமாகச் செய்யத்தக்க வாத மொன்றுமின்றி, நம்பிக்கைதான் முக்கியமென்று பதில் சொல்லுவீர்கள்; அல்லது உங்க ளுக்கு விரோதமாக வாதம் செய்பவர்கள் நாஸ்திகர்கள் என்று உரைப்பீர்கள். தர்க்கத்தில் தோற்றுப் போனல் மற்ற கட்சியை நாஸ்திகர்கள் என்று சொல்லித் தங்களைக் காப்பாற்றிக் கொள்ள முயற்சி செய்வது சகஜம். நீங்கள் புத்தி பூர்வமாக விருக்க விரும்பினல், இறுதிவரை புத்தி பூர்வமாகவே இருங்கள். நீங்கள் மற்றவர்களிடம் வாதித்து அவர்கள் நம்பிக்கையைக் குலைக்க விரும்பினல், மற்றவர்களுக்கும் உங்களிடம் அவ்விதமே செய்ய உரிமை கொடுங்கள். ரூபக்கடவுளை ஸ்தாபிப்பது கடினம். அதை மறுப்பது எளிது. அவர் இருக்கிருர் என்று ரூபிப்பதற்கு சாட்சியங்கள் இல்லை. அத்தகைய ஒருவர் இல்லையென்று மறுப்பதற்குப் பல வாதங்களிலிருக்கின்றன. நீங்கள் நினைக்கும் குணங்களோடு ஒரு கடவுள் இருக்கிருரென் றும், அத்துடன் எண்ணிறந்த ஆத்மாக்கள் தனித்தனி யாக இருக்கின்றனவென்றும் நீங்கள் எப்படி ரூபிப்பீர் கள்? உங்களுக்குத் தனித்தன்மை இருக்கிறதென்று

எப்படிச் சொல்ல முடியும்? நீங்கள் உடம்பென்ற முறையில் உங்களுக்குத் தனித் தன்மை † இல்லை யென்பதைப் பழங்காலத்துப் பௌத்தர்களைவிட நீங்கள் நன்கு உணர்வீர்கள். நேற்று சூரியனிடத்திலிருந்த வஸ்து இன்று உங்கள் சரீரத்திலிருக்கலாம்; அது நாளை ஒரு செடியின் தண்டைப் போய்ச் சேரலாம். இங்ஙனம் உடல் ஓயாமல் மாறிக்கொண்டிருக்கும்போது உங்கள் தனித்தன்மை எங்கிருக்கிறது? மனதும் இவ்வண்ணம் தானிருக்கிறது. நீங்கள் இன்று ஓர் எண்ணத்தை நினைக்கிறீர்கள், நாளை வேறென்றை நினைக்கிறீர்கள். நீங்கள் குழந்தைகளாக விருந்தபோது நினைத்த எண்ணங்களை இப்பொழுது நினைப்பதில்லை. கிழவர்கள், தாங்கள் இளைஞர்களாக விருந்தபோது நினைத்த நினைவுகளைப் பிற்காலத்தில் நினைப்பதில்லை. அங்ஙனமிருக்கும் போது உங்கள் தனித்தன்மை எங்கிருக்கிறது? உங்களுக்கிருக்கும் பிரக்ஞை அல்லது உணர்வுதான் அல்லது அஹங்காரம் தான் உங்கள் தனித்தன்மை யென்று நீங்கள் கூற முன்வருவீர்களானல், பெருந்தவறு செய்தவர்களாவீர்கள். ஏனெனில் நம் வாழ்க்கையில் நாம் பிரக்ஞையுடனிருக்கும் பாகம் மிகச் சிறியது. நான் உங்களுடன் இப்பொழுது பேசிக்கொண்டிருக்கிறேன். நான் பேசிக்கொண்டிருக்கும் போது நான் உணராமலே என் உடம்பிலிருக்கும் இருதயம், சுவாசப்பை, இரைப்பை முதலிய உறுப்புக்கள் அனைத்தும் வேலை செய்து கொண்டிருக்கின்றன. பிரக்ஞை தான் - அவை இருப்பதற்கு முடிவான சாட்சியமெனில், அவைகளைப்பற்றி எனக்கு உணர்வில்லாததால், அவை இல்லை யென்றுதான் சொல்ல வேண்டும். எனவே ரூபக் கடவுளைப்பற்றிய கொள்கைகள் உங்களை எங்கு கொண்டு

---

† Individuality

போய் விடுகின்றன வென்று பார்த்தீர்களா? இத்தகைய கடவுளை நீங்கள் எப்படி ரூபிக்க முடியும்?

இத்தகைய கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பது புத்தி பூர்வமாக இல்லையென்பது ஒருபுற மிருக்க, இக் கருத்தைப் பரப்புவது ஒழுக்கத்திற்கும் ஆண்மைக்கும் விரோதமானதென்று பௌத்தர்கள் சொல்லுகிறார்கள். மனிதனுக்குப் புறத்திலிருந்து யாதொரு உதவியும் வருவதில்லை யென்பது உண்மையாக விருக்க, ஏன் அவனைப் புற உதவி நாடும்படி செய்து கோழையாக்க வேண்டு மென்று அவர்கள் கேட்கிறார்கள். இவ்வுலகம் மனிதனால் அவன் நினைவுகளின் மூலம் உண்டாக்கப்பட்டது. அங்ஙன மிருக்க எவரும் பார்த்திராத அல்லது அறிந்திராத ஒரு கடவுளை ஏன் புறத்தே யிருப்பதாகக் கற்பனை செய்து, அவரை நம்பி வாழும்படி செய்ய வேண்டும்? இக்கருத்தின் மூலம் உங்களை ஏன் கோழைகளாக்கிக் கொள்ளுகிறீர்கள்? மனிதனுடைய உயர்ந்த நிலையென்பது நாய் போல் ஒருவரிடம் வணங்கி நிற்பதுதான் என்று ஏன் உங்கள் குழந்தைகளுக்குக் கற்பிக்கிறீர்கள்? உங்களைப் பலவீனர்களென்றும் பாவிகளென்றும் சொல்லிக் கொண்டு ஏன் அக் கற்பனைக் கடவுளின் முன் கெஞ்சிக் கூத்தாடுகிறீர்கள்? இங்ஙனம் உரைப்பதன் மூலம், நீங்கள் பொய் உரைப்பதைத் தவிர உங்கள் குழந்தைகளுக்கு மகத்தான கெடுதல்களையும் செய்கிறீர்கள் என்று பௌத்தர்கள் சொல்லுகிறார்கள். ஒவ்வொருவரும் தங்கள் உலகைத் தங்கள் எண்ணங்களால் உண்டாக்கிக் கொள்ளுகிறார்கள். நீங்கள் எங்ஙனம் நினைக்கிறீர்களோ அங்ஙனம் ஆகிறீர்கள். புத்த பகவானுடைய முதல் வார்த்தைகளே, 'நீங்கள் நினைக்கிறபடி ஆகிறீர்கள். நீங்கள் எண்ணுகிறபடி ஆகலாம்' என்பவைதான். இதை உண்மையென்று நீங்கள் ஒப்புக்கொண்டால்,

நீங்கள் சக்தியற்றவர்களென்றும், உங்களுக்கு வெளியி லிருந்து, அதாவது ஆகாசத்திற்கு மேலிருக்கும், ஒருவர் வந்து உங்களுக்கு உதவி செய்யும் வரை நீங்கள் எதுவும் செய்ய முடியாதென்ற கருத்தை உங்களுக்குள்ளேயே சொல்லிக்கொள்வதை விட்டு விடுங்கள். இங்ஙனம் நீங்கள் நினைக்க நினைக்க அதிக பலவீனமாவீர்கள். ‘ நாங்கள் பாவிகள், பரிசுத்தமற்றவர்கள் ! ஏ கடவுளே ; எங்களைப் பரிசுத்தமாக்குவீர் ’ என்று நினைக்க நினைக்க, நீங்கள் தாழ்ந்துகொண்டே போவீர்கள். நம் சமூகத்திலிருக்கும் நூற்றுக்குத் தொண்ணூறு பங்கு குறைகள் நாம் ஒரு ரூபக் கடவுளை இங்ஙனம் வழிபடு வதால் ஏற்படுபவை யென்று பௌத்தர்கள் நினைக் கிறார்கள். ஒரு நாய் போலிருப்பதுதானா மனித வாழ்க் கையின் உயர்ந்த லட்சியம் ? வைகுந்தத்திற்குச் சென்று அங்கு கடவுள் முன்னிலையில் சாசுவதமாகக் கைகட்டி வாய்புதைத்து நிற்பதுதான் உங்கள் வாழ்க்கையின் உயர்ந்த நோக்கமெனில், அதை விடத் தற்கொலை செய்து கொள்ளுவது நல்லதென்று வைஷ்ணவனைப் பார்த்து பௌத்தன் கேட்கிறான். அத்வைதக் கருத்துக்கள் ஒழுங் கீனத்தை உண்டாக்குமென்று சொல்லப்படும் இக் காலத்தில், மற்ற கட்சியார்கள் துவைதத்தைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதை நீங்கள் அறியும் பொருட்டு, பௌத்தர்களுடைய வாதங்கள் சிலவற்றை உங்களுக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறேன். இரண்டு கட்சிகளைப் பற்றியும் தெரிந்துகொள்ள வேண்டிய வைகளை நாம் தைரியமாய்த் தெரிந்து கொள்ளுவோமாக.

ரூபக் கடவுளை சித்தாந்தம் செய்ய முடியாதென்பதை நாம் கண்டோம். ஒரு குயவன் பானையை உண்டாக்கு வதுபோல் ஒரு கடவுள் இவ்வுலகை உண்டாக்கி யிருக் கிறார் என்று சொன்னால், தற்காலத்தில் அதை எவரும்

ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இவ்வுலகை ஆக்கியதாக நீங்கள் சொல்லும் இந்த ரூபக் கடவுளை இரந்து உங்கள் ஆயுள் முழுவதும் அழுதுகொண்டிருக்கிறீர்களே, அவர் எப்பொழுதாவது உங்களுக்கு உதவி யளித்ததுண்டா வென்று, நற்கால விஞ்ஞான சாஸ்திரம் கேட்கிறது. நீங்கள் பெற்ற உதவியெல்லாம், உங்கள் உழைப்பின் காரணமாகவே ஏற்பட்டதென்றும், அழுவதிலும், கெஞ்சு வதிலும் நீங்கள் அதிகமான சக்தியை வீணக்காம லிருந்தால் இன்னும் அதிகமான பயனை நீங்கள் பெற்றி ருக்கலாமென்றும் அது ரூபிக்கிறது. தவிர ரூபக் கடவு ளுடன் புரோகிதர்களும் அவர்களின் கொடுமைகளும் இருந்து வந்திருக்கின்றன வென்பதும் நமக்குத் தெரியும். ரூபக்கடவுளின் வழிபாடு இருக்கும் இடங்களிலெல்லாம் புரோகிதர்களின் கொடுமையும் இருந்து வந்திருக்கிறது. புரோகிதர்களின் கொடுமையை ஒழிக்க வேண்டுமானல், ரூபக் கடவுள் என்ற கருத்தை யொழிப்பதன் மூலம்தான் அது இயலும். மனிதன் ஒருபுறச் சக்தியை சிருஷ்டித்து அதற்காகப் பயந்து கொண்டிருக்கும் வரை, அதனிடத்தில் அருள் அல்லது சலுகை பெற்றதாகக் கருதப்படும் சில புரோகிதர்களும், பூசாரிகளும் இருக்கத்தான் செய்வார் கள். இவர்கள் இருக்கும் வரை, பாவம் ஏழை மக்கள் இவர்களிடம் சென்று தெய்வத்தினிடம் தங்களுக்காகப் பரிந்து பேசும்படி கேட்கத்தான் செய்வார்கள். நீங்கள் இப்பொழுது பிராம்மணனை ஒழித்து விடலாம்; ஆனல் ரூபக் கடவுளென்ற கருத்திருக்கும் வரை வேறு ஒரு கூட்டத்தார் அவர்கள் இடத்தைப் பெற்று இன்னும் மோசமாக நடந்துகொள்ள நேரிடலாம். எனவே ரூபக் கடவுளின் ஆராதனை யிருக்கும் வரை புரோகிதர்களும் பூசாரிகளும் இருந்தே தீருவார்கள்; புரோகிதர்களும் பூசாரிகளும் இருக்கும் மவரை தத்தின் பேரில் மக்களைச்

சுரண்டுதலும், இதர கொடுமைகளும் இருந்தே தீரும். இதன் காரணமாக உயர்ந்ததொரு ஒழுக்க முறை சமூகத்தில் இருக்க முடியாமல் போய்விடுகிறது.

பௌத்தன் மீண்டும் துவைதியைப் பார்த்துச் சொல்லுகிறான் : எல்லாம் கர்மத்தின் பயனாக ஏற்பட்ட தென்று சொல்லுகிறீர்கள். அது புத்தி பூர்வமாக ஒப்புக் கொள்ளக்கூடியதாக விருக்கிறது. எண்ணிறந்த ஆத் மாக்கள் இருக்கின்றனவென்றும், அவை பிறப்பு இறப் பின்றி இருக்கின்றனவென்றும் நீங்கள் உரைப்பதும் சரியே. கர்ம விதியைப்பற்றி உங்களுக்கிருக்கும் நம்பிக் கையும் சரிதான். காரணமின்றிக் காரியம் இருக்க முடியாது. தற்கால நிலைமைக்குக் காரணம் இறந்த காலத்திலிருக்கிறது. நிகழ் காலம் எதிர்காலத்திற்குக் காரணமாகவிருக்கிறது. கர்மம் ஜடமான தென்றும் அதில் சைதன்யமில்லையென்றும் சொல்லுகிறீர்கள். அப்படி யானால் ஜடவஸ்து சைதன்யமின்றிப் பயனையளிக்காதே. ஒரு விதையை ஊன்றித் தண்ணீர் ஊற்றினால், செடி முளைக்கிறது. அதற்குக் காரணம் விதையில் சைதன்ய மிருக்கிறதென்று சொல்லலாம். அதுபோல் மனித ஆத்மா தன்னிடத்திலேயே சைதன்யத்தைப் பெற்றிருக்கிற தெனில், ஒரு கடவுள் அதற்குமேல் இருக்கிறார் என்று நினைக்கவேண்டிய அவசியமென்ன ? ஜைனர்கள் இவ் விதம் நம்புகிறார்கள் ; அதாவது ஆத்மா விருக்கிறதென அவர்கள் நம்புகிறார்கள், ஆனால் ஒரு கடவுள் இருப்பதாக அவர்கள் நம்புகிறதில்லை. இங்ஙனம் ஆராய்ச்சி செய்து பார்த்தால் அத்வைதிகளை அன்றி மற்றவர்களைப் பார்த்து உங்கள் கொள்கை புத்திபூர்வமாகவில்லை அல்லது ஒழுக் கத்தை அளிக்கக் கூடியதாகவில்லையென்று குறை சொல்லும் துவைதிகளுக்குத் தங்களிடம் குறைகள் எவ்வளவிருக்கின்றனவென்று புலப்படும். அத்வைதம்

ஒழுக்கத்தை அளிக்கக்கூடியதாகவில்லையென்று சொல்லு பவர்கள் துவைதசம்பிரதாயங்களில் செய்யப்படும் அக்கிர மங்களை ஆராய்ந்து பார்க்கட்டும். அக்கிரமம் செய்ப வர்கள் அத்வைதம், துவைதம் முதலிய எல்லாப் பிரிவு களிலும்தான் உண்டு. ஆனல் துவைதப் பிரிவுகளில் அக்கிரமம் அதிகமென பொதுவாகச் சொல்லலாம். அதற்குக் காரணம், அத்வைதப் பிரிவினர் சாதாரணமாக அதிகம் கற்றவர்களாகவும் புத்தி கூர்மையுடையவர்க ளாயும் இருக்கிருர்கள். ஆதலால் அவர்களைச் சுலபமாக பயப்படுத்தவோ ஏமாற்றவோ முடியாது. பௌத்தர்க ளுடைய வாதங்களுக்கு துவைதிகள் சரியான மறுப் பளிக்க முடியாதென்று இப்பொழுது தெளிவாகத் தென் படுகிறது. இவர்கள் வேண்டுமானல் தங்களுக்கு ஆதார மாக வேதங்களை மேற்கோளாகச் சொல்லலாம். அதற்குப் பதிலாக பௌத்தர்கள் வேதங்களை மறுத்து, திரிபிடகங் களிலிருந்து மேற்கோள்கள் எடுத்துரைக்கலாம். அத் துடன் அவர்கள் 'எங்கள் திரிபிடகங்கள் தான் உண்மை யான வேதங்கள், உங்கள் வேதங்கள் பிராம்மணப் புரோ கிதர்களால் உங்களை ஏமாற்ற உண்டாக்கப் பட்டவை' யென்றுகூடச் சொல்லலாம். எனவே இவர்களின் வாதங் களிலிருந்து மீறி வர வழி யிருக்கின்றதாவென்று ஆராய்ச்சி செய்யவேண்டியது அவசியமாயிருக்கிறது.

அதற்கு அத்வைதம் வழி காண்பிக்கிறது. பௌத்தர் களின் தத்துவார்த்தமான வாதத்தை முதலில் எடுத்துக் கொள்வோம். அதாவது நமது உடலும் மனதும் ஒரு நதியிலிருக்கும் நீரோட்டம்போல் மாறிக்கொண்டிருக்கும் வஸ்துக்களைக் கொண்டிருப்பினும், தான் ஒன்று என்ற ஒற்றுமைத் தன்மையை உடையதாக யிருக்கின்றன. உடலுக்கும் மனத்திற்கும் அடிப்படையாக ஆத்மா வொன்றிருப்பதே இதற்குக் காரணமென்று துவைதிகள்

உரைத்தார்கள். வஸ்துக்களின் சேர்க்கையே இக் குணத்தை அதாவது இவ்வொற்றுமை யுணர்ச்சியை உண்டாக்கக்கூடும்; எனவே ஆத்மா, பரமாத்மா என்ற இவை தனியாக இருக்கின்றன வென்று வருவித்துக் கொள்ளவேண்டிய அவசியமில்லை யென்று பௌத்தர்கள் தர்க்கித்தார்கள். இதற்குத் துவைதிகள் சரியான மறுமொழிகூற முடியவில்லை. ஆனல் அத்வைதிகள் இவ் வாதத்தை வேறு விதமாக எதிர்த்தார்கள். கயிற்றைப் பாம்பாகக் கருதிய பழைய உதாரணம் உங்களுக்குத் தெரிந்திருக்கும். அதாவது பாம்பைக் காணும்போது நீங்கள் கயிற்றைக் காண்பதில்லை. கயிறு முற்றிலும் மறைந்து விடுகிறது. வஸ்து குணங்கள் என்ற பாகுபாடு தத்துவ ஆராய்ச்சிக்காரர்களின் மூளையில் இருக்கிறதேயொழிய அவை வெளியில் அப்பொருட்களில் இல்லை. சாதாரண மனிதன் மேல்போக்கான குணங்களைப் பார்க்கிருன். யோகி அடிப் படையான வஸ்துவைப் பார்க்கிருன். ஆனல் இரண்டும் ஒரே சமயத்தில் காணப்படுவதில்லை. எனவே பௌத்தர்கள் வஸ்து குணங்கள் என்று செய்யும் தர்க்கம் உண்மையில் இல்லாத ஒரு தப்பர்த்தத்தை ஆதாரமாகக் கொண்டு செய்யப்பட்டது என்று முடிவாகிறது. அடிப்படையாக விருக்கும் வஸ்து (அதாவது ஆத்மா) குணமற்றதெனில், அத்தகைய வஸ்து ஒன்றுதா னிருக்க முடியும். ஆத்மாவுக்கு குணமில்லாவிடில், இரண்டு ஆத்மாக்கள் இருக்க முடியாது; ஏனெனில் குண வேறுபாடுகள் தான் ஆத்மாவுக்கு ஆத்மா வித்தியாசத்தை உண்டு பண்ணுகின்றன. குணமே யில்லாவிடில் வித்தியாசமேது? ஆதலால் இரண்டு ஆத்மாக்களிருக்க முடியாது. ஒரே ஒரு தனி ஆத்மாதானிருக்கிறதென்று ஏற்படுகிறது. தர்க்கரீதியாகப் பார்க்கும்போது துவைதிகள் வருவித்துக் கொள்

ளும் பரமாத்மா அவசியமில்லாமல் போய் விடுகிறது. இந்த ஒன்றே பரமாத்மாவாகவும் ஜீவாத்மாவாகவும் இருக்கிறது; இன்னும் பலவாருகவும் அழைக்கப்படு கிறது. துவைதிகளை நான் கேட்கிறேன்: ஆத்மா எங்கும் பரவியது, சர்வ வல்லமை யுடையது என்றெல்லாம் சொல்லுகிறீர்களே; சர்வ வல்லமையுடைய வஸ்துக்கள் இரண்டு எப்படி இருக்க முடியும்? ஒன்றுக்கு மேல் இருக்க முடியாதன்ருே? அந்த ஒன்றுதான் நமது எல்லை யற்ற ஆத்மா. மற்ற அனைத்தும் அதன் தோற்றங்கள். இந்த இடத்தில் பௌத்தன் நின்று விடுகிருன். ஆனல் அத்வைதியின் தத்துவ விசாரணை இத்துடன் நிற்பதில்லை. அத்வைதி மற்றவர்களுடைய வாதங்களைக் கண்டிப்ப துடன் நிற்பதில்லை; அவன் தன்னுடைய கொள்கையை, சித்தாந்தமும் செய்கிருன். அத்வைதி ஒருவன்தான் வெறும் வாதத்துடனும், சாஸ்திரங்களிலிருந்து மேற் கோள்கள் காட்டுவதுடனும் நிற்பதில்லை. முட்ட முடிய அவன் புத்தி பூர்வமாக ஆராய்ச்சி செய்கிருன். அத்வைதி சொல்லுகிருன்: இப்பிரபஞ்சத்தில் அனைத்தும் நகர்ந்து கொண்டே யிருக்கின்றன. வியஷ்டியில், அதாவது ஸ்தூல உலகில் நீங்கள், நான், இம்மேஜை முதலிய அனை வரும் தொடர்ந்து மாறிக் கொண்டிருக்கின்ருேம். ஜகத் தின் தன்மையே இங்ஙனம் தொடர்ந்து மாறிக் கொண் டிருப்பதாம். இங்ஙனம் மாறிக்கொண்டிருக்கும் நிலையில் ஒரு தனித்தன்மை யிருக்கமுடியுமா? முடியாது. ஏனெனில் தனித்தன்மை யென்ருலே என்றும் மாரும லிருக்கும் ஒருவிதத் தன்மையைப் பெற்றிருத்தல் என்று பொருள். சதா மாறிக் கொண்டிருப்பதும் தனித்தன்மை யும், ஒன்றுக்கொன்று ஒவ்வாப் பொருள்களாம் ஓய்வில் லாமல் மாறிக் கொண்டிருக்கும் நம் சிறிய உலகில் தனித் தன்மை யென்பது கிடையாது. எண்ணங்கள், உணர்ச்சி

கள், மனம், உடல், மக்கள், மிருகங்கள் அனைத்தும் இடைவிடாமல் சுழன்று கொண்டிருக்கின்றன. ஆனால் பிரபஞ்சம் அனைத்தையும் ஒன்றாக எடுத்துக்கொண்டால் அது நகர முடியுமா அல்லது மாற முடியுமா ? முடியாது. நகருதல் என்பதொன்றை வேறு ஒரு வஸ்துவின் வேகத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தலின் மூலம்தான் அறிவது இயலும். பிரபஞ்சம் அனைத்தையும் ஒன்றாக எடுத்துக் கொண்டால் அதை ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு வேறு பொருள் ஏதுமில்லை. எனவே அது ஒன்றுதான் மாறாத் தன்மையை உடையது. ஆதலால் அத்துடன் பூரணமாக ஐக்கியமானவர்களுக்குத்தான், அதாவது நானே சர்வமும் என்ற உணர்ச்சி பெற்றவர்களுக்குத்தான் தனித்தன்மையென்பதுண்டு. இரண்டு வஸ்துக்கள் இருக்கும் வரை பயம் மனதை விட்டகலாதென்று வேதாந்திகள் உரைக்கிறார்கள். சர்வமும் ஒன்றாகி, பிறிதொன்றில்லாத தனி நிலையை அடைந்தால்தான், சாவு, சம்சாரம் முதலிய அனைத்தும் மறந்து அச்சமற்ற தன்மையைப் பெறுவோம். பிரபஞ்சமனைத்துடனும் ஐக்கியத்தன்மை யடையும் போதுதான் நாம் உண்மையான அமரத்துவமும் அழியாத் தன்மையும் பெறுகிறோம். அவ்வொப்பற்ற நிலையில் நீங்கள் எதற்கும் அஞ்சவேண்டியதுமில்லை, அஞ்ச வருவதுமில்லை. பிரபஞ்சமென்று நாம் இங்கு குறிப்பிட்டிருப்பதைத்தான் சத் என்றும் பூரணத்வமென்றும், கடவுள் என்றும் சொல்லுகிறார்கள். அதுவே அந்த அழிவில்லாத பூரணப் பரம்பொருளாகும். நம் போன்ற மனோ நிலையை உடையவர்கள் அதைப் பலவாய்க் காண்கின்றார்கள். நற்கருமங்களை யாற்றித் தங்களைக் கொஞ்சம் பரிசுத்தப் படுத்திக் கொண்டவர்கள் அதைச் சுவர்க்கம் அல்லது இந்திர லோகமென்று கருதுகிறார்கள். இன்னும் உயர்ந்த நிலையை அடைந்தவர்கள் அதை பிரம்மலோக

மென நினைக்கிறார்கள். ஆனால் இப்பரம்பொருளுடன் ஐக்கியமாகிப் பூரணத்துவம் அடைந்தவர்கள், இந்த உலகையோ, சுவர்க்கத்தையோ அல்லது பிரம்ம லோகத்தையோ காண்பதில்லை. அவர்கள் மனத்திலிருந்து இப்பிரபஞ்சம் மறைந்து, அவர்கள் அப்பரம்பொருள் மயமாகிறார்கள்.

இப்பரம்பொருளை, பிரம்மத்தை, நாம் உணர முடியுமா? இவ்வெல்லையற்ற பரம்பொருளைப் பற்றி சம்மிதைகளில் எவ்விதம் சொல்லப்பட்டிருக்கிறதென்பதைப்பற்றி நான் முன் சொல்லியிருக்கிறேன். அவைகளில் இது ஸ்தூல பாஷையில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. மனித வுள்ளத்திற்கு எட்டமுடியாத அந்நிலை சூட்சும பாஷையில் சொல்லப்படுவதை இங்குக் காண்பீர்கள். அங்கு அதை உடன்பாட்டு முறையில் சொல்ல யத்தனம் செய்தார்கள். அந்த யத்தனம் வியர்த்தமாயிற்று. எனவே எதிர்மறை பாஷை கைக்கொள்ளப்படுவதைக் காண்கிறோம். இப்பிரபஞ்சமே பிரம்மமென்று ஒப்புக்கொண்டாலும், அதை நாம் அறிய முடியுமா? முடியவேமுடியாது. இவ்விஷயத்தை நீங்கள் தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டும். '**विज्ञातारमरे केन विजानीयात्**' 'அறியும் பொருளை எங்ஙனம் அறிவது' என்ற கேள்வி அடிக்கடி கேட்கப்படுகிறது. கண்கள் அனைத்தையும் பார்க்கின்றன. ஆனால் அவை தம்மைத் தாமே பார்க்க முடியுமா? முடியாது. தவிர புலன்களின்மூலம் பெறக்கூடிய அறிவே மிகத் தாழ்ந்தது. இவ்விஷயத்தை நீங்கள் நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டியதவசியம். மேல் நாட்டுத் தத்துவ ஞானிகள் அனைவரும் ஒரு பெருந் தவறு செய்கிறார்கள். அதாவது புலன்களின் மூலம் வரக்கூடிய அறிவைவிட உயர்ந்தது வேறொன்றுமில்லை என அவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் நாம் இதை உயர்ந்த ஞானமாகக்

கருதுவதில்லை. எப்பொருள் எத்தன்மைத்தாயினும், அப் பொருளிலிருக்கும் மெய்ப்பொருளைக் காண்பதைத்தான் நாம் உண்மை அறிவெனக் கருதுகிறோம். புலன் நுகர்ச்சி நமக்கு இவ்வுண்மை யறிவைக் கொடுப்பதில்லை. தவிர புலன்களால் நமக்குக் கிடைக்கும் ஸ்தூல அறிவும் சரியானதாகவில்லாமல், மனத்தின் தன்மையால் பாதிக் கப்பட்டதாயிருக்கிறது. முத்துச்சிப்பி முத்து உண்டாக் கும் உதாரணம் உங்களுக்கு ஞாபகமிருக்கலாம். புலனால் நுகரப்படும் பொருளை நாம் பூரணமாக அறிவதில்லை; அதற்குப் பதிலாக நம் மனது எப்படி அதைக் காண் கின்றதோ அங்ஙனமே அதை நாம் உணருகிறோம். புலன்கள் மூலம் பெறப்படும் அறிவுகள் யாவும் இத்த கையதாகத்தா னிருக்கின்றன. பரம்பொருளைப்பற்றிய நமதறிவும் இத்தகையதாகத்தானிருக்கிறது. எனவே நம் அறிவனைத்தும் நம் மனதால் கட்டுப்படுத்தப்பட்டிருக் கிறது. எல்லா அறிவுக்கும் அடிப்படையாகவும், சர்வ சக்தியுடையவனாகவும், குணாதீதனாகவும், எல்லா உயிர் களிலும் சாட்சி மயமாகவும் இருக்கும் பரம்பொருளை நம் கட்டுப்பட்ட மனத்தின்மூலம் காணமுடியுமா? இத்தகைய மனத்தின்மூலம் நாம் எங்ஙனம் அவனைக் காணமுடியும்? நாம் எங்ஙனம் அவனைக் கட்டுப்படுத்த முடியும்? உலகம் முழுதும் அவன் சொரூபத்தை வெளிப் படுத்தும் முயற்சிகளாக இருந்துகொண்டிருக்கின்றது. மிகத் தாழ்ந்த மிருகங்களிலிருந்து மிக உயர்ந்த தேவர்கள் வரை, அனைத்தும் அவனுடைய தன்மையைப் பிரதிபிம் பிக்கும் கண்ணாடிகளாக விருக்கின்றன. இவை போதா வென்றுபோலும் இன்னும் எண்ணிறந்த உருவங்களில் அவன் தன் சொரூபத்தை வெளிப்படுத்திக்கொண்டிருக் கிறான். கடைசியில் மனித உருவமாகத் தோன்றி, இவ் வுருவங்கள் அனைத்தும் ஒரு வரம்புக்குள் உட்பட்டவை

யென்றும், வரம்புக்குட்பட்ட ஒரு கருவியின் மூலம் வரம்புக்குட்படாத எல்லையற்ற ஒரு பொருளை உணர முடியாதென்றும் நமக்கு உணர்த்துகிறான். புலன்களின் மூலம் அதாவது புறவாழ்க்கையில் அதை உணருவது அசாத்தியமெனில், இப் புறவாழ்க்கையைத் துறந்து, உள் வாழ்க்கையைக் கடைப் பிடிப்பதே உசிதமென்ற கருத்து நம் முன்னோர்களுக்குத் தோன்றிற்று. எனவே புலன் வாழ்க்கையை விடுத்து, உள்வாழ்க்கையைக் கடைப் பிடிப்போமென்று அவர்கள் சொன்னார்கள். அதுவே துறவெனப்படுவது. புலன் வாழ்க்கையை விட்டொழி யுங்கள் என்று துறவும் வைராக்கியமும் உரைக்கின்றன. எல்லா ஒழுக்கத்திற்கும், நீதிநியதிகளுக்கும், உலக மக் களின் க்ஷேமத்திற்கும் இதுவே அடிப்படையான கருத் தாகும். நம் சாஸ்திரங்களின்படி துறவினாலும் தவத்தி னாலும்தான் அனைத்தும் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. உங்கள் உள்ளத்தினுள்ளே நீங்கள் ஊன்றிச் செல்லச் செல்லப் பலவிதமான உயர்ந்த அனுபவங்களைப் பெறு வீர்கள். இவையனைத்தையும் தாண்டிச் சென்றீர்களானால் கடைசியில் உங்கள் உண்மை நிலையையும் உணர்வீர்கள். அதுதான் மோட்சம் அல்லது விடுதலை யெனப்படும்.

நமக்கு அடிப்படையாகவிருக்கும் அப்பரம புருஷனை எப்படி அறிவது? அவனை நாம் அறிய முடியாது. நம் கண்கள் அனைத்தையும் காணுகின்றன. ஆனால் அவை தம்மைத்தாமே காணமுடியுமா? ஒரு கண்ணாடி மூலம் பார்த்தாலும், அதில் கண்களின் பிரதிபிம்பத்தைத்தான் காண முடியுமேயொழிய, கண்களைக் காணமுடியாது. அடுத்தபடியாக, இப் பரம்பொருளாயிருக்கிற ஆத்மா சாட்சி மாத்திரமாகவிருந்தால் அதில் பயனென்ன? அதன் மூலம் இவ்வுலகை அனுபவிக்க முடியாதன்றோ வென்று சிலர் கேட்கிறார்கள். சாட்சி மாத்திரமாக விருப்பவர்கள்

எங்ஙனம் இன்பம் அனுபவிக்க முடியுமென்பதை சாதாரண மக்கள் அறியமாட்டார்கள். இத்தத்துவத்தை மேற்கொண்டதன் காரணமாகவே இந்துக்கள் சோம்பேறிகளாகவும் பயனற்றவர்களாகவும் ஆய்விட்டார்களென்று சிலர் குறை சொல்லுகிருர்கள். அவர்கள் சொல்வது முற்றிலும் தவறு. சாட்சி மாத்திரமாக இருப்பவர்கள் தான் நன்ருகச் சந்தோஷம் அனுபவிக்க முடியும். ஒரு குத்துச்சண்டை நடக்கிறதென்று வைத்துக்கொள்வோம். அதை யார் அதிகம் அனுபவிக்கிருர்கள் ? அச் சண்டையில் கலந்துகொள்கிறவர்களா அல்லது அதைக் காண வந்திருப்பவர்களா ? சாட்சியாகவிருக்கும் தன்மையை அதிகம் பெறப்பெற நீங்கள் அதிகம் அனுபவிப்பீர்கள். அதுதான் உண்மை ஆனந்தத்தை யளிக்கும். உலக முழுதையும் சாட்சியாகவிருந்து பார்க்கக்கூடிய தன்மையைப் பெற்ருல்தான் நீங்கள் எல்லையற்ற இன்பத்தைப் பெற்றவர்களாகி, முக்த புருஷர்களாவீர்கள். சாட்சி மாத்திரமாக இருப்பவர்கள்தான் எந்த விதமான விருப்பு வெறுப்பின்றி, உயர்வு தாழ்வின்றி, எந்த விதமான எதிர் பார்த்தலும் ஏமாற்றமும் இன்றி வேலை செய்ய முடியும். சாட்சி மாத்திரமாய் இருப்பவர்கள் தான் உண்மையில் இன்பம் அனுபவிக்கிருர்கள்.

அத்வைதம் எத்தகைய சன்மார்க்கத்தை உபதேசம் செய்கிறதென்று இனி நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும். ஆனல் அதற்குமுன் அத்வைத சித்தாந்தத்தின் முக்கியமான கொள்கைகளில் ஒன்ருன மாயாவாதத்தைப்பற்றி நாம் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். இக் கொள்கைகள் ஒவ்வொன்றையும் நன்ருகப் புரிந்து கொள்ளப் பல வருஷங்களாகும். அவைகளை எடுத்துச் சொல்லப் பல மாதங்களாகும். எனவே அவைகளை மிக லேசாக இங்கு குறிப்பிட்டால், அதற்காக மன்னிப்

பீர்கள். மாயாவாதமென்ற இக்கொள்கையைச் சரிவரப் புரிந்து கொள்வது எக்காலத்திலும் மிகக் கடினமாக இருந்து வந்திருக்கிறது. அது வெறும் வாதம் அல்லது கொள்கையல்லவென்பதை உங்களுக்கு முதலில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தேச, கால, நிமித்தத்தின் காரணமாக நாமரூபங்கள் தோன்றுகின்றன. அதுவே மாயை எனப்படும். சமுத்திரத்தில் ஓர் அலை கிளம்புகிறதென்று வைத்துக்கொள்வோம். அதன் நாமரூபத்தில் மாத்திரமே சமுத்திரத்திலிருந்து வேருகத் தோன்றுகின்றதேயொழிய, அது உண்மையில் சமுத்திரத்திலிருந்து வேறுபட்டு இருக்கமுடியாது. அலை தனியாகவிருக்கும் வரை அதற்குத் தனியாக நாமமும் ரூபமும் இருக்கின்றன. அலை அடங்கியதும் இவை மறைந்து விடுகின்றன. ஆனால் எப்பொழுதும் சமுத்திரத்திலிருக்கும் தண்ணீரின் அளவு ஒன்ருகவே இருந்து வருகிறது. சமுத்திரத்திலிருந்து அலைகள் கிளம்புவதும் அடங்குவதும்—இந்த நாமரூபங்கள்—சமுத்திரத்தைப் பாதிப்பதில்லை. இங்ஙனம் நாமரூபங்கள் கிளம்புவதும் அடங்குவதும்தான் மாயை எனப்படும். உங்களுக்கும் எனக்கும், மனிதனுக்கும் மிருகத்திற்கும், மனிதனுக்கும் தெய்வத்திற்கும்-இன்னும் பிறவற்றிற்கும் வித்தியாசங்களை உண்டாக்குவது இம் மாயைதான். மாயையின் காரணமாகத்தான் ஆத்மா கோடிக்கணக்கான நாம ரூபங்களைத் தாங்கிப் பிறப்பெய்திருக்கிறது. நாம ரூபங்களின் மூலம்தான் அவைகளுக்குள் ஒன்றுக்கொன்று வேறுபாடாகத் தோன்றுகின்றன. இந்நாம ரூபங்கள் மறைந்தால், இவ்வேறுபாடுகளும் மறைந்து அனைத்தும் ஒன்ருகி, உண்மைச் சொரூபத்தைப் பெறும். இதுதான் மாயை எனப்படுவது. இது வெறும் கொள்கையல்ல. இது வாழ்க்கையில் காணப்படும் உண்மையாகும். ஸ்தூலப் பொருட்கள்தாம்

உண்மையென்று நினைப்பவர்கள் †, இம்மேஜை முதலிய புலன்களால் நுகரப்படும் ஸ்தூலப்பொருட்களே உண்மை யென்று உரைக்கிறார்கள். இம்மேஜையை உண்மை யென்று சொன்னால், என்ன பொருளில் இங்ஙனம் சொல்லுகிறார்கள் என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். மேஜை மேஜையாகவிருப்பது, வேறு ஒரு பொருளையும் சார்ந்திருக்கவில்லை, மற்றவை அனைத்தும் அழிந்தாலும், அம்மேஜை அங்ஙனமே யிருக்குமென்பது அதன் பொருள். கொஞ்சம் ஆலோசித்துப் பார்த்தாலும் இது தவறென்பது விளங்கும். இந்த ஸ்தூல உலகில் எல்லாப் பொருள்களும் ஒன்றுக்கொன்று சார்ந்தே இருக்கவேண்டியிருக்கின்றன. எனவே நமது ஞானத்தில் மூன்று வகைகளிருக்கின்றன. முதலாவதாக ஒவ்வொரு வஸ்துவும் தனித்தனியாகவும், மற்றவைகளினின்று வேறு பட்டும் இருக்கின்றதென்று நினைக்கிறோம். இரண்டா வதாக ஒன்றுக்கொன்று சம்பந்தமிருப்பதை உணரு கிறோம். ஒரு பரம்பொருள்தான் உண்மையில் இருக் கிறது ; அந்த ஒன்றையே நாம் பலவாகக் காண்கின்றோ மென்பது கடைசி ஞானமாகும். கடவுளைப் பற்றிய ஞானத்தைப் பெறுவதிலும், மக்கள் தம் கடவுள் உலகிற்கு வெளியே தனியாகவிருப்பதாக முதலில் நினைக்கிறார்கள். அவர்கள் தெய்வம் முற்றிலும் மனித இயல்பை யொத் திருக்கிறது. அவர் மனிதரைப்போலவே யிருக்கிறார் ; ஆனால் அதிக சக்தி வாய்ந்தவராக, ஒரு பெரிய மனிதராக விருக்கிறார். அவ்வளவுதான். கடவுளைப்பற்றிய இந்தக் கருத்து புத்திபூர்வமாக இல்லை யென்பதை நாம் முன்னமேயே ஆராய்ந் தறிந்திருக்கிறோம். இரண்டாவ தாகக் கடவுள் எங்கும் காணப்படும் சக்தியாக

---

† Realists.

விளங்குகிறார். இதுதான் சண்டி†யில் நாம் காணும் ரூபக் கடவுள். அக் கடவுள் நல்ல குணங்களை மாத்திரம் உடையவராக இல்லையென்பதை நீங்கள் கவனிக்க வேண்டும். புத்தி பூர்வமாக ஆராயப்புகும் போது நல்ல குணங்களுக்கு இருப்பிடமாக ஒரு கடவுளும் கெட்ட குணங்களுக்கு இருப்பிடமாக ஒரு சாத்தானும் ஆக இருவருக்கு இடமில்லை; ஒரு கடவுள்தா னிருக்க முடியும். 'என் தாயே! என் தெய்வமே! எல்லா உயிர்களிலும் சாந்தமாக வாழும் உன்னை நான் நமஸ்கரிக் கின்றேன். எல்லா உயிர்களினும் தூய்மையாக வாழும் உன்னை நான் நமஸ்கரிக்கின்றேன்' என்று சொல்லப் பட்டிருக்கிறது. எல்லா உயிர்களிலும் அவள் இருக்கிறாள் என்று நாம் சொல்வதிலிருந்து ஏற்படக்கூடிய பயனையும் நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். 'ஏ கார்க்கி! எங்கெங்கு இன்பமிருக்கிறதோ, அங்கெல்லாம் தெய்விகத்தன்மை யிருக்கிறது' என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதை நீங்கள் எவ்விதமாகவும் உபயோகப்படுத்தலாம். எனக்கு முன்னிருக்கும் இவ்விளக்கு வெளிச்சத்தில் நீங்கள் ஒருவனுக்கு நூறு ரூபாய் நன்கொடை யளிக்கலாம்; வேறு ஒருவன் இதில் உங்கள் கையெழுத்தைப் போட்டு உங்களை மோசம் செய்யலாம். இருவருக்கும் இவ்வெளிச்சம் உதவுகிறது. இது இரண்டாவது படியாக விருக்கிறது. மூன்றாவதாக, கடவுள் இயற்கைக்குப் புறத்திலும் அகத் திலும் இல்லை. இயற்கையில் காணப்படும் பொருள்கள் அனைத்துமே கடவுள் மயமாக விருக்கின்றன என்ற அத்வைதக் கருத்து வருகின்றது. ஆத்மா, உடல் என்ற இரு வஸ்துக்கள் வேறு வேறாக இல்லை. தத்துவார்த்தத் தர்க்கங்கள் அங்ஙனம் உங்களை நினைக்கும்படி செய்திருக்

---

† சண்டி : தேவி மகாத்மியம்

கின்றனவே யொழிய உண்மையில் அவ்வாறில்லை. நீங்கள் உடல் என்றும், உங்களுக்கு ஆத்மா ஒன்றிருக்கிற தென்றும், நீங்கள் இரண்டுமாக யிருக்கிறீர்களென்றும் நினைக்கிறீர்கள். இது எங்ஙனம் சாத்தியமாகும்? உங்கள் மனதிலேயே யோசனை செய்து பாருங்கள். உங்களுக்குள் யோகி ஒருவன் இருந்தால், அவன் தன்னைச் சைதன்யமென உணர்வான், அவனுக்கு உடலுணர்ச்சி மறைந்துவிட்டது. ஒரு சாதாரண மனிதன் தன்னை உடம்பென்று நினைக்கிறான். அவனுக்கு ஆத்மாவின் உணர்ச்சி யில்லை. தத்துவார்த்தத் தர்க்கங்களின் காரணமாக ஆத்மா, உடல், என்ற இரு உணர்ச்சிகளும் ஒருங்கே யிருக்க முடியுமென நாம் நம்புகிறோம். ஒரு சமயத்தில் ஓர் உணர்ச்சியைத்தான் நாம் பெற்றிருக்க முடியும். ஸ்தூலப் பொருட்களை நுகரும்போது நீங்கள் கடவுளை உணர முடியாது. கடவுளை நீங்கள் உணரும் போது இவ்வுலகப் பொருட்களின் நுகர்ச்சியை நீங்கள் முற்றிலும் மறந்தவர்களாவீர்கள்.

'எல்லை யில்லாததாய், ஒப்பற்றதாய், பரிபூரண மானதாய், சச்சிதானந்தமாய் எல்லா வுயிர்களிலும் நின்றிலங்கும் அந்த பிரம்மம் சமாதியில் ஆழ்ந்திருக்கும் ஞானியின் இதயத்தில் பிரகாசிக்கிறது.'

'எங்கு இயற்கையின் மாறுபாடுகள் அனைத்தும் ஓய்கின்றனவோ, எது எல்லாக் கருத்துக்களுக்கும் மனதிற்கும் எட்டாததாய் இருக்கின்றதோ, எது அனைத்தையும் தன்னில் அடக்கி, தான் எதற்கும் அடங்காததாக விருக்கிறதோ, எது எல்லா உயிர்களுக்கும் உயிராய் விளங்குகின்றதோ அத்தகைய பூரணத்வமுடைய பிரம்மம் சமாதியில் ஆழ்ந்திருக்கும் ஞானியின் இதயத்தில் பிரகா சிக்கிறது.'

'பிறப்புக்கும் இறப்புக்கும் அப்பாற்பட்டதாய்

எல்லையற்றதாய், ஒப்பற்றதாய், பிரபஞ்சமனைத்தையும் எல்லாப் பக்கங்களிலும் மூடியிருக்கும் மகாப் பிரளயம் போன்றதாய், ஆனால் எந்தவிதமான சலனமும் இல்லாமல் பூரண சாந்த முடையதாய், எல்லாவிதமான சந்தேகங்களும் சஞ்சலங்களும் இல்லாததாய் இருக்கின்ற அத்தகைய பிரம்மம், சமாதியில் ஆழ்ந்திருக்கும் ஞானியின் இதயத்தில் பிரகாசிக்கிறது.'

இவ்வனுபவம் வரும்போது உலக உணர்ச்சி முற்றிலும் மறைந்துவிடும்.

இச்சத்தியப் பரம்பொருள் முற்றிலும் அறிய முடியாது; இதுவரை எவரும் அதை அறிந்ததில்லை. சம்சய வாதிகள் † சொல்லும் பொருளில் அதை அறிய முடியாதென்று நான் சொல்லவில்லை. அவ்வெல்லையற்ற பரம்பொருளை நம் சிறிய மூளையால் அல்லது மனதால் தெரிய முடியுமென்றுரைப்பது அசம்பாவிதமாகும். தவிர நமக்கு அடிப்படையாக, நம் உயிர்க்குயிராக, நாமாகவே இருக்கிற ஒரு பொருளை நாம் எப்படி உணர முடியும்? அது எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாகவிருக்கிறது. நாம ரூபங்களை எடுத்துவிடில் எஞ்சியிருக்கும் சத்திய வஸ்துவே பிரம்மம். அதுவே அனைத்திற்கும் அடிப்படையான உண்மையாகும்.

'நீயே பெண்ணாயிருக்கிறாய்; நீயே ஆணாயிருக்கிறாய்; நீயே இளைஞனாகவும் யுவதியாகவும் இருக்கிறாய்; நீயே தடியை ஊன்றி நடக்கும் கிழவனாகவும் இருக்கிறாய். நீயே இப்பிரபஞ்சத்தின் அனைத்துமாய் இருக்கிறாய்' என்று அத்வைதம் உரைக்கிறது. எல்லா விசாரணைகளின் முடிவும் இதிலிருக்கிறது. இந்நிலையை மேற்கொண்டால்தான், எல்லாத் தர்க்கங்களையும் விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சிகளின் தாக்குதல்களையும், நாம்

† Agnostics

உறுதியாக நின்று எதிர்க்க முடியும். இந்நிலையே புத்தி பூர்வமாகவும் தர்க்க பூர்வமாகவும் இருக்கிறது. ஆனால் வேதாந்தியாக விருப்பவன் இதற்குக் கீழிருக்கும் மற்ற நிலைகளைத் தவறென்று சொல்லுவதில்லை. அவைகள் அனைத்தையும் அவன் திரும்பிப் பார்த்து ஆசீர்வதிக் கிறான். அவைகள் அனைத்தும் உண்மையானவை ; ஆனால் தவறுதலாகக் காணப்பட்டு, தவறுதலான பாஷையில் உரைக்கப்பட்டவை என்பதை அவன் உணரு கிறான். இவன் காணும் அதே உண்மைகளை மாயை என்னும் கண்ணாடி மூலம் பார்க்கப்பட்டவை அவை. எனினும் அவைகளும் முற்றிலும் உண்மையானவை யாகும். எந்தக் கடவுளை ஞானமற்றவன் இயற் கைக்குப் புறத்திலே காண்கின்றானோ, எந்தக் கடவுளைக் கொஞ்சம் ஞானமடைந்தவன் இயற்கைக்கு அடிப் படையாக விருப்பதாக உணருகின்றானோ, எப்பரம் பொருளை பூரண ஞானம் பெற்றவன் தானேயாகவும் உலகிலுள்ள ஏனைய அனைத்துமாய் ஆகியிருப்ப தாகக் காண்கின்றானோ - இவை யனைத்தும் அந்த ஒரு பரம்பொருளேயாம். இவ்வனுபவங்கள் அனைத்தும் அந்த ஒரே பரம்பொருள், மாயையால் உண்டாக்கப்பட்ட பல கண்ணாடிகள் மூலம் பல திறப்பட்ட மனத்தினரால் பார்க்கப்பட்ட காட்சிகளாகும். இவை ஒன்றுக்கொன்று அழைத்துச் செல்லும் படிகளாக விருக்கின்றன. இவற்றில் ஒன்றுக்கொன்றிருக்கும் சம்பந்தத்தை அறிந்து பாகுபாடு செய்தலே ஞானத்தின் அறிகுறி. சாதாரண மக்களுக்கும் ஒரு விஞ்ஞான சாஸ்திரிக்குமுள்ள வித்தியாசமென்ன ? இருட்டில் செல்லும்போது அங்கு அசாதாரண சம்பவம் ஒன்று நேர்ந்தால், அதற்குக் காரணம் பிசாசென்று அறிவிலி உரைப்பான். காரியங் களிலிருந்து காரணத்தை ஆராய்வதை விடுத்து,

புறத்திலே அக்காரியத்திற்குக் காரணம் நாடுதல் அறிவிலிகளின் தன்மையாகும். எனவே எது நேர்ந்தாலும் அதற்குக் காரணம் ஒரு பிசாசாக விருக்கவேண்டுமென்று அவர்கள் நினைப்பார்கள். ஒரு கல் விழுந்தால், அது ஒரு பிசாசால் எறியப்பட்டதென அவர்கள் நினைக்கலாம். ஆனால் அது பூமியின் ஆகர்ஷண சக்தியால் நேர்ந்ததென்பதை விஞ்ஞான அறிவு படைத்தவன் உணர்வான்.

உலகமெங்கும் மதத்திற்கும் விஞ்ஞான சாஸ்திரங்களுக்கும் சண்டை நடந்துகொண்டிருக்கிறது. மதங்கள் பல விதமான மூட நம்பிக்கைகளைக் கொண்டிருக்கின்றன. இயற்கையிலிருக்கும் உண்மைகளுக்குப் புறத்திலே காரணங்கள் சொல்லப்படுகின்றன. சூரியன், சந்திரன் முதலிய கிரகங்கள் ஒவ்வொரு தெய்வத்தின் வசமிருப்பதாகச் சொல்லப்படுகிறது. எல்லா மாறுதல்களும் தெய்வங்களால் உண்டாக்கப்படுகின்றன. இத்தெய்வங்கள் அனைத்திற்கும் பொதுவான குணம், அவை இயற்கைக்கு வெளியிலிருப்பதாகச் சொல்லப்படுவதுதான். ஒரு பொருளின் காரணத்தை அதன் இயல்பிலேயே ஆராய வேண்டுமென்று விஞ்ஞானம் உரைக்கிறது. விஞ்ஞான ஆராய்ச்சிகள் முன்னேற முன்னேற, இவ்வியற்கை நிகழ்ச்சிகளுக்குக் காரணம் இயற்கையேயொழிய, இந்தத் தெய்வங்கள் அல்லவென்று கண்டு பிடிக்கப்பட்டது. விஞ்ஞான சாஸ்திரங்கள் ஸ்தூல விஷயங்களில் செய்த வேலையை அத்வைதம் ஆத்மிக உலகில் செய்திருக்கிறது. அதன் காரணமாகத்தான் அத்வைதம் மிக சாஸ்திரோக்தமாகவும் புத்தி பூர்வமாகவும் இருக்கிறது. இவ்வுலகம் புறத்தே யிருக்கும் ஒரு கடவுளாலோ அல்லது வேறு எவராலோ உண்டாக்கப்பட்டதல்ல. அது தானே உண்டாகி, தானே வியக்தமாகி, தானே அழியும் எல்லையற்ற பரம்பொருளாக விருக்கிறது.

அதைத்தான் 'தத்துவமசி' 'நீயே அது' என்று வேதங்கள் உரைக்கின்றன. எனவே அத்வைதம் மாத்திரமே புத்தி பூர்வமான மதமாக விருக்க முடியுமென்பதை நீங்கள் காண்பீர்கள். அறைகுறையாகத் தற்காலப் படிப்பைப் பெற்றவர்கள் பலர் இந்நாட்டிலே விஞ்ஞான சாஸ்திரங் களின் ஆராய்ச்சிகளைப்பற்றியும், நம் மதம் புத்தி பூர்வ மாக இருக்க வேண்டுமென்றும் பலவாருகப் பிதற்றி வரு கிருர்கள். அவர்களை நான் கேட்கிறேன். நீங்கள் எல்லோரும் திரள் திரளாக முன் வந்து புத்தி பூர்வமாக விருக்கக்கூடிய அத்வைதத்தை ஏற்று அதைப் பின் பற்றக் கூடிய ஆண்மை உங்களுக்கிருக்கிறதா? புத்தர் பெரு மான் உரைத்திருப்பதுபோல், **बहुजनहिताय बहुजनसुखाय** - 'பொது ஜனங்களுடைய நன்மைக்காகவும், பொது ஜனங் களுடைய சந்தோஷத்திற்காகவும்' இவ்வுண்மைகளை எடுத் துரைத்து, அதற்காக உங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்யக்கூடிய ஆண்மை உங்களில் எவ்வளவு பேருக்கிரு கிறது? இந்த உண்மை உங்களுக்கில்லையாலுல் உங்களைக் கோழைகளென நான் கூறுகிறேன். உங்கள் கோழைத் தனத்தைப் போக்கிக் கொள்ளும் ஆற்றல் உங்களிடம் இல்லை யெனில், பயத்தின் காரணமாக உங்களுக்குச் சரியெனத் தோன்றுவதைப் பின்பற்றும் ஆண்மை உங்க ளிடம் இல்லை யெனில், விக்கிரக ஆராதனை முதலிய செய்து வரும் சாதாரண மக்களிடம் சென்று அவர்களிடம் குறைகள் கண்டுபிடிக்கும் பழக்கத்தை விட்டுவிடுங்கள். நீங்கள் சொல்வதைக் கேட்காத ஒவ்வொருவனையும் பாபி என்று சபிக்காதீர்கள். முதலில் நீங்கள் கோழைகள் என் பதை யறிந்து, சும்மா இருங்கள். நீங்கள் சமூகத்திற்குப் பயந்தோ அல்லது மூட நம்பிக்கைகளை அஞ்சியோ புத்தி பூர்வமாக நடக்க இயலாவிடில், இந்த மூட நம்பிக்கைகள் கல்லாதவர்கள் மனதில் இன்னும் எத்தகைய பயத்தை

யுண்டாக்கும்! இதுதான் அத்வைதியின் நிலையாகும். அனைவர்பாலும் கருணையுடன் ஒழுகுங்கள். உலகில் அனைவரும் புத்தி பூர்வமாக மாத்திரமல்லாமல், அனுபூதி யிலும் அத்வைதிகளாக விருக்கமுடியுமானல், உலகம் மிக மேம்பாடுடையதாக விருக்கும். ஆனல் அது இயலா தெனில் அதற்கடுத்த நல்ல காரியத்தைச் செய்வோம். கல்வியற்றவர்களின் கைகளைப் பிடித்து அவர்களைப் படிப் படியாக உயர்ந்த நிலைமைக்கு அழைத்துச் செல்வோமாக. இந்தியாவில் நாம் பின்பற்றும் மத அனுஷ்டானங்கள் அனைத்தும் ஆத்மிகத் துறையில் பல்வேறு படிகளாக விருக்கின்றன வென்பதையும் அவை தமக்கு மேலிருக்கும் படிகளுக்கு நம்மை அழைத்துச் செல்லுகின்றன வென் பதையும் நாம் உணர்வோமாக. நம் அனுஷ்டானங்கள் எவற்றையும் கெட்டதெனச் சொல்ல வேண்டாம். ஒன்று மற்ருென்றை விட உயர்ந்ததாக அல்லது நன்மை தரக் கூடியதாக விருக்கலாம்; ஆனல் அவற்றில் எவையும் கெட்டவையல்ல வென்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்வீர்களாக.

அத்வைதத்திற்கும் ஒழுக்க நெறிக்குமுள்ள சம்பந் தத்தைப்பற்றிச் சில வார்த்தைகள் சொல்ல வேண்டியது அவசியம். அத்வைதம் மக்களை ஒழுக்கங் குறைந்தவர்க ளாகச் செய்கிறதென்று சிலர் அர்த்தமற்ற பேச்சுப்பேசு கிருர்கள். இதை அவர்கள் எங்கு கற்ருர்கள் என்பது பகவானுக்குத்தான் தெரியும். நாம் அனைவரும் ஒன்று; நாமே கடவுளாயும் இருக்கிருேமென்ருல் மக்கள் ஏன் நல்லொழுக்கத்தை மேற்கொள்ள வேண்டுமென்று அவர் கள் கேட்கிருர்கள். முதலாவதாக இது மிருகத்தனம் நிறைந்த ஒருவன் செய்யக்கூடிய தர்க்கம். அதாவது சவுக்கடியால் தான் மனிதனை அடக்கி வைக்க முடியும் என்று நினைப்பவனுடைய பேச்சு இது. அத்தகைய

மிருகத்தனம் படைத்த மனிதர்கள் வாழ்வதைவிட மாய்வது நல்லது. சவுக்கடியின்றி ஒழுக்க நெறியைப் பின்பற்ற மாட்டார்கள்; அதாவது " அடிக்கும் உதைக்கும் பயந்துதான் ஒழுக்க நெறியை மேற்கொள்ளுவார்கள் என்றிருக்கக்கூடிய மக்களுக்கு என்றும் கதி மோட்சமில்லே. இரண்டாவதாக அத்வைதம்தான் சன்மார்க்க வாழ்விற்குச் சரியான ஆதாரமாக விருக்கிறது. மற்றவர்களுக்கு நன்மை செய்யும் படிக்கும் சன்மாக்கத்தைப் பின்பற்றும் படிக்கும் எல்லா மதங்களும் உபதேசிக்கின்றன. நாம் ஏன் மற்றவர்களுக்கு நன்மை செய்ய வேண்டும்? நாம் ஏன் சுயநலமற்றிருக்க வேண்டும்? இதற்கு அவை சரியான விடை கூறுவதில்லே. ஏதோ ஒரு தெய்வம் அவ்வாறு கூறியிருப்பதாகச் சொல்லலாம், அல்லது ஏதோ சில சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருப்பதாகக் கூறலாம். அந்த தெய்வங்களே அல்லது சாஸ்திரங்களே நான் ஒப்புக் கொள்ளாமலிருக்கலாம். அவனவன் தன்தன் காரியத்தை முதலில் பார்த்துக் கொள்ளவேண்டும்; பலவீனர்கள் எப்படி வேண்டுமானுலும் துலேயட்டும் என்பதுதான் இவ்வுலகில் பலருடைய கொள்கையாக விருக்கிறது. எனவே நாம் சுயநல மற்றிருக்க வேண்டுமானுல், அதற்குச் சரியான காரணம் கொடுக்கப்பட வேண்டுமன்றே? அதற்குச் சரியான காரணம் இக்கீதா வாக்கியத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. 'எவனெருவன் எல்லா உயிர்களேயும் தன்னிலும், தன்னே எல்லா உயிர்களிலும் காண்கின்றுனே, எவனெருவன் கடவுள் எல்லா உயிர்களிலும் இருப்பதாகக் காண்கின்றுனே, அத்தகைய ஞானி தன்னேத்தானே துன்புறுத்திக் கொள்ளமாட்டான்'. நீங்கள் யாரைத் துன்புறுத்திஞலும் நீங்கள் உங்களேயே துன்புறுத்திக் கொள்கிறீர்களே யொழிய வேறில்லே. அவைகள் அனேத்தும் நீங்களே ஆகியிருக்கின்றீர்கள்

என்று அத்வைதம் உரைக்கின்றது. நீங்கள் இவ் வுண்மையை அறிந்தாலும் அறியாவிட்டாலும், நீங்களே எல்லாக் கைகள் மூலமாயும் வேலை செய்து கொண்டிருக் கிறீர்கள் ; நீங்களே எல்லாக் கால்கள் மூலமாயும் நடக்கிறீர்கள். அரண்மனையிலிருந்து போக போக்கியங் கள் அனுபவித்துக் கொண்டிருக்கும் அரசனும், தெருவில் பிச்சை எடுத்து அல்லல்படும் தரித்திரனும் - இருவரும் நீங்கள் தான். நீங்களே அறிவற்றவர்களாயும் அறிவுள்ளவர்களாயும் இருக்கிறீர்கள். நீங்களே பலம் உள்ளவர்களாயும் பலவீனர்களாயும் இருக்கிறீர்கள்! இவ் வுண்மையை அறிந்து அனைவரிடமும் அன்புடன் ஒழுகு வீர்களாக. இந்தக் காரணத்திற்காகவே நாம் எவருக்கும் தீங்கிழைக்கக்கூடாது. இக் காரணத்திற்காகவே நான் பட்டினி கிடந்தாலும் அதற்காகக் கவலைப்பட வேண்டிய தில்லை. ஏனெனில் நான் லட்சக்கணக்கான வாய்கள் மூலம் உணவு அருந்துகின்றேனன்றோ? அவ்வாய்கள் அனைத்தும் என்னுடையவைதான். நான் என்னவானாலும் என்னுடைமைகளுக்கு என்ன நேர்ந்தாலும் நான் அதற் காகக் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. ஏனெனில் இப்பிரபஞ்சமனைத்திலும் நானே இலங்கு கின்றே னன்றோ? இவ்வுலகில் அனுபவிக்கப்படும் எல்லா இன்பங்களையும் நானே அனுபவித்துக்கொண் டிருக்கிறேன் ; எனவே என்னை யாரே கொல்ல முடியும்? எனவே அத்வைதம் தான் மாந்தர் ஏன் ஒழுக்க நெறியைப் பின்பற்ற வேண்டு மென்பதற்குச் சரியான காரணம் காட்டுகிறது. மற்ற மதங்கள் ஒழுக்க நெறிகளைப் போதிக் கலாம் ; ஆனல் அவைகளுக்குக் காரணம் அவைகளில் கொடுக்கப்படவில்லை, அத்வைதம்தான் அக்காரணத்தைக் கொடுக்கிறது.

அத்வைதத்தைப் பின்பற்றுவதனல் நாம் பெறக்கூடிய

லாபமென்ன வென்பது அடுத்த கேள்வி. அத்வைதம் அளவற்ற பலத்தை யளிக்கிறது. நாம் பலவீனர்கள் என்ற நினைவினுல் உலகில் பரவியிருக்கும் மயக்கத்தை அகற்றுங்கள். மனித வர்க்கத்தினிடம் பலவீனமான எண்ணங்களையும் கருத்துக்களையும் பரப்பாதீர்கள். அவர்களிடம் பலவீனம் உண்டாக்கக்கூடிய வார்த்தைகளை யும் பேசாதீர்கள், எல்லாப் பாவங்களையும் கெடுதல்களை யும் விளைவிப்பது பலவீனம் என்பதை உணருங்கள். பலவீனமே எல்லாக் கெடுதல்களுக்கும் ஆதாரமாகவிருக் கின்றது. பலவீனத்தின் காரணமாகவே மக்கள் சுயநல முடையவர்களாக விருக்கிருர்கள், பலவீனத்தின் காரண மாகவே ஒருவன் மற்றவனைத் துன்புறுத்த விரும்புகிருன். பலவீனம் தான் ஒருவனைத் தன் உண்மையான சொரூ பத்தை விடுத்துத் தாழ்ந்தவனுகும்படி செய்கிறது. எல்லா மக்களும் தங்கள் உண்மையான சொரூபத்தை உணரட் டும். 'ஸோஹம் ஸோஹம்' 'நானே அது நானே அது' (நானே அந்த அழிவற்ற பரம்பொருள்) என்று அல்லும் பகலும் நினையுங்கள். 'நானே அப்பரம்பொருள்' என்ற இம் மகத்தான நினைவுடன் நம் பிள்ளைகள் தங்கள் குழந்தைப் பருவத்திலிருந்து வளரட்டும். முதலில் இக் கருத்தை அவர்கள் கேட்கட்டும்; கேட்டு அதை ஆழ்ந்து சிந்திக்கட்டும்; இந்த சிந்தனையினின்று அளவற்ற ஆண்மை பிறக்கும். அவ்வாண்மையிலிருந்து உலகம் இது வரை கண்டிராத பல அற்புதங்கள் உண்டாவதைக் காண்பீர்கள்.

இப்பொழுது நாம் செய்ய வேண்டியதென்ன? அத்வைதத்தை வாழ்க்கையில் பின்பற்ற முடியாதென்று சிலர் சொல்லுகிருர்கள். அதாவது நமது ஸ்தூல நிலையில் தினசரி வாழ்க்கையில் அவ்வெண்ணங்களை அனுஷ்டிக்க முடியாதென அவர்கள் உரைக்கிருர்கள். அவர்கள்

வார்த்தைகளில் ஓரளவு உண்மை யிருக்கிறது. வேதங்களில் சொல்லப்பட்டிருக்கும் இவ்வாக்கு உங்களுக்கு ஞாபகமிருக்கலாம்.

ओमित्येकाक्षरं ब्रह्म ओमित्येकाक्षरं परम् ।
ओमित्येकाक्षरं ज्ञात्वा यो यदिच्छति तत् ॥

'ஓம் என்பதே பிரம்மம். ஓம் என்பதே சத்தியமானது; எவனொருவன் ஓம் என்பதன் ரகசியத்தை உணர்வானோ, அவன் விரும்பிய அனைத்தையும் பெறுவான்.' எனவே ஓம் என்ற பிரணவத்தின் ரகசியத்தை உணருங்கள். நீங்களே அந்தப் பிரணவ சொரூபம் என்பதை அறியுங்கள். தத்துவமசி என்ற மகா வாக்கியத்தின் பொருளே என்று நீங்கள் உணருகிறீர்களோ அன்றுதான் நீங்கள் விரும்பிய அனைத்தும் தாமே உங்களை வந்து சாரும். இம்மகத்தான தத்துவம் லௌகிக வாழ்க்கைக்கும் பொருந்தும். நீங்கள் இந்த ஸ்தூல உலகில் பராக்கிரமத்தைப் பெற விரும்பினால், முதலில் இத்தகைய பராக்கிரமம் உங்களிடம் இருக்கிறதென்று நம்புங்கள். நான் வெறும் சிறிய குமிழியாக விருக்கலாம்: நீங்கள் மலைபோன்ற பெரிய அலையாக விருக்கலாம், ஆனால் இருவருக்கும் அடிப்படையாக அந்த எல்லையற்ற சமுத்திரம் இருக்கிறதென்பதை உணருங்கள். அதுபோல் நம் இருவருக்கும் ஆதாரமாக அந்த எல்லையற்ற சக்தி வாய்ந்த பரம்பொருள் இருக்கிறதென்பதை உணருவோமாக. நான் நீர்க்குமிழி போல் சிறியவனாக விருக்கலாம். நீங்கள் பெரிய அலைபோல் மகத்தானவர்களாக விருக்கலாம்; ஆனால் இருவரும் நமக்கு ஆதாரமாக விருக்கும் எல்லையற்ற அச்சக்தியிலிருந்து எவ்வளவு பலம் வேண்டுமானாலும் பெற முடியும். எனவே முதலில் இந்த நம்பிக்கையைப் பெறுங்கள். இதுதான் அத்வைதத்தின்

ரகசியம் ; முதலில் அளவற்ற தன்னம்பிக்கையை உடைய வர்களாகுங்கள். அதற்குமேல் மற்ற எதை வேண்டு மானாலும் நீங்கள் நம்பலாம். எந்தெந்த மக்கள் தன்னம் பிக்கையுடன் இருந்தார்களோ, அம்மக்கள் தான் பலமும் பெருமையும் அடைந்திருக்கிறார்கள் என்று உலக சரித்திரம் நமக்குக் கற்பிக்கிறது. ஒவ்வொரு தேசத்திலும் தன்னம்பிக்கை நிறைந்த நபர்களே பலம் பெற்று சிறப் பெய்தி யிருக்கிறார்கள் என்பதைக் காண்பீர்கள். இந்தி யாவிற்கு ஓர் ஆங்கிலேயன் வந்தான். அவன் ஒரு வெறும் குமாஸ்தாவாக இருந்தான். வறுமையின் காரணமாகவோ அல்லது மற்றெந்த காரணத்திற் காகவோ, அவன் இரண்டு தரம் தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்தான். அதில் அவன் தவறிய போது, ஏதோ அரிய காரியங்களைச் செய்யவே தான் பிறந்திருப்பதாக ஓர் நம்பிக்கை அவன் மனதில் உண்டா யிற்று. அந்த மனிதன் இந்த பிரிட்டிஷ் சாம்ராஜ்யத் திற்கு அடிகோலிய லார்ட் கிளைவ் ஆனார். பாதிரிகள் உரைப்பதை நம்பி, ‘ ஏ கடவுளே ! நான் பலவீனன், தாழ்ந் தவன் ’ என்று சொல்லிக் கொண்டிருந்தால் அவன் என்ன வாயிருப்பான் ? அவன் பயித்தியக்கார ஆஸ்பத்திரிக்குத் தான் போயிருப்பான். இந்த பலவீனத்தை யுண்டாக்கும் போதனைகள் உங்களைப் பயித்தியக்காரர்களாக ஆக்கு கிறது. தங்களைத் தாங்களே தாழ்ந்தவர்களாக நினைக்கச் செய்யும் கெட்ட போதனைகள் மனித வர்க்கத்திற்கு எவ்வளவு கெடுதல்கள் உண்டாக்குகின்றன வென்பதை நான் உலக முழுதிலும் பார்த்திருக்கிறேன். இவ்விதமாக வளர்க்கப்படும் நம் குழந்தைகள் பலவீனர்களாகி, அரைப் பயித்தியக்காரர்கள் போலாவதில் என்ன ஆச்சரியமிருக்கிறது ?

இதுதான் நாம் நம் தினசரி வாழ்க்கையில் பின்பற்ற

வேண்டிய பாடமாகும். ஆதலால் அளவற்ற தன்னம்பிக்கையை உடையவர்களாக விருங்கள். உங்களுக்கு இவ்வுலக சம்பத்துக்கள் வேண்டுமானல் அதற்காகச் செய்யவேண்டிய முயற்சிகளேச் செய்து அவற்றைப் பெறுங்கள். அதற்கு வேண்டிய முயற்சியைச் செய்தால் அவை உங்களிடம் தாமே வந்து சேரும். நீங்கள் அறிவாளிகளாக விரும்பினுல், அதற்கான முயற்சியில் ஈடுபடுங்கள் ; நீங்கள் உயர்ந்த அறிவாளிகளாவது திண்ணம். நீங்கள் மோட்சமடைய விரும்பினுல், அதற்காக ஆத்மிகத் துறையில் பாடுபடுங்கள் ; நீங்கள் நிச்சயமாய் மோட்சத்தைப் பெற்று அவ்வெல்லேயற்ற பேரின்பத்தை அனுபவிப்பீர்கள். இதுகாறும் அத்வைதம் ஆத்மிகத் துறையில் மாத்திரம் பின்பற்றப்பட்டு வந்தது. லௌகிக வாழ்க்கையிலும் அதை அனுஷ்டிக்க வேண்டிய காலம் இப்பொழுது தோன்றி யிருக்கிறது. இதுவரை யிருந்தது போல் இதன் மகத்தான கொள்கைகள் ரகசியமென்று மூடி வைக்கலாகாது. அவை இதுகாறும் இருந்ததுபோல் மலேகளிலும், காடுகளிலும் குகைகளிலும் வசிக்கும் சன்யாசிகளிடம் மாத்திரம் இராமல், சாதாரண மக்களுடைய தினசரி வாழ்க்கையிலும் புகுந்து வேலே செய்யவேண்டும். அரசர்கள் வதியும் அரண்மனேகளிலும் துறவிகளிருக்கும் ஆஸ்ரமங்களிலும் பின்பற்றப்படுவதுடன், ஏழைகள் வதியும் குடிசைகளிலும் தெருவில் திரியும் பிச்சைக்காரர்களிடமும் இன்னும் எல்லா இடங்களிலும் எல்லா மக்களாலும் அம்மகத்தான கொள்கைகள் அனுஷ்டிக்கப்பட வேண்டும். நீங்கள் கல்வியறிவற்ற பெண்கள் அல்லது சூத்திரர்கள் என்று அஞ்சவேண்டிய அவசியமில்லே. பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் அருளியிருப்பது போல் இம்மதம் மகத்தானது ; சிறிதளவு இதைப் பின்பற்றினுல் அது மகத்தான பயனே அளிக்கும்.

ஆதலால், ஆரியர்களின் அருமைக் குழந்தைகளே, சோம்பலுடன் சும்மா யிருக்காதீர்கள். விழியுங்கள், எழுங்கள், கோரிய கருமம் கைகூடும் வரை உழையுங்கள். அத்வைதக் கொள்கைகளை தினசரி வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய காலம் இது. முற்காலத்தில் அவை சில உயர்ந்தவர்களால் மட்டும் பின்பற்றப்பட்டு வந்தன. அவைகளை இப்பொழுது அனைவருக்கும் அளிப்போமாக. இதுதான் தற்காலத்திய தர்மமாகும். அவற்றை எல்லா மக்களிடையும் பரப்புமாறு நமது முன்னோர்களுடைய அருள் வாக்குகள் நமக்கு உரைக்கின்றன. உங்களுடைய அத்வைத போதனைகள் உலக முழுதும் பரவட்டும். அவை நம் சமூகத்திலிருக்கும் அனைவரையும் அடைந்து எல்லோருடைய பொது உடைமை யாகட்டும். அவை நம்முடைய தினசரி வாழ்க்கையில் புகுந்து, நமது ரத்தக் குழாய்களில் நுழைந்து நம்முடைய ஒவ்வொரு சொட்டு ரத்தத்திற்கும் புதிய வலிமை அளிக்கட்டும்.

அமெரிக்க மக்கள் நம்மைவிட அதிகமாக வேதத்தைத் தங்கள் வாழ்க்கையில் அனுஷ்டிக்கிறார்கள் என்பதைக் கேட்க நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். நான் நியூயார்க் கடற்கரையில் நின்றுக்கொண்டு, பல தேசங்களிலிருந்தும் அமெரிக்காவிற்குக் குடியேற வரும் மக்களைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் வரும்போது மனம் தளர்ந்து, வாழ்க்கையில் நசுக்கப்பட்டுச் சலித்துப் போன தோற்றத்துடன் எவரையும் முகத்தை நிமிர்ந்து பார்க்கவும் தைரியமில்லாதவர்களாய், கந்தலான சில துணிகளையே தங்கள் உடைமையாகக் கொண்டு வருகிறார்கள். ஒரு போலீஸ் சேவகனைப் பார்த்தால், அவனைக் கண்டு அஞ்சி அப்புறம் செல்வார்கள். ஆறு மாதங்களில் இவர்கள் தோற்றத்தில் ஒரு பெரிய மாறுதல் ஏற்படுகிறது. ஆர்மீனியாவிலிருந்து

வந்த ஒருவன் இருக்கிருன் என்று வைத்துகொள்வோம். அவன் நிமிர்ந்து நடக்கிருன்; நல்ல உடை அணிந்து, எவரையும் முகத்தைப் பார்த்து பேசுகிருன். இந்த அதி ஆச்சரியமான மாறுதலைச் செய்ததெது? அவன் முன்னிருந்த இடத்தில் அவன் மிகத் தாழ்வாக நினைக்கப் பட்டு, மிகத் தாழ்வாக நடத்தப்பட்டான். அவனைச் சுற்றி யிருப்பவர்கள் அனைவரும், அவன் அடிமையாகவே பிறந்து, அடிமையாகவே ஆயுள் முழுதும் இருக்கவேண்டு மென உரைத்தார்கள். தன்னை உயர்த்திக்கொள்ள அவன் செய்த ஒவ்வொரு முயற்சியும் மற்றவர்களால் வியர்த்தமாக்கப்பட்டது. அவனைச் சுற்றிலுமிருந்த இயற்கைக் காற்றுங்கூட 'நீ அடிமை; நீ அடிமை யாகவே இருக்க வேண்டியதுதான்' என்று உரைத்தன போலிருந்தது. அவனைவிடப் பலம் பெற்றிருந்தவர்கள் கொடுமை செய்து அவனை அடக்கினர்கள். அமெரிக்கா சென்றதும், நன்ருக உடை உடுத்திக்கொண்டிருக்கும் ஒரு வன் தன்னிடம் கைகுலுக்குவதை அவன் பார்த்தான். உடை கேவலமாக விருப்பினும், அவன் சமமாக நடத்தப் பட்டான். கொஞ்ச தூரம் சென்றதும் ஓர் ஒட்ட லுக்குச் சென்ருன். அங்கு நல்ல உடை அணிந்திருக்கும் கனவான்களுடன் இவனுக்கும் இடம் கொடுக்கப்பட்டு, உணவு பரிமாறப்பட்டது. இவன் ஒரு மூலையில் ஒதுக்கப் படவில்லை. அதற்குப் பிறகு அவன் நாட்டைச் சுற்றிலும் பார்த்தான். அந்நாட்டில் மனிதர்களுக்குள் தானும் ஒரு மனிதனுக நடத்தப்படுவதைக் கண்டான். ஒரு வேளை அவன் வாஷிங்டனுக்குச் சென்றிருக்கலாம். அங்கு அமெரிக்கா தேசம் முழுதிற்குமே தலைவராக விருக்கும் பிரசிடென்டு, அவனுடன் கைகுலுக்கி யிருக்கலாம். தூரத்திலிருக்கும் பல கிராமங்களிலிருந்தும் கேவலமான உடையணிந்திருந்த ஏழைமக்கள் பலர் வந்து பிரசிடென்

டுடன் கைகுலுக்குவதையும் அவன் பார்த்திருக்கலாம். எனவே மாயையின் திரை மெள்ள அவன் மனத்தினின்று நீங்கிற்று. தான் அடிமை, பலவீனன் என்ற மயக்கத்தில் ஆழ்ந்திருந்தவன், விழித்தெழுந்து தானும் ஒரு மனிதன் என்பதை உணர்கிறுன். அந்தோ! நம்முடைய இந்த நாட்டிலே, வேதாந்தம் தோன்றிய இந்தத் தேசத்திலே, நம்முடைய மக்கள் நூற்றுக் கணக்கான வருஷங்களாக இத்தகைய மயக்கத்தில் ஆழ்ந்திருக்கிறுர்கள் என்பது எவ்வளவு வருத்தமான விஷயம்! அவர்களைத் தொட்டால் தீட்டாம்! அவர்களுடன் சேர்ந்து உட்காரவும் கூடாதாம்! அவர்கள் எந்தவிதமான உயர்ந்த எண்ணங்களுமின்றிப் பிறந்திருக்கிறுர்கள்; அவர்கள் அந்நிலையிலேயே இருக்க வேண்டுமாம். இதன் பயனுக அவர்கள் நாளுக்கு நாள் தாழ்ந்துகொண்டே போய்க்கொண்டிருக்கிறுர்கள். மனிதனுய்ப் பிறந்த ஒருவன் எவ்வளவு தாழ்ந்த நிலையை அடைய முடியுமோ, அந்தக் கடைசிப் படிக்கு அவர்கள் வந்துவிட்டார்கள். எந்த நாட்டில் மனிதன் ஆடுமாடு களுடன் ஒன்றுகத் தன் காலத்தைக் கழிக்கிறுன்? இதற் காக மற்றவர்களைக் குறை சொல்லவேண்டாம். அது அறிவற்றவர்கள் செய்யும் காரியம். இதற்குக் காரணம் நம்மிடத்திலேயே இருக்கிறது. இதற்காக நம்மை நாமே தான் தெரிந்துகொள்ள வேண்டும். ஆண்மையுடன் முன் வந்து உங்கள் குறைகளை ஏற்றுக்கொள்ளுங்கள். மற்ற வர்களைக் குறை சொல்லிக் கொண்டிருக்க வேண்டாம். உங்கள் குறைகளுக்கு நீங்களே காரணம் என்பதை உணருங்கள்.

லாகூர் இளைஞர்களே! இத்தேசீய பெரும் பாவம் நம் தலை மேலிருக்கிறதென்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் ஆயிரக்கணக்கான சங்கங் கள் அமைக்கலாம்; பதினுயிரக்கணக்கான ராஜீயக்

கூட்டங்கள் கூட்டலாம், அல்லது ஸ்தாபனங்கள் அமைக்கலாம்; ஆனால் உங்கள் மனதில் புத்தரைப் போல் அனைவர் பாலும் மகத்தான அன்பும் கருணையும் அனுதாபமும் தோன்றும் வரை, இவை அனைத்தும் பயன்படா. ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய உயர்ந்த உபதேசங்களை உங்களுடைய தினசரி வாழ்க்கையில் அனுசரித்தாலொழிய நீங்கள் இப்பாவத்திலிருந்து விமோசனம் அடைய முடியாது. நீங்கள் மேல் நாட்டாரைப் போல் நடித்துக் கூட்டங்கள் போடலாம். அல்லது சங்கங்கள் அமைக்கலாம். ஆனால் இவை யாதொரு பயனையும் அளிக்கா. நான் என் கண்களால் பார்த்த ஒரு விஷயத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன், கேளுங்கள். சில பர்மியர்கள் ஐரோப்பியர்கள் சிலரால் லண்டனுக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். இவர்களை ஒரு கண்காட்சியாக வைத்துக் காட்டி, அந்த ஐரோப்பியர்கள் நிறையப் பணம் சம்பாதித்தார்கள். அதற்கு மேல் இப்பர்மியர்களை அவர்கள் ஐரோப்பாவிற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கும் இவர்களால் பெறக்கூடிய ஊதியம் அனைத்தையும் அடைந்த பிறகு, இவர்களை அநாதியாக விட்டு விட்டு, அந்த ஐரோப்பியர்கள் ஓடிவிட்டார்கள். இவர்களுக்கோ ஐரோப்பிய பாஷை எதுவும் தெரியாது. ஆஸ்ட்ரியாவிலிருந்த ஆங்கிலப் பிரதிநிதி அவர்களை லண்டனுக்கு அனுப்பினார். லண்டனில் அவர்களுக்கு எவரையும் தெரியாததால், அங்கும் அவர்கள் உதவியற்றுக் கிடந்தனர். ஓர் ஆங்கிலத் தாய் இவர்கள் நிலையை அறிந்து, பச்சாத்தாபப்பட்டு, இவ்வன்னிய நாட்டினரைத் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று, இவர்களுக்கு வேண்டிய உடை துணிமணிகளை அளித்துதவி, இவ்விஷயத்தைப் பத்திரிகைகளுக்கும் தெரிவித்தார். அடுத்த நாள் தேச முழுதும் இதைப் பற்றிக் கிளர்ச்சி உண்டாயிற்று. பணம்

பலவிடங்களிலிருந்தும் வந்து சேர்ந்தது. அவர்களுக்கு வேண்டிய உதவியுடன், அவர்கள் பர்மாவுக்குத் திருப்பி யனுப்பப்பட்டார்கள். இத்தகைய யன்பையே, ஆங்கி லேயர்களின் ராஜீய சமூக அமைப்புகள் அனைத்தும் ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. இவ்வன்பே அவர் களுக்குப் பாறை போன்ற அஸ்திவாரமாக விருக்கிறது. அவர்கள் உலக முழுதையும் நேசிக்காமலிருக்கலாம் ; மற்ற மக்களின் மேல் அன்பு செய்யாமலிருக்கலாம் ; ஆனல் தங்கள் மக்கள் பால் அவர்களுக்கு நிறைந்த அன்பிருக்கிற தென்பதை எவரும் மறுக்க முடியாது. அத்துடன் தங்கள் நாட்டிற்கு வரும் அன்னியர்களிடம் உண்மையாகவும், நியாயமாகவும், தர்ம சிந்தனையுடனும் நடந்து கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தையும் அவர்கள் உடையவர் களாயிருக்கிறார்கள். மேல்நாட்டில் நான் சென்ற எல்லா தேசங்களிலும் எத்தகைய அன்புடன் வரவேற்கப்பட்டு உபசரிக்கப்பட்டேன் என்பதை உங்களிடம் உரைக்கா விடில், நான் செய்நன்றி மறந்தவனுவேன். பெரிய காரியங்களைச் செய்ய முதலில் உணர்ச்சி நிறைந்த இதய மன்றோ வேண்டும்! இந்நாட்டில் அத்தகைய இதயம் எங்கிருக்கிறது ? ஒரு சிறிய கூட்டுக் கம்பெனி ஆரம்பிப் போம். அதற்குள் ஒருவரை யொருவர் ஏமாற்ற முயற்சி செய்வோம். உடனே அந்தக் கம்பெனி உடைந்துபோம். ஆங்கிலேயர்களைப் போல் ஒரு மகத்தான மக்களாக ஆக வேண்டுமென்று நீங்கள் பேசுகிறீர்கள். ஆனுல் அங்ஙனம் ஆவதற்கு வேண்டிய அஸ்திவாரமெங்கே ? மணல் மேல் கட்டும் கட்டிடம் அழிந்துதான் போகும். ஆதலால் ஆழ்ந்த அன்பென்னும் அழியா அஸ்திவாரத்தின் மேல் நமது தேசீயக் கட்டிடத்தைக் கட்டுவோமாக.

எனது லாகூர் இளைஞர்களே! இதற்காக நீங்கள் அத்வைதத்தின் அற்புத சித்தாந்தத்தை உங்கள் நாடு

முழுதும் பரப்புவீர்களாக. இதை அடிப்படையாகக் கொண்டுதான், நாம் அளவற்ற அன்பைப் பெற முடியும். எல்லா மக்களிலும் கடவுளைக் காணும் வரை நீங்கள் உயர்ந்த அன்பைப் பெறமுடியாது. இத்தகைய அன்புணர்ச்சியை நீங்கள் மக்கள் மனதில் உண்டாக்குங்கள். 'எழுங்கள், விழியுங்கள் ; நீங்கள் மேற்கொண்ட காரியம் கைகூடும் வரை உழையுங்கள்'. துறவும் தியாகமும் இன்றி எதையும் சாதிக்க முடியாது. எனவே துறவை ஏற்று, எழுந்து முன் வாருங்கள். நீங்கள் மற்றவர்களுக்குச் சேவை செய்ய வேண்டுமானுல், உங்கள் அற்ப சுயநலம் தொலைய வேண்டும். கிருஸ்துவர்கள் உரைப்பது போல், நீங்கள் கடவுளுக்கும் சாத்தனுக்கும் ஒருங்கே சேவை செய்ய முடியாது. பற்றுதல்களை விடுத்து, வைராக்கியத்தை மேற்கொள்ளுங்கள். அரும் பணிகளை ஆற்றுவதற்காக உங்கள் முன்னோர்கள் உலகைத் துறந்தார்கள். தங்களுடைய மோட்சத்திற்காக இப்பொழுது சிலர் துறவை மேற்கொள்ளுகிருர்கள். உங்கள் மோட்சத்தைப் பற்றிக்கூட நினையாமல், அனைவற்றையும் துறந்து, மற்றவர்கள் சேவையில் ஈடுபடுங்கள். வெறும் வார்த்தைகளில் மாத்திரம் தைரியமிருந்தால் போதாது. சேவையில் ஈடுபடுவதே உண்மையாக வேதாந்தத்தைப் பின்பற்றுவதாகும். உங்களுடைய சிறிய சுயநல வாழ்க்கையை விட்டு விடுங்கள். நம்முடைய சிறிய தியாகத்தின் மூலம் தேசம் க்ஷேமமாயிருக்குமானுல், நம்மைப் போன்ற சில ஆயிரம் பேர்கள் பட்டினி கிடந்து செத்தால்தான் என்ன ? நம் மக்கள் நாளுக்கு நாள் தாழ்ந்து கொண்டிருக்கிருர்கள். கோடிக்கணக்கான தாழ்த்தப்பட்ட மக்களின் சாபம் நம் தலைமேலிருக்கிறது. அழகான ஆற்றுநீர் அருகிலிருக்கும் போது, சாக்கடை நீரை நாம் அவர்களுக்கு அருந்த அளித்து வந்திருக்கிரேும். நிறைந்த செல்வத்தின்

மத்தியில், கோடிக்கணக்கான பேர்களை நாம் பட்டினி போட்டு வாட்டியிருக்கிறோம். கோடிக்கணக்கான பேர்களிடம் நாம் அத்வைதத்தைப் பற்றிக் கேவலம் வாயால் பேசி, மனத்தில் வெறுப்புக் கொண்டிருந்திருக்கிறோம்; லோகாசாரமென்ற பெயரில் கோடிக்கணக்கானவர்கள் மேல் நாம் பெருங் கொடுமைகளை இழைத்து வந்திருக்கிறோம்; அத்வைதத்தை, அதாவது நாம் அனைவரும் அப்பரம்பொருளின் கூறுபாடுகள் என்னும் கருத்தை நம் மனதில் வைத்துக்கொள்ள வேண்டுமே யொழிய, அவைகளை வாழ்க்கையில் அனுஷ்டிக்கலாகாதென்ற பொய் வார்த்தைகளைச் சொல்லி வந்திருக்கிறோம். இந்த அவமானத்தை 'அழிப்பீர்களாக. எழுங்கள், விழியுங்கள், இவ்வற்ப வாழ்க்கை போனால்தான் என்ன? பரிசுத்தவான், பாவி, பணக்காரன், ஏழை முதலிய எல்லோரும் ஒரு நாள் இறக்கத்தான் வேண்டும். உடம்பு நிலையானதல்ல; ஆதலால் எழுங்கள், விழியுங்கள். எந்த விதமான கோழைத்தனமும் பாசாங்குமின்றிக் காரியங்களில் ஈடுபடுங்கள். இந்தியாவிலிருக்கும் கோழைத்தனத்தைக் கண்டால் பயங்கரமாகவிருக்கிறது. உயர்ந்த ஒழுக்கமும் ஆண்மையும்தான் நமக்கு இப்பொழுது வேண்டும். மரணம் வரினும் எடுத்த காரியத்தை உறுதியுடன் பின்பற்றத் தக்க ஆண்மையை நாம் பெறவேண்டும்.

'ஞானிகளானோர் நிந்திப்பதானாலும் நிந்திக்கட்டும், அல்லது புகழ்வதானாலும் புகழட்டும்; சகல பாக்கியங்களையும் கொடுக்கும் லட்சுமி வந்தாலும் வரட்டும் அல்லது தனக்கிஷ்டமான இடத்திற்குப் போனாலும் போகட்டும்; மரணமானது இன்றே வந்தாலும் சரி அல்லது நூறு வருஷங்கள் கழித்து வந்தாலும் சரி, எவனொருவன் உண்மையினின்றும் மயிரிழையேனும் பிறழாதிருப்பானோ, அவனே உறுதியுடையோனாவன்'. உடனே

எழுங்கள், விழியுங்கள். ஏனெனில் காலம் வீணே போய்க் கொண்டிருக்கிறது. சிறு விஷயங்களிலும் அற்பச் சண்டைகளிலும் நம் காலத்தை வீணாக்கிக் கொண்டிருக்க வேண்டாம். முக்கியமில்லா விவரங்களைப் பற்றி விவாதித்துக் கொண்டிருக்க வேண்டாம். அனுதினமும் தாழ்ந்து கொண்டிருக்கும் நம் மக்களை உயர்த்தும் பணி, இதோ நம்முன் இருந்து கொண்டிருக்கிறது. முகம்மதியர்கள் முதன் முதல் இந்தியாவுக்கு வந்தபோது, இந்துக்களின் எண்ணிக்கை யென்ன? இன்று ஏன் அவர்கள் இவ்வளவு குறைந்திருக்கிறார்கள்? நாம் இப்படியே இருந்து கொண்டிருந்தால், அவர்கள் இன்னும் குறைந்து கொண்டே வந்து, முற்றிலும் மறைந்து போய் விடுவார்கள். அவர்கள் மாத்திரம் மறைந்தால் பாதகமில்லை; ஆனால் அவர்களுடன், அவர்கள் இவ்வளவு குறைகளுடனும் காப்பாற்றி வந்திருக்கும் இவ்வற்புதமான கருத்துக்களும் மறைந்து விடும். எல்லா ஆத்மிக எண்ணங்களுக்கும் கருத்துக்களுக்கும் மகுடம் போல் விளங்குகின்ற அந்த அதி ஆச்சரியமான அத்வைத சித்தாந்தமும் அவர்களுடன் மறைந்து விடும். இவைகளை நாம் இழக்கலாகாது. ஆதலால் விழித்து, எழுங்கள். உலகிலிருக்கும் உன்னதமான ஆத்மிக ஞானத்தைக் காப்பாற்றுவதற்காக உழைக்க முன் வாருங்கள்.

முதலில் உங்கள் நாட்டிலேயே அக் கருத்துக்களைப் பின்பற்றிக் காட்டுங்கள். நமக்குத் தற்காலத்தில் முக்கியமாகவேண்டியது ஆத்மிக ஞானம்கூட அல்ல. அத்வைதக் கருத்துக்களை லௌகிகத் துறைகளில் புகுத்தி வேலை செய்வதே நாம் இப்பொழுது செய்ய வேண்டிய பணியாகும். பசியால் வாடிக் கிடக்கும் நம் மக்களுக்கு முதலில் கொஞ்சம் உணவளிப்போமாக. ஆத்மீக போதனையைப் பற்றி அதற்குமேல் பார்த்துக்கொள்

ளலாம். பசியால் வாடிக்கொண்டிருக்கும் அவர்களுக்கு, அவசியத்திற்கு அதிகமான மத போதனை அளித்துக் கொண்டிருக்கிறோம். எந்த மத போதனையும் பசியை ஆற்றாது. நாம் இரண்டு சாபங்களால் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறோம்; முதலாவது நமது பலவீனம், இரண்டாவது நமது உலர்ந்த, ஈரமற்ற இருதயம். நீங்கள் லட்சக்கணக்கான மதக் கொள்கைகளைப் பற்றிப் பேசிக் கொள்ளலாம்; ஆனால் உங்கள் மனதில் அவர்களுக்காக அன்பும், ஆர்வமும், உணர்ச்சியும் தோன்றுகிறவரை, இவை யாதொரு பயனையும் உண்டாக்கா. நம்முடைய சாஸ்திரங்கள் உபதேசம் செய்வதுபோல் மன்னுயிரைத் தன்னுயிரைப்போல் நினைத்து அன்பு செய்யுங்கள். அவர்களை, உங்கள் உடலில் ஒரு பகுதியைப் போல் நேசியுங்கள். நீங்களும் அவர்களும், ஏழைகளும் பணக் காரர்களும், பரிசுத்தவானும் பாவியும் ஆக எல்லோரும் அந்த எல்லையற்ற பரம்பொருளின் பல பாகங்கள் என்பதை உணருங்கள்.

கனவான்களே! அத்வைத சித்தாந்தத்தின் முக்கிய அம்சங்களில் சிலவற்றை உங்களுக்கு எடுத்துச் சொல்ல நான் முயற்சி செய்திருக்கிறேன். அவைகளை அனுப வத்தில் பின்பற்ற வேண்டிய காலம் வந்திருக்கிறது. இந்த தேசத்தில் மாத்திரமல்ல, அவை உலக முழுவதும் பின்பற்றப்படவேண்டும். தற்கால விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சிகள் துவைத பாவமுள்ள மதங்களின் அஸ்தி வாரங்களை, கண்ணாடி சாமான்களைப்போல் உலகமெங் கும் தகர்த்தெறிந்து தவிடுபொடியாக்கிக் கொண்டிருக் கின்றன. துவைத சம்பிரதாயங்கள், இங்கு மாத்திர மல்ல, அமெரிக்கா ஐரோப்பா முதலிய எல்லா நாடுகளிலும் பலவிதமான சமாதானங்களைச் சொல்லப் பிரயத்தனம் செய்து கொண்டிருக்கின்றன. அந்நாடு

களுக்கும் அத்வைதக் கருத்துக்கள் இங்கிருந்து செல்ல வேண்டியது அவசியமாக விருக்கிறது. ஒரு சிறிது அளவு அவை சென்றிருக்கின்றன. இன்னும் அதிகமாகச் சென்று அவை அவர்கள் நாகரிகத்தைக் காப்பாற்றவேண்டும். ஏனெனில் அவர்களுடைய பழைய பற்றுக் கோடுகளும் கோட்பாடுகளும் மறைந்து, அதற்குப் பதிலாகப் பணத்தையே தெய்வமாக அவர்கள் ஆராதரிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். அவர்கள் பழைய மதம், கொஞ்சம் குரூரமானதாக விருந்தபோதிலும் பணத்தையே ஆராதிப்பதைவிட உயர்ந்ததாகவிருந்தது. எவ்வளவு பலத்தைத் தற்காலிகமாக ஒரு சமூகம் பெற்றிருந்தாலும், இத்தகைய அஸ்திவாரத்தைக் கொண்டு அவர்கள் நிலைத்திருக்க முடியாது. இத்தகைய கருத்துக்களை அஸ்திவாரமாகக் கொண்ட மக்கள் அனைவரும் அழிந்துவிட்டதாகச் சரித்திரம் நமக்குக் கூறுகின்றது. இந்த உலோகாயத அலை இந்தியாவிற்குள் வராமல் நாம் தடுக்கவேண்டியது நமது முதல் வேலையாகும். ஆதலால் அத்வைத சித்தாந்தங்களை அனைவருக்கும் போதியுங்கள். அதன்மூலம் தற்கால விஞ்ஞான சாஸ்திரங்களின் எதிர்ப்புக்களைத் தாங்கக்கூடிய சக்தியை நம் மதம் பெறும். நம் தேசத்தினருக்கு மாத்திரமல்லாமல் ஐரோப்பா, அமெரிக்கா முதலிய நாடுகளிலிருக்கும் மக்களுக்கும் ஆத்மிக வாழ்க்கையைப் பின்பற்றுவதில் உதவியாக விருக்கும்படியாக அங்கும் அத்வைதக் கருத்துக்களைப் பரப்புவீர்களாக. எல்லாவற்றிற்கும் மேலாக நாம் செய்யவேண்டிய பணியை உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். நம் தாழ்த்தப்பட்ட லட்சக் கணக்கான மக்கள்பால் சென்று, அவர்களுக்கு அன்பு உதவியளித்து, அவர்களை உயர்த்துவோமாக. அங்ஙனம் செய்யும்போது ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய இந்த வார்த்தைகளை எப்பொழுதும்

மனதில் வைத்துக்கொண்டிருப்போமாக.

'எவனொருவன் இந்த வாழ்க்கையிலேயே கடவுளை அனைவரிடத்திலும் சமமாகக் காண்கின்றானோ அவனே கடவுளை அடைந்ததாகக் கருதப்படுவான்.'

---

# சன்னியாசம்: அதன் லட்சியமும் அனுஷ்டானமும்

[சுவாமிகள் மேல்நாட்டிற்கு இரண்டாவது தடவை புறப் படும்போது, மடத்திலிருந்த சாதுக்களுடைய வேண்டுகோளுக்கு இணங்கி, கீழ்க்கண்ட சில வார்த்தைகளைத் திருவாய் மலர்ந் தருளினர்.]

நீண்டதொரு பிரசங்கம் செய்ய இதுகாலமல்ல. நீங்கள் வாழ்க்கையில் அனுஷ்டிக்கவேண்டிய சில விஷயங்களைப்பற்றிச் சுருக்கமாகச் சில வார்த்தைகள் மட்டும் உங்களிடம் இப்பொழுது பேச விரும்புகிறேன். முதலில் நமது லட்சியத்தை நாம் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். அதற்குமேல் அதைப் பின்பற்றும் முறைகளையும் தெரிந்துக்கொள்ள வேண்டும். சன்யாசி களாக விருக்கும் நீங்கள் மற்றவர்களுக்கு நன்மை செய் வதையே உங்கள் கடமையாகக் கொண்டிருக்கவேண்டும். சன்யாசத்தின் பொருளே அதுதான். சன்யாசம், அதாவது துறவைப்பற்றி நீண்ட பிரசங்கம் செய்ய இப்பொழுது நேரமில்லை. அதற்குச் சுருக்கமாக 'மரணத்தை நேசித்தல்' என்ற பொருள் கொடுக்கலாம். உலக வாழ்க்கையில் ஈடு பட்டிருப்பவர்கள் இந்த உயிரை வெல்லமாக நேசிக் கிறார்கள். ஆனால் சன்னியாசிகள் மரணத்தை நேசிக்க

வேண்டும். அப்படியானல் நாம் தற்கொலே செய்து கொள்ளுவதா ? அல்லவே யல்ல. ஏனெனில் தற்கொலே செய்து கொள்ளுபவர்கள் உண்மையில் மரணத்தை விரும்புகிறவர்கள் அல்ல. தற்கொலே செய்துகொள்ள யத்தனிப்பவர்கள், ஒரு தரம் அதிலிருந்து தப்பிப் பிழைத்தால், மறுபடியும் தற்கொலே செய்துகொள்ள யத்தனம் செய்யவே மாட்டார்கள். அதிலிருந்து அவர்கள் உண்மையாக மரணத்தை விரும்புவதில்லே யென்பது புலப்படும். அப்படியானல் மரணத்தை நேசிப்பதென்பதென்ன ? நாம் என்ருவது ஒருநாள் இறக்கவேண்டுமென்பது நிச்சயம். அங்ஙனமானல் ஒரு நல்ல லட்சியத்திற்காக இறப்போமாக. உண்ணல் உடுத்தல் முதலிய நாம் செய்யுங் காரியங்கள் அனேத்தும் நமது சுயநலத்தைத் துறக்கும் தியாகத்தின் தன்மையை உடையனவாக விருக்கட்டும். உண வருந்தி, நம் உடலே வளர்க்கிருேம். மற்றவர்களுடைய நன்மைக்காகத் தியாகம் செய்ய அது உதவாவிடின், அதைப் போற்றி வளர்ப்பதன் பயன் என்ன ? புத்தகங்களேப் படிப்பதன் மூலம், நம் மனதைப் பண்படுத்துகிருேம். ஆனல் அதையும் மற்றவர்கள் சேவைக்காகப் பயன்படுத்தாவிடில், மனத்தைப் பண்படுத்தியதால் நாம் அடைந்த பயன் யாது ? நம்முடைய அற்ப சுயநலத்தைப் பற்றிச் சிந்தியாமல், கோடிக்கணக்கான நம் சகோதரர்களின் நன்மைக்காகச் சேவை செய்வதே நாம் செய்தற்குரிய காரியமாகும். இப்பணிகளில் ஈடுபட்டு நாம் சாவை நாடியிருப்போமாக. அத்தகைய மரணம் நமக்கு எல்லா விதமான நற்பயனேயும் அளிக்கும். அங்ஙனமில்லாமல் சுயநல வாழ்க்கையைப் பின்பற்றிப் பெறும், சாவு எல்லா விதமான தீமைகளேயும் உண்டாக்குகிறது.

இனி இவ்விலட்சியத்தை நாம் தினசரி வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய முறையைப்பற்றிச் சில வார்த்தை

கள் சொல்ல வேண்டும். நாம் சாத்தியமில்லாத லட்சியம் எதையும் ஏற்றுக் கொள்ளலாகாது. பின்பற்ற முடியாத மிக உயர்ந்த லட்சியங்களை மேற் கொள்வது, ஒரு சில மக்களை மிகத்தாழ்த்திப் பலவீனப்படுத்துகிறது. நம் நாட்டில் பௌத்தர்கள், ஜைனர்கள் சீர்திருத்தங்களுக்குப் பின் இவ்விதம் நேர்ந்தது. இங்ஙனமே மிகச் சுலபமாக அடையக் கூடிய விஷயங்களை லட்சியமாக ஏற்றுக் கொள்ளுதலும் நமக்கு மிகுந்த கெடுதலைச் செய்கின்றது. தன் வாழ்க்கைக்கு வழிகாட்டியாக உயர்ந்ததொரு லட்சியம் இல்லாவிடில், அத்தகைய மனிதன் கேவலம் மிருகம் போலாகிவிடுகிறான். எனவே நமது லட்சியம் மிகத் தாழ்ந்ததாகவும் இருக்கக்கூடாது, அல்லது எய்து தற்கு அசாத்திய மாகவும் இருக்கக்கூடாது. நம்முடைய தேசத்துப் பழங்காலத்துக் கருத்துப்படி, சன்யாசி யென்றால் ஒரு குகையில் உட்கார்ந்துகொண்டு தியானம் செய்பவன் என்று பொருள். இது சரியல்ல. மற்றவர்களைப்பற்றிச் சிந்தியாமல், தான் மாத்திரம் மோட்சமடைந்தால் போது மென்று நினைப்பது தவறு. ஒருவன் மற்றவர்களுடைய மோட்சத்திற்காக உழைக்காமல், தான் மாத்திரம் மோட்சம் பெற முடியாதென்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டியது அவசியம். மிக மிக உயர்ந்த லட்சியங்களையும், அத்துடன் அவைகளைக் கொண்டு செலுத்தக்கூடிய ஆற்றலையும் நீங்கள் ஒருங்கே பெற்றிருக்க வேண்டும். இந்தக் கணத்தில் ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்திருக்கவும், அடுத்த கணத்தில் இதோ உங்களைச் சுற்றிலுமிருக்கும் இப்பூமியைச் சரிவரச் சாகுபடி செய்து அமைக்கவும் உங்களுக்கு ஆற்றல் இருக்க வேண்டும். நமது சாஸ்திரங்களிலுள்ள மிக நுட்பமான விஷயங்களைத் தெளிவு படுத்தத் தக்க அறிவையும் ஞானத்தையும் நீங்கள் பெற்றிருக்க வேண்டும்; அடுத்த

கணத்தில் இக்கழனியில் உண்டாகும் விளை பொருட்களைச் சந்தைக்குக் கொண்டு போய் விற்று வர வேண்டும். எத்தகைய தாழ்வாக நினைக்கப்படும் வேலைகளையும், இங்கு மாத்திரமல்லாமல் எங்கும் செய்ய நீங்கள் தயாராக விருக்க வேண்டும்.

இந்த ஸ்தாபனத்தில் லட்சியம் மக்களை ஆண்மை யுடையவர்களாகச் செய்தலே என்பதை நீங்கள் எப் பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்வீர்களாக. முற் காலத்தில் நமது ரிஷிகள் உரைத்ததை நீங்கள் கற்றுல் மாத்திரம் போதாது. அந்த ரிஷிகள் காலமாகிவிட்டார் கள். அவர்கள் உபதேசங்களும் அவர்களுடன் போய் விட்டன. நீங்களே அத்தகைய ரிஷிகளாக வேண்டும். நீங்களும் அவர்களைப்போன்ற மனிதர்கள் ; நீங்களும் அம் மகத்தான ரிஷிகள் அடைந்த நிலையை - ஏன் அவதார புருஷர்கள் அடைந்த நிலையைக்கூட - அடையமுடியு மென் பதை நம்புங்கள். வெறும் புத்தகம் படிப்பு என் செய்யும் ? வெறும் தியானம் என் செய்யும்? வெறும் மந்திரங்களைச் சொல்வதும் தந்திரங்களைப் பின்பற்றுவதும் என் செய்யும் ? உங்கள் பலத்திலேயே நம்பிக்கை வைத்து, தன்னம்பிக்கையுடன் வாழ்க்கையை நடத்துங்கள். நீங்கள் ஒவ்வொருவரும் அளவற்ற சக்திவாய்ந்த ஆண்மையுள்ள மனிதர்களாக வேண்டும். இது தான் தற்காலத்திற்கேற்ற சாதனையாகும். அளவற்ற சக்தி யுடையவனுய், ஆனுல் அதே சமயத்தில் ஒரு பெண்ணைப் போன்ற இளகிய இதயமுடையவனுய் இருக்கக்கூடிய வனே உண்மை வீரனுவான். உங்களைச் சுற்றிலு மிருக்கும் ஏழை மக்கள்பால் நிறைந்த அன்பும், கருணையும் பச்சாத்தாபமும் உடையவர்களாக விருங்கள். அதே சமயத்தில் அளவற்ற பலத்தையும், எதனுலும் அசைக்க முடியாத உறுதியையும் உடையவர்களாக

விருங்கள். அத்துடன் உங்களுக்கு மேலிருப்பவர்கள் பால் கீழ்ப்படிதலுள்ளவர்களாகவும் இருக்கவேண்டும். இவை ஒன்றுக் கொன்று முரண்பட்டவைபோல் தோன்றலாம்; ஆனால் இவை உண்மையில் முரண்பட்டவையல்ல. இக்குணங்கள் அனைத்தையும் நீங்கள் உடையவரா யிருக்க வேண்டும். உங்களுக்கு மேலிருப்பவர், ஒரு நதியில் குதித்து ஒரு முதலையைப் பிடித்து வரும்படிச் சொன்னாலும், நீங்கள் உடனே அக்கட்டளைக்குக் கீழ்ப்படிதல் வேண்டும். கீழ்ப்படிந்த பிறகு வேண்டுமானால் நீங்கள் அமைந்து வாதாடலாம். கொடுக்கப்படும் கட்டளை தவறுதலாக விருந்தபோதிலும், அதற்கு உடனே கீழ்ப்படிய வேண்டும். பிறகு அதைப்பற்றி விவாதிக்கலாம். ஒருவனுக்கு ஏதாவதொரு விஷயத்தில் அபிப்பிராய பேதம் ஏற்பட்டால், உடனே அவன் வேறு ஒரு பிரிவை ஆரம்பிப்பது என்ற மகா கெட்ட பழக்கம் நம்மிடத்தில் அதிகமாக விருந்து வருகிறது. இது மிகவும் கெட்டது. உங்கள் சங்கத்தின்பால் உங்களுக்கு ஆழ்ந்த மதிப்பும் மரியாதையும் இருக்க வேண்டும். கீழ்ப்படியாமை யென்ற மிகக் கெட்ட பழக்கத்திற்கு நமது சங்கத்தில் இடங் கொடுக்கலாகாது. அதை அறவே நீக்கிவிட வேண்டும். கீழ்ப்படியாதவர்கள் யாரேனும் இருந்தால் அவர்களை வெளியே துரத்திவிடுங்கள். அவர்கள் சங்கத்திற்குத் துரோகிகளாவார்கள். அத்தகையவர்கள் நம் சங்கத்தில் இருக்கலாகாது. நீங்கள் காற்றைப்போல் சுதந்தரத்துடன் வாழவேண்டும். ஆனால் நாயைப்போல் கீழ்ப்படிதலுள்ளவர்களாகவும் இருக்கவேண்டும்.

---

# குறிப்பகராதி

## அ



## ஆ

## இ

ப



ம



ர

**வி**



**ஜ**



**ஷ**



**க்ஷ**



---

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்



முற்றும் சமயத் துறை
யில் தமிழ் நாட்டில்
த மி ழ ர் க ட் க ா க
உழைக்கும் உயர்ந்த
மாதாந்தர வெளியீடு

1921-ம் ஆண்டு ஆரம்
பி க் க ப் ப ட் ட து

வருட சந்தா ரூ. 4/-